# பிரிட்டன் வரலாறு

(முதற் புத்தகம்)

(கி. பி. 1603—1714)

கி. ர. அநுமந்தன்




தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழக அரசு

தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண்—16

# பிரிட்டன் வரலாறு

## (முதற் புத்தகம்)

(கி.பி. 1603 - 1714)

# POLITICAL AND CONSTITUTIONAL HISTORY OF ENGLAND

BOOK I. (A.D. 1603-1714)

*கி. ர. அநுமந்தன்,*
எம்.ஏ.,எம்.எஸ். (விஸ்கான்ஸின்) U.S.A.,
பேராசிரியர், வரலாற்றுத்துறை,
மாநிலக் கல்லூரி, சென்னை.




தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழக அரசு

# அணிந்துரை

(செ. மாதவன், தமிழகக் கல்வி-தொழில் அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கி எட்டு ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.யூ.சி., பி.ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்றுவருகின்றனர். நாடு முழுதும் பரந்துள்ள மாணவர்களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி, இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும், மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்றுவருகிறது.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், தத்துவம், கணிதம், பௌதிகம், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல் ஆகிய பல துறைகளில் தனி நூல்கள் மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ் வெளியீட்டுக் கழகம் நூல்களை வெளியிட்டுவருகிறது.

இவற்றுள் ஒன்றான 'பிரிட்டன் வரலாறு-I' என்ற இந்நூல் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் 16ஆவது வெளியீடாகும். தமிழ் மக்களின் பேராதரவினாலும் தமிழைப் பயிற்சி மொழியாகக் கொண்ட மாணவர்களின் நல்லூக்கத்தினாலும் இதன் முதற்பதிப்புப் படிகள் அனைத்தும் விற்பனையாகிவிட்டன. ஆதலின், இப்பொழுது இந் நூல் மீண்டும் வெளிவருகின்றது.

உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும்; அதுவே, தமிழன்னையின் குறிக்கோளுமாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பலவகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக.

செ. மாதவன்

# ஆசிரியர் முன்னுரை

நாகரிகத்தின் உச்சியில் இயங்கிக்கொண்டிருப்பதாகக் கருதப்படும் இன்றைய உலகமானது உண்மையில் பல்வேறு வகையில் பல்வேறு நாடுகளுக்குக் கடமைப்பட்டுள்ளது. ஐரோப்பிய நாடுகளின் சட்டங்களுக்கு அடிப்படைக் கருத்துகளை வழங்கியவர்கள் பண்டைய உரோமானியர்களாவர். இன்றைய அரசியல் உண்மைகள் பலவற்றை உலகுக்களித்தவர்கள் பண்டைய கிரேக்கர்களாவர். சமய சம்பந்தமான சீரிய கருத்துகள் பலவற்றை உலகுக்களித்த பெருமை இந்தியா போன்ற கீழை நாடுகளுக்குரியது. அதே போன்று பாராளுமன்ற ஆட்சி முறை (Parliamentary Government) என்ற பண்பு மிக்க ஜனநாயக ஆட்சி முறையை ஆக்கி உலகுக்கு ஈந்த பெருமையைப் பெற்றவர்கள் பிரிட்டிஷ் மக்களேயாவர். நம்முடைய இந்திய அரசியல் திட்டமும் பெரும்பாலும் பிரிட்டிஷ் ஆட்சித் திட்டத்தை யொட்டியே வகுக்கப்பட்டுள்ளதென்பது ஈண்டுக் குறிப்பிடத்தக்கது.

இத்தகைய ஆட்சி முறையானது இங்கிலாந்தில் படிப்படியாக எங்ஙனம் மலர்ந்தது என்பதை விரித்துரைப்பதே இந் நூலின் குறிக்கோளாகும். 1603ஆம் ஆண்டிலிருந்து பிரிட்டனின் வரலாற்றைக் கூறப்புகும் இந் நூலானது தொடக்கத்தில் ஸ்டூவர்ட்டு மன்னர்களுக்கும், அவர்களின் பாராளுமன்றங்களுக்கு மிடையே நிகழ்ந்த ஓயாத போராட்டத்தை விவரித்து, 1688ஆம் ஆண்டளவில் அப் போராட்டத்தில் எங்ஙனம் பாராளுமன்றமானது வெற்றி பெற்றது என்பதை எடுத்துக் காட்டுகிறது. அதன் பின்னர் அமைச்சுக் குழு ஆட்சிமுறை அல்லது பாராளுமன்ற ஆட்சி முறையானது எங்ஙனம் இங்கிலாந்தில் 1714ஆம் ஆண்டுவரை வளர்ச்சியுற்றது என்பதை இந் நூல் விளக்குகிறது. அரசியல் வரலாற்றோடு அரசியல் அமைப்பின் வரலாறு, ஓரளவு சமூகப் பொருளாதார வரலாறு ஆகிய இவையும் இணைத்து எழுதப்பட்டுள்ளன. இந்திய அரசியல் அமைப்பு வரலாற்றை நன்கு புரிந்துகொள்வதற்குப் பிரிட்டனின் வரலாறு பெரிதும் துணைபுரியுமென்பதில் எட்டுணையும் ஐயமில்லை. பி.ஏ. வகுப்பு மாணவர்களுக்கென எழுதப்பட்டதெனினும் பொதுமக்களும் இதைப் படிப்பதால் பயன் பெறுவரென நம்புகிறேன்.

முதற் பதிப்பில் காணப்பட்ட பிழைகள் பலவும் இவ்விரண்டாம் பதிப்பில் நீக்கப்பெற்றுள்ளன. அரசியலமைப்பு பற்றிய சிக்கல்களுக்கு விரிவான விளக்கம் தரப்பட்டுள்ளது. ஒரு சில செய்திகளை நீக்கியும், ஒரு சிலவற்றைப் புகுத்தியும், இந் நூல் புதிய வகையில் வெளியிடப்படுகிறது. நவீன காலத்தே இங்கிலாந்தில் ஏற்பட்ட மாறுதல்களுக் கேற்ப இவ் வரலாற்றின் இரண்டாம் பகுதி புதுப்பித்து எழுதப்பெற்றுள்ளது. பி.ஏ. வகுப்பு மாணவர்களுக்கும் ஓரளவு பொது மக்களுக்கும் இந் நூல் பெரிதும் பயன்படுமென்று நம்புகிறேன்.

கி. ர. அனுமந்தன்

# தோற்றுவாய்

இன்றைய நாகரிக உலகமானது உண்மையில் பல்வேறு துறைகளில் பல்வேறு நாடுகளுக்குக் கடமைப்பட்டுள்ளது. சட்டத் துறையில் உரோமானியர்களுக்கும், கலைத் துறையில் கிரேக்கர்களுக்கும், சமயத் துறையில் இந்தியர்களுக்கும் உலகம் பெரிதும் கடப்பாடுடைத்தெனலாம். அதே போன்று 'பாராளுமன்ற ஜனநாயகம்' (Parliamentary Democracy) என்ற பண்பு செறிந்த ஆட்சி முறையை ஆக்கி உலகுக்கீந்த பெருமை ஆங்கிலேயர்களுக்குரியதாகும். அத்தகைய ஆட்சி முறையை அடைய ஆங்கிலேயர்கள் தங்கள் மன்னர்களோடு நடத்திய போராட்டத்தின் வரலாறே ஸ்டுவர்ட் வம்ச மன்னர்களின் வரலாறாகும். அவ் வரலாற்றைச் சித்திரிப்பதே இந் நூலின் நோக்கமாகும்.

மன்னர் பாராளுமன்றப் போராட்ட வரலாறனது ஓர் நாடக பாணியில் அமைந்துள்ளதென்பதை எவரும் எளிதில் காணலாம். அந் நாடகத்தின் முகப்பே போல் முதலாம் ஜேம்ஸின் ஆட்சிக் காலம் அமைகிறது. அதன் முதற் காட்சியில் மன்னர் ஒருவரது (முதலாம் சார்லஸ்) தலை கொய்யப்படுகிறது. இன்னொரு காட்சியில் மன்னர் ஒருவர் (இரண்டாம் ஜேம்ஸ்) நாட்டைவிட்டே ஓடிவிடுகிறார். இடையில் மயிர்க்கூச்செறியும் நிகழ்ச்சிகள் பல நடைபெறுகின்றன. முடியரசு ஒழிந்து குடியரசு ஏற்படுகிறது. இரத்த ஆறு பெருக்கெடுத்தோடுகிறது. இராணுவ ஆட்சி தலைவிரித்தாடுகிறது. மீண்டும் முடியரசு மீள்கிறது. இறுதியில் 1688ஆம் ஆண்டளவில் போராட்டம் ஓய்கிறது. நாடகம் முடிகிறது. பாராளுமன்றம் வெற்றி பெறுகிறது. அதன் சீரிய பயன்கள் 1714ஆம் ஆண்டளவில் நாட்டில் நன்கு நிலைபெறுகின்றன, இத்தனையையும் சித்திரிப்பதே இந் நூலின் நோக்கமாகும்.

இரண்டாம் பதிப்பாக இந் நூல் தற்போது வெளியிடப்படுகிறது. ஒரு சில மாற்றங்கள் ஆங்காங்கே புகுத்தப்பட்டுள்ளன. தமிழில் இங்கிலாந்தின் வரலாற்றை மாணவர்களுக்குப் புகட்டி வருவதால் ஆசிரியர்க்கு ஏற்பட்டுள்ள அனுபவமானது இதனைப் புதுப்பித்து எழுதுவதில் பெரிதும் பயன்படுத்தப்பட்டுள்ளது. கல்லூரித் தமிழ்க் குழுவால் வெளியிடப்பட்டுள்ள கலைச் சொற்களே பெரிதும் பயன்படுத்தப்பட்டுள்ளன. சென்னைப் பல்கலைக் கழகத்தார் வெளியிட்டுள்ள பி.ஏ. பட்டப் படிப்புப் பாடத்

திட்டத்தை யொட்டியும். பாட நூல் பட்டியலை ஒட்டியும் எழுதப் பட்டுள்ள இவ் வழிநூல் மாணவர்களுக்குப் பெரிதும் பயனளிக்கு மென நம்புகிறேன். நம் நாட்டு இன்றைய அரசியலமைப்புக்கு அடிப்படையான அரசியல் மரபுகள் இங்கிலாந்தில் எங்ஙனம் உருவாகி வளர்ந்தன என்பதை அறியவும், அறிந்து அதன்வழி நின்று நாட்டின் நற்பெருங் குடிமக்களாய் மாணவர்கள் மாறவும் இந் நூல் ஓரளவு துணை புரியுமென்பது எனது நம்பிக்கையாகும். இரண்டாம் பதிப்பாக இந் நூலை வெளியிட முன்வந்த தமிழ் வெளி யீட்டுக் கழகத்துக்கு எனது உளமார்ந்த நன்றி உரித்தாகுக!

கி. ர. அனுமந்தன்

# பொருளடக்கம்

## முதற்பாகம்—ஸ்டுவர்ட்டுகள் காலம் (1603-1714)

## மன்னர்கள், இராணிகளின் பட்டியல்

**ஸ்டுவர்ட் வமிசம் :**

| | | |
|---|---|---|
| முதலாம் ஜேம்ஸ் | — | 1603—1625 |
| முதலாம் சார்லஸ் | — | 1625—1649 |
| பொதுநல அரசு | — | 1649—1660 |
| இரண்டாம் சார்லஸ் | — | 1685—1688 |
| மூன்றும் வில்லியம், மேரி | — | 1689—1694 |
| ஆன் இராணியார் | — | 1702—1714 |

## முக்கிய நிகழ்ச்சிகளின் கால அட்டவணை

1603 — முதலாம் ஜேம்ஸ் அரசு எய்துதல்.

,, — ஆயிரவர் விண்ணப்பம்.

1604 — ஹாம்ப்டன் கோர்ட் மகாநாடு.
ஸ்பெயினேடு சமாதானம்.
ஜேம்ஸின் முதற் பாராளுமன்றம்.

1605 — வெடிமருந்துச் சதி.

1606 — கத்தோலிக்கருக்கு எதிரான சட்டங்கள்.

1607 — ஸ்காட்லாந்து ஐக்கியத்துக்கான முயற்சி.
பேட் வழக்கு.
ஹியூ ஓ நீல் கலகம்.
வர்ஜினிய குடியேற்றம்.

1610 — பெரும் ஒப்பந்தம்.
ஸ்காட்லாந்தில் பிஷப்புகள்.
அல்ஸ்டர் குடியேற்றம்.
பிரான்ஸில் நான்காம் ஹென்றி மரணம்.
லூயி XIII பட்டமெய்தல்.

1611 — அதிகாரபூர்வமாய் ஒப்புக்கொள்ளப்பட்ட விவிலிய நூல் வெளியீடு.
ஜேம்ஸின் முதற் பாராளுமன்றக் கலைப்பு.

1612 — சூரத்தில் வியாபாரக் கிடங்கு ஏற்படுத்தப்படல்.

1613 — எலிஸபெத்துக்கும், பேலடைன் தேர்வாளர் பிரடரிக்குக்கும் திருமணம்.

1614 — பயனற்ற பாராளுமன்றம்.

1616 — ராலே கயானுவுக்குப் பயணமாதல்.

1618 — ராலே சிரச்சேதம் செய்யப்படல்.
முப்பதாண்டுப் போர் தொடக்கம்.

1620 — யாத்திரீகத் தந்தையர்.

1621 — ஜேம்ஸின் மூன்ருவது பாராளுமன்றம்.

1623 — சார்லசும் பக்கிங்ஹாமும், மாட்ரிட் நகர் செல்லல்.
அம்பாய்ஞு படுகொலை.

1624 — ஜேம்ஸின் நான்காம் பாராளுமன்றம்.
மிடில்செக்ஸின் அரசியல் துரோகக் குற்ற விசாரணை.
தனியுரிமைத் தடைச் சட்டம்.
ஸ்பெயின் மீது போர்.

1625 — முதலாம் ஜேம்ஸ் மரணம். முதலாம் சார்லஸ் அரியணை ஏறல்.
சார்லஸ், ஹென்றியட்டா மேரியா திருமணம்.
காடிஸ் துறைமுக முற்றுகை.
பார்படாஸ் குடியேற்றம்.

1626 — சார்லஸின் இரண்டாம் பாராளுமன்றம்.
பக்கிங்ஹாம் மீது அரசியல் துரோகக் குற்றச் சாட்டு.

1627 — பிரான்ஸுடன் போர். ரொஷேல் படையெடுப்பு.

1628 — சார்லஸின் மூன்ரும் பாராளுமன்றம்.
உரிமை விண்ணப்பம்.
பக்கிங்ஹாம் கொலை செய்யப்பெறல்.
வென்ட்வொர்த் வட நீதிமன்றத் தலைவராதல்.

1629 — சார்லஸின் மூன்ரும் பாராளுமன்றக் கலைப்பு.
மசாச்சுசெட்ஸ் குடியேற்றம்.

1632 — மேரிலாந்து குடியேற்றம்.

1633 — லாட் கான்டர்பரி ஆர்ச் பிஷப்பாதல்.
வென்ட்வொர்த் அயர்லாந்து அதிபராதல்.
சார்லஸ் ஹாலிரூட் கோயிலில் முடிசூட்டப்படல்.

1637 — ஸ்காட்லாந்தின் மீது ஜெபப்புத்தகம் திணிக்கப் படல்.

1638 — கிளாஸ்கோவில், ஸ்காட்டுகளின் பொதுச்சபை கூடல்.

— பிஷப்புகளும் ஜெபப்புத்தகமும் ஸ்காட்லாந்தில் ஒழிக்கப்படல்.

1639 — முதலாம் பிஷப்புகள் போர்.
சென்னையில் ஆங்கில வியாபாரக் கிடங்கு.

1640 — குறுகிய பாராளுமன்றம்.
இரண்டாவது பிஷப்புகள் போர்.
நீடித்த பாராளுமன்றம்.
ஸ்டிராபோர்டு, லாட் ஆகியோரின் விசாரணை.

1641 — ஸ்டிராபோர்டு சிரச்சேதம் செய்யப்பெறல்.
தனிப்பட்ட நீதிமன்றங்கள் ஒழிப்பு.
மூவாண்டுச் சட்டம்.
வேரோடொழிக்கும் மசோதா.
சார்லஸ் ஸ்காட்லாந்து போதல்; இடை நிகழ்ச்சி.
பெருங்கண்டனப் பத்திரம்.
ஐரிஷ் கலகம்.

1642 — ஐந்து பாராளுமன்ற உறுப்பினரைக் கைது செய்ய முயற்சி.
பத்தொன்பது முன்மொழிக் கூற்றுகள்.
உள்நாட்டுப் போர் தொடக்கம். எட்ஜ்ஹில் போர்க்களம்.

1643 — கிளௌசஸ்டர் முற்றுகை.
சால்குரோவ் பீல்டு, நியூபரி போர்க்களங்கள்.
புனிதக் கூட்டுறவும் ஒப்பந்தமும்.
இரும்புப் படையினர்.
13ஆம் லூயி மரித்தல்; 14ஆம் லூயி பட்டத்துக்கு வரல்.

1644 — யார்க் முற்றுகை; மார்ஸ்டன் மூர் போர்க்களம்.

1645 — லாட் சிரச்சேதம் செய்யப்படல்.
புது மாதிரிப் படை.
தன்னல மறுப்பு அவசரச் சட்டம்.
நேஸ்பி போர்க்களம்.

1646 — பெருங்கலகம் ஓய்தல்; அரசர் ஸ்காட்லாந்தியரிடம் சரணடைதல்.

1647 — ஸ்காட்லாந்துடன் உடன்பாடு.

1648 — முப்பதாண்டுப் போர் முடிவு.
இரண்டாம் உள்நாட்டுப் போர்.
பிரைடின் கழிப்பு.

1649 — முதலாம் சார்லஸ் இறப்பு ; இரண்டாம் சார்லஸ் சட்டப்படி மன்னர்.
சமத்துவவாதிகளின் கலகம்.
கிராம்வெல்லின் அயர்லாந்துப் படையெடுப்பு.

1650 — ஸ்காட்லாந்தில் மாண்ட்ரோஸ் கலகம்.
கிராம்வெல்லின் ஸ்காட்லாந்தியப் படையெடுப்பு—டன்பார் போர்க்களம்.

1651 — வொர்செஸ்டர் போர்க்களம்.
நாவாய்ச் சட்டம்.

1652 — டச்சுப் போர்.

1653 — எஞ்சிய பாராளுமன்றத்தின் ஒழிப்பு.
சிறிய பாராளுமன்றம்.
அரசாங்க அமைப்புப் பத்திரம்.
கிராம்வெல் பாதுகாப்பாளர்.

1654 — டச்சுக்காரரோடு சமாதானம்.
பாதுகாப்பாளராட்சியின் முதற் பாராளுமன்றம்.

1655 — மேஜர் ஜெனரல்கள் ஆட்சி.
ஜமாய்க்கா கைப்பற்றப்படல்.

1656 — பாதுகாப்பாளராட்சியில் இரண்டாவது பாராளுமன்றம்.
தாழ்மையான விண்ணப்பமும் ஆலோசனையும்.

1657 — ஸ்பானியக் கப்பற்படை சான்டா கிரஸில் அழிக்கப்படல்.

1658 — டியூன்ஸ் போர்க்களம். டன்கர்க் பிடிபடல்.
ஆலிவர்கிராம்வெல் இறப்பு; ரிச்சர்ட் கிராம்வெல் பாதுகாப்பாளர்.

1659 — ரிச்சர்ட் கிராம்வெல்லின் ராஜிநாமா.

1660 — முன்னிலை மீட்சி. நீடித்த பாராளுமன்றம் கலைக்கப்படல்.
ப்ரெடா அறிவிப்பு.
முடியரசு மீட்கப்படல்.
ஜக்ஸன் கேன்டர்பரி ஆர்ச்பிஷப் ஆதல்.

1661 — கேவலியர் பாராளுமன்றம்.
மாநகராட்சிச் சட்டம்.
நில உரிமை நிர்ணயச் சட்டம் (அயர்லாந்து).
செவாய் மகாநாடு.

1662 — ஒரே வழிபாட்டு முறைச் சட்டம்.
பியூரிட்டன் குருமார்களின் பதவி நீக்கம்.
டன்கர்க் விற்கப்படுதல்.

1663 — ஜக்ஸன் இறப்பு; ஷெல்டன் கான்டர்பரி ஆர்ச் பிஷப் ஆதல்.
கரோலினு குடியேற்றம்.

1664 — இரகசியத் தொழுகைக் கூட்டத் தடைச் சட்டம்.
பிரெஞ்சு கிழக்கிந்தியக் கம்பெனி தோற்றம்.
நியூ ஆம்ஸ்டர்டாம் கைப்பற்றப்படல்.

1665 — ஐந்து மைல் சட்டம்.
டச்சுப் போர்; லோவஸ்டாஃப்ட் போர்க்களம்.
நிலவுரிமை விளக்கச் சட்டம் (அயர்லாந்து).
பெருங் கொள்ளை நோய்.

1665 — லண்டன் தீ விபத்து.

1667 — டச்சுக்காரர் சாத்தாம்வரை வருதல்.
ப்ரெடா உடன்படிக்கை.
கிளாரண்டன் வீழ்ச்சி.
கெபால்.

1668 — முக்கூட்டு உடன்பாடு.
பம்பாயில் ஆங்கிலக் கிடங்கு.

1670 — டோவர் இரகசிய உடன்பாடு.

1672 — டச்சுப் போர்; சௌத்வோல்ட்பே போர்க்களம்.

1673 — பொறுத்தலறிக்கை. சோதனைச் சட்டம்.

1674 — டச்சுக்காரரோடு சமாதானம்.

1675 — புதுச்சேரியில் பிரெஞ்சு வியாபாரக் கிடங்கு.

1677 — வில்லியம், மேரி திருமணம்.

1678 — போப்பின் சதி; பாராளுமன்றச் சோதனைச் சட்டம்.

1679 — டான்பியின் வீழ்ச்சி.
கவலியர் பாராளுமன்றக் கலைப்பு.
உடலுரிமைக் காப்புச் சட்டம்.
விலக்கு மசோதா.

1680 — இரண்டாவது குறுகிய பாராளுமன்றம்.

1681 — மூன்றுவது குறுகிய பாராளுமன்றம்.
பென்சில்வேனியா குடியேற்றம்.

1683 — ரை மாளிகைச் சதி.

1685 — இரண்டாம் சார்லஸ் இறத்தல்; இரண்டாம் ஜேம்ஸ் அரசு எய்தல்.

ஆர்கைல் கலகம்.
மான்மவுத் கலகம்.

1686 — ஹேஸ்ஸ் வழக்கு.
சமய உயர் ஆணை நீதிமன்றம்.

1687 — பொறுத்தலறிக்கை.

1688 — ஏழு பிஷப்புகள் வழக்கு.
ஜேம்சுக்கு மகன் பிறத்தல்.
வில்லியத்துக்கு அழைப்பு விடுக்கப்பெறல்.
வில்லியத்தின் வருகை; ஜேம்ஸின் ஓட்டம்.

1689 — பிரத்தியேகப் பாராளுமன்றம்; உரிமைகள் அறிவிப்பு.
வில்லியம் மேரி அரியணையேறல்
உரிமைகள் மசோதா.
சமயப் பொறைச் சட்டம்.
படைக் கலகச் சட்டம்.
கில்லிகிரான்கிப் போர்.
அயர்லாந்தில் இரண்டாம் ஜேம்ஸ்; டப்ளின் பாராளுமன்றம்.
டெர்ரி, என்னிஸ்கில்லன் முற்றுகை.
ஆக்ஸ்பர்க் கூட்டுறவு போர் தொடக்கம்.

1690 — பாய்ன் போர்க்களம்; பீச்சிஹெட் போர்க்களம்.
பிளூரெஸ் போர்க்களம்.

1691 — லிமரிக் சமாதான உடன்படிக்கை.

1692 — கிளென்கோ படுகொலை.
நிலவரி ஏற்படுத்தப்படல்.
லாகோக் போர்க்களம்.
ஸ்டீன்கிர்க் போர்க்களம். பிரெஞ்சுக்காரர் நாமூரைக் கைப்பற்றல்.

1693 — லேண்டன் போர்க்களம்.
ஸ்மிர்ணு கடற்படை இழப்பு.
நாட்டுக் கடன்.

1694 — இரண்டாம் மேரி இறத்தல்.
இங்கிலாந்து பாங்கியின் தோற்றம்.
டௌலனை ஆங்கிலேயர் தாக்கல்.

1695 — வில்லியம் நாமூரைக் கைப்பற்றல்.
டேரியன் திட்டம்.
ஐரிஷ் கத்தோலிக்கர் மீது தண்டனைச் சட்டங்கள் விதிக்கப்பெறல்.

96 — விக் ஜண்டோ.
வில்லியம் கோட்டையில் ஆங்கில வியாபாரக் கிடங்கு.

1697 — ரிஸ்விக் சமாதானம்.

1698 — முதல் பங்கீட்டு உடன்படிக்கை.

1699 — டேரியன் திட்டம் தோல்வி.
பவேரிய மன்னர் ஜோஸப் பெர்டினண்டு மரணம்.

1700 — ஜண்டோவின் வீழ்ச்சி.
கிளௌசெஸ்டர் கோமகன் இறப்பு.
இரண்டாவது பங்கீட்டு உடன்படிக்கை.
ஸ்பெயினில் இரண்டாம் சார்லஸ் இறத்தல்.

1701 — வாரிசுரிமை நிர்ணயச் சட்டம்.
இரண்டாம் ஜேம்ஸ் இறத்தல்; 14ஆம் லூயி போலியை இங்கிலாந்தின் மன்னராக அங்கீகரித்தல்.

1702 — மூன்றும் வில்லியம் இறத்தல்; ஆன் இராணியார் அரசியாதல்.
ஸ்பானிய வாரிசுரிமைப் போர்.
இங்கிலாந்து ஸ்காட்லாந்து ஐக்கிய முயற்சி தோல்வியுறல்.

1703 — பாதுகாப்புச் சட்டம் (ஸ்காட்லாந்து) ரத்து.

1704 — பாதுகாப்புச் சட்டம் நிறைவேறல்.
ப்ளென்ஹீம் போர்க்களம்.
ஜிப்ரால்டர் கைப்பற்றப்படல்.

1706 — ராமில்லீஸ் போர்க்களம்.
டியூரின் போர்க்களம்.
இங்கிலாந்து ஸ்காட்லாந்து ஐக்கியத்துக்கான பேச்சு வார்த்தைகள்.

1707 — இங்கிலாந்து ஸ்காட்லாந்து ஐக்கியம்.

1708 — ஊடனார்ட் போர்க்களம்.
மினார்க்கா கைப்பற்றப்படல்.

1709 — மால்பிலாக்கத் போர்க்களம்.

1710 — விக்குகள் வீழ்ச்சி.

1711 — ஆரும் சார்லஸ் ஜெர்மன் பேரரசராதல்.

1713 — யுட்ரெக்ட் சமாதான உடன்பாடு.

1714 — ஆன் இராணியார் இறத்தல்; முதலாம் ஜார்ஜ் பட்டமெய்துதல்.

# 1. டியூடர் கால இங்கிலாந்து

அரசியல் நிலைமை : நிலமானிய முறையின் வீழ்ச்சி—டியூடர் வல்லரசு—டியூடர் பிரிவி கவுன்சில்—டியூடர் பாராளுமன்றம்—டியூடர் தல ஆட்சிமுறை—தேசிய உணர்ச்சி.

சமூக நிலைமை : நிலமானியப் பிரபுத்துவ வீழ்ச்சி—புதிய சமுதாயம்—ஸ்கொயர்கள்—யோமென்கள் — உழவர்கள் — நடுநிலை வகுப்பினர்.

சமய நிலை : சமயச் சீர்திருத்தம், ஆங்கிலிக்கம், பியூரிட்டானியம்.

பொருளாதார நிலை : கில்டு முறை வீழ்ச்சி—கடற் பிரயாணங்கள், குடியேற்ற நாடுகள்—கைத்தொழில் வளர்ச்சி—விவசாயம்—நில அடைப்பு முறை—இரவலர் சட்டங்கள் (Poor Laws)

கலைகளின் நிலை : இலக்கிய வளர்ச்சி—நுண்கலைகள்—மறுமலர்ச்சி.

இங்கிலாந்தின் வரலாற்றில் டியூடர்களின் ஆட்சிக் காலம் மிகச் சிறந்ததோர் இடத்தைப் பெறுகின்றது. அவர்கள் காலத்திற்குள் இங்கிலாந்தின் அரசியல், பொருளாதாரம், கலை, சமயம் இன்ன பல துறைகளிலும் இடைக்காலப் பண்புகள் மாறித் தற்காலப் பண்புகள் தலையெடுக்கின்றன.[1] பழமை மாண்டு புதுமை மலர்கின்றது. எங்குப் பார்த்தாலும் ஒரு விழிப்புணர்ச்சி தென்படுகிறது. மக்களிடையும் மன்னரிடையும் ஊக்கமும் உற்சாகமும் பொங்கி வழிகின்றன. நாடு முன்னேற்றப் பாதையில் விரைந்து நடைபோட ஆரம்பிக்கிறது. அரசியலில் தேசியம் (Nationalism) மலர்கிறது. பொருளாதாரத் துறையில் தனி மனிதர்களின் முயற்சி தலைதூக்குகிறது. கலைத்துறையில் மறுமலர்ச்சி (Renaissance) இலக்கியங்கள் தோன்றுகின்றன. சமயத் துறையில் மதச் சீர்திருத்த இயக்கம் (Reformation) எழுகின்றது. சுருங்கக் கூறின் டியூடர்களின் காலத்திலிருந்துதான் இங்கிலாந்தின் நவீன வரலாறு தொடங்குகிறது எனலாம்.

[1] See 'History of England', by G. M. Trevelyan, Page 267.

## அரசியல் நிலைமை

**நிலமானிய முறை வீழ்ச்சி**

டியூடர்களின் வருகைக்கு முன் இங்கிலாந்தின் அரசியல் நிலமானிய முறையின் (Feudalism) அடிப்படையிலேயே அமைந்திருந்தது. நிலம் படைத்த பிரபுக்களே அரசியலில் பெருஞ் செல்வாக்குடன் விளங்கினர். மன்னர்களும்கூட அவர்களுக்கு ஓரளவு கட்டுப்பட்டே அரசாட்சி செய்துவந்தனர். டியூடர்களின் காலத்தில் அந்த நிலமானியமுறை வீழ்ச்சியுற்றது.

ரோஜாப்பூ அடையாளப் போர்கள் (Wars of Roses) என்ற உள்நாட்டுச் சண்டைகளில் பல நிலப் பிரபுக்கள் மாண்டு போயினர். எஞ்சியிருந்தவர்களை ஏழாம் ஹென்றியும், எட்டாம் ஹென்றியும், பலவகையிலும் ஒடுக்கிவிட்டனர். பிரபுக்கள் தங்களுக்கென்று தனியுடை தரித்த வில்லைச் சேவகர்களை (Livery and Maintenance) வைத்துக்கொள்வதையும், ஒருவருக்கொருவர் அடிக்கடி சண்டையிட்டுக்கொள்வதையும் ஏழாம் ஹென்றி தடுத்தார். திமிர்பிடித்த பிரபுக்கள் பலரும் பிரிவி கவுன்ஸில் (Privy Council) முன் வரவழைக்கப்பட்டு, விசாரிக்கப்பட்ட பின் கடுமையாகத் தண்டிக்கப்பட்டனர். படிப்படியாக நிலமானியப் பிரபுக்களின் கொட்டம் அடங்கியது. மன்னரின் கை ஓங்கியது. கடல் கடந்து வாணிபம் செய்து பெரும் பொருள் ஈட்டிய வாணிகப் பெருமக்கள் பலர் பிரபுக்களாக்கப்பட்டனர். பழைய நிலமானியப் பிரபுக்களுக்குப் பதிலாகத் தமக்கு அடங்கி நடக்கின்ற ஒரு புதிய பிரபு இனத்தை டியூடர்கள் இங்ஙனம் தோற்றுவித்தனர்.

டியூடர்களின் காலத்தில் நாட்டில் அமைதி நன்கு நிலைநாட்டப்பட்டது. வேல்ஸிலும் ஸ்காட்லாந்திலும் ஓயாது தொல்லை விளைவித்துவந்த பிரபுக்கள் அறவே ஒழிக்கப்பட்டனர். வேல்ஸில் கலகக்காரர்களை ஒறுக்க மேலை நீதிமன்றமும் (Council of the West), ஸ்காட்லாந்தியப் பிரபுக்களை ஒடுக்க வட நீதிமன்றமும் (Council of North) டியூடர்களால் ஏற்படுத்தப்பட்டன. உள்நாட்டில் அமைதி ஏற்படுத்திய அவர்கள் வெளிநாட்டுப் போர்களிலும் வெற்றி கண்டனர். ஆர்மடாப் போரில் ஸ்பெயின் தோற்கடிக்கப்பட்டதிலிருந்து வெளிநாட்டுப் படையெடுப்பைப் பற்றிய பயமும் மக்களின் மனத்தை விட்டகன்றது. இங்ஙனம் டியூடர்கள் ஏற்படுத்திய அமைதியான சூழ்நிலையால்தான் ஸ்டூவர்ட்டுகள் காலத்துப் பாராளுமன்றம் தனது உரிமைகளுக்காக மன்னர்களோடு போராட முடிந்தது. நாட்டில் ஷேக்ஸ்பியர் போன்ற மகா கவிகள் தோன்றியதற்கும் இவ்வமைதியே காரணமாகும்.

**டியூடர் வல்லரசு**

டியூடர்களின் ஆட்சி முறையைப் புதிய முடியரசு (New Monarchy) என்பர் சிலர்.[1] 'வல்லரசு' (Despotism) என்று வாதாடுவர் வேறு சிலர். உண்மையில் அவர்கள் புதிய நிறுவனம் எதையும் இங்கிலாந்தில் புகுத்தவில்லை. தொன்றுதொட்டு இங்கிலாந்தில் இருந்துவந்த முடியரசு, பாராளுமன்றம், பொதுமைச் சட்ட மன்றங்கள் (Common Law Courts), தல ஆட்சி முறை (Local Government) முதலியவைகளை அவர்கள் அழிக்கவில்லை. ஏற்கெனவே இருந்த நிறுவனங்களை அப்படியே வைத்துக்கொண்டு அவற்றைப் புதிய முறைகளில் கையாண்டு தமது பலத்தைப் பெருக்கிக்கொண்ட பெருமை டியூடர்களுக்கே உரியதாகும்.

டியூடர் மன்னர்களின் ஆட்சி வெளிப் பார்வைக்கு 'வரம்புக் குட்படா வல்லாட்சி' போன்றே தோற்றமளித்தது. ஏனெனில், அவர்கள் பல சமயங்களில் தான்தோன்றித்தனமாய்த் தன்முனைப் போடு பல காரியங்களைச் செய்தனர். சிறப்பாக எட்டாம் ஹென்றியும் எலிஸபெத்தும் சட்டத்தையும் மதியாமற் சில சமயங்களில் நடந்துகொண்டனர். பணம் வேண்டும்போது கட்டாயக் கடன்களையும் (Forced Loans), நன்கொடைகளையும் (Benevolences) குடி மக்களிடமிருந்து அவர்கள் வசூலித்தனர். பாராளுமன்றத்தைக் கலக்காமலேயே அவர்கள் வியாபாரத் தனியுரிமைகளை (Monopolies) விற்றுப் பணம் சேர்த்தனர். தனியாணைப் பேரறிவிப்புகள் (Proclamations) மூலம் இவர்கள் தாங்களாகவே சட்டங்களை உண்டாக்கிக் கொண்டனர். விண்மீன் மண்டப நீதிமன்றம் (Star Chamber Court) போன்ற தனிப்பட்ட நீதிமன்றங்களைக் கொண்டு அவர்கள் தம் பிரியம்போல் நீதி வழங்கினர். தம் பிரியம் போல் எதிரிகளைச் சிறையிலடைத்தனர். இங்ஙனம் நீதி, நிர்வாகம், சட்டம் என்ற மூன்று துறைகளிலும் அவர்கள் பேரதிகாரம் செலுத்தினர் என்பது உண்மைதான். ஆனால், அவற்றையெல்லாம் அவர்கள் தன்னிச்சையாகவே செய்தனர் என்று கூற இயலாது. பெரும்பான்மையான மக்களின் விருப்பத்திற்கேற்பவே அவர்கள் பல காரியங்களிலும் இறங்கினர். மக்களை மதியாமல் வல்லாட்சி செலுத்துவதற்கேற்ற வசதிகள் டியூடர்களுக்கு இல்லை. நிலைப் படையும் (Standing Army) நிலையான வருமபடியும் அரசருக்கு அப்போது இல்லை. எனவே, பாராளுமன்றத்தின் தயவை எதிர்நோக்கியே டியூடர்கள் வாழ்ந்தார்கள். பாராளுமன்றத்தின் துணை கொண்டே அவர்கள் தங்களது விருப்பங்களை நிறைவேற்றிக் கொண்டார்கள். பெரும்பான்மையான மக்களின் நலத்தைக் கருத்திற்கொண்டே அவர்கள் தம் அதிகாரத்தைச் செலுத்தினர்.

[1] See 'Factors in Modern History' by Pollard, Page 52.

எனவே, டியூடர்களின் ஆட்சியைக் ‘குடிதழீஇய வல்லரசு’ (Popular Despotism) அல்லது ‘மக்கள் நலன் கருதிய வல்லரசு’ (Benevolent Despotism) என்று கூறுவதே ஓரளவு பொருத்த முடையதாகும்.

டியூடர் மன்னர்கள் நாட்டின் எல்லா அதிகாரங்களையும் தங்கள் கைகளிலேயே வைத்துக்கொண்டனர். இங்ஙனம் மன்னர்களிடம் ‘அதிகாரச் செறிவு’ (Centralisation of Authority) ஏற்படச் சூழ் நிலை நன்கு சாதகமாயிருந்தது. எட்டாம் ஹென்றியின் காலத்து ஏற்பட்ட மதச் சீர்திருத்த இயக்கத்தால் மதத்துறைக்கும் அரசியல் துறைக்கும் மன்னரே தனித் தலைவரானார். மதத் துறையில் போப் பாண்டவரும் அவரது அதிகாரிகளும் செலுத்திவந்த ஏராளமான அதிகாரம் மன்னரது கைகளிலே வந்து குவிந்தது. நிலமானியப் பிரபுக்களின் வீழ்ச்சியாலும் மன்னரது கை வலுத்தது. மறுமலர்ச்சி இயக்கத்தால் நாட்டில் ரோமானியச் சட்டங்கள் படிக்கப்பட்டன. மன்னன் சட்டங்களுக்கும் மேற்பட்டவன் என அச்சட்டங்கள் கூறியதை அறிஞர்கள் ஏற்றுக்கொண்டனர். மறுமலர்ச்சி இலக்கிய மான ‘ப்ரின்ஸ்’ (Prince) என்ற மாக்கியவல்லியின் (Machiavelli) நூலில் விவரிக்கப்பட்டிருந்த வல்லரசனுக்கு ஓர் எடுத்துக்காட்டாக எட்டாம் ஹென்றி திகழ்ந்தார். மேலும், பொருள் தேடும் முயற்சி யிலும், அறிவை வளர்க்கும் முயற்சியிலும் மக்கள் ஈடுபட்டிருந் தனரேயன்றி அரசியல் உரிமைகளைப்பற்றி அவர்கள் அவ்வளவு அக்கறை கொள்ளவில்லை. தங்களது பல முயற்சிகளும் வெற்றி பெறவேண்டுமானால் நாட்டில் அமைதி தேவை; அமைதியை நிலை நாட்ட ஒரு வல்லரசன் தேவை; எனவே, அரசனின் கை வலுக் கட்டும் என்பதே அக்கால மக்களின் கொள்கையாயிருந்தது.

### டியூடர் பிரிவி கவுன்சில்

இங்ஙனம் தங்களது அதிகாரப் பெருக்கத்துக்கு மக்களின் அமோகமான ஆதரவிருப்பதை அறிந்துகொண்ட டியூடர்கள் பல வகையிலும் தங்களது செல்வாக்கை வளர்த்தனர். மன்னருக்கு அருகிலேயே இருந்துவந்த ‘செயலாளரின்’ (Secretary) அதிகாரங்கள் பெருக்கப்பட்டன. அதே போன்று அரசரது அந்தரங்க ஆலோசனை சபையாக விளங்கிய ‘பிரிவி கவுன்ஸிலின்’ அதிகாரங்களும் அதிகரிக்கப்பட்டன. பிரிவி கவுன்ஸிலில் அரச ருக்கு அடிபணியும் ஆட்களே நியமிக்கப்பட்டனர். அரசர் ஆட்டி வைக்கும் கைப்பொம்மைகளாக அவர்கள் விளங்கினர். அவர்களைக் கொண்டு அரசர் தமக்கு விருப்பமான எதையும் சாதித்துக்கொள்ள முடிந்தது. பிரிவி கவுன்ஸிலின் உறுப்பினர்கள் பாராளுமன்றத் திலும் உறுப்பினராயிருந்தனர். எனவே, அங்கு அவர்கள் அரச

ருக்கு வேண்டிய சட்டங்களைக் கொணர்ந்து, வாதித்து நிறைவேற்ற முடிந்தது. நாட்டின் பாதுகாப்பு, வியாபாரம் முதலிய பெருங் காரியங்களிலிருந்து கணவன், மனைவிமாரிடை ஏற்படும் பூசல்களைத் தீர்த்து வைத்தல் போன்ற சிறு காரியங்கள் வரையில் எல்லாவற்றையும் பிரிவி கவுன்ஸிலே நிர்வகித்துவந்தது. அதன் நிர்வாக அதிகாரத்துக்கு அப்பாற்பட்டது நாட்டில் ஒன்றுமே இல்லை எனலாம். பாராளுமன்றக் கூட்டம் நடைபெறுதபோது 'தனியாணைப் பேரறிவிப்புகள்' மூலம் சட்டம் செய்யும் அதிகாரமும் பிரிவி கவுன்ஸிலுக்கிருந்தது. நிர்வாக, சட்ட அதிகாரங்களேயன்றி நீதி பரிபாலன அதிகாரமும் அதற்கிருந்தது. நாட்டின் அமைதிக்குத் தீங்கு விளைக்க முயலும் எவரும் அதன் பிடியினின்றும் தப்ப முடியாது. கவுன்ஸிலின் ஒரு பகுதியான விண்மீன் மண்டப நீதி மன்றமானது வெஸ்ட்மின்ஸ்டர் நகரில் நிரந்தரமாக நீதி பரிபாலனம் செய்துவந்தது. அரசன் போகுமிடமெல்லாம் கவுன்ஸிலின் இன்னொரு பகுதி உடன்சென்று நீதி வழங்கியது. உள்ளூர் வட்டாரங்களில் சாதாரண நீதிபதிகளை உருட்டல் மிரட்டல்களால் பயமுறுத்தித் தப்பித்து வந்த பெருங் குற்றவாளிகளை மேற்படி நீதி மன்றம் ஈவிரக்கமின்றித் தண்டித்தது. பொதுச் சட்ட நீதிமன்றங்கள்போல் குறிப்பிட்ட முறைகளுக்குக் கட்டுப்படாமல் சமயோசிதமாகப் பல குறுக்கு வழிகளைப் பயன்படுத்தி அந்நீதிமன்றம் விரைவாகவும் உறுதியாகவும், பாரபட்சமின்றியும் நீதி வழங்கியது. உண்மைகளை கிரகிக்கச் சித்திரவதை முறைகளைக் கையாளவும் அந்நீதிமன்றம் தயங்கியதில்லை. மமதை பிடித்த பிரபுக்களுக்கு எமனாகவும், ஏழைகளுக்கு ஓர் அருள் வள்ளலாகவும் அம்மன்றம் விளங்கியது. பிரிவி கவுன்ஸிலின் கிளைகளே, மேலை நீதிமன்றமும் வட நீதிமன்றமுமாகும். சமயத்துறையில், ஆங்கில மத ஏற்பாட்டுக்கு இணங்காதாரைத் தண்டிக்க 'உயர் ஆணை நீதிமன்றம்' (High Commission Court) ஒன்று எலிஸபெத் காலத்து ஏற்படுத்தப்பட்டது. அதுவும் பிரிவி கவுன்ஸிலைப் போலவே பொதுச்சட்ட நீதிமன்றங்களின் விதிகளுக்குக் கட்டுப்படாமல் விரைவில் வழக்குகளைத் தீர்த்துவந்தது. ஏழைகளின் வழக்குகளைப் பணச் செலவின்றி விரைவில் தீர்க்க 'வேண்டுகோள் நீதிமன்றம்' (Court of Requests) ஒன்றும் டியூடர்கள் காலத்து அரும்பணி செய்துவந்தது. இங்ஙனம் பிரிவி கவுன்ஸிலையும் அதன் கிளைகளையும் கொண்டு, பல்வேறு காரியங்களையும் டியூடர்கள் செய்து வந்ததால் அவர்களது ஆட்சிக்காலம் 'கவுன்ஸில்களின் பொற்காலம்' (Golden Age of the Councils) எனப் பெயர் பெறுகின்றது.

### டியூடர் பாராளுமன்றம்

டியூடர்கள் பாராளுமன்றத்தைப் பெரிதும் பேணி வளர்த்தனர். ஏனெனில், அது அவர்களின் விருப்பங்களைத் தடையின்றி நிறை

வேற்றி வைத்தது. டியூடர்களின் விருப்பமும், அவர்களது பாராளுமன்றங்களின் விருப்பமும் ஏறக்குறைய ஒன்றுயிருந்ததே அவர்களின் வெற்றிக்கு மூலகாரணமாகும். டியூடர்கள் சட்ட வுணர்ச்சி நிரம்பியவர்கள். நாட்டின் சட்டங்கட்கு விரோதமாகப் போக அவர்கள் அஞ்சினர். எனவே, பாராளுமன்றத்தைக் கொண்டே அவர்கள் தங்களது காரியங்களையெல்லாம் செய்து முடித்தனர். நாட்டின் மத ஏற்பாட்டையே மாற்றி அமைத்த மதச் சீர்திருத்தச் சட்டங்கள் யாவும் பாராளுமன்றத்தில் நிறைவேறி யவையேயாகும். இராஜத்துரோகச் சட்டங்களும், ஹென்றியின் விவாகரத்துச் சட்டங்களும்கூடப் பாராளுமன்றத்தால் நிறை வேற்றப் பட்டவையேயாகும். இங்ஙனம் பாராளுமன்றம் மன்னரின் அடிமைபோல் நடந்துகொண்டாலும் அரசர்கள் அத்துமீறும்போது அவர்களைக் கண்டிக்கவும் அது தயங்கியதில்லை. ஹென்றியின் கட்டாயக் கடன் மசோதா ஒன்றைப் பாராளுமன்றம் நிராகரித்தது. ஃபிரான்ஸோடு போர் புரிய எட்டு லக்ஷம் பவுன்களை மானியமாக உல்ஸி பிரபு (Wolsey) கேட்டபோது பாராளுமன்றம் அதை மறுத்து விட்டது. எலிஸபெத் இராணியார் தனியுரிமைகளைத் தாராளமாக வழங்குவதைப் பாராளுமன்றம் கண்டித்தது. அதன்பின் அவர் தனியுரிமை வழங்குவதை நிறுத்திக்கொண்டார். எட்டாம் ஹென்றி பாராளுமன்ற உறுப்பினர்களின் உரிமைகளான சிறை யிடப்படா உரிமை, பேச்சுரிமை இரண்டையும் பெரிதும் போற்றி வளர்த்தார். எலிஸபெத் இராணியார் வெளிநாட்டு விவகாரம், மதம் போன்ற துறைகளில் பேச்சுரிமையை அவர்களுக்குக் கொடுக்க மறுத்தார். மற்றத் துறைகளில் அவர் அவ்வுரிமையை மறுக்கவில்லை. எலிஸபெத் இராணியார் பெண் என்பதாலும், அவர் நாட்டுக்குப் பல சேவைகளைச் செய்தவர் என்ற நன்றி யுணர்ச்சியாலும், பாராளுமன்றம் அவரை அதிகம் கண்டிக்கவில்லை. எனினும், அவர் காலத்திலேயே பாராளுமன்றம் நன்கு வளர்ச்சி பெற்றுவிட்டது. ஸ்டூவர்ட்டுகள் காலத்துப் பாராளுமன்றமானது மன்னரோடு உரிமைப் போராட்டம் நடத்தியதென்றால், அதற்குக் காரணம் டியூடர்களேயாவர். டியூடர் காலத்துப் பாராளுமன்றம் ஒரு குழந்தைபோன்று முதலில் இருந்தது. அதைப் பேணி வளர்க்கும் செவிலித்தாய்மார்போல் டியூடர்கள் விளங்கினர்கள். அக்குழந்தைக்கு அரசியல் பயிற்சி எனும் பாலூட்டிச் சீராட்டி வளர்த்து வாலிபனுக்கிய பெருமை டியூடர்களுடையது. வயது வந்த காளையைக் கட்டி மேய்க்கும் பொறுப்பு பலஹீனர்களாகிய ஸ்டூவர்ட்டுகளின் தலையில் வந்து விடிந்தது.

### டியூடர் தல ஆட்சி முறை

'டியூடர்கள் அமைத்து விட்டுச் சென்ற தல ஆட்சி முறை யானது அவர்களது ஆக்கத்திறனின் அழியாத நினைவுச் சின்ன

மாய்த் திகழ்கிறது' என்பார் டேனர் எனும் ஆசிரியர்.[1] மத்திய நிர்வாகத்தைப் போன்றே தல நிர்வாகத்தையும் தங்கள் கட்டுப் பாட்டுக்குள்ளேயே அன்னூர் வைத்துக்கொண்டிருந்தனர். உள்ளூர் வட்டாரங்களில் செல்வாக்குடன் விளங்கிய ஷெரீப்புகளின் காலம் மலையேறிவிட்டது. அமைதிகாண் நீதிபதிகள் (Justices of Peace) என்கிற அதிகாரிகளே தல அதிகாரிகளாக டியூடர்கள் காலத்தில் விளங்கினர். அவர்களிற் பெரும்பாலோர் நாட்டுப்புறப் பெருநிலக்கிழார்களாவர் (Squires). எனவே, ஊதியமின்றியே அவர்கள் ஊழியம் செய்தார்கள். பாதைகள், பாலங்கள் இவற் றைச் செப்பனிடல், சிறு வழக்குகளை விசாரித்தல், இரவலர் சட்டங் களை (Poor Laws) அமல் நடத்தல், தொழிலாளிகளின் கூலிகளை நிர்ணயித்தல் போன்ற பற்பல அலுவல்களை அவர்கள் செய்தனர். இங்ஙனம் அவர்கள் நல்ல அரசியல் பயிற்சி பெற்றனர். அவர்க ளிடையிலிருந்தே பாராளுமன்ற உறுப்பினர்களும் தேர்ந்தெடுக்கப் பட்டனர். உள்ளூரில் பெற்ற அனுபவம் அவர்களுக்கு மத்திய அரசாங்கத்திலும் பயன் தந்தது. ஸ்டுவர்ட்டுகள் காலத்து மன்னர் களை எதிர்த்தவர்களெல்லாம் டியூடர்களால் பயிற்றுவிக்கப்பட்ட நிலக்கிழார்களேயாவர். கவுன்டியின் (County) தல அதிகாரி யான லெப்டெனென்ட் பிரபுவை (Lord Lieutenant) மன்னரே நியமித்தார். லெப்டெனென்ட் பிரபுவே அமைதிகாண் நீதி பதிகளை நியமித்தார். இங்ஙனம் தல அதிகாரிகளை மன்னர்களும் பிரிவி கவுன்ஸிலும் கைப்பாவைகளாக ஆட்டி வைத்தனர். நிர்வாகத்தின் மேல் தளத்திலிருந்து அடித்தளம்வரை எல்லா இடங்களிலும் டியூடர்கள் தங்களது வல்லாட்சியைச் செலுத்தினர். ஆனால், அதை மக்கள் தங்களுக்கேற்ற நல்லாட்சியாகக் கருதி வரவேற்றனர்.

### தேசிய உணர்ச்சி

டியூடர்களின் காலத்திற்ருன் மக்களிடையே தேசிய உணர்ச்சி (Nationalism) வீறு கொண்டெழுந்தது. நூருண்டுப் போரில் (hundred years war) கலே பட்டினத்தை ஆங்கிலேயர் இழந்த தன்பின் இங்கிலாந்துக்கும் ஐரோப்பாக் கண்டத்துக்கும் இருந்த கொஞ்சநஞ்சத் தொடர்பும் அறுந்துவிட்டது. தாங்கள் தனி இனத்தவர் என்றும் தனிநாட்டினர் என்றும் ஆங்கிலேயர் உணரத் தலைப்பட்டனர். வெளிநாடுகளின் பிடியினின்றும் முழுவதுமாக விடுபட்டுத் தனி சுயேச்சையுடன் விளங்க ஆங்கிலேயர் துடித் தனர். இத்துடிப்பை டியூடர்கள் உணர்ந்துகொண்டு அதைச் செயலாக்க முனைந்தனர். அதனுல் ஆங்கிலேயர் டியூடர் மன்னர்

[1] See 'Tudor Constitutional Documents', by Tanner, Page 452.

களைத் தங்களது தேசிய உணர்ச்சியின உருவமாக எண்ணி, அவர்களது செயல்களுக்கெல்லாம் தங்களது முழு ஆதரவையும் தந்தனர். இத்தேசிய உணர்ச்சியே, போப்பாண்டவரின் பிடியினின்றும் ஆங்கிலேயத் திருச்சபை விடுபடவேண்டுமென்ற விருப்பத்தைக் குடிமக்களிடை வளர்த்தது. அதன் விளைவே மதச் சீர்திருத்த இயக்கமாகும். இங்ஙனம் டியூடர்கள் காலத்தில் பிற நாடுகளின் ஆதிக்கத்தினின்றும் அரசியல், சமயத் துறைகளில் இங்கிலாந்து விடுதலை பெற்றது. தேசிய நாடும் (National State), தேசியத் திருச்சபையும் (National Church) இங்கிலாந்தில் தோன்றுகின்றன. ஆங்கிலேயர் தமக்கே உரிய தனி வழியில் எல்லாத் துறைகளிலும் முன்னேறுகின்றனர். நாட்டுப்பற்றும், மொழிப் பற்றும் மக்களிடையே வளர்கின்றன. ஆங்கில மொழியும் ஆங்கில நாகரிகமும் தனிப்பட்ட முறையில் வளர்ச்சி எய்துகின்றன.

## சமூக நிலைமை

### நிலமானியப் பிரபுத்துவ வீழ்ச்சி

ஆங்கிலேய சமுதாயத்தில் டியூடர்களின் காலத்தில் ஒரு பெருத்த மாறுதல் ஏற்பட்டது. நாம் முன்பே பார்த்தபடி பழைய நிலமானியப் பிரபுக்கள் பலரும் அழிந்துபோயினர். மடாலயக் கலைப்பின் (Dissolution of Monasteries) விளைவாக நிலமானியப் பிரபுக்களுக்குச் சரிநிகர் சமானமாக வாழ்க்கை நடத்திவந்த சமயம் சார்ந்த பிரபுக்களும் (Ecclesiastical Lords) தம் செல்வாக்கை இழந்தனர். பிரபுக்கள் சபையில் (House of Lords) மேற்சொன்ன பரம்பரைப் பிரபுக்கள் பலரும் இடமிழந்தனர். அவர்களுக்குப் பதிலாக டியூடர்களால் புதிதாகத் தோற்றுவிக்கப்பட்ட பிரபுக்களே அங்கு அதிகமாய் இருந்தனர். வாணிபத்தால் பெற்ற பெரும் பொருளைக் கொண்டு அப் புதிய பிரபுக்களும் மாடமாளிகைகளைக் கட்டிக் கொண்டு ஆடம்பர வாழ்க்கை வாழ்ந்தனர். பழைய நிலமானியப் பிரபுக்களும் காலத்திற்கேற்பத் தங்களது வாழ்க்கை முறையை மாற்றிக்கொண்டனர். தனிப்பட்ட கோட்டைகளில் தனியுடை தரித்த பரிவாரங்கள் புடைசூழச் சிற்றரசர்களைப் போல் வாழ்ந்து வந்த அவர்கள் சாதாரண மாளிகைகளில் பணிப் பெண்டிரும், காமக் கிழத்தியரும் புடைசூழ உல்லாச வாழ்வு வாழ ஆரம்பித்தனர். அவர்களது போர்க்குணம் முற்றிலும் மாறிவிட்டது. உதாரணமாக லீஸெஸ்டர் பிரபு என்பார் தாம் வதிந்த கெனில் வொர்த் கோட்டையை ஓர் அரண்மனையாக மாற்றிவிட்டார். அக் கோட்டையின் அகழியாகத் திகழ்ந்த பெரிய ஏரி ஒன்று அப்பிரபு தமது ஆடல் அழகிகளுடனும் பாடல் மகளிருடனும் படகில் ஏறிக் கொண்டு உல்லாச பவனிவரும் பொழுதுபோக்கிடமாக மாறியது,

இங்ஙனம் அரசனையே தட்டிக் கேட்கும் தைரியம் வாய்ந்த நில மானியப் பிரபுத்துவம் (Feudal Aristocracy) மாய்ந்து அதற்குப் பதிலாக அரசனின் கைப்பாவையாகத் திகழ்ந்த ஒரு புதிய உயர் வகுப்பு (New Aristocracy) இங்கிலாந்தில் தோன்றலாயிற்று. இதை ஒரு சமுதாயப் புரட்சி (Social Revolution) என்றே கூறலாம்.

புதிய சமுதாயம்

கனவான்கள் (Nobles), பிரபுக்கள் (Lords) இவர்களே சமுதாய மாடியின் மேல் தளத்தில் உலவியவர்களாவர். மேற்சொன்னபடி பல பிரபுக்கள் தங்களது வாழ்க்கை முறைகளை மாற்றிக் கொண்டன ரெனினும் ஒருசிலர் பழைய நிலைமையிலேயே இருந்தனர். கோட்டை மதிலால் சூழப்பட்ட மாளிகைகளில் அவர்கள் வாழ்ந் தனர். அம்மாளிகைகளில் நூற்றுக்கணக்கான சிப்பந்திகள் இருந்தனர். கோலாகலமான கேளிக்கைகளும் விருந்தும் அங்கு அடிக்கடி நடைபெறும். ஓய்வு வேளைகளில் கரடியும் நாயும் சண்டையிடுதல் போன்ற மிருகச் சண்டைகளைக் கண்டு களிப் பதும், சூதாடுவதும், நடனம், நாடகம் முதலியவைகளைப் பார்த்து மகிழ்தலும் அக்கனவான்களின் பொழுதுபோக்காகும். மாளிகையின் வாசலில் எப்போது பார்த்தாலும் ஒரு வறியோர் கூட்டம் நெருக்கி யடித்துக்கொண்டு நிற்கும். அவர்களுக்கு நாள் தோறும் இறைச்சித் துண்டுகள் வழங்கப்படும். கனவான்களின் ஆட்கள் அவர்களை ஈவிரக்கமின்றி அடித்துத் துரத்தல் ஒரு சாதாரண அன்றாட நிகழ்ச்சியாகும்.

கனவான்களுக்கு அடுத்த நிலையில் சமுதாயத்தில் விளங்கி யவர்கள் ஸ்கொயர்கள் (Squires) எனும் பெருநிலக்கிழார்கள் ஆவர். அவர்களிற் பெரும்பாலோர் கல்வியறிவற்றவர்கள். எனினும், பொது அறிவும் பெருந்தன்மையும் வாய்ந்தவர்கள். டியூடர்கள் அவர்களையே அமைதிகாண் நீதிபதிகளாக நியமித்துத் தல ஆட்சியை நடத்தினர். அதனால் அவர்கள் நல்ல அரசியல் பயிற்சி பெற்றனர். நேர்மையும், கண்ணியமும், உரிமை உணர்ச்சியும் இவ்வகுப்பினர்பால் பெரிதும் காணப்பட்டன.

பெருநிலக் கிழார்களுக்கு அடுத்த நிலையில் கிராமப் புறங்களில் விளங்கியவர்கள் யோமென்கள் (Yeomen) எனும் சிறு நிலக்கிழார் களாவர். இவர்கள் சொந்த நிலங்களை யுடையவர்கள். சுயேச்சை மனப்பான்மை நிறைந்தவர்கள். சமுதாயத்தின் பெரும் பகுதி யினர் அவர்களே. எனவே, பாராளுமன்ற உறுப்பினர் தேர்தல் களில் வெற்றிபெற விரும்புவோரெல்லாம் அவர்களின் தயவையே நாடினர். இச்சுதந்திர நிலக்கிழார் வகுப்பு, நாட்டின் முதுகெலும் பெனத் திகழ்ந்தது.

சிறு நிலக்கிழார்களின் வயல்களில் சாகுபடி செய்தவர்கள் உழவர்களாவர் (Peasants). அவர்களே சமூகத்தின் அடித்தளத்தில் மண்டிக்கிடந்தவர்கள். அவர்களுக்குச் சொந்த நிலமில்லாததால் கேவலம் மிருகங்கள் போலவே அவர்கள் நிலக்கிழார்களால் நடத்தப்பட்டனர். வறுமையும் பிணியும் இவ்வகுப்பாரிடையே தாண்டவமாடின. டியூடர்கள் காலத்துப் பல பிரபுக்கள் தங்கள் விளை நிலங்களை மேய்ச்சல் நிலங்களாக மாற்றிவிட்டதால் உழவர்கள் பலர் வேலை இழந்து பிச்சைக்காரர்களாக மாறினர்.

நகர்ப்புறங்களில் நடுத்தர மக்கள் வாழ்ந்துவந்தனர். அவர்களில் பெரும்பான்மையோர் வணிகர்களாவர். வணிகர்கள் பலர் சேர்ந்து வியாபாரக் கம்பெனிகளை ஏற்படுத்திக்கொண்டு அரசர்களிடம் உரிமைச் சாசனங்களைப் (Charters) பெற்றுப் பிறநாடுகளோடு வியாபாரம் செய்து அவர்கள் பெரும் பொருள் திரட்டினர். டியூடர் அரசர்களுக்கு அவ்வப்போது கடன் கொடுத்து அவர்களுக்குப் பக்கபலமாய் விளங்கியவர்கள் இவ்வணிகர்களேயாவர். மற்றும் வழக்கறிஞர்கள், மருத்துவர்கள், அரசாங்க ஊழியர்கள், கைத்தொழிலாளிகள் போன்ற பலதரப்பட்ட மக்கள் நகரங்களில் வாழ்ந்தனர்.

## சமய நிலை

### சமயச் சீர்திருத்தம்—ஆங்கிலிக்கம்—பியூரிட்டானியம்

டியூடர்களின் அரிய சாதனைகளுள் முதன்மையாக வைத்தெண்ணப்படுவது அவர்கள் இங்கிலாந்தில் புகுத்திய சமயச் சீர்திருத்த இயக்கமேயாகும். இங்கிலாந்து இன்று பிராடெஸ்டண்டு நாடாக விளங்குவதற்கு அவர்களே மூலகாரணம். டியூடர்கள் சமயச் சீர்திருத்தத்தை இங்கிலாந்தில் புகுத்தியதற்கு அரசியல் விருப்பங்களே காரணம், போப்பின் ஆதிக்கத்திலிருந்து விடுபட வேண்டுமென்பதே அவர்களின் குறிக்கோள். மதத்துறையில் போப்புக்குப் பதிலாக மன்னர் இறைமை (Sovereignty) பெற்றார் என்பதற்கும் மேலாகப் பெரிய சீர்திருத்தம் எதுவும் இங்கிலாந்தில் ஏற்படவில்லை. எட்டாம் ஹென்றி கத்தோலிக்க மதக் கொள்கையில் மிகுந்த பற்றுள்ளவர். அதனால்தான் 'மதக்காவலர்' (Defender of Faith) என்ற பட்டம் அவருக்குப் போப்பாண்டவரால் வழங்கப்பட்டது. எனவே, மதச் சடங்குகள் முதலியவற்றில் அதிக மாறுதலை அவர் புகுத்தவில்லை. சமயச் சீர்திருத்தத்துக்குப் பின் இங்கிலாந்தில் ஏற்படுத்தப்பட்ட ஆங்கிலிக்கத் திருச்சபையானது (Anglican Church) பெரிதும் கத்தோலிக்க சமயத்தையே ஒத்திருந்தது. எனவே, உண்மையான மதச் சீர்திருத்தத்தை விரும்பியவர்கள் ஆங்கிலிக்கத் திருச்சபையில் சேர மறுத்தனர். அதை

மேலும் தூய்மைப்படுத்த அவர்கள் விரும்பினர். எனவே அவர்கள், 'தூய்மைக் கொள்கையினர்' எனப் பொருள்படும் பியூரிட்டன்கள் (Puritans) என அழைக்கப்பட்டனர். இப்பியூரிட்டன்களை எலிஸ பெத் இராணியார் பெரிதும் ஒறுத்தார். ஸ்டூவர்ட்டுகள் காலத்துப் பாராளுமன்றத்தில் உரிமைக் குரலெழுப்பி மன்னரின் சிறப்பதிகாரங் களைக் கண்டித்தவர்கள் இப்பியூரிட்டன்களேயாவர். இங்ஙனம் மதத்துறையில் சமயப் பொறைக் கொள்கையைக் (Toleration) கடைப்பிடிக்காத காரணத்தால் டியூடர்கள் அரசாங்கத்தை எதிர்க்கக்கூடிய ஒரு கூட்டம் நாட்டில் பெருகுவதற்கு வழி செய்துவிட்டுப் போயினர்.

## பொருளாதார நிலைமை

### 'கில்டு' முறை வீழ்ச்சி

டியூடர்களின் காலத்துக்கு முன்பு ஆங்கிலேயக் கைத்தொழில் களும் வியாபாரமும் 'கில்டுகள்' (Guilds) எனும் வியாபாரச் சங் கங்களின் கட்டுப்பாடுகளுக்குட்பட்டு வளர்ச்சியின்றி வாடிக் கிடந்தன. ஆனால், டியூடர்கள் காலத்துத் தனிப்பட்டவர்கள் துணிகரமாகக் கடல்கடந்து சென்று வியாபாரத்தி லீடுபட்டனர். கில்டு முறை சீரழிந்தது. அவைகளுக்குப் பதிலாகக் கிழக்கிந்தியக் கம்பெனி (East India Company), லெவாண்ட் கம்பெனி (Levant Company) போன்ற வியாபாரக் கம்பெனிகள் தோன்றி, அரசியின் உரிமைச் சாசனங்களைப் பெற்று, உலக நாடுகளோடு வியாபாரம் செய்யத் தொடங்கின. இதனால் பல பணக்கார முதலாளிகள் நாட்டில் தோன்றினர். கில்டுகளைப் போன்ற இக்கம்பெனிகளும் வியாபாரத்தில் தனியுரிமை வற்புறுத்தின. கம்பெனியில் சேராத வர்கள் வியாபாரத்திலீடுபடுவது தடுக்கப்பட்டது. எனினும், ஒவ் வோர் ஆண்டும் வெவ்வேறு முதலாளிகள் முதல் போட்டு வியாபாரம் செய்து இலாபத்தைப் பிரித்துக்கொள்ள வசதி இருந்தது. நாட்டின் செல்வநிலை உயரவும் அரசரின் வருமானம் வளரவும் இக்கம்பெனிகள் பெரிதும் உதவின.

### கடற் பிரயாணங்கள்—குடியேற்ற நாடு

கடல் கடந்து சென்று குடியேற்ற நாடுகளை நிறுவவும் டியூடர் கள் காலத்து ஒருசிலர் முயன்றனர். சர் வால்ட்டர் ராலே (Sir Walter Raliegh) என்பார் அமெரிக்காவில் வர்ஜினியா (Virginia) என்ற குடியேற்ற நாட்டை 1584ஆம் ஆண்டில் நிறுவினர். பார்த்தலோமியோ கோஸ்னல்டு (Bartholomeo Gosnald) என்பார் நியூ இங்கிலாந்தில் ஒரு குடியேற்ற நாட்டை ஏற்படுத்த முயன்றுர். இவ்விரு முயற்சிகளும் தோல்வியுற்றன. எனினும், பிற்காலத்துக்

குடியேற்ற நாட்டு முயற்சிகளுக்கு அவை வழிகோலின. டிரேக் (Drake) என்ற துணிச்சல் மிக்க மாலுமி கப்பல் மூலம் உலகையே வலம் வந்தார். அவர் இங்கிலாந்து திரும்பியபோது எலிஸபெத் இராணியார் நேரே அவர் வந்த கப்பலுக்கே சென்று அவரை வரவேற்றுப் பாராட்டினுர். வேறு சில மாலுமிகள் ஸ்பானியர்களின் வியாபாரக் கப்பல்களைக் கொள்ளையடித்தனர். அவர்கள் 'கடல் ஓநாய்கள்' (Sea Dogs) என அழைக்கப்பட்டனர். அவர்கள் நாட்டின் செல்வத்தைப் பெருக்க மறைமுகமாக உதவி புரிந்தனர்.

### கைத்தொழில் வளர்ச்சி

எலிஸபெத் இராணியாரும், அவரது அமைச்சரான பர்லி பிரபுவும் நாட்டின் கைத்தொழில் வளர்ச்சியில் பெரிதும் ஊக்கம் காட்டினர் மதத்துன்புறுத்தல் (Persecution) காரணமாக ஐரோப்பாவினின்றும் இங்கிலாந்துக்கு ஓடிவந்த பிராடெஸ்டண்டுகள் ஆங்கிலேயருக்குப் பல கைத்தொழில் இரகசியங்களைக் கற்றுத் தந்தனர். டச்சுக்காரர்களும் வாலூன்களும் கிழக்கு ஆங்கிலியாவில் (East Anglia) குடியேறி, பேய்ஸ் (Baiz) போன்ற நேர்த்தியான வேலைப்பாடமைந்த துணிகளை நெய்யக் கற்றுக்கொடுத்தனர். ஃபிரான்ஸினின்றும் போந்த ஹியூக்னேக்கள் (Huguenots) எனும் பிராடெஸ்டண்டுகள் ஆங்கிலேயருக்கு லினன் துணி நெய்யும் கலையைக் கற்றுக் கொடுத்தனர். நெசவுத்தொழில் மட்டுமின்றிச் சுரங்கத் தொழிலும் நன்கு வளர்ச்சியுற்றது. கார்னிஷ் சுரங்கங்களிலிருந்து செம்பு தோண்டி எடுக்கப்பட்டது. செம்பினின்றும் பல பொருள்கள் நேர்த்தியாகச் செய்யப்பட்டன. பல கைத்தொழில்களிலும் ஈடுபட்டவர்களின் தரத்தை உயர்த்த எலிஸபெத் இராணியார் காலத்துத் தொழிற் பயிற்சி பெறுவோர் சட்டமொன்று (Statute of Apprentices) 1563 ஆம் ஆண்டில் ஏற்பட்டது. ஒரு கைத்தொழிலில் இறங்க விரும்புவோர் அத்தொழிலில் ஏழு ஆண்டுகள் பயிற்சி பெறவேண்டும் என அச்சட்டம் வற்புறுத்தியது. இதனுல் ஒரு தொழிலினின்றும் இன்னெரு தொழிலுக்கு மாறுவது முடியாத காரியமாகிவிட்டது. தொழிலாளிகளின் இடப்பெயர்ச்சி (Mobility of Labour) தடைப்பட்டது.

### விவசாயம்—நில அடைப்பு முறை—இரவலர் சட்டங்கள்

டியூடர் காலத்தில் விவசாயம் நன்கு வளர்ச்சியுற்றது. புதிய சாகுபடி முறைகள் பல இடங்களில் கையாளப்பட்டன. ஆனுல், கம்பளி வியாபாரத்தில் மக்களுக்கு நல்ல இலாபம் கிடைத்ததால் பல நிலப்பிரபுக்கள் ஆடு வளர்க்கும் தொழிலில் நாட்டம் செலுத்தினர். விளை நிலங்கள் பல மேய்ச்சல் நிலங்களாக மாற்றப்

பட்டன. இங்ஙனம் மாற்றப்பட்ட நிலங்களை வேலியிட்டுப் பாதுகாக்கும் முறை ஏற்பட்டது. இதை நில அடைப்பு முறை (Enclosure System) என்றும் கூறுவர்.

நில அடைப்பு முறையாலும், மடாலயக் கலைப்பாலும், பிரபுக்கள் பரிவாரங்களின் கலைப்பாலும் நாட்டில் வேலையில்லாதவர்களின் தொகை அதிகரித்தது. அவர்களுக்கு உணவளிக்க வேண்டிய பொறுப்பு அரசாங்கத்துக்கு ஏற்பட்டது. ஏனெனில், அவர்கள் நாடெங்கும் பிச்சையெடுக்க ஆரம்பித்தனர். இப்பிச்சைக்காரத் தொல்லையை நீக்க டியூடர்கள் பல முயற்சிகளைச் செய்தனர். 'இரவலர் சட்டங்கள்' (Poor Laws) பல அவர்களால் ஏற்படுத்தப் பட்டன. உடல் உரம் படைத்த பிச்சைக்காரர்களைச் சவுக்காலடிக்க எட்டாம் ஹென்றி ஏற்பாடு செய்தார். 156-, 1572, 1598 ஆம் ஆண்டுகளில் ஏற்பட்ட இரவலர் சட்டங்களை எல்லாம் தொகுத்து எலிஸபெத் இராணியார் 1601ஆம் ஆண்டில் ஓர் இரவலர் சட்டத்தை வெளியிட்டார். அதன்படி உழைக்கச் சக்தியற்ற பிச்சைக் காரர்களுக்கு அரசாங்கத்தார் உணவளிக்க முன்வந்தனர். ஆனால், சோம்பேறிகள் பலவந்தமாகத் தொழில் நிலையங்களில் (Work Houses) சேர்க்கப்பட்டு வேலை வாங்கப்பட்டனர். வேறு சிலர் ஒழுக்கத் திருத்த நிலையங்களில் (Houses of Correction) சேர்க்கப் பட்டனர். ஒவ்வொரு பாரிஷும் (Parish—நாட்டுப் பிரிவு) அதனதன் பிச்சைக்காரத் தொல்லையைத் தானே தீர்த்துக்கொள்ள வேண்டு மெனவும், அதற்காக 'வறியோர் வரி' (Poor-rate) எனும் வரியைப் பாரிஷ் நிர்வாக சபையான வெஸ்ட்ரி (Vestry) மக்கள் மீது விதிக்கலாமெனவும் அச்சட்டம் கூறியது. அச் சட்டத்தை அமல் நடத்த ஒவ்வொரு பிரிவிலும் இரண்டு மூன்று கண்காணிப் பாளர்கள் (Overseers) நியமிக்கப்பட்டனர். இங்ஙனம் இரவலர் தொல்லை ஒருவாறு சமாளிக்கப்பட்டது.

## கலைகளின் நிலை

### இலக்கிய வளர்ச்சி

ஒரு நாட்டின் நாகரிகத்தை உள்ளபடியே படம் பிடித்துக் காட்டும் கண்ணாடி அந்நாட்டு இலக்கியங்களேயாகும். டியூடர்கள் கால இலக்கியம் அக்கால மக்களின் மேம்பாட்டுக்குத் தக்கதொரு சான்றாக அமைகிறது. இயல், இசை, நாடகம் என்ற முத்துறை களிலும் அவர்களது காலத்து நல்ல முன்னேற்றம் தென்படுகிறது. ஐரோப்பாவில் தோன்றிய கிரேக்க, ரோம இலக்கிய மறுமலர்ச்சி யின் சாயல் இங்கிலாந்தின் இலக்கியங்களிலும் பெருமளவுக்குக் காணப்படுகிறது. அதோடு ஆங்கிலேயருக்கு உரிய தனிப்பண்பு

களையும் இக்கால இலக்கியங்கள் சித்திரிக்கின்றன. லத்தீன், கிரேக்க மொழி முதலிய மொழிகள் படிக்கப்பட்டதோடு ஆங்கில மொழியும் நன்கு பேணி வளர்க்கப்பட்டது. பென் ஜான்ஸன் (Ben Jonson), மார்லோ (Marlowe) போன்ற அறிஞர்கள் நாடகக் கலையை வளர்த்தனர். அவர்களின் வழித் தோன்றலாக வந்த ஷேக்ஸ்பியர் (Shakespeare) என்ற மகாகவி உலகில் என்றும் நின்று நிலவக்கூடிய ஒப்பற்ற நாடகங்களைப் புனைந்துள்ளார். இன்பியல் (Comedy) துன்பியல் (Tragedy) என்ற இருவகை நாடகங்களையும் அவர் எழுதியுள்ளார். ஹேம்லட் (Hamlet) ஒதெல்லோ (Othello) போன்ற துன்பியல் நாடகங்களிலும், 'ரோமியோவும் ஜூலியட்டும் (Romeo and Juliet), 'அந்தோணியும் கிளியோபேட்ராவும்' (Antony and Cleopatra) போன்ற இன்பியல் நாடகங்களிலும் அவ ரால் தோற்றுவிக்கப்பட்ட குணச்சித்திர நாடகப் பாத்திரங்கள் சாகா வரம் பெற்றவையாகும். பலவகை மாந்தரின் உள்ளங்களை ஊடுருவிச் சென்று அவற்றை அப்படியே படம் பிடித்துக் காட்டும் திறமையில் ஷேக்ஸ்பியருக்கு இணையாவார் வெகு சிலரேயாவார். இயற்கையின் எழிலைப் படிப்போர் மனக் கண்முன் சினிமாப் படம் போல் கொணர்ந்து நிறுத்தலிலும் ஷேக்ஸ்பியர் வல்லவர். எட்மண்ட் ஸ்பென்ஸர் (Edmund Spencer) என்பார் எழுதிய, 'தேவதா ராணி' (Fairy Queen) எனும் ஒப்பற்ற உருவகக் காவியத்தில் (Allegory) எலிஸபெத் இராணியே க்ளோரியானு (Gloriana) என்ற இராணியாகச் சித்திரிக்கப்பட்டுள்ளார். ஸர் பிலிப் ஸிட்னி (Sir Philip Sidney) எனும் ஆசிரியர் தமது 'ஆர்க்கேடியா' (Arcadia) என்ற நூலில் நம்மைப் பழைய கிரேக்க நாட்டுக்கே இட்டுச் சென்றுவிடுகிருர். இலக்கியத்தில் மட்டுமின்றி வேறு பல துறைகளிலும் நூல்கள் பல எழுதப்பட்டன. அரசியலைப்பற்றி நுட்பமாக ஆராய்கின்ற 'சமயஞ் சார்ந்த அரசியல்' (Ecclesiastical Polity) என்ற நூலை ஹூக்கர் (Hooker) என்ற ஆசிரியரும், இயற்கைத் தத்துவத்தைப்பற்றி (Natural Philosophy) கில்பர்ட் (Gilbert) என்ற அறிஞரும், புவியியலைப்பற்றி (Geography) ரிச்சார்டு, ஹாக்லூயித் (Richard, Hakluyt) என்பாரும், அறிவியலைப் பற்றி (Science) பேக்கன் (Bacon) என்ற பேரறிஞரும் நூல்களை எழுதி யுள்ளனர்.

### நுண் கலைகள்

இசைக் கலை, நடனக் கலை, கட்டடக் கலை போன்ற கலைகளிலும் எலிஸபெத் இராணியாரின் காலம் சிறப்புற்று விளங்கியது. அவர் காலத்து இங்கிலாந்து ஒரு 'பாடும் பறவைகளின் கூடு' (Nest of Singing Birds) எனும்படி திகழ்ந்தது. டாலிஸ் (Tallis), பிர்ட் (Byrd), ஆர்லாண்டோ (Orlando), கிப்பன்ஸ் (Gibbons)

போன்ற இசைவாணர்கள் இசை வானை அலங்கரித்தனர். 'தன்னகத்தே இசையுணர்வு இயல்பாகவே இருக்கப்பெருத வனும், இசையொருமையில் உள்ளத்தைப் பறிகொடாதவனும், நாட்டைக் காட்டிக் கொடுக்கவும், சூழ்ச்சிகளில் இறங்கவும், கொள்ளை யடிக்கவுமே தகுதியுடையவன்' என்று ஷேக்ஸ்பியர் கூறுவதினின்றும் இசைக்கலை டியூடர் காலத்து எவ்வளவு மேம் பட்டு இருந்தது என்பது நன்கு புலப்படும். குரலிசையோடு வாத்திய இசையும் நன்கு பேணி வளர்க்கப்பட்டது. யாழைப் போன்ற லூட் (Lute), பிடிலை ஒத்த வயோல் (Voyol), பியா ஞேவை நிகர்த்த வர்ஜினல் (Virginal) என்ற இசைக் கருவிகளில் பலர் நன்கு பயிற்சி பெற்றிருந்தனர்.

மறுமலர்ச்சி

கல்வியிலும், கலைகளிலும் டியூடர்கள் காலத்து ஒரு 'மறு மலர்ச்சி' ஏற்பட்டது. அதில் நாம் காண்பது அறிஞனின் விடுதலை வேட்கையாகும். பழைய முறைகள் எல்லாத் துறைகளிலும் தவிடு பொடியாகின்றன. காவியம் புனைவதிலும் ஓவியம் வரைவதிலும் புதிய முறைகள் கையாளப்படுகின்றன. கலைத் துறைகளில் காணப்பட்ட இந்த விடுதலை மனப்பான்மையே ஸ்டூவர்ட்டுகள் காலத்து அரசியல் துறையில் உரிமை வேட்கையாகப் பரிணமித்த தெனில் மிகையாகாது.

இங்ஙனம் டியூடர்களின் காலம் பல துறைகளிலும் மேம்பா டுற்றுத் திகழ்ந்தது. அதனுற்றுன் டியூடர்களின் காலத்தை—சிறப்பாக எலிசபெத் இராணியார் காலத்தை—இங்கிலாந்தின் 'பொற்காலம்' எனப் பலரும் போற்றுகின்றனர். அரசியல் துறையில் நிலமானிய முறைக்கும், பொருளாதாரத் துறையில் கில்டு முறைக்கும், சமயத் துறையில் கத்தோலிக்கத் திருச்சபைக் கும் கட்டுப்பட்டிருந்த மக்கள் டியூடர்கள் காலத்து அக்கட்டுப் பாடுகளைக் கத்தரித்துக்கொண்டு வெளி வருகின்றனர். தனிப்பட்ட முறையில் சொந்தமாகச் சிந்தித்துச் செயலாற்ற அவர்கள் முற்படு கின்றனர். தனிமனிதர்களின் முக்கியத்துவம் பெருகுகின்றது. கூண்டுக் கிளியாய் இருந்த மனிதன் அக்கூண்டினின்றும் வெளிப் போந்து சுதந்திரமாய்ச் சிறகடித்துப் பறக்கின்ற காட்சியை நாம் டியூடர்களின் காலத்துக் காண்கிரேம். மேற்சொன்னவை யாவும் இங்கிலாந்தானது இடைக் காலத்தை (Middle Ages) விட்டுத் தற்காலத்துள் (Modern Age) அடியெடுத்து வைத்து விட்டது என்ற உண்மையையே நமக்குத் தெள்ளத்தெளியப் புலப்படுத்தாநிற்கின்றன.

# 2. ஸ்டூவர்ட்டுகள் காலம் (1603-1714)

அரசியல் துறை

மன்னர் பாராளுமன்றச் சச்சரவு காரணங்கள் : பாராளுமன்றத்தின் வளர்ச்சி—அமைதியான சூழ்நிலை—மறுமலர்ச்சியின் பலன்—சமுதாயப் புரட்சி—சமயப் புரட்சி—பொருளாதார நெருக்கடி—ஸ்டுவர்ட்டுகளின் குணக்கேடுகள்.

சமயத்துறை

சமுதாயத் துறை

பொருளாதாரத்துறை

சென்ற அத்தியாயத்தில் டியூடர் மன்னர்களின் ஆட்சிக் காலத்துச் சிறப்பியல்புகளை ஆராய்ந்தோம். இனி வரப்போகும் பல அத்தியாயங்களில் ஸ்டூவர்ட் வம்சத்தைச் சார்ந்த அரசர்களின் ஆட்சிக்கால வரலாற்றை ஆராய இருக்கின்றோம். படிப்பவர்களின் சௌகரியத்தை முன்னிட்டு நாம் இங்கிலாந்தின் வரலாற்றை இங்ஙனம் பல பகுதிகளாகப் பிரித்திருக்கின்றோமென்றாலும், உண்மையில் வரலாறு என்பது பிரிக்கமுடியாத ஒன்று. அதில் வரும் ஒவ்வொரு காலப் பகுதியும் ஒன்றோடொன்று சங்கிலித் தொடர்போல் பிணிக்கப்பட்டவை. இத்தகைய வரலாற்றுத் தொடர்பை நாம் எந்த நாட்டு வரலாற்றிலும் இயல்பாகக் காணக் கூடுமெனினும், இங்கிலாந்தின் வரலாற்றில் அது பெரிதும் சிறப்பாக அமைந்திருப்பதைக் காணலாம். இத்தகைய கண்ணோட்டத்துடன் நோக்கும்போது டியூடர்களின் காலமும் ஸ்டூவர்ட்டுகளின் காலமும் பல்வேறு துறைகளிலும் பெரிதும் நெருங்கிய தொடர்புகொண்டு விளங்குவதைப் பார்க்கலாம். அரசியல், சமுதாயம், பொருளாதாரம் ஆகிய பல துறைகளிலும் ஸ்டுவர்ட்டுகள் காலத்து எழுந்த சிக்கல்களுக்கெல்லாம் டியூடர்கள் தங்களை அறியாமலேயே வித்திட்டுவிட்டுச் சென்றுள்ளனர் என்பது சற்றே கூர்ந்து நோக்கின் தெள்ளிதின் புலப்படுமோர் உண்மையாகும்.

## அரசியல் துறை

### மன்னர்-பாராளுமன்றச் சச்சரவு—காரணங்கள்

ஸ்டுவர்ட்டுகள் காலமானது ஓர் நெருக்கடி நிறைந்த காலமாகும் (Age of crisis). அரசர்களுக்கும் அவர்களது பாராளுமன்றங்களுக்குமிடையே ஏற்பட்ட ஓயாத சச்சரவுகளே அந்நெருக்கடியின் மூலநாடியாகத் திகழ்கிறது. இந்த மன்னர் பாராளுமன்றப் போராட்டமானது 1603 ஆம் ஆண்டிலிருந்து 1688 ஆம் ஆண்டுவரை தொடர்ந்து நடைபெறுகிறது. எனவேதான், இக்கால வரலாற்றில் நாம் ஓர் நாடக ஓர்மையை (Dramatic unity) உணர்கிறோம். இந்த வரலாற்று நாடகத்தின் தோற்றுவாயாக (Prologue) முதலாம் ஜேம்ஸின் ஆட்சிக் காலம் அமைகின்றது. அதன் முதற் காட்சியில் அரசரொருவரின், அதாவது, முதலாம் சார்லஸின் தலை துண்டிக்கப்படுகிறது. இரண்டாவது காட்சியில் மற்றோர் அரசர் அதாவது, இரண்டாம் ஜேம்ஸ் தமது முடியைத் துறந்து நாட்டைவிட்டே ஓடிவிடுகின்றார். இடையிலே கிராம்வெல்லின் இராணுவ ஆட்சிக் காலம் வருகின்றது. கடைசியில் 1688ஆம் ஆண்டில் மூன்றும் வில்லியம் மகுடத்தை ஏற்றுக்கொண்டதோடு இவ் வரலாற்று நாடகம் முடிவுறுகின்றது. இந்நாடகத்தின் கருப்பொருளாய் அமைவது 'இறைமை எங்கே?' என்ற கேள்வியேயாகும். 'நாட்டின் இறுதியான அதிகாரம் இருப்பது மன்னரிடமா, பாராளுமன்றத்திடமா என்ற பிரச்சினையை மையமாகக் கொண்டுதான் எல்லா நிகழ்ச்சிகளும் சுழல்கின்றன. பொதுப்படையாகக் கூறுமிடத்து, பதினேழாம் நூற்றாண்டில் இங்கிலாந்தில் நடைபெற்ற போராட்டமானது தனிப்பட்ட கோனாட்சிக்கும் பாராளுமன்ற ஜனநாயகத்துக்கும் ஏற்பட்ட ஓர் போராட்டமேயன்றி வேறன்று.

### 1. பாராளுமன்றத்தின் வளர்ச்சி

டியூடர்கள் காலத்தில் அரசர்களின் கைப்பாவையாக இருந்து அவர்கள் சொல்கிறபடி யெல்லாம் ஆடிக்கொண்டிருந்த பாராளுமன்றம் ஸ்டுவர்ட்டுகள் காலத்தில் ஏன் திடீரென்று மன்னர்களையே எதிர்க்கத் தொடங்கிவிட்டது என்ற கேள்வி இயல்பாகவே எழக்கூடும். உண்மையில் இந்த நிலைமையை உருவாக்கிச் சென்றவர்கள் டியூடர்களே என்பது அவர்கள் கால வரலாற்றைச் சிறிது நுண்ணிதின் ஆராய்ந்தால் தெள்ளிதின் புலப்படும். நாம் சென்ற அத்தியாயத்தில் கண்டபடி டியூடர்கள்தாம் பாராளுமன்றத்தை நன்கு வளர்த்தவர்கள். குழந்தை போன்றிருந்த பாராளுமன்றத்தை அவர்கள் நன்கு சீராட்டி வளர்த்து வாலிபமாக்கி விட்டுச் சென்றுவிட்டார்கள். குழந்தையாக இருக்கும்போது

செவிலித் தாயின் ஆணைகளைச் சிரமேற்கொண்டு செய்து முடிக்கும் குழந்தை, வாலிப காலத்தில் அத் தாயையே அதட்டிக் கேட்டுத் தன்னுரிமை கோருவது போலவே, டியூடர்கள் காலப் பணிவுமிக்க பாராளுமன்றமானது ஸ்டூவர்ட்டுகள் காலத் துணிவுமிக்க பாராளுமன்றமாக மாறியது.

டியூடர்கள் விரும்பியிருந்தால் பாராளுமன்றத்தின் துணையின்றியே வல்லரசு செலுத்தியிருக்க முடியும். ஆனால், அவர்கள் அங்ஙனம் செய்யவில்லை. சட்டத்தின் போர்வைக்குள் இருந்து கொண்டுதான் அவர்கள் தம் யதேச்சாதிகாரத்தைச் செலுத்தினர். சமயம், சமுதாயம், வாணிபம் ஆகிய பல துறைகளிலும் ஏராளமான சட்டங்களை அவர்கள் பாராளுமன்றத்தின் துணைகொண்டே இயற்றினர். அதனால் அம் மன்றத்தின் அனுபவம் வளர்ந்தது. ஆட்சித் துறையில் அதற்கு நல்ல பயிற்சி ஏற்பட்டது. பாராளுமன்றக் குழுக்களில் இடம்பெற்ற உறுப்பினர்கள் நிர்வாக சம்பந்தமான அலுவல்களிலும் நல்ல தேர்ச்சி பெற்றனர். எனவே, அவர்களிடையே ஓர் தன்னம்பிக்கை தோன்றியது. நாட்டை அரசனது துணையின்றியுங்கூடத் தாங்களே ஆள முடியும் என அவர்கள் நினைத்தனர். ஆட்சிப் பொறுப்பில் மென்மேலும் பங்கு பெற அவர்கள் விரும்பினர். அவர்களது விருப்பத்தை உணர்ந்து அவர்களோடு கூட்டாக நின்று டியூடர் மன்னர்கள் ஆட்சி புரிந்தனர். ஆனால், ஸ்டூவர்ட் மன்னர்கள் காலத்து இக் கூட்டில் பிளவு ஏற்பட்டது. அவர்கள் பாராளுமன்றத்தைத் தங்களுக்குட்பட்ட ஓர் அடிமையைப்போல் நடத்த விரும்பினர். ஆனால், பாராளுமன்றமோவெனின் மன்னரைத் தனது கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவர விரும்பியது. எலிஸபெத் இராணியார் காலத்திலேயே பாராளுமன்றம் அரசியாரின் ஆதிக்கத்தை ஓரளவு எதிர்க்க ஆரம்பித்துவிட்டது. ஆனால், சூழ்நிலையின் காரணமாகவும் அரசியாரின்மீது அவர்கள் கொண்டிருந்த பயபக்தியாலும் அவர்கள் சற்றே கீழ்ப்படிந்து அடங்கி நடந்தனர். ஸ்டூவர்ட்டுகள் காலத்திலோவெனின் அத்தகைய சூழ்நிலை முற்றிலும் மாறிவிட்டது.

## 2. அமைதியான சூழ்நிலை

மக்கள் உரிமைக் குரல் எழுப்புவதற்கு அமைதியான ஓர் சூழ்நிலை தேவை. அத்தகைய சூழ்நிலையை டியூடர்கள் உருவாக்கிவிட்டுச் சென்றனர். அவர்கள் பட்டத்துக்கு வருமுன் நாட்டில் எங்குப் பார்த்தாலும் ஒரே அல்லோலகல்லோலமாய் இருந்தது. பிரபுக்கள் ஒருவரோடொருவர் சண்டையிட்டவண்ணமிருந்தனர். உள்நாட்டுப் போரால் நாடு அலைக்கழிக்கப்பட்டது. நீதியும்

நேர்மையும் இருக்குமிடம் தெரியவில்லை. கொலையும், கொள்ளையும், இலஞ்சமும் தாண்டவமாடின. இத்தகைய அவல நிலையிலிருந்து இங்கிலாந்தைக் காப்பாற்றிய பெருமை டியூடர்களுக்கே உரித்தாகும். உள்நாட்டுப் போரில் பல பெரும் பிரபுக்கள் மாண்டு போயினர். எஞ்சி இருந்த சிலரைத் தனிப்பட்ட நீதிமன்றங்கள் மூலமும் வேறு வகையாலும் ஏழாம் ஹென்றி அடக்கிவிட்டார். வன்மைமிக்க மதப் பிரபுக்கள் பலரும் எட்டாம் ஹென்றியின் மடாலயக் கலைப்பால் செல்வாக்கிழந்தனர். வாரிசுரிமை பற்றிய சிக்கல்களும் ஜேம்ஸ் அரியணை ஏறியதால் தீர்ந்துவிட்டன. எனவே, உள்நாட்டில் அமைதியும் ஒழுங்கும் ஏற்பட்டன. ஆர்மடா போரில் ஸ்பெயினை வென்றதன் மூலம் வெளிநாட்டுப் படையெடுப்பு பற்றிய பீதியினின்றும் ஆங்கிலேயரை எலிஸபெத் இராணியார் காப்பாற்றிவிட்டார். கத்தோலிக்க நாடுகளினின்றும் விளையக்கூடிய அபாயம் அகன்றது. ஸ்காட்லாந்து, அயர்லாந்து இவற்றின் துணைகொண்டு ஃபிரான்ஸ் அவ்வப்போது இங்கிலாந்தைப் பயமுறுத்திவந்தது. ஆனால், டியூடர்கள் தம் வன்மைமிக்க கரங்களால் அவ்விரு நாடுகளிலும் அமைதியை ஏற்படுத்தி விட்டனர். இங்ஙனம் உள்நாட்டுக் குழப்பம், வெளிநாட்டுப் படையெடுப்பு ஆகிய இருபெரும் அபாயங்களினின்றும் இங்கிலாந்தை டியூடர்கள் காப்பாற்றிவிட்ட காரணத்தால், மக்களுக்கு ஒரு வல்லரசு தேவையற்றதொன்றாகிவிட்டது. மன்னர்களோடு சேர்ந்துகொண்டு பிரபுக்களை எப்படி அடக்கலாமென்று ஓயாது சிந்தித்துவந்த மக்கட் கூட்டம், இனி அம் மன்னரின் கொடுங்கோன்மையினின்றும் எப்படித் தங்களைக் காத்துக்கொள்ளலாம் என்பதுபற்றிய ஆராய்ச்சியிலீடுபடலாயிற்று. தங்களது உரிமைகளைப் பற்றியும், அடிப்படையான அரசியல் பிரச்சினைகளைப் பற்றியும் ஆர அமர சிந்திப்பதற்குப் போதிய அவகாசம் மக்களுக்குக் கிடைத்தது.

### 3. மறுமலர்ச்சியின் பலன்

மேற்கண்டவாறு தங்களது ஜீவாதார உரிமைகளைப் பற்றிய ஆராய்ச்சியில் மக்கள் ஈடுபடுவதற்கேற்ற சிந்தனை சக்தியையும் மனோநிலையையும் ஏற்படுத்திச் சென்றவர்களும் டியூடர்களே ஆவர். அவர்கள் காலத்தில்தான் மறுமலர்ச்சி இயக்கம் (Renaissance) இங்கிலாந்தில் புக ஆரம்பித்தது. சொந்தமாகச் சிந்தித்துச் செயலாற்றும் வன்மை மக்களிடை பரவியது. பகுத்தறிவின் துணைகொண்டு அவர்கள் எதையும் ஆராய முற்பட்டார்கள். அவ் வாராய்ச்சியின் விளைவாகவே சமயச் சீர்திருத்த இயக்கம் (Reformation) நாட்டில் தோன்றியது. சமயத் துறையில் இறைமை பெற்றிருந்த போப்பாண்டவரை மக்கள் எதிர்த்துத் தங்கள் சுதந்

திரத்தை நிலைநாட்டினர். இங்ஙனம் நிலைபெற்ற அதிகாரத்தை (established authority) எதிர்க்கும் துணிவு மக்களிடை ஏற்பட்டது. டியூடர்கள் காலத்தில் சமயத் தலைமையை எதிர்த்த மக்கள் ஸ்டூவர்ட்டுகள் காலத்தில் அரசியல் தலைமையையும் எதிர்க்க முற்பட்டனர். சமயத் துறையில் தொன்றுதொட்டு வரும் ஓர் ஆதிக்கத்தை எதிர்க்க முடியுமென்றால் அரசியல் துறையிலும் அது ஏன் முடியாது என்ற எண்ணம் மக்களுக்கு ஏற்பட்டதில் வியப் பொன்றுமில்லை.

மற்றும் அச்சு இயந்திரக் கண்டுபிடிப்பினால் நூல்கள் எளிய விலையில் வெளியிடப்பட்டன. அறிவு சாதாரண நடுத்தர மக்களுக்கும் பரவியது. எனவே, மன்னரிடம் மக்கள் கொண்டிருந்த மூடபக்தி மாய்ந்தது. பாராளுமன்றத்தின் பழைய ஏடுகளான பேருரிமைப் பட்டயம் (Great Charter) போன்றவைகளைப் படித்து மக்கள் தங்களது உரிமைகளைப் பற்றி விசித்திரமாக எண்ணமிட லாயினர். மன்னரோடு போராடிப் போராடியே மக்கள் உரிமைகளைப் பெற்றார்கள் என்ற நினைப்பு அவர்களிடை வளர்ந்தது. இங்ஙனம் கல்வி கேள்விகளாலும் அறிவு விழிப்பினாலும் ஏற்பட்ட ஓர் எதிர்ப்புணர்ச்சியே ஸ்டூவர்ட்டுகள் காலத்து மன்னர்–பாராளுமன்றச் சச்சரவிற்கு அடிப்படையாயமைந்தது.

4. சமுதாயப் புரட்சி

டியூடர்கள் காலத்துச் சமுதாயத்தில் ஏற்பட்ட பெரும் மாறுதல் அல்லது புரட்சியும் ஒரு வகையில் மன்னர்–பாராளுமன்றச் சச்சரவிற்கு ஏதுவாயமைந்தது. பழைய நிலமானியப் பிரபுக்களை (Feudal Lords) ஒடுக்க டியூடர்கள் ஓர் புதிய பிரபு வர்க்கத்தைத் தோற்றுவித்தனர். மடாலயங்களைக் கலைத்ததன் மூலம் கிடைத்த பெருஞ் செல்வத்தைத் தம் நண்பர்களுக்கு வாரி வாரி வழங்கி டியூடர்கள் ஒரு புதுப் பணக்கார வர்க்கத்தை உருவாக்கினர். மேலும், கடல்கடந்து வாணிபம் செய்யும் உரிமையைப் பலருக்கு வழங்கி அதன் மூலம் வணிகச் செல்வர்கள் பலரை அவர்கள் உண்டாக்கினர். நில அடைப்பு முறையின் (Enclosure system) மூலமாகப் பல நிலப்பிரபுக்கள் நாட்டுப்புறங்களில் தோன்றினர். அத்தகைய பெருநிலக்கிழார்களே (Squires) டியூடர் பாராளுமன்றத்திலும் தல ஆட்சியிலும் பெரிதும் இடம்பெற்றனர். இங்ஙனம் அரசரால் நன்மைபெற்ற பிரபுக்களே பாராளுமன்றத்தின் மேல் சபையிலும் கீழ்சபையிலும் இடம்பெற்ற காரணத்தால்தான் டியூடர்கள் அதை முழுவதுமாக நம்பி ஆட்சிப் பொறுப்பை ஒப்படைக்க முடிந்தது. அப்படி ஒப்படைத்ததனால்தான் அவர்கள் நல்ல அரசியல் அனுபவம் பெற்றுப் பிற்காலத்தே அரசனைக் கண்டிக்கவும், தங்கள் உரிமைகளுக்காகப் போராடவும் முடிந்தது.

## 5. சமயப் புரட்சி

சமுதாயத்தில் மட்டுமன்றிச் சமயத்திலும் டியூடர்கள் ஓர் பெரும் புரட்சியை ஏற்படுத்திச் சென்றனர். அதுவும் மன்னர் பாராளுமன்றச் சச்சரவுகளுக்குச் சாதகமான சூழ்நிலையை ஏற்படுத்தியது. சமயச் சீர்திருத்த இயக்கத்தின் விளைவாக நாட்டில் கத்தோலிக்கரின் ஆதிக்கம் குலைந்தது. தனிப்பட்ட தேசியத் திருச்சபை (National Church) ஏற்பட்டது. அத் திருச்சபைக்குள் அநேகமாக எல்லா ஆங்கிலேயர்களையும் எலிஸபெத் இராணியார் நுழைத்துவிட்டார். எனவே, சமயத் துறையில் இருந்துவந்த பூசல்கள் ஒழிந்தன. அமைதி நிலவியது. ஆனால், இந்த அமைதியின் விளைவாகப் புதிய பிரச்சினைகள் தோன்றலாயின. சமயச் சீர்திருத்த இயக்கத்தைச் சேர்ந்தவர்களிடையிலேயே இரு கட்சிகள் தோன்றலாயின. டியூடர்களால் ஏற்படுத்தப்பட்ட திருச்சபையில் போதிய அளவு சீர்திருத்தம் ஏற்படவில்லை என்று பலர் கருதினர். மேலும், திருச்சபையின் மீது அரசர் தனியாணை செலுத்துவதையும் பலர் வெறுத்தனர். இத்தகைய கூட்டத்தார் பியூரிடன்கள் (Puritans) அல்லது தூய்மைவாதிகள் எனப்பட்டனர். இப் பியூரிடன்கள் எலிஸபெத்தில் காலத் ஒருசிலரே இருந்தனர். எனவே, அவர்களது முணுமுணுப்பை இராணியார் சட்டை செய்யவில்லை; அவர்களுக்கு உரிமையும் அவர் வழங்கவில்லை. அவர்களின் எண்ணிக்கை ஸ்டூவர்ட்டுகள் காலத்தே பெரிதும் வளர்ந்தது. டியூடர்கள் காலத்தில் தங்களுக்குக் கிட்டாத உரிமைகள் ஸ்டூவர்ட்டுகள் காலத்தில் தங்களுக்குக் கிடைக்குமென அவர்கள் எதிர்பார்த்தனர். பியூரிட்டன்களது கொள்கைகளை ஒத்த கொள்கையினரான பிரிஸ்பிடீரியர் (Presbyterians) வாழ்ந்த ஸ்காட்லாந்து மன்னராக இருந்த ஜேம்ஸ் மன்னரே இங்கிலாந்துக்கும் மன்னரானதால் அவர்கள் அங்ஙனம் எதிர்பார்த்ததில் தவறொன்றுமில்லை, ஆனால், ஸ்டூவர்ட்டு அரசர்கள் பியூரிடன்களையும் அவர்களது கொள்கைகளையும் அறவே வெறுத்தனர். திருச்சபையின் ஆட்சி தொழுவோர் பிரதிநிதிகளடங்கிய ஓர் சபையின் கையில் இருக்க வேண்டுமென்றும், அரசரால் நியமிக்கப்பட்ட பிஷப்புகள் அதை ஆளக்கூடாது என்றும் பியூரிடன்கள் கூறிய கூற்றை ஸ்டூவர்ட்டுகள் ஒரு சிறிதும் ஒப்புக்கொள்ளவில்லை. அவர்களது முரட்டுப் பிடிவாதக் கொள்கையால் பியூரிடன்கள் ஸ்டூவர்ட்டு அரசர்களின் மாறுப் பகைவர்களாகிவிட்டனர். பியூரிட்டன்களே பொதுமக்கள் சபையில்(House of Commons)பெரும்பான்மையினராக இருந்ததால் அவர்கள் அரசரைப் பலவகையிலும் கட்டுப்படுத்த முனைந்தனர்; மானியங்கள் வழங்க மறுத்தனர். அங்ஙனம் மறுக்கும்போது அரசியல் உரிமைகளை அவர்கள் எடுத்து விளம்பலாயினர். இங்ஙனம் தங்கள் சமய உரிமைகளைப் பெறுவான் கருதியே பியூரிடன்கள்

தங்களது அரசியலுரிமைகளை வற்புறுத்தினார்கள் என்பது ஈண்டு நன்கு அறிதற்பாற்று. சமயத்துறையில் ஸ்டூவர்ட்டுகள் ஓரளவு விட்டுக்கொடுத்திருந்தால் சார்லஸ் காலத்து ஏற்பட்ட உள்நாட்டுப் போர் ஒருவேளை ஏற்படாமலே போயிருக்கும். மன்னரால் நியமிக்கப்பட்ட பிஷப்புகளின் ஆட்சி (Episcopacy) முற்றிலும் ஒழிக்கப்பட வேண்டுமா, அல்லது ஓரளவு சீர்திருத்தப்பட்டால் போதுமா என்ற பிரச்சினையால்தான் சார்லஸ் காலத்து நாடு இரு கட்சியாகப் பிரிந்தது. மன்னரையும் பல மிதவாதப் பியூரிடன்கள் ஆதரித்ததால்தான் அவரும் தைரியமாகப் போரிலிறங்கினார். எனவே, ஸ்டூவர்ட்டுகள் காலத்தே சமயச் சிக்கல்களும் அரசியல் புதிர்களும் ஒன்றிலிருந்தொன்றைப் பிரிக்க இயலாத வகையில் பின்னிப் பிணைந்து கிடப்பதை நாம் காண்கின்றோம்.

மற்றும், சமய முதன்மைச் சட்டம் (Act of Supremacy) மூலமாக டியூடர்கள் திருச்சபைக்கும் தங்களையே தலைவர்களாக்கிக் கொண்டார்கள். அரசியல், சமயம் ஆகிய இரு துறைகளிலும் அவர்கள் ஆதிக்கம் பெற்றனர். இங்ஙனம் மன்னர்களின் அதிகாரங்கள் பல மடங்கு டியூடர்கள் காலத்தே பெருகின. அங்ஙனம் பெருகிய அதிகாரங்களை டியூடர்கள் வெகு சாதுரியமாகக் கையாண்டனர். அவர்கள் வல்லரசு செலுத்துகிறார்களென்பதே தெரியாத வகையில் அவர்கள் நடந்துகொண்டனர். ஆனால், ஸ்டூவர்ட்டுகள் அந்த அதிகாரத்தை வெளிப்படையாகக் காட்டிக்கொண்டனர். பிஷப்புகளைக் கொண்டு தாங்கள் தாம் திருச்சபையை ஆளப்போவதாகவும், பியூரிடன்கள் கூற்றைத் தாங்கள் ஏற்க முடியாதென்றும் அவர்கள் பறை சாற்றினர். அதோடு திருச்சபையில் மன்னரது ஆதிக்கத்தையும் பிஷப்புகள் ஆட்சியையும் ஆதரித்த ஆர்மீனியக் கொள்கையினரை (Armenians) ஸ்டூவர்ட்டுகள் ஆதரித்தனர். ஆர்மீனியர்கள், லான்சலெட் ஆண்ட்ரூஸ் (Lancelot Andrews) என்பார் போதித்த கொள்கைகளைக் கடைப்பிடித்தவர்கள். அவர்கள் சடங்குகளுக்கே அதிக முக்கியத்துவம் கொடுத்தார்கள். சீர்திருத்த இயக்கம் நாட்டில் ஏற்படுமுன் கையாளப்பெற்ற பல மூடச்சடங்குகளை அவர்கள் வற்புறுத்தினர். எனவே, அது ஏறக்குறைய கத்தோலிக்க மதம் போலவே காட்சியளித்தது. ஸ்டூவர்ட்டுகள் ஆர்மீனியர்களை ஆதரித்தது, அவர்கள் கத்தோலிக்க மனப்பான்மை கொண்டவர்கள் என்ற எண்ணத்தை ஆங்கிலேயர்பால் உண்டாக்கியது. கத்தோலிக்கர்களை ஆங்கிலேயர்கள் நஞ்சினும் கொடிதாய் வெறுத்ததால், அவர்களை ஆதரித்த அல்லது ஆதரித்தது போல் தோன்றிய ஸ்டூவர்ட் மன்னர்களைப் பியூரிட்டன்களும், அவர்கள் உள்ளடங்கிய பாராளுமன்றமும் எதிர்க்கத் துணிந்ததில் வியப்பொன்றுமில்லை.

### 6. பொருளாதார நெருக்கடி

ஸ்டூவர்ட் மன்னர்களுக்கும் அவர்களது பாராளுமன்றங்களுக்கும் அடிக்கடி சச்சரவு ஏற்படுதற்கான ஓர் பொருளாதார நெருக்கடியையும் டியூடர்கள் தோற்றுவித்துச் சென்றுவிட்டனர். நாணயத்தின் மதிப்பு டியூடர்கள் காலத்து வேகமாகக் குறைந்து கொண்டே வந்தது. அவர்களால் ஊக்குவிக்கப்பெற்ற வணிகர்களும் கடல் கொள்ளைக்காரர்களும் தென் அமெரிக்கா, கிழக்கிந்தியத் தீவுகள் போன்ற அக்கரை நாடுகளிலிருந்து ஏராளமாகப் பொன்னையும் வெள்ளியையும் கொண்டுவந்து குவித்தனர். அதனால் வெள்ளி நாணயங்களின் மதிப்புக் குறைந்தது. விலைவாசிகள் விஷம் போன்று ஏறிக்கொண்டே இருந்தன. அதோடு கூலியும் வாடகையும் உயர்ந்தன. எனவே, மன்னர்களின் செலவுத் தொகையும் உயர்ந்தது. ஆனால், டியூடர்கள் மிகவும் சிக்கனமுள்ளவர்களாதலால் நிலைமையை ஒருவாறு சமாளித்தனர். எலிஸபெத் இராணியார் சிக்கனத்துக்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்கியவர். ஆனால், அவருக்கே பணமுடை இறுதியில் ஏற்பட்டுவிட்டது. அரசருக்குரிய நிலங்களை (Crown lands) விற்று அவர் நிலைமையைச் சமாளித்தார். எனினும், பெரிய கடனை வைத்துவிட்டே அவர் இறந்தார்.

ஸ்டூவர்ட் மன்னர்கள் ஆடம்பரப் பிரியர்கள்; சிக்கனம் சிறிதுமில்லாதவர்கள். சிக்கனமாயிருந்திருந்தாலும் சமாளிக்க முடியாத நிலைமை நாட்டில் நிலவியது. இதைப் பாராளுமன்றம் புரிந்து கொள்ளவே இல்லை. மன்னருடைய செலவுக்கேற்றபடி மானியங்களை அது அவருக்கு வழங்க மறுத்துவிட்டது. அரசனின் வறுமையைப் பயன்படுத்திக்கொண்டு அது தனது குறைகளைக் களையவும் உரிமைகளைக் கேட்கவும் தலைப்பட்டது. அதனால் கோபமுற்ற மன்னர்கள் பாராளுமன்றத்தைக் கலைத்துவிட்டு யதேச்சாதிகார முறைகளில் பணம் திரட்டினர். உடனே மக்கள் அதை எதிர்த்து மீண்டும் கூச்சலிடலாயினர். இங்ஙனம் நாட்டில் இயற்கையாய் ஏற்பட்டிருந்த பொருளாதார நெருக்கடியானது, மன்னர்-பாராளுமன்றச் சச்சரவு எனும் செடிக்கு ஓர் எருவாக அமைந்துவிட்டது.

### 7. தேசிய விழிப்புணர்ச்சி

டியூடர்கள் காலத்தே இங்கிலாந்தில் தேசியம் தோன்றி வளர்ந்தது. தாங்கள் தனி இனத்தவர்கள் என்றும், பிற நாடுகளுக்குக் கட்டுப்படாமல் தங்களைத் தாங்களே ஆண்டுகொள்ள முடியும் என்றும் ஆங்கிலேயர் நம்பினர். மற்றும், அரசாங்க அலுவல்களிலும் அவர்கள் அதிகமாகப் பங்கெடுத்துக்கொள்ள

விரும்பினர். இத்தகைய சுயாட்சி வேட்கையை ஸ்டூவர்ட்டுகள் புறக்கணித்தனர். ஆங்கிலேயரின் விருப்பங்களுக்கு விரோதமாக அவர்கள் நடந்துகொண்டனர். மக்களால் வெறுக்கப்பட்ட கத்தோலிக்கக் கொள்கைகளையும், கத்தோலிக்க நாடுகளான ஃபிரான்ஸ் ஸ்பெயின் போன்ற நாடுகளையும் ஸ்டூவர்ட்டுகள் ஆதரித்தனர். எனவே, மக்களுக்கு மன்னர்கள்மீது நம்பிக்கை குலைந்தது. அவர்களின் செய்கைகளை அவர்கள் சந்தேகக் கண்கொண்டு நோக்கலாயினர். ஆனால், டியூடர் மன்னர்கள் மக்களின் தேசிய உணர்ச்சியின் உருவகமாக விளங்கினார்கள். ஸ்பெயின் போன்ற கத்தோலிக்க நாடுகளின் வலைக்குள் விழாமல் ஆங்கிலேயரது உரிமைகளைக் காத்தார்கள். மக்கள் விருப்பமும் மன்னர் விருப்பமும் ஒன்றாகத் திகழ்ந்தன. எனவே, அவர்கள் மக்களால் நேசிக்கப்பட்ட தேசிய அரசர்களாக விளங்கினர். ஆனால், ஸ்டூவர்ட்டுகள் ஆங்கிலேயரின் தன்னுணர்வை மதிக்காததால் அன்னிய அரசர்கள்போலவே யாவருக்கும் காணப்பட்டனர். எனவேபாராளுமன்றத்துக்கும் அரசருக்குப் விரோதம் ஏற்படுவதென்பது தவிர்க்கமுடியாததாகிவிட்டது.

8. ஸ்டுவர்ட்டுகளின் குணக்கேடுகள்

மன்னர்-பாராளுமன்றச் சச்சரவுகளுக்கு ஸ்டூவர்ட்டுகளின் குணக்கேடுகளும் பெரிதும் காரணமாகும். டியூடர்களின் அதிகாரங்களைக் கடைப்பிடிக்க விரும்பிய ஸ்டூவர்ட்டுகள் அவர்களது விவேகத்தையும் சாதுரியத்தையும் கடைப்பிடிக்க முன்வரவில்லை. கொஞ்சமும் விட்டுக்கொடாத முரட்டுப் பிடிவாதக் கொள்கையை அவர்கள் கடைப்பிடித்தனர். மேலும், டியூடர்களின் சிக்கன வாழ்க்கை முறையையும் ஸ்டூவர்ட்டுகள் கற்றுக்கொள்ளத் தவறி விட்டனர். டம்பாச்சாரிகளாக வாழ்ந்து அவர்கள் பாராளுமன்றத்தை எப்போதும் எதிர்பார்க்க வேண்டிய இழிநிலைக்கு இழிந்துவிட்டார்கள். இந்த ஊதாரித்தனமே அவர்களது இன்னல்களுக்கெல்லாம் காரணம். செலவு செய்யத் தெரிந்த அவர்கள் அதற்கேற்ற பொருளைப் பாராளுமன்றத்திடமிருந்து பெறுகின்ற கலையைக் கற்றுக்கொள்ளவில்லை.

மற்றும், டியூடர்களைப்போல் பாராளுமன்றத்திடம் நயமாக நடந்துகொண்டு அதன் நன்மதிப்பைப் பெறவும் ஸ்டூவர்ட்டுகளுக்குத் தெரியவில்லை. பாராளுமன்றத்தின் உரிமைகளை எட்டாம் ஹென்றி அவ்வப்போது சிறப்பித்துப் பேசுவது வழக்கம். பாராளுமன்றமே உண்மையில் நாட்டை ஆள்கிறது என்று அவர் ஒரு சமயம் போப்பாண்டவருக்கு எழுதினார். இதனால் எல்லாம் களிப்புற்ற பாராளுமன்றத்தார் அவரது கடன்களைக்கூடத் தள்ளுபடி

செய்தனர். எலிஸபெத் இராணியும் பாராளுமன்றத்தை மிகவும் கண்ணியமாகவே நடத்திவந்தார். இராணியாரைக் குறைகூறிய சமயத்தில்கூட, அவர் தமது இங்கிதம் நிறைந்த சொற்பொழிவு களால் பல சமயங்களில் பொதுமக்கட் சபையினரின் கண்களில் கண்ணீரை வரவழைத்துள்ளார். சில சமயங்களில் டியூடர்கள் பாராளுமன்றத்துக்குப் பணிந்துபோகவும் தயங்கியதில்லை. இத் தகைய நயமுறையும் விட்டுக்கொடுக்கும் மனப்பான்மையும் ஸ்டூவர்ட் மன்னர்களிடம் மருந்துக்கும் காணப்படவில்லை. வெளி யில் சொல்லாது நடைமுறையில் டியூடர்கள் செலுத்திவந்த வல்லரசைப்பற்றி ஸ்டூவர்ட்டுகள் வெளிப்படையாகப் பேசிப்பேசி மக்களின் ஐயப்பாடுகளுக்கு ஆளாகினர். தங்களின் தனிச் சிறப் பதிகாரங்களைப்பற்றி (Prerogatives) அவர்கள் பலரறியத் தம்பட்ட மடித்துக்கொண்டனர். தாங்கள் தெய்வத்தின் பிரதிநிதிகள் என்றும், சட்டத்துக்குக் கட்டுப்படாதவர்கள் என்றும், பாராளு மன்றத்துக்கு விட்டுக்கொடுப்பது தங்களது தெய்விக உரிமைக்கு (Divine Right) விரோதமென்றும் அவர்கள் ஓயாது கூறிவந்தனர். அவர்களது விடாப்பிடிக் கொள்கையைக் கண்ட ஆங்கிலேயர்கள் அவர்களைப் பதவியினின்றும் நீக்கினுலொழியத் தங்களது உரிமை களைப் பெற வேறு வழியில்லை என்பதை உணர்ந்தனர். அதனுற் முன் 1603ஆம் ஆண்டிலிருந்து 1688வரை மன்னருக்கும் பாராளுமன்றத்துக்கும் ஓயாத போராட்டம் ஏற்பட்டது.

போராட்டத்தின்போது இருதிறத்தாரும் தங்களது உரிமை களுக்கு ஆதாரங்களைப் பழைய வரலாற்றிலிருந்து எடுத்துக் காட்டினர். இறுதியில் பாராளுமன்றமே வென்றது. அரசரது சிறப்பதிகாரங்கள் எல்லாம் குலைக்கப்பட்டன. அவர் பல்லிழந்த பாம்புபோல் ஆனுர். அதன் பின்னர் பாராளுமன்றம் மன்னரோடு ஒத்துழைக்க ஆரம்பித்தது. அரசரின் நிர்வாக அதிகாரம் பெருகு வதையும், அவர் நிலைப்படை வைத்துக்கொள்வதையும் பாராளு மன்றம் அனுமதித்தது. ஏனெனில், வரம்பிலா முடியரசு மாய்ந்து வரம்புக்குட்பட்ட முடியரசு (Limited monarchy) நாட்டில் 1688ஆம் ஆண்டுக்குப்பின் நன்கு நிறுவப்பட்டுவிட்டது.

## சமயத்துறை

அரசியல்துறையில் வரம்புக்குட்பட்ட முடியாட்சி ஏற்பட்டதே போன்று சமயத்துறையிலும் ஸ்டூவர்ட்டுகள் காலத்தில் பல மாறு தல்கள் ஏற்பட்டன. முதல் இரண்டு ஸ்டூவர்ட்டுகள் காலத்தில் பியூரிடன்கள் அரசரை எதிர்த்து வெற்றி பெறுகின்றனர். எனவே, அக்காலம் பியூரிடன் புரட்சிக் காலம் (Puritan Revolution) என அழைக்கப்படுகிறது. ஆனுல், பின்னைய இரண்டு ஸ்டூவர்ட்டுகள்

காலத்தில் பியூரிடன்கள் ஆதிக்கம் குலைந்து பிராடஸ்டென்டு களின் ஆதிக்கம் நிலைநாட்டப்படுகிறது. 1688ஆம் ஆண்டளவில் பிராடஸ்டென்டுகள் தங்களது முயற்சியில் வெற்றிபெற்றுவிடுகின்றனர். இங்கிலாந்தை பிராடஸ்டென்டு மன்னர்களே ஆள வேண்டுமென்பதும் திட்டம் செய்யப்பெறுகிறது. எனவே, 1660 முதல் 1688ஆம் ஆண்டு வரையுள்ள காலத்தைப் பிராடெஸ்டென்டுகள் புரட்சிக்காலம் (Period of Protestant Revolution) என்று அழைக்கலாம். முன்னைய ஸ்டூவர்ட்டுகள் இருவரும் கத்தோலிக்க மதத்தை ஒத்த ஆர்மீனிய மதக் கொள்கைகளையும், பின்னைய இரு ஸ்டூவர்ட்டுகளும் கத்தோலிக்க மதத்தையும் ஆதரித்தனர். முதலாவது புரட்சியில் முடியரசை ஒழித்துக் குடியரசை நிறுவப் பியூரிடன்கள் முயன்று தோற்றனர். இரண்டாவது புரட்சியில் பிராடெஸ்டன்டுகள் வரம்புக்குட்பட்ட முடியாட்சியை நிறுவ முயன்று வெற்றி பெற்றனர். இறுதியில் கத்தோலிக்கரல்லாத ஏனைய கிறிஸ்தவர்கள் யாவருக்கும் வழிபாட்டுரிமையை வழங்கிய சமயப் பொறைச் சட்டமும் (Toleration Act) 1689ஆம் ஆண்டில் ஏற்பட்டது. ஒரு மதப்பிரிவினர் இன்னொரு மதப்பிரிவினரை ஒழிப்பதையே குறிக்கோளாகக் கொண்டிருந்த அக்காலத்தில் இது ஓர் அருஞ்சாதனை என்றே கருதத்தக்கதாகும்.

## சமுதாயத்துறை

சமுதாயத் துறையில் ஸ்டூவர்ட்டுகள் காலத்தில் பெருத்த மாறுதல் எதுவும் ஏற்படவில்லை. நில அடைப்பு முறையால் ஏற்பட்ட பெருநிலக்கிழார் கூட்டம் (Squires) பாராளுமன்றத்தைக் கைப்பற்றிக்கொண்டது. தல ஆட்சித் துறையிலும் அவர்களே செல்வாக்குடன் விளங்கினர். அவர்களது ஆட்சியில் ஸ்டூவர்ட்டுகள் தலையிடுவதை நிறுத்திக்கொண்டதால், அவர்களின் கொடுங்கோன்மை நாட்டுப்புறங்களில் தலைவிரித்தாடியது. ஊழல் மலிந்தது. சமுதாயத்தின் மேல்தளத்தில் வணிகப் பெருமக்களும் நிலக்கிழார்களும் சீருஞ் சிறப்பும் பெற்று வாழ்ந்தனர். ஆனால், சமுதாயத்தின் அடித்தளத்தில் மண்டிக் கிடந்த உழவர்கள் போன்ற சாதாரண மக்களின் நிலை ஒன்றும் மாறவில்லை. அதனாற்றான் 1688ஆம் ஆண்டுப் புரட்சியானது எவ்வளவோ தாராளத் தன்மை கொண்டதாயிருந்தபோதிலும், ஜனநாயகத் தன்மை வாய்ந்ததல்ல என்று கருதப்படுகிறது.

## பொருளாதாரத்துறை

பொருளாதாரத்துறையில் ஸ்டூவர்ட்டுகள் காலம் வீறுபெற்று விளங்கியது. கிழக்கிந்தியக் கம்பெனி, லெவாண்ட் கம்பெனி

போன்ற வியாபாரக் கம்பெனிகள் அரசர்களிடம் உரிமைச் சாசனம் பெற்று அயல் நாடுகளோடு வியாபாரம் செய்து பெரும் பொருளீட்டின. மேலும், தென் அமெரிக்காவிலிருந்தும் நிறைய தங்கமும் வெள்ளியும் வந்துசேர்ந்தன. அவற்றை மக்கள் சேமிக்க ஆரம்பித்தனர். அதனுல் நாணயத்தின் மதிப்புக் குறைந்துவிட்டது. வறுமை சாதாரண மக்களிடம் குடிகொள்ளலாயிற்று. அதோடு பணக்கார முதலாளி வர்க்கமும் நாட்டில் தோன்றலாயிற்று.

ஸ்டூவர்ட்டுகள் காலத்தே சமய ஒறுப்புக் காரணமாகப் பல ஆங்கிலேயர்கள் கடல்கடந்து சென்று அமெரிக்காவில் குடியேறினர். அதனுல் அக்கரை நாடுகளில் ஆங்கிலக் கொடி பறக்க ஆரம்பித்தது.

மற்றும், அவர்கள் காலத்தே இங்கிலாந்தும் ஸ்காட்லாந்தும் ஒன்றுபட்டன. இங்கிலாந்து கிரேட் பிரிட்டனுக மாறியது.

இங்ஙனம் ஸ்டூவர்ட்டுகளின் ஆட்சிக் காலமானது பல்லாற்ருனும் சிறப்புற்று விளங்குகிறது. அரசியல் துறையில் வரம்பற்ற வல்லரசு மாறி வரம்புக்குட்பட்ட முடியரசு ஏற்படவும், சமயத் துறையில் போட்டியும் பொருமையும் ஒழிந்து ஒரே சமயம், அதாவது, பிராடெஸ்டன்டு சமயம் நன்கு உறுதி அடையவும், பல மதப் பிரிவினர் வழிபாட்டு உரிமை பெறவும், பொருளாதாரத்துறையில் வியாபாரக் குடியேற்ற நாட்டு வளர்ச்சி ஏற்படவும் ஸ்டூவர்ட்டுகள் வழிவகுத்துவிட்டுச் சென்றனர் என்பது ஈண்டு நன்கு நினைவிற்பதிக்கற்பாலதொன்ருகும்.

# 3. முதலாம் ஜேம்ஸ் (1603-1625)

ஜேம்ஸ் அரசு எய்தல்—1603

ஜேம்ஸின் வாரிசு உரிமை

ஜேம்ஸின் குணநிசயங்கள்

ஜேம்ஸின் தெய்விக உரிமைக் கொள்கை (Divine Right Theory)

ஜேம்ஸின் சமயக் கொள்கை : இங்கிலாந்தின் மதப்பிரிவுகள்—ஜேம்ஸும் பியூரிட்டன்களும்—ஆயிரவர் விண்ணப்பம், 1603 (Millenary Petition)—ஹாம்ப்டன் கோர்ட் மாநாடு, 1604—ஜேம்ஸும் கத்தோலிக்கர்களும்—வெடிமருந்துச் சதி, 1605 (Gunpowder Plot).

ஜேம்ஸும் பாராளுமன்றங்களும் : முதல் பாராளுமன்றம் (1604—1610)—காட்வின் வழக்கு—காப்புரை தாள், 1604 ('A Form of Apology)—ஸ்காட்லாந்து, இங்கிலாந்து ஐக்கியம்—கால்வின் வழக்கு—பொருளாதாரச் சிக்கல்கள்—பேட் வழக்கு—இடுவரி, 1606 (Imposition), பெரும் ஒப்பந்தம், 1610 (Great Contract)—பயனற்ற பாராளுமன்றம், 1614—அரசரது நண்பர்களின் ஆட்சி—ஜேம்ஸின் வெளிநாட்டுக் கொள்கை—பக்கிங்ஹாம் கோமகன்—ஸ்பெயினோடு உறவு—முப்பதாண்டுப் போர் (1618-1648)—ஜேம்ஸின் மூன்றுவது பாராளுமன்றம்,1621—அரசியல் துரோகக் குற்றச்சாட்டு உயிர்ப்பிக்கப்படல் (Revival of Impeachment)—நான்காம் பாராளுமன்றம்.

ஜேம்ஸின் ஆட்சிக் கால முக்கியத்துவம்

ஜேம்ஸின் மதிப்பீடு

## ஜேம்ஸ் அரசு எய்தல் (Accession, 1603)

கன்னியாகவே காலங்கழித்துவிட்ட எலிஸபெத் இராணிக்குப் பின் யார் பட்டத்துக்கு வருவது என்பதைப்பற்றி ஆங்கிலப் பிரபுக்களும் பொதுமக்களும் பெரிதும் கவலை கொண்டனர். ஆனால், எலிஸபெத் இராணியோவெனின், தமக்குப் பின் யார் வாரிசு என்பதைத் திட்டவட்டமாகக் கூருமலேயே காலங்கடத்திவந்தார். கடைசியில் அவர் மரணப் படுக்கையில் கிடக்கும்போது தமது நெருங்கிய நண்பர்களாகிய நாட்டிங்ஹாம் பிரபு போன்றவர்களை

அழைத்து அருகிலமர்த்திக்கொண்டு தாம், அமர்ந்துள்ள அரியணையைத்தொன்றுதொட்டு அரசகுலத்தவரே அலங்கரித்துவந்துள்ளனராதலால், தமக்குப் பின் கயவனெவனும் அதில் வந்து அமர்ந்துவிடக்கூடாது என்று புகன்றார். அங்ஙனம் சொல்வதன் பொருளைச் சற்று விளக்கமாகக் கூறும்படி செசில் பிரபு இராணியை வேண்டிக்கொண்டபோது, அவர் தமக்குப்பின் தமது உறவினரான ஸ்காட்லாந்தின் அரசரே பட்டத்திற்கு வரவேண்டுமென்ற தமது விருப்பத்தை வெளியிட்டார். அவ்விருப்பத்தைச் செசில் பிரபு மற்றப் பிரபுக்களுக்கும் வெளியிட்டு அதற்கு அவர்களது ஒருமித்த அங்கீகாரத்தையும் பெற்றார். எனவே, எலிஸபெத் இராணியார் 1603ஆம் ஆண்டு இறந்தவுடன் கவுன்ஸில் பிரபுக்களனைவரும் சேர்ந்து ஸ்காட்லாந்து அரசரான ஆறும் ஜேம்ஸை இங்கிலாந்தின் முதலாம் ஜேம்ஸ் அரசரென அறிவித்தனர். அவ்வறிவிப்பை ஆங்கில மக்கள் அனைவரும் குதூகலமாக வரவேற்றனர். ஜேம்ஸ் அரசராவதால் இங்கிலாந்துக்கும் ஸ்காட்லாந்துக்கும் நெடுங்காலமாக இருந்துவந்த பகைமை மாறி நட்பு வளரும் என்ற எண்ணமே அவர்களை அங்ஙனம் தூண்டிற்று எனலாம்.

## ஜேம்ஸின் வாரிசு உரிமை (Right of Succession)

இங்கிலாந்து நாட்டின் பொதுச் சட்டப்படி (Common Law) அந்நியர் ஒருவர் இங்கிலாந்தின் அரசராவதற்கு அருகதையற்றவர். எனவே, அதன்படி ஜேம்ஸ் இங்கிலாந்தின் மகுடத்துக்கு உரியவரல்லர். பாராளுமன்றத்தால் இயற்றப்பட்ட நிலவரச் சட்டங்களின்படியும் (Statute Law) ஜேம்ஸுக்கு ஆங்கில நாட்டின் மன்னராதற்குரிய தகுதியில்லை. ஏனெனில், பாராளுமன்றத்தினரால் ஒப்புக்கொள்ளப்பட்டதும் எட்டாம் ஹென்றியால் எழுதிவைக்கப்பட்டதுமான உயிலின்படி (Will) எலிஸபெத்துக்குப் பின் ஆங்கில மகுடம் (Crown) ஹென்றியின் இளைய சகோதரியான மேரியின் சந்ததியாருக்கே சொந்தமாக வேண்டும். மேரி என்பவர் சஃபோக் கோமகனை (Duke of Suffolk) மணந்திருந்தார். அவர்வழி வந்த வில்லியம் செய்மூர் (William Seymour) என்பார் பட்டத்துக்கு வரவேண்டுமென்று இங்கிலாந்தில் யாரும் விரும்பவில்லை. ஏனெனில், அவரது பெற்றோர் முறைப்படி திருமணம் செய்து கொண்டவர்களல்லரென்று பலரும் நம்பினர். அதற்கடுத்துப் பட்டவுரிமைக்குத் தகுதியானவர்கள் ஹென்றியின் மூத்த சகோதரியான மார்கிரெட் சீமாட்டியாரின் சந்ததியார்களாவர். மார்கிரெட்டின் முதல் திருமணம் மூலமாகப் பிறந்தவர் முதலாம் ஜேம்ஸ். அவர் அந்நியராதலால் பொதுச் சட்டப்படி (Common Law) அவர் பட்டத்துக்கு உரியவரல்லரென்றும், மார்கிரெட்டின் இரண்டாவது

திருமணத்தின்வழி வந்தவரும் வில்லியம் செய்மூரின் மனைவியுமான அரபெல்லா ஸ்டூவர்ட் (Arbella Stuart) என்பவரே பட்டத்துக்குரியவர் எனவும் பலர் நினைத்தனர். இந்தச் சட்டநுணுக்கங்களை எல்லாம் உதறித்தள்ளிவிட்டு ஆங்கிலப் பெருமக்கள் ஜேம்ஸைத் தேர்ந்தெடுத்தனர். அரச குடும்பங்களிலேயே மிகவும் மூத்ததொரு குடும்பத்தின் சந்ததியாருக்கே மகுடம் செல்ல வேண்டும் என்ற தெய்விக உரிமைக் கொள்கையின்படி (Divine Right Theory) ஜேம்ஸுக்கு மகுடம் வழங்கப்பட்டது.

## ஜேம்ஸின் குணதிசயங்கள் (Character)

ஜேம்ஸ் பார்வைக்கு மிக எளிமையானவர். டியூடர் மன்னர்களிடம் விளங்கிய தோற்றப் பொலிவும், கம்பீர நடையும், கண்ணியமான நடத்தையும் ஜேம்ஸின்பால் சிறிதும் காணப்படவில்லை. ஆனால், பொலிவற்ற அவரது வெளித் தோற்றத்திற்குப் பின் ஆழ்ந்த படிப்பும், நுண்ணறிவும், சாதுர்யமும் ,மறைந்திருந்தன. நகைச்சுவை ததும்பப் பேசிக் கேட்போரைப் பரவசத்திலாழ்த்தும் திறமை அவருக்கு இயல்பாகவே அமைந்திருந்தது. சமய நூல்களையும் அரசியல் நூல்களையும் நன்கு அவர் ஊன்றிப் படித்திருந்தார். கற்றவர்களுக்கு இயல்பாக இருக்கின்ற கல்விச் செருக்கு அவருக்குச் சற்று அதிகமாகவே இருந்தது. 'ஆட்சிக் கலையில்' (King's craft) தமக்கு நிகரானவர் எவரும் இல்லை என்பது அவர் கருத்து. அறிவிலும் ஆற்றலிலும் தமக்கு ஒப்பாரும் மிக்காரும் ஒருவருமிருக்க முடியாது என அவர் நினைத்தார். சுருங்கக் கூறின் அவர் ஒரு வீண் தற்பெருமைக்காரர். தற்பெருமைக்காரர்களுக்கு இருக்கின்ற அகப்பாவம் அவர்பால் குடிகொண்டிருந்தது. எனவே, அவர் தம்மை யாரும் எதிர்த்துப் பேசுவதை விரும்பார். மேலும், பொதுக் கோட்பாடுகளைப் பற்றிப் பிதற்றிக்கொண்டிருப்பாரேயன்றி, அவற்றை நடைமுறையில் கொணரக்கூடிய செயலாற்றல் அவருக்குச் சிறிதும் இல்லை. இவை எல்லாவற்றுக்கும் மேலாக அவர்பால் காணப்பட்ட குறையாவது, மனிதர்களைப் புரிந்துகொண்டு அவர்களைச் சரிவர எடைபோட முடியாமையாகும். அவர் தம் நண்பர்களை வெறும் அழகிய தோற்றப் பொலிவுக்காக மட்டும் தேர்ந்துகொண்டாரே அன்றி, அவர்களது உள்ளப் பண்புகளைப் பற்றி அவர் சிறிதும் கவலைப்படவில்லை. 'மின்னுவ தெல்லாம் பொன்னல்ல' என்ற உண்மை அவர் அறியாததொன்று. 'வெளுத்ததெல்லாம் பால்' என்று அவர் நம்பி அதனால் ஏமாந்தவர். 'கற்றறி மூடர்' என்ற சொற்றொடர் அவருக்கு நன்கு பொருந்தும். ஃபிரான்ஸின் அரசரான நான்காம் ஹென்றி அவரைக் 'கிருஸ்துவ உலகிலேயே ஓர் அறிவு மிக்க முட்டாள்' (the wrisest fool in

Chirestendon) என்று அடிக்கடி கூறுவது வழக்கம். 'உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பல கற்றும் கல்லார் அறிவிலாதார்' என்ற குறளுக்கு எடுத்துக்காட்டாக அவர் விளங்கினர்.

## ஜேம்ஸின் தெய்விக உரிமைக் கொள்கை
(Divine Right Theory)

ஜேம்ஸ் தமது படிப்பின் விளைவாகத் தம்முடைய அரச பதவியைப் பற்றி மிக உயர்ந்த கருத்தைக் கொண்டிருந்தார். ஐரோப்பாவில் அப்போது உலவிக்கொண்டிருந்த தெய்விக உரிமைக் கொள்கையைப்பற்றி அவர் நிரம்பவும் படித்தவர். அதோடு அக் கொள்கையை விவரித்து, 'சுதந்திர முடியரசின் உண்மையான சட்டம்' (The True Law of the Free Monarchy) என்ற நூலையும் இயற்றியவர். ஜேம்ஸும் பொதுவாக ஸ்டூவர்ட்டுகள் அனைவரும் நம்பிய தெய்விக உரிமைக் கொள்கையானது இடைக்காலத்தில் ஐரோப்பாவில் தோன்றிய ஒரு கொள்கையாகும். அப்போது போப்பாண்டவர், தாமே இந்நிலவுலகின் தனித்தலைவர் எனச் சொல்லிக்கொண்டார். தூய பீட்டர் (St. Peter) என்பார் இறைவனாலேயே திருச்சபையின் தலைவராக நியமிக்கப்பட்டவரென்றும், அவரது வழிவந்தவர்களே தாங்கள் என்றும் போப்பாண்டவர்கள் கூறிக்கொண்டனர். இங்ஙனம் அவர்கள் உலகில் இறைமை (Sovereignty) கொண்டாடியதை யொட்டிப் புனித உரோமப் பேரரசர்கள் (Holy Roman Emperors) என அழைக்கப்பட்ட ஜெர்மானியப் பேரரசர்களும் தங்களை உலகத்தின் இறைவர்கள் எனக் கூறிக்கொண்டார்கள். போப்பாண்டவர்கள் கூறியது போலவே அவர்களும் தாங்கள் கடவுளின் பிரதிநிதிகளென்றும், அவராலேயே நியமிக்கப்பட்டவர்களென்றும் கூறலாயினர். அதற்குச் சாதகமாக விவிலிய நூலில் (Bible) இருந்து ஆதாரங்களை அவர்கள் எடுத்துக் காட்டினர். நாளடைவில் இவ்வுரிமையை ஏனைய ஐரோப்பிய அரசர்களும் கொண்டாடலாயினர். இங்கிலாந்தில் இவ்வுரிமையை முதலில் கொண்டாடியவர்கள் ஸ்டூவர்ட்டு மன்னர்களேயாவர்.

## ஜேம்ஸின் சமயக் கொள்கை

ஜேம்ஸின் சமயக் கொள்கையை அவரது இளவயது அனுபவங்கள் பெரிதும் பாதித்தன. ஸ்காட்லாந்தில் நிறுவப்பெற்றிருந்த கிர்க் (Kirk) எனும் பிரஸ்பிடீரிய திருச்சபை அவருக்குக் கொடுத்த தொல்லைகள் கொஞ்சமல்ல. ஸ்காட்லாந்து மதச்சபை, அரசியலில் பெருஞ் செல்வாக்கும், அதிகாரமும் பெற்றிருந்தது. அரசரையே குறை கூறுமளவுக்கு அச்சபையினர் உரிமை பெற்

திருந்தனர். அதனது அதிகாரத்தைப்பற்றி ஒரு சமயம் ஜேம்ஸ் குறைவாகப் பேசியபோது, மெல்வில் (Melville) எனும் அதன் தலைவர் அவரின் சட்டையைப் பற்றி இழுத்து, 'இறைவனது அற்ப சிற்றரசே' (God's silly vassel) என்று அவரை ஏளனமாக அழைத்ததோடு மட்டுமன்றி, ஸ்காட்லாந்தில் இரண்டு இராஜ்யங்கள் உண்டு என்றும், அதில் ஒன்று கிறிஸ்துவின் இராஜ்யமென்றும் அந்த இராஜ்யத்தின் அரசர் இயேசுவேயன்றி வேறெவருமில்லை என்றும், அவருடைய இராஜ்யத்தில் ஜேம்ஸ் எல்லாரையும்போல் ஓர் சாதாரண உறுப்பினரே என்றும் அவர் உறுதியாகக் கூறினர். இந்த நிகழ்ச்சி ஜேம்ஸுக்குப் பிரஸ்பிடீரிய மத அமைப்பின்மேல் ஒரு நீங்காத வெறுப்பையுண்டாக்கியது. அம்மதத்தின் ஜனநாயக அமைப்பு முறையும் ஜேம்ஸுக்குச் சற்றும் பிடிக்கவில்லை. அவ்வமைப்பில் ஏற்றத்தாழ்வு கிடையாது. பிஷப்புகளின் ஆட்சி கிடையாது. எல்லாரும் சமம். வழிபடுவோரின் பிரதிநிதிகளடங்கிய ஸினட் (Synod) என்ற குருமார் சபையே சமய நிர்வாகத்தை நடத்திவந்தது. இதை எல்லாம் பார்த்த ஜேம்ஸுக்கு இங்கிலாந்தின் மத ஏற்பாடு மிகவும் பிடித்திருந்தது. அவ்வேற்பாட்டிற்கு அரசனே தனித்தலைவன். அதை நிர்வகித்த பிஷப்புகளை அரசரே நியமித்தார். போப்பாண்டவர் பிடியினின்றும் விடுபட்ட அவர்கள் அரசனையே நம்பி வாழவேண்டியதாயிற்று. எனவே, அவர்கள் அரசனை வானளாவப் புகழ்ந்தனர். அரசன் தெய்வத்தின் பிரதிநிதி எனக் கூறினர். தற்புகழ்ச்சியில் விருப்பமும் அதிகார ஆசையும் கொண்ட ஜேம்ஸுக்கு மேற்சொன்ன பிஷப்புகளின் ஆட்சி (Episcopacy) நன்கு பிடித்திருந்தது. தமது அரசாட்சிக்குத் தக்கதொரு பக்கபலமாக பிஷப்புகள் இருப்பர் என்றும், அவர்கள் தமது கொள்கைகளை நாட்டில் பரப்பவும் விருப்பங்களை நிறைவேற்றவும் பயன்படுவர் என்றும் அவர் எண்ணினர்.

ஆங்கிலிக்கன் மத ஏற்பாட்டை அவர் ஆதரித்தார். அதே சமயத்தில் பியூரிட்டன்களையும் கத்தோலிக்கர்களையும் அவர் அடியோடு வெறுத்தார். ஏனெனில், கத்தோலிக்கர் போப்பாண்டவரது தலைமையை ஏற்பவர்கள். அரசனே மதத்துக்குத் தலைவன் என்ற ஆங்கிலிக்க மதக்கொள்கைக்கு அவர்கள் விரோதிகள். தமது தலைமைக்குக் கேடு சூழக்கூடிய ஒரு கூட்டத்தை ஜேம்ஸ் வெறுத்ததில் ஆச்சரியமொன்றுமில்லை. பியூரிட்டன்களை அவர் வெறுத்ததற்குக் காரணம் அவர்களுடைய கொள்கைகள் அல்ல. உண்மையில் ஜேம்ஸ் கால்வினிய மதக்கொள்கையில் பற்றுள்ளவர். வெளியாடம்பரங்களை வெறுப்பவர். எனினும் அவர்களது சகாக்களான பிரஸ்பிடீரியர்களைப் போன்று அவர்களும் ஜனநாயக மத ஏற்பாட்டை ஆதரிப்பர் என்று அவர் எண்ணினர். சமயத்துறை

யில் ஜனநாயகத்தையும் உரிமைகளையும் விரும்பும் அவர்கள் அரசியல் துறையிலும் உரிமைகளுக்காகப் போரிடத் தயங்கார் என அவர் அஞ்சினார். இவ்விதம் பல ஐயப்பாடுகளுடன் ஜேம்ஸ் இங்கிலாந்துக்குள் நுழைந்தார்.

### இங்கிலாந்தின் மதப்பிரிவுகள்

இங்கிலாந்தில் அப்போது மூன்றுவித மதப்பிரிவுகள் இருந்தன. நாட்டின் பெரும்பான்மையான மக்கள் எலிஸபெத்தின் மத ஏற்பாட்டைத் தழுவி வாழ்ந்தார்கள். தேசியத் திருச்சபையில் (National Church) அவர்கள் உறுப்பினர்களாயிருந்தனர். ஆனால், அத்திருச்சபையின் சடங்குகள் பெரிதும் கத்தோலிக்க மதச் சடங்குகளையே ஒத்திருந்தன. எனவே, உண்மையான பிராடெஸ்டண்டு மதம் இங்கிலாந்தில் ஏற்படவில்லையெனப் பலர் நினைத்தனர். கால்வின் என்பார் போதித்த கொள்கைகட்கேற்ப ஆங்கில மதஸ்தாபனம் சீர்திருத்தி அமைக்கப்பட வேண்டுமென்று அவர்கள் விரும்பினர். இங்ஙனம் நினைத்தவர்கள் தூய்மைக் கொள்கையினர் அல்லது பியூரிட்டன்கள் எனப்பட்டனர். இவர்களிற் பலர் ஆங்கில மதஸ்தாபனத்தை விட்டு வெளியேபோக விரும்பவில்லை. அதனுள் இருந்துகொண்டே அதைச் சீர்திருத்த அன்னார் விரும்பினர். எனவே, அவர்களிற் பலர் கோயில்களுக்குப் போய் வழிபாடுகளிலும் கலந்துகொண்டனர். வேறுசிலர் தனியே சென்று சமயத் திருக்கூட்டங்களை (Congregations) நடத்தினர். ஆனால், கத்தோலிக்கர் என்ற மூன்றும் பிரிவினர் ஆங்கிலேய மத ஏற்பாட்டை வெறுத்தவர்கள். அவர்கள் சிறுபான்மையினர். அவர்களிற் பலர் திருக்கோயில்களுக்குச் செல்வதில்லை. வழிபாடுகளிலும் கலந்துகொள்வதில்லை. அப்படிப்பட்ட ஆலயம் தொழாக் கூட்டத்தினருக்கு (Recusants) அபராதம் விதிக்கப்பட்டிருந்தது. மேலும் சில கத்தோலிக்கர் நாட்டுப்புறங்களில் சுதந்திரமாய் வாழ்ந்த கத்தோலிக்க மானர் பிரபுக்களை (Manor Lords) அண்டி வாழ்ந்தனர். கத்தோலிக்க குருமார்கள் அப்பிரபுக்களின் மாளிகைகளில் இருந்த ஒதுக்கிடங்களிலிருந்துகொண்டு இரவில் இரகசியமாய் வெளிப்போந்து, கத்தோலிக்கர் மாஸ் ஜெபம் (Mass) செய்ய உதவினர். சில கத்தோலிக்கர் அபராதத்திலிருந்து தப்பிக்க வேண்டிப் பெயரளவிற்குக் கோயிலுக்குப் போய் வந்தனர். மேலும் சிலர் போப்பின் ஆதிக்கத்துக்குக் கட்டுப்படாது, கத்தோலிக்கக் கொள்கைகளைக் கடைப்பிடிக்க விரும்பினர். அவர்கள் பிஷப்புகளின் ஆட்சியை ஆதரித்தனர். அன்னவர் ஆர்மீனியர்களெனப் பட்டனர். மேற்சொன்ன மூன்று பிரிவினரில் ஒவ்வொருவரும் ஜேம்ஸ் தங்களையே ஆதரிப்பர் என எண்ணினர். அது தான் விந்தை! ஸ்காட்லாந்து பிரஸ்பிடீரிய மதச் சூழ்நிலையில்

வளர்ந்தவராதலால் ஜேம்ஸ் தங்களையே ஆதரிப்பர் எனப் பியூரிட்டன்கள் கருதினர். கத்தோலிக்க மேரி அரசியின் புதல்வராதலாலும், தமது தாயை ஆதரித்ததன் காரணமாக எலிஸபெத் காலத்துக் கத்தோலிக்கர் அநுபவித்த இன்னல்களை நேரில் அறிந்தவராதலாலும் ஜேம்ஸ் தங்களையே ஆதரிப்பர் எனக் கத்தோலிக்கர்கள் எண்ணினர். அவர்களிருவரது எண்ணங்களிலும் மண்ணைப் போட ஜேம்ஸ் மன்னர் காத்திருந்தார் என்பதை அந்தோ அவர்கள் அறியாது போயினர். ஆங்கிலிக்கன்கள் தங்களது மதஸ்தாபனம் அரசாங்கத்தால் ஒப்புக்கொள்ளப்பட்டதாகையாலும், அரசனை அவர்கள் தலைவராகப் போற்றியதாலும், தங்களையே அவர் ஆதரிப்பார் என எண்ணினர். அவர்கள் நினைத்தது ஒன்றே சரியாயிற்று.

### ஜேம்ஸும் பியூரிட்டன்களும்

எலிஸபெத் இராணியாரின் தண்டனைச் சட்டங்கள் (Penal Laws) என்ற இரும்புப் பிடியில் சிக்கித் தவித்துக்கொண்டிருந்த பியூரிட்டன்கள் ஜேம்ஸின் வருகையைப் பாலைவனத்தில் பெய்ய வந்த குளிர்மழை என எண்ணினர். அவர் லண்டன் வரும் வரைக்கும் கூட அவர்களால் காத்திருக்க முடியவில்லை. தங்களது விருப்பங்களை எல்லாம் ஒரு விண்ணப்பத்தில் குறித்துக்கொண்டு ஓடோடியும் சென்று, ஜேம்ஸ் ஸ்காட்லாந்திலிருந்து வந்துகொண்டிருந்தபொழுது, வழியில் அவரை இடைமறித்துத் தங்கள் குறைகளை நீக்கும்படி அவர்கள் முறையிட்டனர். ஆயிரம் பியூரிட்டன்கள் கையெழுத் திட்டிருப்பதாக எண்ணப்பட்ட 'ஆயிரவர் விண்ணப்பம்' (Millenery Petition) என்ற குறைப் பத்திரத்தை அவர்கள் ஜேம்ஸிடம் நீட்டினர் (1603). அப்பத்திரத்தில் அவர்கள் கேட்டதெல்லாம் ஏற்கெனவே இருந்த ஏற்பாட்டில் ஒரு சில மாற்றங்களேயன்றி வேறில்லை. குருமார்கள் சர்ப்லிஸ் (Surplis) என்ற வெள்ளையுடை அணிவது திருவிருந்து வழிபாட்டின்போது (Communion Service) முழந்தாள் இடுவது போன்ற சில்லரைச் சடங்குகளை அனுசரிப்பதில் அவரவர் பிரியம் போல் அவரவர் நடந்துகொள்ள வேண்டுமென்ற உரிமையையே அவர்கள் கோரினர். அதோடு எலிஸபெத் காலத்து வகுக்கப்பட்ட ஜெபப் புத்தகமே (Prayer Book) முழு உண்மை அடங்கியது என்று நம்பும்படியும், சபதமெடுத்துக்கொள்ளும்படியும், குருமார்கள் வற்புறுத்தப்படக் கூடாதென்று அவர்கள் விரும்பினர். மற்றபடி ஆங்கில மத ஏற்பாட்டினின்றும் பிரிந்துவிட அவர்கள் விரும்பியதாகத் தெரியவில்லை. பிரஸ்பிடீரிய மத ஏற்பாட்டைப் போல் ஜனநாயக மத ஏற்பாட்டை இங்கிலாந்தில் நிலைநாட்டவும் அவர்கள் கோரவில்லை. எனினும் அவர்களது விருப்

பங்களை எல்லாம் நன்கு ஆராய்ந்த பின்னரே ஒரு முடிவு சொல்லக் கூடும் என்று ஜேம்ஸ் கூறிவிட்டார். 1604ஆம் ஆண்டில் அவர் அதற்கென 'ஹாம்ப்டன் கோர்ட் மகாநாடு' (Hampton Court Conference) என்ற ஓர் ஆலோசனைச் சபையைக் கூட்டினார். தமது சமய நூலறிவையும் தர்க்க வன்மையையும் வெளிப்படுத்தத் தக்க தருணம் அங்கே தமக்கு வாய்த்ததாக ஜேம்ஸ் எண்ணினார். அம்மகாநாட்டின் தொடக்கத்திலிருந்தே பியூரிட்டன்களை மட்டந் தட்டுவதில் ஜேம்ஸ் முனைந்தார். அவர்களது கொள்கைகளை அவர் ஒவ்வொன்றாக மறுத்து வந்தார். கத்தோலிக்கர்களின் கட்சியைப் பேன்கிராப்ட் (Bancraft) என்ற லண்டன் ஆர்ச்பிஷப் எடுத்துக் கூறினார். அவர் பியூரிட்டன்களை வன்மையாகத் தாக்கியதோடு அவர்களை ஏளனம் செய்யவும் ஆரம்பித்தார். ஜேம்ஸ் அவரைத் தடுத்து நிறுத்திவிட்டுத் தாமே பியூரிட்டன்களுக்கும் பதில் கூற லானார். டாக்டர் ரேனல்ட்ஸ் (Dr. Reynolds) என்பவர் பியூரிட்டன் கொள்கைகளை ஆதரித்து வாதாடினார். அவர் பேசிக் கொண்டிருந்தபோது ஒரு சமயம் 'பிரஸ்பிடீரிய சினட்' (Presbyterian Synod) போன்ற தொழுவோர் பிரதிநிதிகளடங்கிய சபையைக் கலந்தாலோசித்தே ஆங்கிலேயப் பிஷப்புகள் காரியம் செய்ய வேண்டும் என்று கூறினார். 'பிரஸ்பிடீரி' என்ற சொல்லைக் கேட்டவுடன் ஜேம்ஸ் கொதித்தெழுந்தார். ஸ்காட்லாந்து பிரஸ்பிடீரிய மதச் சபை தமக்குக் கொடுத்த தொல்லைகள் எல்லாம் ஒரு கணத்துள் அவரது மனக்கண் முன் தோன்றி மறைந்தன. ஆத்திரம் பொங்க அவர், 'பிரஸ்பிடீரிய மதத்தை இங்கிலாந்தில் நிலைநாட்ட விரும்புபவர்கள், ஸ்காட்லாந்திய பிரஸ்பிடீயர்களுக்கும் எனக்குமுள்ள உறவு இறைவனுக்கும் பிசாசுக்குமுள்ள தொடர்பை ஒத்தது என்பதை அறிந்துகொள்ள வேண்டும்' என இரைந்தார். 'பிஷப்புகள் இல்லையேல் மன்னருமில்லை' என்று அவர் ஆவேசமாய்க் கூவினார். பியூரிட்டன்கள் யாவரும் ஆங்கிலிக்கத் திருச்சபைக்கு ஒத்துப் போக வேண்டுமென்றும், அங்ஙனம் ஒத்துப் போக விரும்பாதவர்களைத் தாம் நாட்டைவிட்டே விரட்டியடிக்கப் போவதாகவும், கோபாவேசமாகக் கூறிவிட்டு ஜேம்ஸ் தம் இருக்கையினின்றும் சடக்கென எழுந்து மகாநாட்டிற்கு வெளியே போய்விட்டார். மகாநாடு முரிந்தது. ஓரிரண்டு நிமிடங்கள் பொறுமையாயிருக்க இயலாததால் ஜேம்ஸ் தமக்கும் தமது நாட்டுக்கும் நீங்காத பழியைத் தேடிவிட்டார். ஒரு சிறிது விட்டுக்கொடுத்திருந்தால் மிதவாதிகளான பியூரிட்டன்கள் (Moderate Puritans) ஆங்கில மத ஏற்பாட்டுக்குள்ளேயே அடங்கி இருந்திருப்பர். ஆனால், ஜேம்ஸின் பேச்சினின்றும் அது அறவே இயலாது என்பதை அவர்கள் கண்டு கொண்டனர். மன்னனின் நிலையான எதிர்க்கட்சியினராக அவர்கள் மாறினர். பாராளுமன்

றத்துக்கும், மன்னனுக்கும் நீங்காத பகை ஏற்பட்டுவிட்டது. ஏறக்குறைய 300 பாதிரிமார்கள் பொது ஜெபப் புத்தகத்தை ஏற்காத குற்றத்துக்காகப் பதவிகளினின்றும் நீக்கப்பட்டனர். அறிவும் செல்வாக்கும் மிக்க பல பியூரிட்டன்கள் ஹாலந்து தேசத்துக்குத் தப்பியோடினர். அங்கிருந்து அவர்கள் 'மே பிளவர்' (வசந்த மலர்) என்ற கப்பல் மூலம் அமெரிக்காவுக்குச் சென்றனர். ஹாம்ப்டன் கோர்ட் மகாநாட்டினுல் ஒரே ஒரு நற்பயன் மட்டும் விளைந்தது. அதாவது விவிலிய நூல் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்படுதற்குக் கமிட்டி ஒன்று ஏற்படுத்தப்பட்டது. அதன் முயற்சியின் விளைவாய் அதிகார பூர்வமாய் ஒப்புக்கொள்ளப் பட்ட புதிய விவிலியம் (Authorised Version of Bible) வெளியிடப் பட்டது. அதனுல் பாமர மக்களும் விவிலிய நூலைப் படித்துப் பயன் பெற வழி ஏற்பட்டது. ஷேக்ஸ்பியரின் நாடகங்களை விட, மக்களது அறிவு வளர்ச்சிக்குப் பெரிதும் உதவியது இவ் விவிலிய நூலேயாகும். ஹாம்ப்டன் கோர்ட் மகாநாட்டினுல் பெருமகிழ்ச்சி யுற்றவர்கள் ஆங்கிலிக்க பிஷப்புகளாவர். அவர்கள் அரசனை வாயாரப் புகழ்ந்தனர். கடவுளுடைய ஆவேசமே ஜேம்ஸுக்குள் புகுந்து அவரை அங்ஙனம் அம் மகாநாட்டில் பேசச் செய்தது என்று அவர்கள் கூறினர். டாக்டர் கௌவல் (Doctor Cowell) எனும் வழக்கறிஞர் தாம் தொகுத்த அகராதியில் மன்னரே இறைமை வாய்ந்தவ ரென்றும், சட்டங்களை ஆக்கவும் நீக்கவும் அவருக்கு அதிகாரமுண்டென்றும், பாராளுமன்றத்துக்கு அவராக அளித்த ஒருசில அதிகாரங்கள் போக எஞ்சிய அதிகாரம் (Residuary Power) யாவும் அரசருடையதே என்றும், அரசரது 'தனிச் சிறப்பதிகாரம்' எனும் சொற்றொடருக்கு அவர் பொருள் எழுதினுர். பிஷப் நீல் (Neile) அப்பொருளை வியந்து பாராட்டினுர். ஆனுல், பாராளுமன்றம் கௌவலின் அகராதியைக் கண்டித்து, அது தடை செய்யப்பட வேண்டுமெனக் கூறியது. ஆனுல், ஜேம்ஸ் தமது தனியாணைப் பேரறிவிப்பு மூலம் (Proclamation) அந்நூலைக் காத் தார்.

### ஜேம்ஸும் கத்தோலிக்கர்களும்

கத்தோலிக்கரிடம் ஜேம்ஸ் ஓரளவு பரிவு காட்டினுர். எலிஸபெத் காலத்துத் 'தண்டனைச் சட்டங்கள்' (Penal Laws) கடுமையை அவர் சற்றுத் தளர்த்தினுர். கோயிலுக்குப் போக மறுத்தவர்களுக்கு அபராதம் விதிப்பது தடுக்கப்பட்டது. சிறையி லிருந்த பல கத்தோலிக்கர் விடுதலை செய்யப்பட்டனர், அரசரிடம் விசுவாசமாயிந்த தனிப்பட்ட கத்தோலிக்கர்களுக்குத் தொழுகைச் சுதந்திரம் வழங்கப்பட்டது. ஜெசூட்டுகளையும் குருமார்

களையும் ஒழித்துவிட்டால் மற்றக் கத்தோலிக்கர் எல்லாம் ஆங்கில மத ஏற்பாட்டுக்கு ஒத்துப்போய்விடுவர் என அவர் எண்ணினர். எனவே, ஜேம்ஸ் சமயப் பொறைக் (Toleration) கொள்கையைக் கத்தோலிக்கர்களிடம் கையாண்டார். அதனால் அதுவரை மறைவில் தொழுகை நடத்திவந்த பல கத்தோலிக்கர்கள் வெளி வந்து, வெளிப்படையாக உலவினர். கத்தோலிக்கர்களின் எண்ணிக்கை திடீரெனப் பெருகியது. வெளிநாட்டிலிருந்து பல கத்தோலிக்கக் குருமார்கள் இங்கிலாந்துக்குள் நுழைந்தனர். இதைக் கண்ட பிராடெஸ்டண்டுகள் திடுக்கிட்டனர். பாராளு மன்றத்திலும் வெளியிலும் கண்டனக் குரல்கள் பல கிளம்பின. இதைக் கேட்ட ஜேம்ஸுக்கே ஓரளவு பயம் தோன்ற ஆரம்பித்து விட்டது. உடனே அவர் தமது கொள்கையை மாற்றிக் கொண் டார். கத்தோலிக்கக் குருமார்கள் (Catholic Priests) யாவரும் உடனே நாட்டைவிட்டு வெளியேறிவிடும்படி அவர் உத்தர விட்டார். 5000 கத்தோலிக்கர் தண்டிக்கப்பட்டனர். இதையறிந்த கத்தோலிக்கர் வெகுண்டனர். மன்னனது மனம் மாறக் காரணமா யிருந்த பாராளுமன்றத்தையும் மன்னனையும் ஒருங்கே ஒழித்து விட அவர்கள் ஒரு திட்டம் தீட்டினர். அதற்கே வெடிமருந்துச் சதி (Gun Powder Plot, 1605) எனப் பெயர். ஜெசூட் சபையினர் (Jesuits) சதிகாரர்களை ஊக்குவித்தனர். பாராளுமன்றம் கூடும் போது அதன் கட்டடத்தை வெடிமருந்து மூலம் தகர்த்து, மன்னனையும் பியூரிட்டன் பாராளுமன்ற உறுப்பினர்களையும் ஒருங்கே மறு உலகுக்கு அனுப்பிவிடுவதே நல்லது என ராபர்ட் கெட்டஸ்பி (Robert Catesby) எனும் சதிகாரர் ஒரு யோசனை கூறினர். அந்த யோசனையின்படி பாராளுமன்றக் கட்டடத்தின் அடியிலிருந்த பாதாளக்கிடங்கு ஒன்றைச் சதிகாரர் வாடகைக்கு அமர்த்தினர். முப்பத்தாறு மூட்டை வெடிமருந்து அவ்வறைக்குள் திணிக்கப்பட்டது. ஸ்பானியப் படையில் வெடிமருந்தைக் கையாள் வதில் பழக்கப்பட்டிருந்த கைஃபாக்ஸ் (Guy Fawks) என்பவன் பாராளுமன்றக் கட்டடத்தை வெடிமருந்தால் கொளுத்தும் பணி யைச் செய்ய முன்வந்தான். கட்டடம் கொளுத்தப்பட்ட பின் ஒரு கலகத்தைக் கிளப்பவேண்டிச் சதிகாரர்கள் அறுவரும், மூன்று நிலப்பிரபுக்களின் உதவியை நாடினர். அவர்களும் அதற்கு ஒப்புக்கொண்டனர். அவர்களுள் ட்ரெஷாம் (Tresham) என்பவர் ஒருவர். அவர் கொஞ்சம் இளகிய மனமுடையவர்.

அவரது நண்பர்கள் பலர் பிரபுக்கள் சபையில் (House of Lords) உறுப்பினராயிருந்தனர். அவர்கள் வெடிமந்துருச் சதியின் காரணமாய் உயிரிழப்பதை விரும்பாத அவர் தமது நண்பரான மாண்டீகில் பிரபுவுக்குப் (Lord Monteagle) பாராளு

மன்றக் கூட்டத்துக்குப் போகவேண்டாமென்றும் போனால் அபாயம் வருமென்றும் எச்சரித்து ஒரு மொட்டைக் கடிதம் எழுதினர். செசில் பிரபு (Lord Cecil) வுக்கும் இச் செய்தி உடனே அறிவிக்கப்பட்டது. சஃபோக் எர்ல் என்பார் (Earl of Suffolk) சதியில் வெடிமருந்து பயன்படுத்தப்படக் கூடுமென்று ஐயப்பட்டுப் பாராளுமன்றக் கட்டடத்தின் பாதாள அறைகளைச் சோதிக்கச் சென்றார். அங்கே கைஃபாக்ஸ் என்பவன் நின்றிருக்கக் கண்டு அவனைக் கைது செய்யும்படி அவர் உத்தரவிட்டார். அவனைப் பிடித்து நன்கு புடைத்த பின்னும்கூட அவன் தன் சகாக்களின் பெயர்களை வெளியிடவில்லை. வேறு வழிகளில் சதியினர் யாவரென்பது கண்டுபிடிக்கப்பட்டது. கத்தோலிக்கரே சதிக்குக் காரணம் என்பது யாவருக்கும் தெரியவந்தது. கைஃபாக்ஸ் தூக்கிலிடப்பட்டான். அவனது உருவப் பதுமை இந்நாளிலும் கூட லண்டன் வீதிகளில் கொளுத்தப்படுகிறது. கைஃபாக்ஸை ஊக்குவித்தவரும் ஜெசூட் சபையினரின் தலைவருமான கார்னெட் (Garnet) என்ற பாதிரியும் கொல்லப்பட்டார். கெடஸ்பியும் பிடிக்கப்பட்டுக் கொல்லப்பட்டான். இங்ஙனம் வெடிமருந்துச் சதி பயனற்றுப் போய் விட்டது! ஆனால், இச்சதியானது கத்தோலிக்கத் திருச்சபையின் நற்பெயருக்கு ஒரு நீங்காத களங்கத்தை ஏற்படுத்திவிட்டது. ஒவ்வொரு கத்தோலிக்கனும் நாட்டைக் காட்டிக் கொடுப்பவனாகவும், ஒவ்வொரு ஜெசூட்டும் ஒரு கொலைகாரனாகவும் ஆங்கில மக்களுக்குக் காட்சியளித்தனர். கத்தோலிக்கர் மீது கொஞ்ச நஞ்சமிருந்த அபிமானமும் ஜேம்ஸின் மனத்தை விட்டகன்றது. முக்கியமாக ஜெசூட்டுகளை அவர் வஞ்சந்தீர்க்க விரும்பினார். தண்டனைச் சட்டங்கள் உயிர்ப்பிக்கப்பட்டன. 'மன்னனைப் பதவியினின்றும் நீக்கப் போப்புக்கு உரிமை கிடையாது' என்ற சபதத்தை எடுக்கும்படி ஒவ்வொரு கத்தோலிக்கனும் வற்புறுத்தப்பட்டான். கத்தோலிக்கர்களுள் இராஜ விசுவாசம் கொண்டவர்கள் பலர் இருந்தனர். அவர்கள் லௌகிகக் கத்தோலிக்கர்கள் (Secular Catholics) எனப்பட்டனர். அவர்கள் தயங்காது, மேற்சொன்ன சபதத்தை எடுத்துக்கொண்டு தப்பினர். ஆனால், ஜெசூட்டுகளால் அங்ஙனம் செய்யமுடியவில்லை. அதனால் அவர்களில் பலர் சிறைப்பட்டனர். பலரது சொத்துகள் பறிமுதல் செய்யப்பட்டன. வேறு சிலர் வீட்டைவிட்டுத் துரத்தப்பட்டனர்.

சமயத்துறையிலும், அரசியல் துறையிலும் நிலையான சமாதானத்தை ஏற்படுத்த வேண்டுமென்பது ஜேம்ஸின் குறிக்கோளாகும். அவரது 'ஆட்சிக் கலை' எனும் துப்பாக்கியிலிருந்து கிளம்பிய முதல் குண்டு குறி தவறிவிட்டது. அவரது இரண்டாவது குறிக்கோளிலாவது வெற்றி பெறலாம் என அவர் மனப்பால் குடித்

தார். அந்தோ பாவம்! அங்கேயும் அவருக்குத் தோல்வியே காத்திருந்தது.

## ஜேம்ஸும் பாராளுமன்றங்களும்

### முதல் பாராளுமன்றம் (1604—1610)

ஜேம்ஸ் தமது முதலாவது பாராளுமன்றத்தை 1604ஆம் ஆண்டில் கூட்டினார். தம் ஆணையைச் சிரமேற்கொண்டு நிறைவேற்றத் தயாராக உள்ள கீழ்ப்படிதல் மிக்க சபையாக அது இருக்குமென்று அவர் எதிர்பார்த்தார். ஆனால், சீக்கிரமே தம் கருத்து எவ்வளவு தவறு என்பதை அவர் நன்கு உணர்ந்து கொண்டார். தல ஆட்சியில் நல்ல அனுபவம் பெற்ற நாட்டுப்புறப் பிரபுக்களே பாராளுமன்றத்தில் பெரும்பான்மையினராயிருந்தனர். அவர்கள் மத்திய ஆட்சியிலும் ஓரளவு பங்குகொள்ள விரும்பினர். மேலும் பாராளுமன்ற உறுப்பினர்களிற் பலர் பியூரிட்டன்கள். அவர்கள் சமயத்துறையில் சுதந்திரத்தை விரும்பியது போன்றே அரசியல் துறையிலும் விடுதலையை விரும்பினர். அவ்விருப்பத்தைத் தூண்டிவிடுவதுபோல் ஜேம்ஸும் நடந்து கொண்டார். ஸ்காட்லாந்திலிருந்து இங்கிலாந்துக்கு அவர் வருகின்ற வழியிலேயே திருடன் ஒருவனைக் கொல்லும்படி அவர் உத்தரவிட்டார். பாராளுமன்றம் என்ற ஒரு சபை இருப்பதையும், அதன் அனுமதி பெற்றே மரண தண்டனை விதிக்க வேண்டுமென்பதையும் அவர் கவனிக்கவில்லை. மேலும் அவர் பட்டத்துக்கு வந்ததும் வராததுமாக ஒரு தனியாணைப் பேரறிவிப்பு மூலம் சட்டப் பாதுகாப்பற்றவர்கள் (Outlaws) பாராளுமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்படத் தகுதியற்றவர்கள் என அறிவித்தார். இந்த அறிவிப்பு பாராளுமன்றத்தின் சிறப்புரிமைகளில் அரசன் தலையிடுவதாகுமென்பதைப் பலரும் கருதினர். காட்வின் (Godwin) என்பார் பக் (Bug) எனும் கவுன்டியிலிருந்து பாராளுமன்றத்தின் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஜேம்ஸின் தனியாணைப் பேரறிவிப்பின்படி அவரது தேர்தல் செல்லாது என அரசனது அதிகாரிகள் அறிவித்துவிட்டனர். வேறு தேர்தல் நடத்தப்பட்டு ஃபார்ட்டஸ்க் (Fortesque) என்பவர் தேர்ந்தெடுக்கப்பட்டார். பொதுமக்கள் சபை (House of Commons) இந்த நிகழ்ச்சியை வன்மையாகக் கண்டித்தது. பாராளுமன்றத்தின் உறுப்பினராவதற்கு யார் யார் தகுதி உள்ளவர்கள் என்பதைத் தீர்மானிப்பதும், தேர்தல் வழக்குகளில் தீர்ப்புக் கூறுவதும் தனக்கே உரிய சிறப்புரிமை எனப் பாராளுமன்றம் வாதித்தது. இந்தச் சச்சரவில் ஒரு தீர்ப்புக் கூறும்படி சான்சரி நீதிமன்றத்தை (Chancery Court) ஜேம்ஸ் கேட்டுக்கொண்டார். அந் நீதிமன்றம் அரசனுக்கு விரோதமாக ஒரு முடிவுக்கு வர அஞ்சியது. எனவே,

இருசாராருக்கும் பொதுவாக அது இரண்டு தேர்தல்களையும் ரத்து செய்துவிட்டு மூன்ருவது தேர்தல் நடத்தும்படி ஒரு கட்டளையைப் (writ) பிறப்பித்தது. இதன் மூலம் தேர்தல் பற்றிய வழக்குகளில் தீர்ப்புக் கூறும் உரிமை பாராளுமன்றத்துக்கே உரியதென்பது வற்புறுத்தப்பட்டது.

தனது உரிமைகளைப் பாதுகாக்க விரும்பிய ஜேம்ஸின் முதலாம் பாராளுமன்றம் தனது சிறப்புரிமைகளை எல்லாம் தொகுத்து 'காப்புரை தாள்' (A Form of Apology, 1604) என்னும் ஒரு பத்திரத்தைத் தயாரித்து ஜேம்ஸிடம் சமர்ப்பித்தது. பாராளுமன்றத்தில் யாதொரு கட்டுப்பாடுமின்றி விவாதிக்கு முரிமை, தன் உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கும் உரிமை, பாராளுமன்றம் நடைபெறும்போது சிறையிடப்படா உரிமை, முதலியன வழி வழியாகப் பாராளுமன்றத்தார்க்கு வருகின்ற சிறப் புரிமைகளாகும் என. அதில் குறிப்பிடப்பட்டிருந்தது. அவற்றை ஜேம்ஸ் மறுத்தார். பாராளுமன்றத்துக்கென்று தனிப்பட்ட உரிமைகள் எவையும் கிடையாவென்றும், அப்படி எவையேனு மிருந்தால் அவை மன்னனுகப் பார்த்து அதற்கு அருள் கூர்ந்து வழங்கியவையே யாகுமென்றும் அவர் கூறினுர். 'இந்நில வுலகிலேயே மிக்க இறைமை வாய்ந்தது மன்னனின் நிலைமை. மன்னர்கள் கடவுளின் பிரதிநிதிகள்; அவர்கள் அமர்ந்திருப்பது இறைவனின் அரியாசனம். அதுமட்டுமன்று. கடவுளாலேயே அவர்கள் கடவுளென அழைக்கப்படுபவர்கள். எனவே, பொது மக்கள் சபையானது அரசனுக்கு மரியாதையோடு அறிவுரை வழங்குவதோடு நிறுத்திக்கொள்ளவேண்டும். அன்றி அரசாங் கத்தின் முக்கிய அலுவல்களில் தலையிடக்கூடாது. ஆட்சிக் கலை அரசருக்கு மட்டுமே உரியது' என்று ஜேம்ஸ் பாராளுமன்றத்துக்கு ஒரு பேருரையே நிகழ்த்திவிட்டார். அதைக்கேட்ட பாராளுமன்ற உறுப்பினர்கள் முணுமுணுத்துக்கொண்டே யிருந்தனர். அரசர் நினைப்பது தவறு என்றும், நாட்டின் முக்கிய சிக்கல்களை விவா திக்கும் உரிமை பாராளுமன்றத்தின் மிகப் பழமையானதொரு உரிமை என்றும், அது போய்விட்டால் தனது உரிமையின் சாரமே போய்விட்டதற்குச் சமம் என்றும் பாராளுமன்றம் திட்ட வட்டமாகக் கூறியது.

அடுத்த இரு கூட்டங்களிலும் (Sessions) மன்னனுக்கும் பாராளுமன்றத்துக்கும் ஏதாவது பூசல் இருந்துகொண்டே யிருந்தது. ஒரே மசோதாவானது இரண்டு பாராளுமன்றக் கூட் டங்களில் தொடர்ந்து பிரேரேபிக்கப்படக்கூடாது என்று கூறும் ஒரு சட்டமானது 1606ஆம் ஆண்டுக் கூடிய பாராளுமன்றக் கூட்டத்தில் நிறைவேறியது. மேலும் தன்னுடைய உறுப்பினர்கள்

மேல் தனக்கு எல்லா அதிகாரமும் உண்டு என்பதை 1607-ல் பாராளுமன்றமானது நன்கு நிலைநாட்டியது. அதன்படி கிறிஸ்தபர் பிகோட் (Christopher Pigott) என்பவர் பாராளுமன்றத்தினின்றும் வெளியேற்றப்பட்டார்.

### ஸ்காட்லாந்து இங்கிலாந்து ஐக்கியம்

ஜேம்ஸின் மற்றொரு முக்கியமான குறிக்கோளாவது ஸ்காட்லாந்தையும் இங்கிலாந்தையும் பலவகையிலும் இணைத்துவிட வேண்டும் என்பதாகும். இரு நாடுகட்கும் விரோதத்தை வளர்த்து வந்த எல்லாச் சட்டங்களையும் ஜேம்ஸ் ரத்துச் செய்தார். ஸ்காட்லாந்து மக்களும் ஆங்கிலக் குடியுரிமையைப் (Citizenship) பெறவேண்டுமென அவர் விரும்பினர். ஆனால், ஆங்கிலேயர்கட்கு ஜேம்ஸின் குறிக்கோள் சிறிதும் பிடிக்கவில்லை. ஸ்காட்லாந்தியரும், தாங்களும் ஒருக்காலும் ஒன்றுபடுதல் இயலாது என அவர்கள் எண்ணினர். எனினும், ஜேம்ஸ் பிடிவாதமாக இருந்தார். 'நான் கணவன்; இப்பெருந்தீவு முழுவதும் என் மனைவி' என்று ஜேம்ஸ் கூறினர். இரு நாடுகளின் இணைப்பு முறையை ஆராய ஒரு கமிஷன் நியமிக்கப்பட்டது. அஃது இரு நாடுகளிடையேயும் தடையிலா வாணிகம் (Free Trade) நடைபெறலாம் என்றும், ஜேம்ஸ் பட்டத்துக்கு வந்தபின் பிறந்த ஸ்காட்லாந்தியரெல்லாம் இங்கிலாந்தின் குடியுரிமையைப் (Naturalisation) பெறலாம் என்றும் சிபாரிசு செய்தது. இவ்விரண்டு சிபாரிசுகளையும் பாராளுமன்றம் ஒப்புக்கொள்ள மறுத்துவிட்டது. ஜேம்ஸ் அப்போதும் நம்பிக்கையை இழக்கவில்லை. தம் விருப்பத்தை நிறைவேற்றிக்கொள்ளப் பொதுச்சட்ட நீதிமன்றங்களைப் (Common Law Courts) பயன்படுத்த அவர் முனைந்தார். அதற்காகக் கால்வின் வழக்கு (Calvins Case) என்னும் வழக்கொன்று ஜோடிக்கப்பட்டது. 1605-ல் அதாவது ஜேம்ஸ் பட்டத்துக்கு வந்தபின் பிறந்த ராபர்ட் கால்வின் என்பவரது பெயரில் இங்கிலாந்தில் கொஞ்சம் நிலம் வாங்கப்பட்டது. பின் அந்நிலத்தை அவரிடமிருந்து பறித்துக்கொண்டதாகக் கருதப்பட்ட இரு ஆட்கள் மீது ஒரு வழக்குத் தொடுக்கப்பட்டது. கால்வின் ஆங்கிலக் குடிமகனு (Citizen) இல்லையா என்ற பிரச்சினை எழுந்தது. கால்வின் 1603-க்குப்பின் பிறந்தவராதலால் ஆங்கிலக் குடிமகனேயாவன் என நீதிபதிகள் தீர்ப்புக் கூறினர். இங்ஙனம் ஜேம்ஸ் தனது விருப்பத்தை ஓரளவு நிறைவேற்றிக் கொண்டார்.

### பொருளாதாரச் சிக்கல்கள் (Financial Issues)

பாராளுமன்றத்துக்கும் அரசனுக்கும் உண்மையான போராட்டம், பொருளாதாரத்துறையில்தான் நடைபெற்றது எனலாம்.

ஜேம்ஸ் டியூடர்களைப் போல் வல்லரசு செலுத்த விரும்பினாரே யன்றி அவர்களைப்போல் சிக்கனமாய் வாழக் கற்றுக் கொள்ள வில்லை. பணத்தை ஊதாரித்தனமாய் அவர் வாரி இறைத்ததால் அவருக்குப் பணவறட்சி ஏற்பட்டது. மேலும் புது உலகமான அமெரிக்காவிலிருந்து ஏராளமான பொன்னும் வெள்ளியும் வந்து குவிந்ததால் பணத்தின் மதிப்புக் குறைந்துவிட்டது. விலைவாசிகள் ஏறின. இந்நிலையில் செலவுகளைக் குறைத்துக்கொள்ளவும் ஜேம்ஸுக்குத் தெரியவில்லை. எனவே, அவர் பழைய நிலமானிய முறைக் கட்டணங்களை (Feudal Dues) வசூலித்துப் பணம் திரட்ட முற்பட்டார். பழைய மரபுப்படி, மன்னர்கள் போர்க் காலத்திலன்றி மற்றைய நாட்களில் பாராளுமன்றத்தின் உதவியின்றியே வாழ வேண்டும். அரசர்களுக்கே சொந்தமான நிலங்களில் (Crown Lands) வரும் வருமானம், நிலமானிய முறை வரிகளினின்றும் கிடைக்கும் பணம், கம்பளி, தோல் போன்ற பொருள்களின் மீது விதிக்கப்படும் சுங்க வரிகளால் (Duties) கிடைக்கும் வருவாய், ஒவ்வோர் ஆண்டுக்கும் பாராளுமன்றத்தால் அளிக்கப்பெறும் டன் எடை வரி [இறக்குமதியாகும் ஒவ்வொரு டன் சாராயத்தின் (Wine) மீதும் விதிக்கப்பட்ட வரி], பவுண்டுக் கட்டணம் (இறக்குமதியாகும் ஒவ்வொரு பவுண்டு வியாபாரப் பொருள் மீதும் விதிக்கப்பட்ட வரி) இவற்றிலிருந்து கிடைக்கும் பொருள் முதலியவற்றைக் கொண்டு தான் மன்னர்கள் ஆட்சியை நடத்தவேண்டும். அதுவே முறை. ஆனால், அவசியம் நேர்ந்தால் அவர்கள் பாராளுமன்றத்திடம் உதவித் தொகைகளைப் (Subsidies) பெறலாம். வழக்கமாக இறக்கு மதிப் பொருள்களின்மீது விதிக்கப்பெறும் வரிகளுக்கும் மேலாக இடுவரிகளைப் (Imposition) போடலாம். தனியுரிமைகளை (Monopolies) வழங்கி அதற்கு ஒரு கட்டணம் வாங்கலாம். மேலும், திருப்பித் தரவேண்டாத நன்கொடைகளை (Benevolences) அவர்கள் குடிகளிடம் வசூலிக்கலாம். இம்முறைகளை எல்லாம் டியூடர் மன்னர்கள் கையாண்டார்கள். அவர்களைப்போல் தாமும் ஏன் நடந்துகொள்ளக்கூடாது என ஜேம்ஸ் எண்ணினார். ஆனால், சூழ்நிலை மாறிவிட்டதை அவர் அறியவில்லை.

### பேட் வழக்கு (Bate's Case), இடுவரி (Imposition, 1606—1608)

1606ஆம் ஆண்டில் பாராளுமன்றத்தின் அனுமதியின்றி ஜேம்ஸ் இறக்குமதிப் பொருள்கள் மீது ஓர் அந்தருக்கு ஐந்து ஷில்லிங்கு வீதம் ஒரு காப்பு வரியைப் (Tariff) போட்டார். ஏற்கெனவே இருந்த வரியோடு சேர்த்து அதிகமாக வசூலிக்கப் பட்டதால் அது இடுவரி எனப் பெயர் பெறுகிறது. அதனால், வணிகர்கள் துன்புற்றனர். லெவாண்ட் கம்பெனியைச் சேர்ந்த (Levant Company) ஜான்பேட் (John Bates) என்ற வணிகர் மேற்சொன்ன

அதிகப்படி வரியைக் கொடுக்க மறுத்தார். பாராளுமன்றத்தின் அனுமதியின்றிப் போடப்பட்ட அவ்வரி சட்ட விரோதமானது என்று அவர் வாதித்தார். எக்ஸெக்கர் நீதிமன்றத்தில் (Exchequer Court) அவர்மேல் ஒரு வழக்குத் தொடரப்பட்டது. நீதிபதிகள் மன்னனுக்குச் சாதகமாகத் தீர்ப்பு வழங்கினர். நாட்டின் துறைமுகங்கள் மன்னனுக்குச் சொந்தமான வாயில்கள் என்றும், அவ்வாயில்கள் வழி நாட்டினுள் நுழையும் பொருள்களைக் கட்டுப்படுத்தி நாட்டின் உள்நாட்டு வியாபாரத்தைக் காப்பாற்றுவது மன்னனின் கடமை என்றும் அவர்கள் கூறினர். அவ்விதம் அதிகப்படியான சுங்கவரி போடும் முறை டியூடர் மன்னர்கள் காலத்திலிருந்தே இருந்து வருவதையும் அந்நீதிபதிகள் முன் நிகழ்வு ஆதாரங்களாக (Precedents) எடுத்துக் காட்டினர். இவற்றைப் பக்கபலமாகக் கொண்டு அரசன் மேலும் பல வரிகளைப் போட்டு 'வரி விகிதப் புத்தகம், (Book of Rates) என்ற நூலையும் வெளியிட்டார். 1608ஆம் ஆண்டில் பாராளுமன்றம் இந்த வழக்கின் உட்பொருளை அறியாமல் வாளாவிருந்துவிட்டது. ஆனால், 1610ஆம் ஆண்டுக் கூடிய பாராளுமன்றக் கூட்டம், நீதிபதிகள் பேட் வழக்கில் கூறிய தீர்ப்பைக் கண்டித்தது. பொருளாதாரத் துறையில் கட்டுப்பாடுகளை விதிக்க இயலவில்லை எனின் மன்னனை வேறு எந்த வகையிலும் கட்டுப்படுத்துதல் முடியாதென்பதைப் பாராளுமன்றம் உணர்ந்ததன் விளைவே அக்கண்டனமாகும். பாராளுமன்றத்தின் அனுமதி இன்றிச் சுங்கவரிகள் (Duties) போடுதல் சட்ட விரோதமெனப் பாராளுமன்றம் விவாதித்தது. முதலாம் எட்வர்ட் காலத்து ஏற்பட்ட சட்டங்களைப் பாராளுமன்றத்தார் முன் நிகழ்வு ஆதாரங்களாக எடுத்துக்காட்டினர் மன்னரது நீதிபதிகள் டியூடர்களின் செய்கைகளை மேற்கோள்களாகக் காட்டினர். இப்படி இருசாராரும் வீண் வாதம் செய்தனரேயன்றி ஒரு முடிவுக்கும் வரவில்லை.

## பெரும் ஒப்பந்தம் (Great Contract, 1610—1611)

இங்ஙனம் மன்னருக்கும் பாராளுமன்றத்துக்கும் பூசல் நிகழ்ந்து வருகையில் ஸாலிஸ்பரி பிரபு (Lord Salisbury) ஒரு சமாதான முயற்சியிலீடுபட்டார். நிலமானிய முறை வரிகளை எல்லாம் அரசன் வசூலிப்பதை நிறுத்திவிட வேண்டுமென்றும் அதற்குப் பதிலாக, 2,00,000 பவுன்களை ஒரு மொத்தத் தொகையாகப் பாராளுமன்றம் மன்னருக்கு வழங்கிவிட வேண்டுமென்றும், அவர் ஒரு திட்டம் கொணர்ந்தார். அதற்கான 'பெரும் ஒப்பந்தம்' என்ற பத்திரமும் தயாரிக்கப்பட்டது. ஆனால், இவ்வொப்பந்தம் அமலுக்கு வரவில்லை. அதற்குள் பாராளுமன்றத்திற்கும் அரசனுக்கும் மனக்கசப்பு அதிகமாகிவிட்டது. அடக்கப்பட்ட 300 பியூரிட்டன்களை மன்னர் மன்னிக்கவேண்டுமென்றும், கத்தோலிக்கத்

தண்டனைச் சட்டங்களை இன்னும் கடுமையாக்க வேண்டுமெனவும், பாராளுமன்றம் அரசரை வற்புறுத்தியது. இவை யாவும் ஜேம்ஸுக்கு ஆத்திரத்தை மூட்டின. பாராளுமன்றம் 1611ஆம் ஆண்டு ஆரம்பத்தில் கலைக்கப்பட்டது.

## பயனற்ற பாராளுமன்றம் (Addled Parliament, 1614)

1614ஆம் ஆண்டு ஜேம்ஸ் ஒரு பாராளுமன்றத்தைக் கூட்டினார். இப்பாராளுமன்றத் தேர்தலில் அரசரும் செசில் பிரபுவும் பெரிதும் தலையிட்டனர். தங்களுக்கு வேண்டிய ஆட்களையே தேர்ந்தெடுக்க எல்லா முயற்சிகளையும் அவர்கள் செய்தனர். இதையறிந்த மக்கள் விழிப்புற்றனர். அரசரது ஆட்களையெல்லாம் அவர்கள் வேண்டுமென்றே தோற்கடித்தனர். தேர்ந்தெடுக்கப் பட்டவர்கள் அரசரது யதேச்சாதிகாரச் செயல்களைக் கண்டித் தனர். தனியுரிமை விற்றல், இடுவரி போடல் போன்றவைகளை மன்னர் கைவிட வேண்டுமென அன்னார் கூறினர். இந்தப் பாராளுமன்றமானது இரண்டு மாதங்கள் நடைபெற்றது. தன் குறைகள் நீக்கப்படுமுன் எந்தச் சட்டத்தையும் அது இயற்ற மறுத்ததால் கோபமுற்ற ஜேம்ஸ் அதைக் கலைத்தார். ஒரு சட்டத்தைக்கூட நிறைவேற்றுமலேயே அப்பாராளுமன்றம் கலைந்தது.

## அரசரது நண்பர்களின் ஆட்சி (Rule of Favourites)

பாராளுமன்றம் கலைக்கப்பட்டபின் அரசர் தமது அன்புக்குப் பாத்திரமான சகாக்களைக் கொண்டே ஆட்சி புரிந்தார். தனியுரிமைகளை விற்பதாலும், இடுவரிகளாலும், நன்கொடைகளாலுமே அவர் பொருள் திரட்டினர். 1612ஆம் ஆண்டு வரை ஜேம்ஸ் ஓரளவு நிதான புத்தியுடன் நடந்துகொண்டார். அது வரை அவருக்கு அரசியல் காரியங்களில் ஆலோசனை கூறி வந்தவர் செசில் பிரபுவாவர். அவர் எலிஸபெத் இராணியார் காலத்தி லிருந்தே அரசியலில் பெரும் பதவி வகித்துவந்த ஓர் அரசியல் மூதறிஞர் ஆவர். எலிஸபெத்தின் கொள்கைகளை அவர் அப்படியே பின்பற்றினர். பியூரிட்டன்களைக் கொஞ்சம் தூரத்திலேயே அவர் வைத்திருந்தார், அதே சமயம் கத்தோலிக்க நாடுகளின் வலைகளிலும் இங்கிலாந்து சிக்காமல் பார்த்துக்கொண்டார். ஒரு வித இடைநிலைக் கொள்கை மூலம் (Via Media Policy) அவர் மன்னருக்கும் மக்களுக்கும் சச்சரவு வலுக்காமல் பார்த்துக் கொண்டார், ஆனல், ஜேம்ஸின் துரதிர்ஷ்டமோ என்னவோ 1612-ல் செசில் பிரபு இறந்துபோனர்.

செசில் பிரபுவுக்குப் பின் ஜேம்ஸ் தமது சகாக்களைத் தம் பிரியம் போல் திரட்டிக்கொண்டார். கட்டவிழ்ந்த மாடு போல் அவர் மனம் போனபடி நடக்க ஆரம்பித்தார்.

'இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பா ரிலானும் கெடும்'

எனும் குறள் மொழிக்கிணங்க ஜேம்ஸ் தம்மைத் தட்டிக்கேட்க ஆளின்றித் தப்பான வழிகளில் தைரியமாக இறங்கலானார். அவருக்கு ஓரளவு அறிவுரை சொல்லக் கூடியவர் பேக்கன் (Bacon) எனும் பேரறிஞர் ஒருவரே. அவர் சமயப் பொறையின் (Toleration) அவசியத்தை ஜேம்ஸுக்குக் கூறினார். ஆனால், அவரது வார்த்தைகள் ஜேம்ஸுக்குச் செவிடன் காதில் ஊதிய சங்காய் முடிந்தன. ராலே (Raleigh) போன்ற துணிச்சல் மிக்கவர்களையும் ஜேம்ஸுக்குப் பிடிக்கவில்லை. காப்ஹாம் (Cobham) என்பவர் அர்பெல்லா ஸ்டூவர்ட் (Arbella Stuart) என்பவரை இங்கிலாந்தின் அரசியாக்க முயற்சி செய்தபோது அதற்கு உடந்தையாயிருந்ததாக சர் வால்டர் ராலே பொய்யாகக் குற்றம்சாட்டப்பட்டுச் சிறையிடப்பட்டார். சிறையில் அம்மாவீரர் பல்லாண்டுகள் துன்புற்றார். அங்குதான் அவர் தமது ஒப்புயர்வற்ற 'உலக யாத்திரை' என்னும் நூலை எழுதினார். பார்வைக்கு இனிய தோற்றமுடைய இளைஞர்களையே ஜேம்ஸ் தமது நண்பர்களாகத் தேர்ந்தெடுத்துக் கொண்டார். அவர்கள் புறத்தோற்றத்துக்கேற்ற அறிவு இல்லாதவர்களாயிருந்தமையால், ஜேம்ஸ் சொன்னதற்கெல்லாம் தலையாட்டி பொம்மைகளாகவே இருந்தனரன்றி அவரது தவறுகளை இடித்துக் காட்டக்கூடிய மனவுறுதி படைத்தவர்களாயில்லை.

இங்ஙனம் மன்னரது ஆதரவைப் பெற்றவர்களில் முதன்மையானவர் கார் (Carr) என்பவராவர். அவர் ஓர் சாதாரணக் குடும்பத்தில் பிறந்தவர். எனினும் எஸ்ஸெக்ஸ் பிரபுவின் மனைவியை மணந்துகொண்டதால் அவர் நிலை யுயர்ந்தது. எஸ்ஸெக்ஸ் பிரபுவின் வமிசம் கத்தோலிக்கப் பற்று மிகுந்ததாதலால் கார் பிரபுவின் காலத்துக் கத்தோலிக்கர்களுக்குச் சலுகை ஏற்பட்டது. கார் பிரபுவுக்கு 'சாமர்செட் எர்ல்' எனும் பட்டம் வழங்கப்பட்டது. ஆனால், சர் தாமஸ் ஓவர்பரி (Sir Thomas Overbury) என்பவரது கொலைவழக்கில் அவரும் அவரது சீமாட்டியும் சம்பந்தப்பட்டிருப்பதாக நிரூபிக்கப்பட்டது. இதனாலும் வேறு பல புகார்களாலும் கார் பிரபு பதவியிலிருந்து நீக்கப்பட்டார்.

கார் பிரபுவுக்குப் பின் ஜேம்ஸின் ஆதரவைப் பெற்றவர் ஜார்ஜ் வில்லியர்ஸ் (George Williers) என்பவராவர். அவர் நல்ல அழகு பொருந்தியவர். அதோடு திறமையுமுள்ளவர். பக்கிங்ஹாம்

கோமகன் (Duke of Buckingham) என்ற பட்டத்துடன் அவர் எல்லா அரசியல் வினைகளையும் அயராது ஆற்றிவந்தார். அரசியலில் ஒரு தனியுரிமையோடுதான் அவர் அதிகாரம் செலுத்தி வந்தார். அவரது கடைக்கண் நோக்கைப் பெருதவர்கள் அரசியலில் முன்னேற முடியாது என்ற அளவுக்கு அவரது செல்வாக்கு வளர்ந்திருந்தது.

### ஜேம்ஸின் வெளிநாட்டுக் கொள்கை

ஜேம்ஸ் தனது வெளிநாட்டுக் கொள்கையைத் தனது சொந்த விருப்பு வெறுப்புகளுக்கேற்பவே வகுத்துக்கொண்டார். அவரது குணநலன்களில் தலைசிறந்தது அமைதியில் அவருக்கிருந்த ஆழ்ந்த விருப்பமேயாகும். இந்த அமைதி விருப்பமே அவரது அயல்நாட்டுக் கொள்கைகள் யாவற்றினும் ஊடுருவி நிற்பதை நாம் காண்கிறோம். தம்மை 'அமைதிகாண் அரசர்' (King of Peace) என அழைத்துக்கொள்வதில் ஜேம்ஸ் பெரிதும் பெருமை பாராட்டினார். பொது அமைதிக்காகவே அவர் தமது வாழ்நாளெல்லாம் உழைத்தார். அதைக் கண்ட சிலர் அவரை ஓர் கோழை என்றும் இரத்தத்தைக் காண அஞ்சுபவர் என்றும் பழி தூற்றினர். ஆனால், உண்மையிலேயே ஐரோப்பிய அமைதியை அவர் விழைந்தார் என்பதும், அதை ஏற்படுத்துவதையே தமது வாழ்வின் பெருங் குறிக்கோளாகக் கொண்டிருந்தாரென்பதையும் அவரது செயல்கள் நன்கு மெய்ப்பிக்கின்றன.

### ஸ்பெயினோடு உறவு

ஐரோப்பாவில் அமைதி காணவேண்டுமென்ற அவரது பேராவலை நிறைவேற்றுவான் கருதி அவர் முதன் முதலில் ஸ்பெயினோடு நட்பு பாராட்ட எண்ணினார். ஸ்பெயினுக்கும் இங்கிலாந்துக்கும் எலிஸபெத் இராணியார் காலத்துத் தொடங்கிய போராட்டம் ஓய்ந்தபாடில்லை. 1587ஆம் ஆண்டிலிருந்து அது தொடர்ந்து நடைபெற்றுக்கொண்டு வந்தது. எனினும், வெற்றியோ, தோல்வியோ யாருக்கும் நிச்சயமாய் ஏற்படவில்லை. 1598ஆம் ஆண்டில் ஏற்பட்ட உடன்பாட்டின்படி, டச்சு ஐக்கிய மாகாணங்களுக்கும் இங்கிலாந்துக்கும் ஸ்பெயினுக்கு விரோதமாக நட்புறவு ஏற்பட்டிருந்தது. ஆனால், டச்சுக்காரரின் சுதந்திரத்துக்காகக் குறிப்பிட்ட எந்த உதவியையும் செய்வதாக இங்கிலாந்து வாக்குறுதி ஒன்றும் அளிக்கவில்லை. எனினும், ஆங்கிலப் படை ஒன்றை எலிஸபெத் இராணியார் டச்சு நாட்டில் வைத்திருந்தார். அப் படையைச் சேர்ந்தவர்கள் நாளடைவில் டச்சுப் படையிலேயே ஓர் உறுப்பாகச் சேர்ந்துகொண்டார்கள். அவர்களுக்குச் சேரவேண்டிய சம்பளத்தையும் டச்சுக்காரரே வழங்க ஒப்புக்

கொண்டனர். வேற்றார் உதவியின்றித் தங்களைத் தாங்களே காத்துக்கொள்ளும் நிலையை டச்சுக்காரர் எய்திவிட்டனர். மேலும், இங்கிலாந்திடமிருந்து பெற்ற பெருங்கடனைத் (800,000 £) திருப்பிக் கொடுப்பதாகவும் டச்சுக்காரர் வாக்களித்தனர். அக் கடனுக்குப் பிணையமாக ஃப்ளஷிங் (Flushing), ப்ரில் (Brill) ஆகிய நகரங்களையும் அவர்கள் ஆங்கிலேயர்களுக்குத் தந்தனர். இந்த நிலையில், ஆங்கிலேயர் இனியும் அவர்களுக்கு ஸ்பெயினுக்கு விரோதமாக உதவிசெய்ய வேண்டுவது அவசியமில்லை என்று பலரும் உணர்ந்தனர். ஜேம்ஸ் டச்சுக்காரர்களைப் பெரிதும் வெறுத்தார். அரசர்களின் தெய்வீக உரிமைக் கொள்கையில் நம்பிக்கை கொண்டிருந்த அவருக்கு, தங்களுடைய அரச ரையே எதிர்த்துப் போரிட்ட டச்சுக்காரர்கள் வெறுக்கத்தக்க கலகக் காரர்களாகவே தென்பட்டனர். சட்டப்படி அமைந்த ஓர் அரசரை எதிர்க்கும் கலகக்காரர்களுக்குப் பரிந்துகொண்டு ஸ்பெயினை ஏன் பகைத்துக்கொள்ள வேண்டும் என அவர் எண்ணத் தொடங்கினார். மற்றும் ஸ்பானியர்களின் அயர்லாந்துப் படையெடுப்பு ஒடுக்கப்பட்ட பின்பு, அவர்களோடு விரோதம் பாராட்டத்தக்க காரணம் ஒன்றும் இருப்பதாக ஜேம்சுக்குத் தோன்றவில்லை. தான் முன்பு மன்னராயிருந்த ஸ்காட்லாந்து ஆதியிலிருந்தே ஸ்பெயின் இங்கிலாந்து போராட்டத்தில் கலந்து கொள்ளவில்லையாதலால் தனக்கும் ஸ்பெயினுக்கும் போர் என்றுமே இருந்ததாக அவர் கருதவில்லை. எனவே, அவர் ஸ்பெயினுக்கு விரோதமாக நடைபெற்றுவந்த போர்களை எல்லாம் உடனே நிறுத்தும்படி கட்டளையொன்றைப் பிறப்பித்தார். இரு நாடுகளுக்குமிடையே சமாதானப் பேச்சுவார்த்தைகள் 1604ஆம் ஆண்டில் தொடங்கின. அவற்றின்போது இரு நாடுகளின் பிரதி நிதிகளுக்கும் பலத்த வாக்குவாதம் நிகழ்ந்தது. டச்சுக்காரர்களைக் கலகக்காரர்களென்று அறிவிக்கவோ அன்றி அவர்களுடன் இருந்துவந்த தொடர்புகளை முறித்துக்கொள்ளவோ ஆங்கிலப் பிரதிநிதிகள் ஒப்புக்கொள்ள மறுத்தனர். ஏனெனில், டச்சுக்காரர் கள் ஆங்கிலேயர்களுக்குக் கடன்பட்டிருந்தனர். அக் கடன் அடைபடும்வரை இரு நாடுகளும் பிரிவதென்பது முடியாதகாரியமா யிருந்தது. அதோடு ஆங்கிலேயர் டச்சுக்காரரைக் கைவிட் டால் அவர்கள் வேறோர் நாட்டின் உதவியை நாடக்கூடும். அது இங்கிலாந்துக்கும் ஸ்பெயினுக்குமே ஆபத்தாக முடியக்கூடும் என ஆங்கிலப் பிரதிநிதிகள் அஞ்சினர். வியாபார உரிமைகள் பற்றியும் வழக்குகள் வளர்ந்தன. ஸ்பெயினுக்குச் சொந்தமான நாடுகள் யாவற்றோடும் வியாபாரம் செய்யும் உரிமை இங்கிலாந் துக்கு உண்டு என்றும், இறைவனால் படைக்கப்பட்ட கடல் அனைவர்க்கும் பொது என்றும், ஸ்பெயின் அதில் தனியுரிமை

கொண்டாடுதல் அடாது என்றும் செசில் பிரபு எனும் அமைச்சர் வாதாடினர். தனது குடிமக்களுக்குக்கூட அத்தகைய உரிமை களைத் தான் தரமுடியாது என்று ஸ்பெயின் மன்னர் கூறிவிட்டார். எனவே, பொதுவாக ஆங்கிலேயர் பலரும் ஸ்பெயினேடு போர் நடத்துவதையே ஆதரித்தனர். போர் நடைபெறுவதால், பலருக்கு அதனுல் லாபமுண்டு என்பதும் நாட்டின செல்வம் வளரும் என்பதும் அவர்களது கருத்தாக இருந்தது. எனினும், ஜேம்ஸின் அமைதிக் கொள்கையை அனைவரும் ஏற்றனர். ஸ்பெயினுக்கும் இங்கிலாந்துக்கும் சமரச உடன்பாடு ஏற்பட்டது. அதன்படி டச்சுக்காரருக்கு உதவி செய்யும் உரிமையையும், ஸ்பெயினுக்குச் சொந்தமான குடியேற்று நாடுகளுடன் வியாபாரம் செய்யும் உரிமை யையும் ஜேம்ஸ் பெற்றர். எனவே, அவர் அதைப் பெரியதோர் இராஜதந்திர வெற்றியாகக் கருதிப் பெருமை அடைந்தார். பேச்சு வார்த்தைகள் நடத்துவதில் தனக்கு நிகர் எவருமில்லை என்றும், எப்படிப்பட்ட சிக்கலையும் தான் அமைதியான பேச்சுவார்த்தைகள் மூலம் தீர்த்துவைக்க முடியும் என்றும் அவர் மார்தட்டினர். இப்படிப்பட்ட திறமையில் அவருக்கிருந்த நம்பிக்கையினுலேயே அவர் ஐரோப்பிய அமைதியைக் காக்கப் பாடுபட்டாரேயன்றி வெறும் கோழைத்தனத்தினுலன்று என்பது ஈண்டு நன்கு நினைவிற் பதிக்கற்பாற்று.

ஸ்பெயினேடு ஏற்பட்ட இவ்வுடன்பாட்டை மக்கள் பரவ லாகத் தூற்றிய வண்ணமிருந்தனர். ஏனெனில், போர்க்காலத்தில் தான் நாடு பலவகையிலும் முன்னேறுகிறது என்பது அவர்கள் கருத்து. போர்க்காலத்தே ஒரு சிலர் லாபமடைந்தனர் என்பது உண்மையேயாயினும், அரசாங்கம் பெரிதும் நஷ்டமடைந்தது என்பதை அவர்கள் அறியவில்லை. மற்றும் வியாபார உரிமை களின் காரணமாக ஸ்பானியர்கள்மீது ஆங்கிலேயருக்கிருந்த பகைமை வளர்ந்ததேயன்றிக் குறையவில்லை. ஆங்கிலக் கப்பல்கள் பலவற்றை ஸ்பானியர்கள் கைப்பற்றிச் சோதனை செய்தனர். டச்சுக்காரர்கள் பண்டங்களை ஆங்கிலக் கப்பல்கள் ஏற்றிச் செல்லுவதாகக் கூறியும், கொள்ளைக் கப்பல்கள் என்று கூறியும், யூதர்கள் துருக்கியர்களோடு அவை வியாபாரம் செய்வதாகக் கூறியும், பலவகையிலும் ஆங்கிலக் கப்பல்களும், கப்பல் சிப்பந்தி களும் பல இன்னல்களுக்கு ஆளாக்கப்பட்டனர். அவைகளை ஆங்கில வியாபாரிகள் ஜேம்ஸிடம் கூறி முறையிட்டனர். ஸ்பெயின்மீது போர்தொடுக்கவேண்டுமென்று பாராளுமன்றம் மன்னரை வேண்டிக்கொண்டது. ஸ்பெயினேடு போர் தொடுப் பதா கூடாதா என்பதைத் தீர்மானிக்கும் சிறப்பதிகாரம் மன்ன ரைச் சார்ந்ததே ஒழிய அதில் தலையிடும் அதிகாரம் பாராளுமன் றத்துக்கில்லை என்பதை அமைச்சர் சாலிஸ்பரி பிரபு பல மேற்

கோள்களுடன் எடுத்துக் காட்டினர். இருப்பினும் ஸ்பெயின்மீது குறை கூறுதல் என்பது ஓயவில்லை. கடைசியில் காண்டோமர் (Gondomor) என்ற ஸ்பானிய தூதுவர் இங்கிலாந்துக்கு வந்த பின்னர்தான் இக்குறைகூறுதல் சற்று நின்றது. ஸ்பானிய இளவரசியை ஜேம்ஸின் மகனுக்கு மணமுடிக்கப் பேச்சு வார்த்தை தொடங்கியதால் ஏனைய பிரச்சினைகளெல்லாம் ஓரளவு ஒத்திப் போடப்பட்டன

இவ்வமயம், ஜேம்சுக்கு விரோதமாக அரபெல்லா ஸ்டூவர்ட் இளவரசியை அரியணை ஏற்ற சதி ஒன்று செய்யப்படுவதாக ஒரு வதந்தி கிளம்பியது அதில் சம்பந்தப்பட்டதாக ஐயுறப் பெற்றவர்கள் யாவரும் சிறைசெய்யப்பட்டார்கள். அவர்களில் ஒருவர் சர் வால்ட்டர் ராலே எனும் துணிகரமிக்க மாலுமியாவர். உண்மையில் அவர் ஓர் நிரபராதி. அவர்மீது சுமத்தப்பட்ட குற்றத்துக்குச் சரியான ஆதாரமெதுவுமில்லை எனவே, அவர் மீது விதிக்கப்பட்ட மரண தண்டனை நிறைவேற்றப்படாமல் ஒத்திப்போடப்பட்டுக் கொண்டே வந்தது. சிறையில் ராலே, அடைபட்டு வருந்தினர். அச்சமயத்தில்தான் அவர் தமது ஒப்புயர்வற்ற உலக வரலாற்றை எழுதினர்.

சாமர்செட் பிரபுவுக்குப்பின் பக்கிங்ஹாம் கோமகன் மன்னரின் அமைச்சரானபொழுது ஸ்பெயினுக்கு விரோதமானவர்களின் செல்வாக்கு அதிகரித்தது. ஸ்பெயினுக்கு விரோதமாக ஏதாவது செய்யவேண்டுமென்ற எண்ணத்தினல் உந்தப்பட்டு அவர் ஜேம்சைத் தூண்டி ராலேயை விடுவித்து ஸ்பெயினின் குடியேற்ற நாடுகள்மீது அவரை ஏவிவிட்டார் ஸ்பெயினுக்குப் போட்டியாக கயானு (Guiana) என்ற பிரதேசத்தை ராலே தென் அமெரிக்காவில் குடியேற்றம் செய்வதாக ஒப்புக்கொண்டார். கொஞ்ச நாட்களில் பக்கிங்ஹாமின் மனம் மாறிவிட்டது. ஸ்பானிய திருமணத்தை அவரும் ஆதரிக்க ஆரம்பித்தார். எனவே, ராலே தென் அமெரிக்காவுக்குப் போகின்றபோது ஸ்பானியர்களுக்கு உட்பட்ட நாடுகளையோ குடிமக்களையோ ஒரு சிறிதும் தாக்கக் கூடாது என்ற கண்டிப்பான நிபந்தனையை பக்கிங்ஹாம் அவர் மீது விதித்தார். அது நடவாத காரியம் என்று தெரிந்த போதிலும் ராலே அமெரிக்காவுக்குப் புறப்பட்டார். சிறையில் வாடுவதைவிட ஒரு துணிகரச் செயலில் ஈடுபடுவது மேல் என நினைத்து அவர் அங்ஙனம் செய்தார். அவர் போன கப்பலில் பொறாமைக்காரர் பலர் அவருடன் சென்றனர். அவர்கள்மூலம் அவர் வருவதை ஸ்பானியர்கள் எப்படியோ அறிந்துவிட்டனர். எனவே, ஓரிஞகோ நதியின் முகத்துவாரத்துள் ராலே நுழைந்த போது ஸ்பானியப் படை ஒன்று அவரை எதிர்த்தது. நடைபெற்ற

போரில் ஆங்கிலேயர் வெற்றிபெற்று நதி வழியே மேலே சென்றனர். ஆனால், அவர்கள் எதிர்பார்த்தபடி தங்கம் எதுவும் அங்குக் கிடைக்கவில்லை. ஸ்பானியர்கள் பெரும்படையுடன் வந்து அவர்களைத் துரத்திவிட்டனர். இருதரப்பாருக்குமிடையே நடைபெற்ற போரில் ராலேயின் மகன் இறந்துபட்டான். ராலே வெறுங் கையோடு நாடு திரும்பினார். அவர்மீது பலவிதமான குற்றங்களை ஸ்பெயின் மன்னரும் கான்டோமர் என்ற தூதரும் சுமத்தினர். அவர்மீது தேசத்துரோகக் குற்றம் அநியாயமாகச் சாட்டப்பட்டது. ஸ்பெயினை மகிழ்விக்கவேண்டி ஜேம்ஸ் ராலேயைச் சிரச்சேதம் செய்தார். இக்கொடிய செயலைக் கண்டு பலரும் ஜேம்ஸை வெறுத்தனர்.

## டச்சுக்காரரும் இங்கிலாந்தும்

ஜேம்ஸ் காலத்தில் டச்சுக்காரருக்கும் ஆங்கிலேயர்களுக்கும் பகைமை நாளுக்கு நாள் வளர்ந்தது. வியாபாரத் துறையில் இரு சாராருக்கும் பலத்த போட்டி ஏற்பட்டது. கிரீன்லாந்துக்கருகில் திமிங்கில வேட்டையாடும் உரிமை யாருக்குரியது என்பது பற்றியும், வடகடலில் ஹெர்ரிங் மீன்களைப் பிடிக்கும் உரிமை பற்றியும் அவர்களிடையே வழக்குகள் கிளம்பின. ஆங்கிலக் கடற்கரைக்கருகே மீன் பிடிப்போர் யாராயிருப்பினும் அரசரின் அனுமதி பெற்றாகவேண்டும் என ஜேம்ஸ் ஓர் கட்டளை பிறப்பித்தார். இதை டச்சுக்காரர் ஏற்றுக்கொள்ள மறுத்தனர். காற்றையும் வானத்தையும் போலக் கடலும் யாவர்க்கும் பொது என அவர்கள் வாதாடினர். நாளடைவில் இந்த வழக்கில் இருதரப் பாரும் உற்சாகம் இழந்தனர். ஆங்கிலேயருக்குக் கொடுக்க வேண்டிய கடனில் 215,000 பவுன்களைக் கொடுத்து டச்சுக் காரர் தங்களது பிணைய நகரங்களை மீண்டும் பெற்றனர். எனினும், பொருளாதாரத்துறையில் இருநாடுகளும் மேலும் மேலும் போட்டியி லிறங்கின. கிழக்கிந்தியத் தீவுகளோடு வியாபாரம் செய்து வந்த டச்சு ஐக்கியக் கம்பெனியோடு (Uuited Company) ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனி (East India Company) போட்டி போட ஆரம்பித்தது. வாசனைத் திரவிய வாணிபத்தில் தனக்கும் பங்கு வேண்டுமென ஆங்கிலேயர் கேட்டனர். அப்படியானால் ஸ்பெயினுக்கு எதிராகப் போரிட வேண்டிப் படை ஒன்றை இங்கிலாந்து இந்தோனீஷியாவில் வைக்கவேண்டுமென டச்சுக்காரர் கூறினர், 1619ஆம் ஆண்டில் இரு நாடுகளுக்கும் ஓர் உடன்பாடு ஏற்பட்டது. கிழக்கிந்திய வியாபாரத்தை இரு நாடுகளும் பகிர்ந்துகொள்வதென்றும், இரு நாடுகளின் படை ஒன்று படேவியாவில் வைக்கப்பட வேண்டுமென்றும் இரு நாட்டாரும் ஒப்புக் கொண்டனர். இருப்பினும் டச்சுக்காரர் ஆங்கிலேயரை வெறுத்

தனர். அவர்களை விரட்ட வேண்டி அவர்கள் வன்முறையிலிறங்க ஆரம்பித்தனர். கோயென் (Coen) என்ற டச்சு கவர்னரின் திட்டப்படி, டச்சுக்காரர் பத்து ஆங்கிலேயர்களை அம்பாய்னு (Amboyna) என்னுமிடத்தில் கோரமாகக் கொலை செய்தனர். இதன் பின்னர் ஆங்கிலேயர் மனமுடைந்து, கிழக்கிந்தியத் தீவுகளைக் கைவிட்டு, இந்தியாவின்மீது தங்கள் முழு கவனத்தையும் செலுத்த ஆரம்பித்தனர்.

### ஐரோப்பிய அமைதிக் காவலர் ஜேம்ஸ்

ஐரோப்பாவில் கத்தோலிக்க நாடுகளும், பிராடெஸ்டண்டு நாடுகளும் அடிக்கடி போரிட்டுக்கொண்டு வந்தன. ஆக்ஸ்பர்க் (Augsburg) உடன்பாட்டுக்குப்பின் சமயப் பூசல்கள் ஜெர்மனியில் ஓய்ந்ததுபோல் தென்பட்டது. பேரரசின்கீழ் ஆண்ட சிற்றரசர்கள் தத்தம் பிரியம்போல் தங்களது நாட்டின் சமயத்தை வகுத்துக் கொள்ளும் உரிமையை அவ்வுடன்பாடு நல்கியது. எனினும், விரைவிலேயே கத்தோலிக்க மன்னர்களான ஸ்பெயின் மன்னரும், ஸ்பெயின் பேரரசரும் சேர்ந்துகொண்டு ஐரோப்பாவில் கத்தோலிக்க ஹாப்ஸ்பர்க் குல ஆதிக்கத்தை நிலைநாட்ட முயற்சித்தனர். இதையறிந்த ஃபிரெஞ்சு மன்னர் நான்காம் ஹென்றி, அவர் கத்தோலிக்க நாட்டின் தலைவராயிருந்தும்கூட, ஹாப்ஸ்பர்க் குலத்தை நசுக்க வேண்டி, அவைகளுக்கெதிராக, டச்சுக் காரர்கள், ஜெர்மானிய பிராடெஸ்டண்டு சிற்றரசர்கள், ஆங்கில அரசர் முதலாம் ஜேம்ஸ் ஆகியோர்கள் அடங்கிய ஓர் பெருங் கூட்டுறவைத் (Grand Alliance) தோற்றுவித்தார். ஃபிரெஞ்சு போர்பென் (Bourbon) குடும்பத்தை மேம்படுத்த அவர் முயற்சித்தார். மீண்டும் கத்தோலிக்க நாடுகளும், பிராடஸ்டெண்டு நாடுகளும் போர்க்களத்தில் இறங்கும்போல் தோன்றிற்று. இச் சமயத்தில் நான்காம் ஹென்றி ஓர் கத்தோலிக்க மதவெறியனின் கத்திக்கு இரையாகி மாண்டார்.

இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு ஜேம்ஸ் தமது அமைதிக் குறிக்கோளை அடைய எண்ணினார். ஐரோப்பாவின் நடுவராக நின்று கத்தோலிக்க நாடுகளையும் பிராடெஸ்டண்டு நாடுகளையும் சமாதான முறையில் இணைத்துவைக்க விரும்பினார். இவ்வரிய காரியத்தை ஒரு சில திருமண ஏற்பாடுகளால் மட்டுமே சாதித்துவிடலாமென அவர் மனப்பால் குடித்தார். தனது மூத்த மகனுக்கு ஸ்பானிய இளவரசியையும்(கத்தோலிக்கர்) தனது மூத்த மகளுக்கு, பாலடைன் அரசரையும் (பிராடெஸ்டண்டு) மண முடித்துவிட்டால் இரு வேறுபட்ட நாடுகளும் இணைந்துவிடும் என்றும், ஆடும் ஓநாயும் ஒரே குளத்தில் நீர் அருந்துவதுபோல்

அவை சமாதானமாக வாழுமென்றும் அவர் எண்ணினர். அதன் படியே தனது மகளைப் பாலடைன் தேர்வாளருக்கு மணமுடித்துப் பிராட்டெஸ்டண்டு நாடுகளின் ஆதரவைப் பெற்ருர். ஆனல், ஸ்பெயின் இளவரசியைத் தனது மூத்த மகனுக்கு மணமுடிப்பதில் தான் சங்கடம் ஏற்பட்டது. சாலிஸ்பரி பிரபுவான அமைச்சரும், ஹென்றி என்ற அவரது மூத்த மகனும் இத் திருமணத்தை எதிர்த் தனர். ஆனல், 1612ஆம் ஆண்டுக்குள் அவர்களிருவருமே இறந்துவிட்டனர். அதன் பின்னர், அவர் தமது இரண்டாவது மகனை சார்லஸுக்கும், ஸ்பானிய இளவரசிக்கும் திருமணம் முடிக்கப் பேச்சு வார்த்தைகளைத் தொடங்கினர். ஆனல், ஸ்பானிய அரசரோவெனின், தனது மகளை ஃபிரெஞ்சு மன்னர் 13ஆம் லூயிக்கு மணமுடிக்க விரும்பி நிச்சயார்த்த சடங்கையும் நடத்திவிட்டார். எனவே, ஜேம்ஸ் தமது திட்டத்தில் பாதியைக் கைவிட வேண்டிய கட்டாயம் ஏற்பட்டுவிட்டது.

முப்பதாண்டுப் போர்—ஸ்பெயினேடு நட்பு முரிதல்

1618ஆம் ஆண்டில் ஜெர்மனியில், யாவரும் அஞ்சி எதிர் பார்த்த சமயப்போர் தோன்றியது. அப் போருக்குக் காரணமா யமைந்தவர் அமைதிக் காவலரான ஜேம்ஸின் மருமகப் பிள்ளையே என்பது ஈண்டுக் குறிப்பிடத்தக்கது. பொஹீமியர்கள் ஹஸ் (Huss) என்ற சமயப் புரட்சியாளர் காலத்திலிருந்து பிராட்டெஸ்டண்டு மதத்திலேயே பெரிதும் ஈடுபாடு கொண்டவர்களாய் விளங்கினர். ஆனல், அவர்களை ஆண்டுவந்த மன்னர் கத்தோலிக்க ஜெர்மன் பேரரசரால் நியமிக்கப்பட்ட ஒருவராகவே இருந்துவந்தார். அப்படி ஆண்டுவந்த கத்தோலிக்க மன்னர்களின் வமிசம் 1518ஆம் ஆண்டளவில் சந்ததியின்றி அருகிப்போய்விட்டது. மேத்தியாஸ் (Mathias) என்ற பேரரசர் உடனே தனது ஒன்று விட்ட சகோதரரான ஃபெர்டினண்டு என்பவரைப் பொஹீமிய மன்னராக நியமித்தார். ஆனல், பொஹீமியர்கள் அம்முடிவை ஏற்றுக் கொள்ள மறுத்தது மட்டுமின்றி, பேலடைன் தேர்வாளரான பிரடரிக் என்ற பிராட்டெஸ்டண்டு தலைவரைத் தங்களது மன்னராகத் தேர்ந்தெடுத்துக்கொண்டனர். அத்தகைய தேர்வைப் பிரடரிக்கும் ஒப்புக்கொண்டார். எனவே, பேரரசருக்கும் பிரடரிக் குக்கும் போர் மூண்டது. 1620ஆம் ஆண்டில் வொயிட்ஹில் (White Hill) என்னுமிடத்தில் பிரடரிக் பேரரசர் படைகளின் முன் தோற்று பொஹீமியாவினின்றும் ஓடிவிட்டார். இத் தருணத்தில் ஸ்பானிய மன்னர் ஓர் படையை அனுப்பி பாலடைன் நாட்டைக் கைப்பற்றிக்கொண்டார். எனவே, பிரடரிக் பொஹீமியாவை மட்டுமின்றித் தனது சொந்த நாட்டையும் இழக்கவேண்டி நேர்ந்தது. 'அரசனை நம்பிப் புருஷனைக் கைவிட்டவள்' கதிக்குப்

பிரடரிக் வந்துவிட்டார். தங்க இடமின்றி அவர் ஊர் ஊராக அலைய வேண்டியதாய்ப் போயிற்று. இத்தகைய அவல நிலையைக் கண்ட பின்னும் ஜேம்ஸ் தனது மகளுக்கும் மருமகனுக்கும் முழு மனதோடு உதவி செய்ய முன்வரவில்லை. சட்டப்படிவந்த ஒரு அரசரது இடத்தைப் பிடிக்க முயன்றது பெரிய ஓர் குற்றம் என அவர் தமது மருமகனைக் குறை கூறினார். ஆனால், ஆங்கில மக்களின் அனுதாபமெல்லாம் பிரடரிக்கின் பக்கமே இருந்தது. ஜேம்ஸ் ஸ்பானிய இளவரசியைத் தனது மகனுக்கு மணமுடிக்கும் முயற்சியில் மும்முரமாக ஈடுபட்டார். பாலடைன் நாட்டைத் தன் மருமகனுக்குத் திருப்பிக் கொடுத்துவிடும்படி ஸ்பானிய மன்னரை எவ்வளவோ கேட்டுப் பார்த்தார். ஒன்றும் பயனில்லை. ஸ்பெயின் மீது போர் தொடுக்க வேண்டுமென ஆங்கில மக்கள் கூக்குரலிட்டனர். ஆனால், அதை எல்லாம் காதில் வாங்காமல் ஜேம்ஸ் ஸ்பெயினோடு பேச்சு வார்த்தைகளில் ஈடுபட்டிருந்தார். பாலடைன் நாட்டைத் திருப்பித் தராவிட்டால், ஆங்கிலப் படை ஒன்றை ஜேம்ஸ் ஸ்பெயினுக்குள் அனுப்புவார் என்று தெரிந்திருந்தால் ஸ்பானியர் தம் பிடிவாதத்தைக் கைவிட்டிருப்பர். ஆனால், ஜேம்ஸ் அமைதி விரும்பியாதலால் அங்ஙனம் செய்யமாட்டார் என்று ஸ்பானிய தூதுவர் காண்டோமர் தமது அரசருக்கு எழுதி விட்டார். எனவே, ஜேம்ஸ் பேச்சுவார்த்தைகளைத் தொடர்ந்து நடத்தியும் பயனில்லை. ஆங்கிலத் தொண்டர்கள் பலர் பிரடரிக்கின் உதவிக்குச் சென்றனர். ஆனால், ஆங்கிலப் படை எதுவும் அவருக்கு உதவி செய்யச் செல்லவில்லை.

### ஜேம்ஸின் மூன்றாவது பாராளுமன்றம் (1621) அரசியல் துரோகக் குற்றச் சாட்டு முறை உயிர்ப்பிக்கப்படல் (Revival of Impeachment)

தமது மருமகனுக்கு உதவி செய்ய விரும்பிய ஜேம்ஸுக்குப் பொருள் போதிய அளவு இல்லை. எனவே, அவர் பாராளுமன்றத்தை 1621 ஆம் ஆண்டு கூட்டினார். இப்பாராளுமன்றமானது தனது உரிமைகளை மீண்டும் வற்புறுத்த முனைந்தது. அரசரது அதிகாரிகளை அரசியல் துரோகக் குற்றம் சாட்டி விசாரித்துத் தண்டிக்கும் வழக்கம் பல ஆண்டுகளாகக் கைவிடப்பட்டிருந்தது. அதைப் பாராளுமன்றம் மறுபடியும் அமலுக்குக் கொண்டுவந்தது. தங்கம், வெள்ளிக் கம்பிகள் செய்யும் தொழிலில் தரப்பட்டிருந்த தனியுரிமையைத் (monopoly) தீய வழிகளில் பயன்படுத்தியதற்கும் வேறு பல குற்றங்களுக்கும் சர் கைல்ஸ் மாம்ப் பிசன் (Sir Guiles Mom Peson) என்பவரும் சர் ஃபிரான்ஸிஸ் மிட்ச்சல் (Sir Francis Michell) என்பவரும் அரசியல் துரோகக் குற்றம் சாட்டப்பட்டுச் சிறையிடப்பட்டனர். சர் ஜான் பானுவெட்

(Sir John Bonuet) என்ற நீதிபதியும், சான்ஸலர் பிரபுவான பேக்கனும் (Bacon) லஞ்ச ஊழலுக்காக அரசியல் துரோகக் குற்றம் சாட்டப்பட்டுப் பதவி இழந்தனர். பேரறிஞரான பேக்கன் பொருள் சேர்ப்பதில் பேராசை கொண்டவராயிருந்தார். அக்கால வழக்கப்படி அவர் வழக்கிலீடுபட்டவர்களிடம் பரிசுகளை நிறைய வாங்கினர். எனினும் அதற்காக நீதிக்குப் புறம்பாக அவர் எப்போதும் சென்றவரல்லர். இருப்பினும், அவர் பதவி துறக்க வேண்டியதாயிற்று. இதனல் பாராளுமன்றத்தின் கவுரவம் உயர்ந்தது. இவற்ருலெல்லாம் தன்னம்பிக்கை பெற்ற பாராளு மன்றம் அரசனுடைய வெளி நாட்டுக் கொள்கையைக் கண்டிக்க ஆரம்பித்தது. ஸ்பெயினேடு கொண்டிருந்த நட்பை முரித்துக் கொள்ளவேண்டுமென்றும், ஸ்பெயின் நாட்டு இளவரசியைச் சார்லஸுக்கு மணம் முடிக்கக் கூடாதென்றும், ஸ்பெயினேடு உடனே போர் தொடுக்க வேண்டும் என்றும் பாராளுமன்றம் ஜேம் ஸைக் கேட்டுக்கொண்டது. ஜேம்ஸ் தமது வழக்கமான முறை யில் பாராளுமன்றத்திற்கு ஒரு சொற்பொழிவாற்ற ஆரம்பித்தார். பாராளுமன்றமானது தமது சொந்தக் குடும்ப விஷயங்களிலும் வெளிநாட்டுக் கொள்கைகளிலும் தலையிடுவது தவறு என அவர் கூறினர். அச் சபையின் சிறப்புரிமைகள் யாவும் அவரது கருணை யால் அதற்கு அளிக்கப்பட்டவையேயன்றி வேறில்லை என அவர் அச் சபையினருக்கு நினைவூட்டினர். இதை மறுத்துப் பாராளு மன்றம் ஒரு தீர்மானம் நிறைவேற்றித் தமது எதிர்ப்புத் தீர்மானத்தைப் (Protestation) பாராளுமன்றச் சஞ்சிகையிலும் (Parliamentary Journal) பதிவு செய்தது (1621). இதையறிந்த ஜேம்ஸ் வெகுண்டு அச் சஞ்சிகையைக் கொண்டுவரச் செய்து தம் கையாலேயே அம் மறுப்புரை பதியப்பெற்ற ஏட்டைக் கிழித் தெறிந்தார். அதோடு பாராளுமன்றத்தையும் கலைத்தார்.

அதன்பின் ஜேம்ஸின் அனுமதியுடன் சார்லஸும் பக்கிங் ஹாமும் மாறுவேடத்தில் ஸ்பெயினுக்குச் சென்றனர். நேரில் சென்று ஸ்பானிய இளவரசியை மயக்கித் திருமணத்துக்கு இசையும்படி செய்யவேண்டுமென அவர்கள் திட்டமிட்டிருந் தனர். உள்ளூர ஜேம்ஸும் இத்திட்டத்தை ஆதரித்தார். ஸ்பெயினை அடைந்த பக்கிங்ஹாமும் சார்லஸும் ஏமாந்தனர். இங்கிலாந்திலிருந்த கத்தோலிக்கர்களுக்கு உரிமைகளை வழங்க வாக்குறுதி வந்தாலன்றி அவர்கள் இளவரசியைப் பார்க்கக்கூட முடியாது என ஸ்பெயின் அரசர் கூறிவிட்டார். பக்கிங்ஹாமும் சார்லஸும் இதனல் மனமுடைந்தனர். மேலும் ஸ்பானியர்களின் அநாகரிகத்தைக் கண்டு அவர்களுக்கு ஸ்பெயின்மீது ஒரு வெறுப் புத் தோன்றிற்று. வெறுங்கையோடு அவர்கள் இங்கிலாந்து திரும்பினர். அதைக் கண்ட லண்டன் மக்கள் மனங்குளிர்ந்தனர்.

அவர்களது வருகையை ஒரு திருவிழாப் போன்று அவர்கள் கொண்டாடினர். இதைப் பார்த்த பக்கிங்ஹாம் தமது கொள்கையை மாற்றிக்கொண்டார். ஸ்பெயினுடன் போர் தொடுக்கும்படி ஜேம்ஸைத் தூண்டினுர். போருக்குப் பொருள் திரட்டுவதற்காகப் பாராளுமன்றம் மீண்டும் கூட்டப்பட்டது.

### நான்காம் பாராளுமன்றம் (1624)

ஜேம்ஸ் கூட்டிய பாராளுமன்றங்களுள் இதுவே கடைசியானதாகும். ஸ்பானியத் திருமணம் கைவிடப்பட்டு விட்டதால் பாராளுமன்றம் மன்னனேடு ஒத்துழைத்தது. மூன்று உதவித் தொகைகளை அது மன்னருக்கு வழங்கியது. மிடில் செக்ஸ் எர்ல் லஞ்ச ஊழலுக்காக அரசியல் துரோகக் குற்றம் சாட்டப்பட்டார் (1624). தனியுரிமை வழங்குவதை அப்பாராளுமன்றம் சட்டவிரோதமாக்கியது (1624). புதியனவற்றைப் படைப்பவர்களுக்கு மட்டும் உரிமைக் காப்பு (Patent) வழங்க அது அனுமதியளித்தது. முப்பதாண்டுப் போரில் கலந்துகொள்ள ஒரு படையை அது ஹாலந்துக்குக் கவுண்ட்மேன்ஸ் பெல்ட் என்பார் தலைமையில் அனுப்பியது. ஆனுல், நல்ல உணவின்றி அப்படையினர் வால்ச்சரன் (Walcheran) தீவில் வாடினர். இச்சமயத்தில்தான் ஜேம்ஸ் இறந்தார் (1625).

### ஜேம்ஸின் ஆட்சிக் கால முக்கியத்துவம்

மன்னனுக்கும் பாராளுமன்றத்துக்கும் நடைபெற்ற போராட்டத்தில் ஜேம்ஸின் ஆட்சிக் காலம் ஆரம்ப கட்டத்தை வகிக்கிறது. அவரது காலத்தில் பாராளுமன்றமானது ஒரு சில உரிமைகளைப் பெற்றது. மேலும் பல உரிமைகளைப் பெறுதற்கான போராட்டத்தையும் அது ஆரம்பித்துவைத்துச் சென்றது. (1) 'மன்னனின் தெய்விக உரிமை' 'காப்புரை தாள்' என்ற பத்திரத்தில் கண்டிக்கப்பட்டது. (2) தேர்தல் வழக்குகளைத் தீர்க்கும் உரிமை பாராளுமன்றத்துக்கே உரியதென்பது காட்வின் வழக்கு (Godwin's Case) என்ற வழக்கு விசாரணையில் தீர்ப்பளிக்கப்பட்டது. (3) பாராளுமன்றத்தின் உறுப்பினர்களின் (a) தகுதியைத் தீர்மானிப்பதும், (b) அவர்களை ஏற்றுக்கொள்வதும், (c) மறுப்பதும், பாராளுமன்றத்துக்கு மட்டுமே சொந்தமான சிறப்புரிமை என்பது நிலைநாட்டப்பட்டது. மன்னன் கத்தோலிக்க நாடுகளுடன் உறவு கொள்வதைக் கண்டித்ததின் மூலம் (4) மன்னனின் வெளிநாட்டுக் கொள்கையில் தலையிடவும் பாராளுமன்றத்துக்கு உரிமை உண்டு என்பது வற்புறுத்தப்பட்டது. (5) தனியுரிமைகளை விற்றல், நன்கொடை வாங்கல், இடுவரி போடல், தனிஆணைப் பேரறிவிப்பு வெளியிடல் போன்ற அரசனின் சில முறையற்ற தனிச் சிறப்பதிகாரங்கள் கண்டிக்கப்பட்டன. (6) மேலும் பெரும் பதவிகளில் இருப்போரைப் பாராளுமன்றம் அரசியல்

துரோகக் குற்றம் சாட்டி விசாரிக்கும் உரிமையும் உயிர்ப்பிக்கப் பட்டது. பேக்கன் கூறியபடி, 'நீதிபதிகள் மன்னது அரியணையின் கீழுள்ள பொம்மைச் சிங்கங்களே' என்னும் கூற்று பொய்யாக்கப் பட்டது. சட்ட நிபுணரான கோக் நீதி நிறுவனத்தின் சுதந்திரத்தை (Independence of Judiciary) நிலைநாட்டப் பெரிதும் பாடுபட்டார். பீச்சாம் (Peacham) என்பவர் இராஜத் துரோகக் குற்றத்துக்காக (Treason) விசாரிக்கப்பட்டபோது நீதிபதிகளைத் தனித்தனியே சந்தித்துப் பேச ஜேம்ஸ் கோக்கிடம் அனுமதி கேட்டார். அங்ஙனம் செய்வது நீதிபதிகளின் உரிமைகளைப் பறிப்பதாகும் எனக் கூறி நீதிபதி கோக் ஜேம்ஸுக்கு அனுமதி அளிக்க மறுத்துவிட்டார். மன்னருக்கு விரோதமாக ஏதோ எழுதி வைத்திருந்தாலும் அதை வெளியிடாமையால் பீச்சாம் குற்றமற்றவர் என கோக் தீர்ப்பளித் தார். இரு பதவிகளை ஒரே சமயம் அனுபவிப்பதைப் பற்றிய கம்மென்டாம்ஸ் வழக்கில் (Commandams) ஜேம்ஸ் தலையிட்டுத் தீர்ப்பை ஒத்திப்போடும்படி கேட்டுக்கொண்டார். ஆனால், கோக் அங்ஙனம் செய்வது சட்ட விரோதமெனக் கூறிவிட்டார். (7) அதோடு தனியாணைப் பேரறிவிப்புகள் மூலம் சட்டங்களைத் திருத்தவோ, புதிய சட்டங்களை ஆக்கவோ அரசருக்கு உரிமை யில்லையென அவர் வாதித்தார். மன்னரது யதேச்சாதிகாரத்தை மறுத்த கோக் பதவியினின்றும் நீக்கப்பட்டார் (1616).

இங்ஙனம் பல அரசியல் சிக்கல்கள் ஜேம்ஸின் ஆட்சிக் காலத் தில் கிளம்பின. எல்லாவற்றையும் அவர் ஓரளவு சமாளித்தார் என்றாலும் பிரச்சினைகளுக்கு அவர் ஒரு முடிவு காணவில்லை. கார்டினர் என்ற ஆசிரியர், 'முதலாம் ஜேம்ஸின் ஆட்சிக்காலத்தில் புரட்சி ஒன்றும் ஏற்படாவிடினும் புரட்சிக்கு இட்டுச் செல்லும் ஒரு நிலைமை ஏற்பட்டது. அதாவது ஆளுவோருக்கும் ஆளப்படு வோருக்குமிடையே இருக்க வேண்டிய அனுதாபக் கட்டு தளர்ந்து விட்டது' என்று கூறுவது முற்றிலும் பொருத்தமேயாகும்.

ஜேம்ஸின் மதிப்பீடு (Estimate)

ஜேம்ஸ் உண்மையில் பல நல்ல குறிக்கோள்களை உடையவரா யிருந்தார். ஆனால், பாவம்! குறிக்கோள்களை நல்ல முறையில் கொணரக்கூடிய செயல் திறம்தான் அவருக்கில்லாமல் போய் விட்டது. அதோடு மக்கள் ஆதரவும் அவருக்குக் கிடைக்கவில்லை. அவருக்குப் பின் நிகழ்ந்த இங்கிலாந்தின் எதிர்கால வரலாறு என்னும் உரைகல்லில் அவரது செயல்களை உரைத்துப் பார்க்கும் போதுதான் அவரது குறிக்கோள்கள் எவ்வளவு பெருமை வாய்ந் தவை என்பது நமக்குத் தெற்றெனத் தெரிகிறது. அவர் விரும்பி யவை அனைத்தும் அவருக்குப் பின் நிறைவேறுகின்றன. ஆனால்,

மாறுபட்ட சூழ்நிலையில் மன்னன் தனியே தன்னிச்சைப்படி அடைய விரும்பிய குறிக்கோள்களை மன்னனோடு கூடிய பாராளுமன்றம் அடைகிறது.

இங்கிலாந்தையும் ஸ்காட்லாந்தையும் ஜேம்ஸ் மன்னர் பல வகையிலும் இணைக்க விரும்பினர். முடியவில்லை. ஆனால், ஒரு நூற்றாண்டு கழிந்து பாராளுமன்றம் அதற்கான சட்டத்தை இயற்றியதை நாம் காண்கின்றோம். கப்பற் படை ஒன்றை அமைக்க அவர் அரும்பாடு பட்டார். பலவந்தமாகக் கப்பல்களைத் துறைமுகங்களிலிருந்து கைப்பற்றினர். ஆனால், பிற்காலத்தில் பாராளுமன்றமானது கப்பற்படைச் சட்டத்தையே இயற்றி யுள்ளதை நாமறிவோம். அதே போன்றுதான் நிலைப்படையும் (Standing Army). கலால் வரியைக் (Excise Duty) கொண்டு, 11,000 ஆட்களைக் கொண்ட நிலைப்படையை அமைக்க பக்கிங் ஹாம் முயன்றார். அரசரும் அவரை ஆதரித்தார். ஆனால், வரி வசூலிக்கப்பட முடியாததால் அந்தத் திட்டம் கைவிடப்பட்டது. ஆனால், 1688ஆம் ஆண்டுப் புரட்சிக்குப் பின் ஒரு நிலைப்படையை அமைக்கப் பாராளுமன்றமே முன்வந்தது. அக்காலத்து மக்களைப் பீடித்து வந்த குறுகிய நோக்கங்களுக்கெல்லாம் ஜேம்ஸ் அப்பாற் பட்டவராயிருந்தார். சமயத் துறையில் அக்காலத்து மக்களுக்குச் சிறிதும் சகிப்புத் தன்மை கிடையாது. பிராடெஸ்டண்டுகள் கத்தோலிக்கரை நாட்டைவிட்டு ஓட்டவேண்டுமென்று நினைத்தது போலவே கத்தோலிக்கரும் பிராடெஸ்டண்டுகளை அறவே ஒழிக்க வேண்டுமென நினைத்தார்கள். மேலும் கத்தோலிக்க நாடுகளான ஸ்பெயின், ஃபிரான்ஸ் போன்ற நாடுகளுடன் போரிட வேண்டு மென்று ஆங்கிலேயர் விரும்பினர். ஆனால், ஜேம்ஸோவெனின் சமயப் பொறையைக் கையாள முயன்றார். கத்தோலிக்கர் அவருக்கு விரோதமாகச் சதி செய்ததால், அவரது விருப்பம் நிறைவேறக் கூடவில்லை. ஸ்பெயினோடும், ஃபிரான்ஸோடும் நட்புறவோடு வாழ ஜேம்ஸ் முயன்றார். ஐரோப்பாவில், அமைதியை நிலைநாட்டப் பாடுபட்டார். பக்கிங்ஹாமின் திறமையின்மையால் அவரது திட்டங்களெல்லாம் பாழாயின. அவரது சமயப் பொறைக் கொள்கை யைப் பாராளுமன்றமானது ஒரு நூற்றாண்டுக்குப் பின் கடைப் பிடித்தது. பல வகைகளில் ஜேம்ஸ் அவர் வாழ வேண்டிய காலத் துக்கு ஒரு நூற்றாண்டுக்கு முன்பேயே வாழ்ந்தவராகக் காட்சியளிக் கிறார். அவரது சிந்தனைகள் ஒரு நூற்றாண்டைக் கடந்து சென்றதை நாம் நினைக்கும்போது ஓர் அரசியல் தீர்க்கதரிசி என்றே அவரை நாம் கருதவேண்டியுள்ளது. ஆனால், மக்கள் அவரைச் சரிவரப் புரிந்துகொள்ளவில்லை. ஜேம்ஸ் ஒரு வகையில் இந்திய வரலாற்றில் வருகிற மகமதுபின் துக்ளக்கை ஒத்துள்ளார். இருவரும் தாங்கள்

வாழ்ந்த காலத்துக்குப் பிற்பட்ட குறிக்கோள்களைக் கொண்டிருந்தவர்கள்; சூழ்நிலை காரணமாக அவற்றைச் செயலாக்க முடியாமற் போனவர்கள்; மக்களால் தப்பாகப் புரிந்துகொள்ளப்பட்டவர்கள். ஜேம்ஸை இங்கிலாந்தின் துக்ளக் என்று அழைத்தால் அது ஒரு வகையில் மிகையாகாது எனலாம்.

# 4. முதலாம் சார்லஸ் (1625-1649)

சார்லஸின் குணதிசயங்கள்

பக்கிங்ஹாமின் ஆட்சி: சார்லஸின் வெளிநாட்டுக் கொள்கை—சார்லஸின் திருமணம் (1625)

சார்லஸும் அவரது முதல் மூன்று பாராளுமன்றங்களும்: சார்லஸின் முதல் பாராளுமன்றம், 1625—காடிஸ் துறைமுக முற்றுகை, 1625—சார்லஸின் இரண்டாம் பாராளுமன்றம், 1626—கட்டாயக் கடன், 1626—ஃபிரெஞ்சுக்காரரோடு போர், 1627—ஐந்து நைட் வீரர்கள் வழக்கு, 1627—சார்லசின் மூன்றும் பாராளுமன்றம், 1628—1629—உரிமைகள் விண்ணப்பம், 1628 (Petition of Rights)—பக்கிங்ஹாமின் வீழ்ச்சி—சார்லஸின் மூன்றும் பாராளுமன்றத்தின் இரண்டாம் கூட்டம், 1629—சமயக் கொள்கை பற்றிய சச்சரவு.

ஐரோப்பிய வரலாற்றில் இரு பெரும் மன்னர்கள் நமது ஆழ்ந்த அனுதாபத்துக்கு உரியவர்களாகிறார்கள். ஒருவர் ஃபிரெஞ்சு நாட்டு அரசர் பதினாறும் லூயி. இன்னொருவர் இங்கிலாந்தின் அரசர் முதலாம் சார்லஸ். இருவரும் மிக நல்லவர்கள். தனிப்பட்ட வாழ்க்கையை மட்டும் கவனிக்குமிடத்து, அவர்கள் நாம் வணங்கத் தக்க பெரியார்கள். ஆனால், சூழ்நிலைகளின் சூழ்ச்சியால் அவர்கள் மக்களுக்குக் கொடுங்கோலர்களாகக் காட்சியளிக்கிறார்கள். கடைசியில் மக்களால் கொல்லவும்படுகின்றார்கள். இருவருக்கும் அவர்களது மனைவியரே இறுதியில் சத்துருக்களாயமைகின்றனர். லூயியின் மனைவி மரியா அந்துவானெத் (Marie Antoinette), சார்லஸின் மனைவி ஹென்றியெட்டா மேரியா (Henrietta Maria); இருவரும் தங்களை அறியாமலேயே தங்களது கணவர்களை அழிவுப் பாதையில் செலுத்திவிடுகின்றனர். 'மாறுபட்ட சூழ்நிலைகளுக் கேற்பத் தங்களை மாற்றிக்கொள்ளத் தெரியாது, மக்களின் விருப்புக்கு மாறாக நடக்கும் மன்னர்கள் வீழ்ச்சியடைதல் திண்ணம்' என்னும் வரலாற்று உண்மைக்கு அவ்விருவரும் தகுந்ததொரு எடுத்துக்காட்டா யமைகின்றனர். குடிமக்களின் விருப்பங்களைத் தழுவி நடக்கின்ற 'ஒப்புரவறிதல்' என்ற குறள் காட்டும் நெறியை

கடைப்பிடிக்காததாலேயே இருவரும் அல்லலுறுகின்றனர். மக்களுக்காகவே மன்னன், மன்னனுக்காக மக்களல்லர்' என்னும் உண்மையை அவர்கள் அறிந்து நடந்திருப்பாராயின் அவர்களைக் குடிமக்கள் போற்றி வணங்கியிருப்பார்கள்.

'குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு'

என்னும் உண்மையை அவர்கள் அறியாது போயினர், குடிதழீஇய அரசர்களாயிருந்ததனால்தான் டியூடர் வல்லரசர்களாகக் கருதப் பட்டனர் என்பதையும் அவர்கள் அறிந்துகொள்ளவில்லை.

சார்லஸின் குணாதிசயங்கள் (Character)

சார்லஸ் தம் தந்தையான ஜேம்ஸுக்கு முற்றிலும் மாறான குணங்களை யுடையவராயிருந்தார். வெளிப் பார்வைக்குங்கூட, அவர் தம் தந்தையைப் போலல்லாது கவர்ச்சியான இனிய தோற்ற முடையவராயிருந்தார். அன்பும் பண்பும் அவர் ஒருங்கே வாய்க்கப் பெற்றவர். ஒழுக்கத்தில் உயர்ந்த உத்தமர்; ஒரு பிஷப்பாக இருக்கத் தக்க குணசீலம் உள்ளவர்; கண்ணியமான நடத்தையு முடையவர்; மனைவி மக்கள் மீது ஆருக் காதலுடையவர். மனைவி யின் அன்புக்காகத் தம் குடிமக்களையும் பகைத்துக்கொண்டவர். சிறு வயது முதல் சமய சம்பிரதாயங்களிலும் சடங்குகளிலும் அவர் அதிகப் பற்றுள்ளவரா யிருந்தார். இந்தப் பற்றுக்குக் காரணம் அவரது கலையுணர்வேயாகும். அவர் ஓர் கலா ரசிகர்; இனிகோ ஜோன்ஸ் (Inigo Jones) என்ற கட்டடக் கலைஞரையும் (Architect), வான்டைக் (Vandyke) என்ற ஓவியரையும் ஆதரித்தவர்; கல்வி யிலும் மாற்றுரை வாயடைக்கும் திறமையிலும் வல்லவர். இத்தனை நற்குணங்களிருந்தும் அவரிடம் பல குறைபாடுகளு மிருந்தன. அவையே அவரது தோல்விகளுக்குக் காரணம். அவரது தந்தை யைப் போலவே, சார்லஸும் யாரையும் எளிதில் நம்பிவிடும் இயல்புடையவராயிருந்தார். அதனால் அவரது மனைவியும் நண் பர்களும் அவரைத் தவறான வழிகளில் இட்டுச் செல்வது எளிதா யிற்று. மேலும் அவர் மனோபலமற்றவர். கொடுத்த வாக்குறுதி களைக் காப்பாற்ற முடியாதவர். நல்லார் இவர், தீயார் இவர் என மனிதர்களை நிதானித்தறியும் திறமை அவரிடம் சிறிதுமில்லை. மற்றும் சிறுவயது முதல் அவர் மன்னரது தெய்விக உரிமையைப் பற்றியே படித்து அதிலேயே தோய்ந்து வளர்ந்தவராதலால் தமது அரச பதவியைப் பற்றி அவர் மிக மேன்மையாக நினைத்தார். இந்த எண்ணத்தில் பிடிவாதமாயிருந்து மக்களது பிரதிநிதிகளை அவர் அலட்சியம் செய்தார். அரசியலிலும் சமயத் துறையிலும் அவர் காட்டிய முரட்டுப் பிடிவாதமே அவரை மக்களின் பகை வனாக மாற்றிவிட்டது எனலாம்.

## பக்கிங்ஹாமின் ஆட்சி

சார்லஸ் மன்னரின் ஆட்சிக் காலத் தொடக்கத்தில், அவர் பக்கிங்ஹாம் கோமகனின் (Duke of Buckingham) கைப்பாவை யாக விளங்கினர். சார்லஸ் அவரிடம் கொண்டிருந்த நம்பிக் கைக்கும் மதிப்புக்கும் ஓர் அளவேயில்லை. தமது தந்தைக்கும் மேலாகச் சார்லஸ் அவரை நேசித்தார். எனவே, அவர் ஆட்டிய படியெல்லாம் சார்லஸ் ஆடிக்கொண்டிருந்தார். பக்கிங்ஹாம் இறக்கும்வரை அவரே நாட்டின் உண்மையான அரசரெனும்படி திகழ்ந்தார்.

### சார்லஸின் வெளிநாட்டுக் கொள்கைகள் (Foreign Policy)

சார்லஸின் வெளிநாட்டுக் கொள்கையானது பக்கிங்ஹாம் கோமகனின் விருப்பு வெறுப்புகளுக்கேற்ப அவ்வப்போது மாறிக் கொண்டே இருந்தது. ஜேம்ஸ் அரசரின் அந்திய காலத்து, இங்கிலாந்தின் படைகள் ஸ்பெயினுக்கு விரோதமாகப் போரிட்டுக் கொண்டிருந்தன. சார்லஸும் தமது தந்தையின் கொள்கையைப் பின்பற்றினர். தமது மைத்துனரான பிரெடரிக்கின் நாடான பாலடீனே (Palatine) மீட்டுத் தரும் முயற்சியில் அவர் ஈடுபட்டார். ஜெர்மனிக்கெதிராக, டச்சுக்காரர்களுக்கும், டேனிய அரசருக்கும் பல உதவி செய்வதாக அவர் வாக்களித்தார்.

### சார்லஸின் திருமணம் (1625)

ஸ்பெயினேடு விரோதம் ஒருபுறமிருக்க பக்கிங்ஹாம் திடீரென்று ஃபிரான்ஸோடு உறவு கொண்டாட எண்ணினர். அதற்காகச் சார்லஸுக்கும் ஃபிரெஞ்சு இளவரசி ஹென்றியெட்டா மேரியா (Henrietta Maria) வுக்கும் திருமணஞ் செய்து வைத்துவிட பக்கிங்ஹாம் முயன்றர். முயற்சி வெற்றி பெற்றது. மேரியா கத்தோலிக்க மதத்தவளாதலால் அவள் இங்கிலாந்து மன்னனுக்கு வாழ்க்கைப்படுவதை ஆங்கிலேயர் விரும்பார் என்பது பக்கிங் ஹாமுக்குத் தெரியும். எனவே, பாராளுமன்றத்தைக் கூட்டு முன்பே அவர் திருமணத்தை முடித்துவிட்டார். சார்லஸ் மேரியாவை மணக்க ஃபிரான்ஸின் மன்னர் பதின்மூன்ரும் லூயிக்கும் சார்ல ஸுக்கும் ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டது. அதன்படி மேரியாவுக்கும் அவர்கூட வரும் கத்தோலிக்கர்களுக்கும் தொழுகைச் சுதந்திரம் வழங்கவும், ஆங்கிலேய கத்தோலிக்கர்களுக்குத் தண்டனைச் சட்டங்களினின்றும் விலக்கு அளிக்கவும் சார்லஸ் ஒப்புக்கொண் டார். மேரியாவைச் சார்லஸ் மணந்தது ஒரு பெருந்தவருய் முடிந்தது. மணமாகும்போது மேரியா பதினைந்து வயதே யுடைய வளாயிருந்தாள். ஆரம்பத்தில் மேரியாவின் செல்வாக்கு அரண் மனையில் அதிகமில்லாதிருந்தது. ஆனால், வயதேற ஏற அவளுக்கு

கவனம், சார்லஸைத் தன் வழிக்குத் திருப்புவதில் சென்றது. அவளது செல்வாக்கால் சார்லஸின் சமயக் கொள்கைகள் பெரிதும் பாதிக்கப்பட்டன. மேலும் அவள் மூலம் சார்லஸ் பெற்ற இரு புதல்வர்களும் கத்தோலிக்க நாடான ஃபிரான்ஸையே ஆதரிக்கலாயினர். ஒருவர் ஃபிரெஞ்சு மன்னரிடம் பணம் வாங்கிக் கொண்டார். இன்னொருவர் இங்கிலாந்தை விட்டு ஃபிரான்ஸுக்கே ஓடிப் போனுர். கத்தோலிக்க ஃபிரெஞ்சு இளவரசியை சார்லஸ் மணந்தது ஆங்கிலேயர்களுக்குச் சற்றும் பிடிக்கவில்லை. அரசியின் பணியாட்கள் கத்தோலிக்கச் சடங்குகளைக் கடைப்பிடிப்பதைக் கண்டு, பிராடெஸ்டண்டுகளான ஆங்கிலேயர் மனம் புழுங்கினர். அரசி பகட்டான உடைகளை அணிந்துகொண்டு கேளிக்கைகளி லீடுபட்டது ஆடம்பரங்களை வெறுத்த பியூரிட்டன்களின் கண்களை உறுத்தியது. ஸ்பெயினை வெறுத்தது போல் மேரியாவின் தாய் நாடான ஃபிரான்ஸையும் அவர்கள் வெறுத்தார்கள். இந்நிலையில் சார்லஸ் தமது ஐரோப்பியப் போர்களை நடத்தவேண்டிப் பணம் பெறுதற்காகத் தமது முதல் பாராளுமன்றத்தைக் கூட்டினுர்.

## சார்லஸும் அவரது முதல் மூன்று பாராளுமன்றங்களும்

### சார்லஸின் முதல் பாராளுமன்றம் (1625)

சார்லஸ் பட்டத்துக்கு வந்த முதல் ஆண்டிலேயே பாராளுமன்றத்தைக் கூட்டினுர். தொன்றுதொட்டு வருகிற வழக்கப்படி, அம் முதற் பாராளுமன்றமானது தமக்கு, டன் எடை வரி (Tonnage), பவுண்டுக் கட்டணம் (Poundage) என்ற சுங்கவரிப் பணத்தை ஆயுள் மானியமாக அளிப்பதோடு ஸ்பெயினுடன் போர் புரியத் தனிப்பட்ட ஒரு மானியத்தையும் வழங்குமென்று சார்லஸ் எதிர்பார்த்தார். ஆனுல், அம் மன்றம் மேற்படி வரிகளை வசூலிக்கும் உரிமையை ஒரே ஓர் ஆண்டுக்கு மட்டுமே அரசருக்கு வழங்கியது. ஏனெனில், மன்னரைத் தனது கட்டுப்பாட்டிற்குள் வைத்திருக்க, அவரது வருவாயைச் சுருக்குவதைத்தவிர வேறு வழியில்லை என அது நினைத்தது. மேலும், அவ் வரிகளை மன்னர் வசூலிப்பது முறையா என்பதைப் பற்றியும் அது ஐயம் கொண்டது. ஸ்பெயினேடு போர் புரிவதை அது ஆதரித்தது என்றுலும் அதை நடத்திவந்த பக்கிங்ஹாம் கோமகனை அது வெறுத்ததால் போர்ச் செலவுக்காகத் தேவைப்பட்ட தொகையில் பத்தில் ஒரு பங்கையே (140,000 பவுன்கள்) அது மானியமாக அளித்தது. மானியத்தை வழங்கியபின் பாராளுமன்றம் தனது குறைகளை எடுத்து விளம்பி அவற்றை ஒவ்வொன்ருக விவாதிக்க ஆரம்பித்தது. முதலில் அது அரசரின் திருமணத்தைக் கண்டித்தது. கத்தோலிக்க மங்கையை மணந்துகொண்டதால், கத்தோலிக்கர்களுக்கு உரிமை

களை மன்னர் அளவுக்குமீறி வழங்குவதாகப் பாராளுமன்றம் குறை கூறியது. அதன் வற்புறுத்தலின் பேரில் மன்னர் கத்தோலிக்கர் மீது விதிக்கப்பட்டிருந்த தண்டனைச் சட்டங்களை மீண்டும் உயிர்ப்பித்தார். ஃபிரெஞ்சு மன்னரின் வற்புறுத்தலுக்கு அஞ்சிக் கத்தோலிக்கர்களுக்கு வழிபாட்டுரிமையை வழங்கிய அதே சார்லஸ் பாராளுமன்றத்தின் வற்புறுத்தலுக்குப் பயந்து, கத்தோலிக்கர்மீது தண்டனைகளைச் சுமத்தினர். இங்ஙனம் பாம்புக்குத் தலையையும் மீனுக்கு வாலையும் காட்டுகின்ற நேர்மையற்ற குணக்கேட்டினுலேயே சார்லசுக்குத் துன்பங்கள் பெருகின.

அடுத்தாற்போல் பாராளுமன்றம் அரசருடைய சமயக் கொள்கைகளைக் குறை கூறியது. கத்தோலிக்கர்களின் சமயச் சடங்குகளைப் பெரும்பாலும் கைக்கொண்ட ஆர்மீனியர்களை அவர் ஆதரித்ததை மன்றம் கண்டித்தது. மன்னர் கத்தோலிக்கராகவே மாறிவிடுவாரோ என்ற ஐயம் பாராளுமன்ற உறுப்பினர் பலரையும் வாட்டியது, அடுத்தாற்போல் பாராளுமன்றம் அரசருடைய அமைச்சரும் முக்கிய ஆலோசகருமான பக்கிங்ஹாமைக் கண்டித்தது. ஸ்பானியப் போரை நடத்தும் பொறுப்பு அவரிடம் இருக்கும் வரை தான் மேற்கொண்டு மானியம் வழங்க இயலாது என்று பாராளுமன்றம் திட்டவட்டமாக அறிவித்தது. மேலும், அதனுடைய நம்பிக்கைக்குகந்த மந்திரிகளையே அரசர் நியமித்துக் கொள்ளவேண்டுமெனவும், வெளிநாட்டுக் கொள்கையையும் மதக் கொள்கையையும் அவர் அதைக் கலந்துகொண்டே நிர்ணயிக்க வேண்டுமெனவும் அது வற்புறுத்தியது. தமக்குத் தேவைப்பட்ட பொருளையும் வழங்காமல் தம் உரிமைகளைக் கட்டுப்படுத்த முன்வந்த அம் மன்றத்தைச் சார்லஸ் உடனே கலைத்துவிட்டார்.

### காடிஸ் துறைமுக முற்றுகை (Cadiz Expedition, 1625)

பாராளுமன்றத்தைக் கலைத்தபின் சார்லஸ் ஸ்பானியப் போரை நடத்தும் பொறுப்பை பக்கிங்ஹாம் கோமகனிடம் ஒப்படைத்தார். பக்கிங்ஹாம் காடிஸ் துறைமுகத்தை முதலில் கைப்பற்றி, அதன்பின் அத்துறைமுகத்திற்கு ஆண்டுதோறும் தென் அமெரிக்காவிலிருந்து பொன் சுமந்து வரும் நிதிக் கப்பல்களையும் கைப்பற்றிவிட வேண்டுமென திட்டமிட்டார். அதன்படி சர் எட்வர்ட் செசில் (Sir Edward Cecil) என்பாரை காடிஸ் துறைமுகத்துக்கு அவர் ஒரு கப்பற் படையுடன் அனுப்பினர். ஆனல், அக் கோமகனின் திறமையின்மையாலும், நல்ல போர்வீரர்கள் பொறுக்கி அனுப்பப்படாததாலும் மேற்சொன்ன இரண்டு திட்டங்களுமே நிறைவேறவில்லை. காடிஸ் துறைமுக முற்றுகையின்போது அவரது போர்வீரர்கள் குடி போதையில் மயங்கிக் கிடந்தனர். திட்டம் வெற்றி பெற்றிருந்தால்

ஸ்பெயினின் நிதி நிலை அவ்வாண்டில் பெருமளவுக்குப் பாதிக்கப் பட்டிருப்பதோடு, சார்லஸுக்கும் பாராளுமன்றத்தின் உதவியின்றி ஆட்சி செய்யப் போதிய பொருள் கிடைத்திருக்கும். ஆனால், காடிஸ் முற்றுகைத் தோல்வியால் அதற்கு வழியில்லாமல் போய் விட்டது. பணமுடையைத் தீர்த்துக்கொள்ள வேறு வழியின்றிச் சார்லஸ் மீண்டும் பாராளுமன்றத்தைக் கூட்டினார்.

சார்லஸின் இரண்டாம் பாராளுமன்றம் (1626)

இப்பாராளுமன்றத்தின் உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்படு முன் தமக்குப் பிடிக்காதவர்கள் அதனுள் நுழைந்துவிடா வண்ணம் தடுப்பதற்காகப் பக்கிங்ஹாம் ஒரு நூதன முறையைக் கையாண்டார். முதல் பாராளுமன்றத்தில் தம்மைத் தாக்கின கோக் (Coke), வென்ட்வொர்த் (Wentworth) முதலியவர்களை அவரவர்களது கவுன்டிகளில் (Counties) ஷெரீப்புகளாக (Sheriffs) நியமித்து, அதன் மூலம் அவர்கள் பாராளுமன்றத்தின் உறுப்பின ராதற்குரிய தகுதியை இழந்துபோகும்படி அவர் செய்தார். ஸ்பெயினோடு பேச்சு வார்த்தை நடத்திய ஜான் டிக்பி (Johne Digby) என்பவருக்குப் பிரபுக்கள் சபைக்கு வரும்படி அழைப்பு அனுப்பாமலேயே விட்டுவிட்டார். ஸ்பெயினில் தாம் நடந்து கொண்டதை டிக்பி அம்பலப்படுத்திவிடுவாரென்ற எண்ணத்தி லேயே பக்கிங்ஹாம் அங்ஙனம் செய்தார். அருண்டேல் எர்ல் என்பவரான தமது இன்னோர் எதிரியைச் சட்டவிரோதமான ஒரு திருமணத்தைச் செய்துகொண்டதாக ஒரு குற்றம் சாட்டிச் சிறையிட்டுவிட்டார். இதை அறிந்த பிரபுக்கள் சபை, பிரிஸ்டல் எர்ல் என்ற (Earl of Bristol) டிக்பிக்கும், அருண்டேல் எர்லுக்கும் அழைப்பு அனுப்பினாலன்றி மேற்கொண்டு எக்காரியமும் செய்ய இயலாதென மறுத்துவிட்டது. அதற்கப்புறம் அவர்கள் பிரபுக்கள் சபைக்கு வரவழைக்கப்பட்டனர். பொது மக்கள் சபையில் கோக், வென்ட்வொர்த் என்பவர்கள் வர முடியாவிட்டாலும் அவர்களை விட உரிமை உணர்வுள்ள எலியட் (Eliot), பிம் (Pym) போன்றோர் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

பாராளுமன்றம் கூடியவுடன், முதலில் தனது குறைகள் நீக்கப் பட்டாலொழிய மானியம் வழங்குவது முடியாது என அது கூறி விட்டது. மேலும், பக்கிங்ஹாம் கோமகனை அஃது அரசியல் துரோகக் குற்றம் சாட்டி விசாரிக்க (Impeachment) முற்பட்டது. குற்றச் சாட்டைப் பிரபுக்கள் சபையில் எடுத்தியம்ப சர் ஜான் எலியட் என்பார் முன்வந்தார். அவர் கார்னிஷ் மாகாணத்தைச் சேர்ந்த கனவான் ; உயர்ந்த பண்பும் தேச பக்தியும் நிரம்பியவர் ; கேட்போரைப் பிணிக்கவல்ல சொல்வன்மை உடையவர். முதலில்

அவர் பக்கிங்ஹாமை ஆதரித்தார். ஆனால், நாளடைவில் அவரை வெறுக்க ஆரம்பித்தார். காடிஸ் முற்றுகையின் தோல்விக்கும், மற்றும் நாட்டைப் பீடித்துவந்த எல்லாத் தீமைகளுக்கும் மூலகாரணம் பக்கிங்ஹாம் கோமகனே என்று அவர் அறுதியிட்டுக் கூறினர். மன்னரைத் தமது பிரியப்படி ஆட்டிவைத்து நாட்டைத் தம் இச்சைப்படி ஆள்வதில் அவர் செஜனஸ் (Sejanus) என்ற ரோமானியத் துன்மந்திரிக்கு ஒப்பாவார் என்று அவர் கூறினர். 'மன்னரின் கருவூலத்தில் நெளியும் கனிப்புழு' என்றும், 'நாட்டின் நலத்தை அரிக்கும் கறையான்' என்றும் அவரை எலியட் வருணித்தார். இதை எல்லாம் கேட்ட சார்லஸுக்குக் கோபம் தாளமுடியவில்லை. 'பக்கிங்ஹாம் செஜனஸ் என்றல் நான் டிபரியஸாகத்தான் (Tiberius) இருக்க முடியும்' என்று சார்லஸ் கோபாவேசத்தோடு கத்தினர். தமது நண்பரைத் தாக்கிப் பேசிய எலியட்டையும் சர் டட்லி டிக்கிஸ் (Sir Dudley Diggis) என்பவரையும் சிறையிடும்படி சார்லஸ் உத்தரவிட்டார். பாராளுமன்றத்தின் உறுப்பினர்கள் சிறையிடப்படுதல் சட்ட விரோதமென அச்சபை மன்னனுக்கு எடுத்துக் கூறி, அவர்கள் சிறையிலிருக்கும்வரை தான் மேற்கொண்டு எதுவும் செய்ய முடியாதென மறுதலித்தது. இதை அறிந்த சார்லஸ் அதைக் கலைத்தார். இச்சமயமும் பாராளுமன்றம் மானியம் ஒன்றும் மன்னனுக்கு அளிக்காமலேயே கலைந்தது.

### கட்டாயக் கடன் (Forced Loans, 1626)

பாராளுமன்றம் கலைந்ததும் சார்லஸ் முறையற்ற வழிகளில் பணம் திரட்ட முற்பட்டார். ஏனெனில், ஸ்பானியப் போரை நடத்தப் பெரும் பொருள் தேவையாயிருந்தது. நன்கொடைகள் (Benevolences) வழங்குமாறு சார்லஸ் தமது குடிகளுக்கு ஒரு வேண்டுகோள் விடுத்தார். ஆனால், ஒருவராவது நன்கொடை வழங்க முன்வரவில்லை. பின்னர் வேறு வழிகளில், அதாவது, நைட் (Knight) வீரர்களாக ஆவதற்கு மறுப்போர்க்கு அபராதம் விதித்தல், மன்னருக்குச் சொந்தமான நிலங்களின் குத்தகையை உயர்த்தல் போன்ற வழிகளில் சார்லஸ் பணம் திரட்டினர். கடற்படைக்கு வேண்டிய கப்பல்களைத் துறைமுகங்களிலிருந்து பலவந்தமாய் அவர் கைப்பற்றினர். தரைப்படைக்கு (Infantry) பலவந்தமாய் ஆள்களைத் திரட்டினர். டன் எடை வரியையும், பவுண்டுக் கட்டணத்தையும், திருப்பிக் கொடுக்க வேண்டாத கட்டாயக் கடன்களையும் (Forced loans) அவர் பலவந்தமாக மக்களிடமிருந்து வசூலித்தார். அவைகளை வாங்குவது சட்ட விரோதமென்று கூறிய தலைமை நீதிபதி (Chief Justice) க்ரூ (Crew) என்பவரைப் பதவியினின்றும் அவர் நீக்கினர். அவைகளைக் கொடுக்க

மறுத்தவர்களைப் பல வகையிலும் அவர் துன்புறுத்தினர். சிலரைப் படைகளில் கட்டாய இராணுவ சேவை செய்யும்படி வற்புறுத்தினர். இன்னும் சிலரை இராணுவ வீரர்களைத் தமது இல்லங்களில் வைத்துப் பராமரிக்க வேண்டுமெனக் கட்டாயப்படுத்தினர்.

இச்சமயத்தில் ஆங்கில அரசாங்கத்தின் உதவி பெற்றுவந்த டென்மார்க் அரசரான நான்காம் கிறிஸ்டியன் என்பார் லுட்டர் (Luttur) என்னுமிடத்தில் ஜெர்மானியரால் தோற்கடிக்கப்பட்டதாகத் தெரியவந்தது. பாலடீனைத் (Platine) திரும்பவும் பெற முடியும் என்ற நம்பிக்கை ஆங்கிலேயருக்குப் போய்விட்டது. மேலும் பதின்மூன்றும் லூயி, ஃபிரெஞ்சு பிராடெஸ்டன்டுகளான ஹியூக்னேக்கள் (Huguenots) வசமிருந்த லா ரொஷேல் (La Rochalle) கோட்டையைப் பிடிக்கப் படை அனுப்பியதாகச் சார்லஸ் கேள்வியுற்றார். ஹியூக்னேக்களைக் காப்பாற்றுவதாக லூயி மன்னர் ஒரு முறை சார்லஸுக்கு வாக்குறுதி அளித்திருந்தார். அதற்கு எதிராக அவர் நடந்துகொண்டது சார்லஸுக்குக் கோபமூட்டியது மேலும், சார்லஸின் மனைவி ஆங்கிலேய கத்தோலிக்கர்களுக்குத் தொழுகை உரிமை வழங்கும்படி அடிக்கடி அவரை நச்சரித்துக்கொண்டேயிருந்தார். இதனால் அரச தம்பதிகளுக்குள் மனக்கசப்பு வளர்ந்து அது பூசலாக மாறியது. மேரியாவின் பணியாள்களை எல்லாம் நாட்டைவிட்டு வெளியேறும்படி சார்லஸ் உத்தரவிட்டார். இதையறிந்த பதின்மூன்றும் லூயி இங்கிலாந்துக்கு ஒரு பாடம் கற்பிக்க விரும்பினர். இக் காரணங்களால் ஃபிரான்ஸுக்கும் இங்கிலாந்துக்கும் சண்டை மூண்டது.

ஃபிரெஞ்சுக்காரரோடு போர் (1627)

கட்டாயக் கடன்கள் மூலம் வசூலான பொருளைக் கொண்டு கப்பற் படை ஒன்றைச் சார்லஸ் திரட்டினர். ரொஷேல் கோட்டையை மீட்க அது பக்கிங்ஹாம் கோமகனின் தலைமையில் புறப்பட்டது. ரொஷேல் கோட்டைக்கு எதிரிலிருந்த ரே தீவில் (Re Island) பக்கிங்ஹாம் படைவீரர்கள் இறங்கினர். பின் செயின்ட் மார்டின் (St. Martin) என்னும் கோட்டையை அவர்கள் முற்றுகையிட்டனர். அது பிடிபடும் தறுவாயிலிருந்தபோது ஃபிரெஞ்சுக்காரருக்கு மேலும் உதவி வந்துசேர்ந்தது. தமக்கு மேலும் உதவி வேண்டுமெனப் பக்கிங்ஹாம் சார்லஸுக்கு அறிவித்தார். சார்லஸும் கூடியவரை முயன்று ஆள்களையும் பொருளையும் திரட்டி அனுப்பினர். ஆனல், ஆங்கில மக்கள் பக்கிங்ஹாம் கோமகனுக்குப் பணம் கொடுத்துதவ விரும்பவில்லை. எனவே, சேனையில் ஏறக்குறையப் பாதிப் போர்வீரர்களை இழந்து, பக்கிங்ஹாம் நாடு திரும்பினர்.

**ஐந்து நைட் வீரர்கள் வழக்கு (Five Knight's Case, 1627)**

ரே தீவு தோல்வியினால் பக்கிங்ஹாமுக்கு மேலும் கெட்ட பெயர் ஏற்பட்டது. அவரது படைவீரர்கள் சாதாரண மக்களின் வீடுகளில் திணிக்கப்பட்டனர். கட்டாய முறையில் அவர்களைப் பராமரிக்கும்படி அம் மக்கள் பலவந்தப்படுத்தப்பட்டனர். இந்த வீரர்கள் செய்த கொடுமைகள் கொஞ்ச நஞ்சமல்ல. அவர்களிற் பலர் உண்ட வீட்டுக்கே இரண்டகம் நினைத்தனர். தங்களுக்கு உணவளித்தவர்கள் வீட்டைக் கொள்ளையடித்தும் பெண்டிரைக் கற்பழித்தும் அவர்கள் மக்களிடையே பெரும் பீதியை உண்டாக்கி விட்டனர். அவர்களை விசாரித்துத் தண்டிக்க ஓர் இராணுவ நீதி மன்றம் (Martial Court) ஏற்படுத்தப்பட்டது. அஃது இராணுவத்தினரையேயன்றிச் சிவிலியன்களையும் நாளடைவில் தண்டிக்க ஆரம்பித்தது. இவ்வித நீதிமன்றங்கள் மக்களின் உரிமைகளையே பறிக்க நேரும் எனப் பலரும் அஞ்சினர்.

இந்நிலையில் கட்டாயக் கடன்களைக் கொடுக்க மறுத்த பலர் சிறையிலிடப்பட்டனர். இங்ஙனம் சிறையிலிடப்பட்ட ஐந்து நைட்டுகள், தங்கட்கு நீதி வழங்கும்படி, அரசர் நீதிபதிகள் மன்றத்துக்கு (Court of Kings Bench) முறையிட்டுக்கொண்டார்கள். அம்மன்றம், ஹெபியாஸ் கார்ப்பஸ் கட்டளை (Writ of Habeas Corpus Act)யொன்றைப் பிறப்பித்து, அவ்வைந்து நைட்டுகளையும் உடனே விடுவித்து நீதிமன்றத்துக்கு அனுப்பும்படி சிறையதிகாரியைக் கோரியது; அதோடு அவர்கள் சிறையிடப்பட்ட காரணத்தையும் காட்டும்படி அம் மன்றம் சிறையதிகாரியைக் கேட்டது. மன்னரும் பிரிவி கவுன்ஸிலும் பிறப்பித்த கட்டளையின்படியே அந் நைட்டுகள் சிறைசெய்யப்பட்டதாகச் சிறையதிகாரி கூறினர். காரணமின்றி யாரும் சிறையிடப்படுதல் சட்ட விரோதமென்றும், ஐந்து நைட்டுகள்மீது குறிப்பிட்ட குற்றம் ஏதும் சாட்டப்படாததால் அவர்கள் ஜாமீனில் விடுதலை செய்யப்பட வேண்டுமென்றும் நைட்டுகள் அமர்த்திய வழக்கறிஞர்கள் வாதாடினர்கள். அரசரது வழக்கறிஞர்களோவெனின், மன்னர்கள் நாட்டினது நலத்தையும் அமைதியையும் காக்கவேண்டிக் காரணமின்றியே எவரையும் சிறையிடலாமென்று வாதித்தனர். நீதிபதிகள் ஒருவித முடிவுக்கும் வராமல் திகைத்தனர். மறுபடியும் அவர்கள் அந் நைட்டுகளைச் சிறைச்சாலைக்கே அனுப்பிவிட்டனர். சில நாள்கள் கழிந்து அவர்கள் விடுதலை செய்யப்பெற்றனர். சார்லஸ் பண முடை தாங்காது மறுபடியும் மூன்றாவது முறையாகப் பாராளுமன்றத்தைக் கூட்டினர்.

### சார்லஸின் மூன்றும் பாராளுமன்றம் (1628-1629)

சார்லஸ் கூட்டிய மூன்றும் பாராளுமன்றத்தில் உரிமை வீரர்களான எலியட், வென்ட்வொர்த், கோக், செல்டன் போன்ருேர் இடம் பெற்றிருந்தனர். அரசரது யதேச்சாதிகாரச் செயல்களை எல்லாம் சட்ட விரோதமானவை எனக் கூறும் மசோதா ஒன்றை வென்ட்வொர்த் கொணர்ந்தார். ஆனுல், அதைச் சார்லஸ் ஒப்புக்கொள்ள மறுத்துவிட்டார். அதற்கப்புறம் எலியட், கோக், செல்டன் போன்ற சட்ட நிபுணர்கள் 'உரிமைகள் விண்ணப்பம்' என்ற பத்திரத்தைத் தயாரித்து, மன்னர் அதில் கையெழுத்திட்டாலொழிய மானியம் எதுவும் அளிக்கப்படமாட்டாது எனக் கூறினுர்கள். மன்னர் சிறிது தயங்கினுர். பின் பண நெருக்கடி காரணமாகவும், பிரபுக்கள் சபையும் சேர்ந்து அவ்விண்ணப்பத்தை ஆதரித்ததாலும் அவர் அதை ஒப்புக்கொண்டார். 1628ஆம் ஆண்டு ஜூன் மாதம் 7ஆம் தேதி அம் மசோதா சட்டமாக நிறைவேறியது. 'உரிமைகள் விண்ணப்பம்' எனும் பத்திரம் சட்டமான அந்நாளை ஒரு திருநாளென லண்டன் மக்கள் கொண்டாடினர். கோயில்களில் மணிகள் ஒலித்தன. பொது மக்கள் சபை உறுப்பினர்கள் மகிழ்ச்சிப் பெருக்கால் கூத்தாடினர்.

### உரிமைகள் விண்ணப்பம் (Petition of Rights, 1628)

உரிமைகள் விண்ணப்பமானது சார்லஸின் யதேச்சாதிகாரச் செயல்களைக் கண்டித்தது. பாராளுமன்றத்தின் அனுமதியின்றி அரசன் எவரையும் சிறையிடக்கூடாதென்றும், சட்ட ரீதியான விசாரிப்பின்றி அரசன் யாரையும் காவலில் வைக்கக்கூடாதென்றும், பாராளுமன்றத்தின் அனுமதியின்றிக் கட்டாயக் கடன்களையோ வரிகளையோ மன்னன் மக்களிடமிருந்து வசூலிக்கக் கூடாதென்றும், போர்வீரர்களைச் சாமானிய மக்களின் வீடுகளில் தங்க வைக்கலாகாதென்றும், அமைதிக் காலத்தே இராணுவச் சட்டங்களை அமல் நடத்தக்கூடாதென்றும் விண்ணப்பம் கூறிற்று.

ஆங்கிலேய அரசியலமைப்பில் இவ்விண்ணப்பம் ஓர் சிறந்த இடத்தைப் பெறுகிறது. மகாசாசனத்துக்கு (Great Charter) அடுத்தபடியாக வைத்தெண்ணப்படுகின்ற இவ்விண்ணப்பம் சில குறிப்பிட்ட குறைகளை நீக்கவே ஏற்பட்டதெனினும், உன்னதமான சில கோட்பாடுகளையும் உட்கொண்டதாயிருக்கிறது. அதனுல், அது எக்காலத்துக்கும் ஏற்றதோர் உரிமைப் பத்திரமாக விளங்குகிறது. அரசியல் அமைப்புப் பற்றிய சில அடிப்படைக் கொள்கைகளை அரசன் ஒப்புக்கொண்டதுதான் இப்பத்திரத்தின் சிறப்பாகும். முதன் முறையாக இதில்தான் மன்னனது தனிச்

சிறப்பதிகாரத்துக்கும் (Prerogative) சட்டங்களுக்குமுள்ள தொடர்பு திட்டமாக வரையறுக்கப்படுகிறது. நாட்டின் இறைமையானது மன்னனிடத்திலிருந்து பாராளுமன்றத்துக்கு மாற்றப்பட்ட வரலாற்றில் இது முதல் கட்டமாக அமைகிறது. மற்றும், இப்பத்திரம் நடைமுறைக்கு ஏற்றதொன்றாய் விளங்குகிறது. நடைமுறையில் கொணர்வதற்கரிய நுண்மையான பொதுக் கோட்பாடுகளைப் பற்றிக் கூறுமல், அப்போதைக்கு அவசியமான ஒருசில சீர்திருத்தங்களைப் பற்றியே இது கூறுகிறது. இதில் வற்புறுத்தப்பட்டுள்ள உரிமைகள் யாவும் ஒன்றும் புதியனவல்ல. முதலாம் எட்வர்ட் காலத்திலிருந்தே இவ்வுரிமைகளைப் பாராளுமன்றம் வற்புறுத்திவந்துள்ளதேனும், இதில் அவை திட்டவட்டமாய்க் கூறப்பட்டு மன்னது அங்கீகாரத்தையும் பெற்றுவிடுகின்றது. வருங்காலத்துக்கு வழிகாட்டியாய் இது அமைந்தது. பாராளுமன்றத்தின் உரிமைகளுக்கு ஒரு கலங்கரை விளக்காயும் (Light House). மன்னனது அதிகார வெள்ளத்துக்கே ஓர் அணைக்கட்டாகவும் இது திகழ்ந்தது.

சட்டங்களை அரசர் பாராளுமன்றத்தின் அனுமதிகொண்டே ஆக்கவேண்டுமென்று இவ்விண்ணப்பம் கூறுவதால் சட்டத்தின் இறைமை (Sovereignty of Law) நிலைநாட்டப்படுகிறது. இப்பத்திரம் சட்டமாவதற்குமுன், இறுதியான தலைமை மன்னனிடத்திலேயே இருக்கவேண்டுமென்று பிரபுக்கள் சபையினரில் சிலர் வாதாடினர். அதைப் பொதுமக்கள் சபையார் மறுத்து, இறைமை சட்டத்துக்குத்தான் உரியது என்றும் அச்சட்டத்தை ஆக்கப் பாராளுமன்றத்துக்கே உரிமையுண்டென்றும் வற்புறுத்தினர். சட்டம் இறைமை எய்தும்பொழுது அதை ஆக்குகின்ற பாராளுமன்றமும் இயல்பாகவே இறைமை யுடையதாகிறது. பாராளுமன்றத்தின் அனுமதியின்றி அரசன் வரி விதிக்கக்கூடாது எனும் கொள்கை ஜேம்ஸ் காலத்திலேயே வற்புறுத்தப்பட்டதெனினும், அது அரசராலேயே ஒப்புக்கொள்ளப்பட்டது சார்லஸின் காலத்தில் தானுகும். அரசன் சரியான காரணமின்றித் தன் எதிரிகளைச் சிறையிலிடும் புதிய அபாயம் சார்லஸின் காலத்தில் ஏற்பட்டது. வீரர்களைக் கட்டாயமாகத் தம் வீடுகளில் வைத்துப் பராமரிக்கும் பொறுப்பும் பலருக்கு அவர் காலத்து ஏற்பட்டது. இப்புதிய தொல்லைகளிலிருந்தும் இராணுவ நீதிமன்றங்களின் பிடியினின்றும் மக்களின் உரிமைகள் இப்பத்திரத்தால் காப்பாற்றப்பட்டன.

## பக்கிங்ஹாமின் வீழ்ச்சி (1628)

உரிமைகள் விண்ணப்பத்தைச் சார்லஸ் ஒப்புக்கொண்டதால் பாராளுமன்றம் அவருக்கு 350,000 பவுன்கள் மானியமாக அளித்தது. அதைப் பெற்றுக்கொண்டவுடன் சார்லஸ் பாராளு

மன்றத்தைத் தற்காலிகமாக ஒத்தி வைத்தார் (Prorogued). பின்னர், அப்பெருந்தொகையைக்கொண்டு ஒரு படையைத் திரட்டி அதைப் பக்கிங்ஹாமின் தலைமையில் ஸ்பெயினுக்கு அனுப்பினர். ஸ்பெயினுக்குச் செல்வதற்காக இருந்த படைகளைத் தணிக்கை பார்த்துக்கொண்டிருந்தபொழுது ஃபெல்டன் (Felton) எனும் ஒரு பகைவனால் பக்கிங்ஹாம் குத்திக் கொல்லப்பட்டார். ஃபெல்டன் என்பவன் பக்கிங்ஹாமால் படையினின்றும் நீக்கப் பட்டவன். அதை மனத்துள் வைத்துக் கறுவிக்கொண்டிருந்த ஃபெல்டன் தக்க தருணம் பார்த்துத் தன் வஞ்சத்தைத் தீர்த்துக் கொண்டான். தான் பக்கிங்ஹாமைக் கொல்வதை நாட்டு மக்களும் விரும்புவர் என்பதையும் அவன் அறிந்திருந்தான். தன் சொந்தப் பழியைத் தீர்த்துக்கொள்வதன் மூலம் நாட்டுக்கு ஒரு சேவை செய்வதாக அவன் எண்ணினன். அவன் எண்ணியது வீண்போகவில்லை. பக்கிங்ஹாம் கொலை செய்யப்பட்டதை அறிந்த லண்டன் மக்கள், 'கொலை செய்தவன் ஒரு தியாகி. 'அவன் வாழ்க' என வாழ்த்தினர்கள்; மகிழ்ச்சியால் கூத்தாடினர்கள். கோயில்களில் மணிகள் ஒலித்தன. தமது உற்ற நண்பர் இறந்ததை ஓர் விழாவெனக் கொண்டாடிய லண்டன் மக்களைச் சார்லஸ் கடைசிவரை மறக்கவுமில்லை; மன்னிக்கவுமில்லை.

பக்கிங்ஹாம் ஒரு விசித்திர மனிதர். மிகச் சாதாரண நிலையி லிருந்து அவர் மிக உயர்ந்த பதவிகளை அடைந்தவர். ஜேம்ஸின் ஆதரவால் கோமகன் எனும் பட்டம் பெற்ற அவர், ஜேம்ஸையும் அவர்பின் அவரது மகன் சார்லஸையும் தவருன வழிகளிலேயே நடத்திச் சென்ருர். அவரது வெளிநாட்டுக் கொள்கை நிலையற்ற தொன்ருயிருந்தது. தனிப்பட்ட விருப்பு வெறுப்புகளுக்கேற்ப அவரது கொள்கை மாறியது. அரசியல் நுண்ணறிவோ (Statesmanship) திறமையோ அவரிடம் காணப்படவில்லை. சார்லஸை ஸ்பெயினுக்கு அழைத்துச் சென்று ஸ்பெயின் இளவரசியை மயக்கி மணம் செய்துவிடலாம் என அவர் எண்ணியது அவரது மடமையையே வெளிப்படுத்துகிறது, ஸ்பெயினிலிருந்தபோது அங்கு அவர் ஸ்பெயின் பிரபுக்களிடம் சச்சரவிட்டுக்கொண்டதால் ஸ்பெயினேடு போர் புரியும்படி ஜேம்ஸைத் தூண்டினர். கடற் சண்டையிலிறங்கும்படி பாராளுமன்றம் கூறியதை மதிக்காமல் மான்ஸ்ஃபெல்ட் (Mansfeld) வசம் ஒரு நிலைப்படையைப் பாலடீனை மீட்க அவர் அனுப்பினர். அதனல் தோல்வியே விளைந்தது. ஜேம்ஸ் இறந்தபின் பக்கிங்ஹாம் ஃபிரான்ஸோடு உறவு கொண் டாடியதும் ஆங்கிலேயருக்குப் பிடிக்கவில்லை. ரொஷேல் கோட்டை யிலிருந்த பிராடெஸ்டன்டுகளுக்கு விரோதமாக ஆங்கிலக் கப்பற்படை அனுப்பப்பட்டதை அறிந்த பிராடெஸ்டன்டு ஆங்கி லேயர் வெகுண்டனர். ஃபிரெஞ்சு மன்னரிடமும் நீடித்த நட்பை

பக்கிங்ஹாம் வளர்க்கவில்லை. ஆங்கில மக்கள் வெறுத்த ஃபிரெஞ்சு இளவரசியைச் சார்லஸுக்கு அவர் மணமுடித்தார். பின்னர் லூயியின் மனைவியையே அவர் காதலிக்க ஆரம்பித்து ஃபிரெஞ்சு மன்னரின் வெறுப்பைத் தேடிக்கொண்டார். அதன்பின் அவர் ஃபிரான்ஸின்மேல் போர் தொடுத்துத் தோற்றார். அவரது நிலையற்ற தன்மையைக் கண்டு ரிஷலியூ என்ற ஃபிரெஞ்சு மந்திரி ஸ்பெயினோடு ஓர் உடன்பாடு செய்துகொண்டதால், இங்கிலாந்தின் பெருமையும் மதிப்பும் ஐரோப்பாவில் குன்றின. அவரது ஐரோப்பியப் படை எடுப்புகளெல்லாம் தோல்வியாகவே முடிந்தன. எனவே, அவர் இறந்ததும் ஒரு நன்மைக்கே என ஆங்கில மக்கள் நினைத்ததில் ஆச்சரியமொன்றுமில்லை.

### சார்லஸின் மூன்றும் பாராளுமன்றத்தின் இரண்டாம் கூட்டம் (1329)—சமயக்கொள்கைகள் பற்றிய சச்சரவு

1629ஆம் ஆண்டு ஜனவரி மாதம் பாராளுமன்றம் மறுபடியும் கூடியபோது அது மேலும் பல உரிமைகளை வற்புறுத்த ஆரம்பித்தது. டன் எடை வரி, பவுண்டுக் கட்டணம் என்ற சுங்கவரிகளைப் பாராளுமன்றத்தின் அனுமதியின்றி அரசர் வசூலிக்கலாமா என்ற கேள்விக்கு விடைகாண அம்மன்றத்தினர் விழைந்தனர். இறைமை பாராளுமன்றத்துக்குரியதா அல்லது மன்னனுக்குரியதா வென்பதைத் தீர்மானிக்கவும் அவர்கள் விரும்பினர். எனவே, தன்னிச்சையாக அரசர் டன் எடை வரி. பவுண்டுக் கட்டணம் என்பவற்றை வசூலித்துவருவதையும், மத நிலைய மேலோருக்கு (High Church Men) ஆதரவு காட்டிவருவதையும் அவர்கள் கண்டித்து, சமயத்துறை, அரசியல் துறை இரண்டிலும் சட்டம் செய்யத் தங்கட்கே உரிமையுண்டென்று கூறினர். அரசன் மதத்துறையில் செலுத்திவந்த இறைமையையும், பாராளுமன்றம் கட்டுப்படுத்த ஆரம்பிப்பது இதுவே முதல் தடவையாகும்.

சார்லஸ் சமயத்துறையில் தெளிவான கருத்தற்றவராயிருந்தார். தமது மனைவியின் செல்வாக்காலும் பக்கிங்ஹாமின் நட்பாலும் அவர் கத்தோலிக்க சமயச் சடங்குகளை விரும்பினார். அதே சமயத்தில் கத்தோலிக்கராக இருக்கவும் அவர் விரும்பவில்லை. எனவே, கத்தோலிக்க மதச் சடங்குகளைப் பெரிதும் உட்கொண்டிருந்த ஆர்மீனியக் கொள்கைகள் அவருக்குப் பெரிதும் பிடித்திருந்தன. இங்கிலாந்தின் மத ஏற்பாடான ஆங்கிலிக்கன் திருச்சபையில் அப்போது அதிகாரம் வகித்துவந்த மத நிலைய மேலோர் எனப்படுவோர் ஆர்மீனியக் கருத்துகளை வரவேற்றார். 'மன்னரே மத ஏற்பாட்டுக்கும் தலைவர்' என்ற கொள்கையை அவர்கள் ஒப்புக்கொண்டதோடு, அரசரது தனிச்

சிறப்பதிகாரங்களை அவர்கள் வரவேற்றனர். எனவே, சார்லஸ் அவர்களை ஆதரித்ததில் வியப்பொன்றுமில்லை. ஆனால், பியூரிட்டன்கள் ஆர்மீனியர்களை வெறுத்தனர். விவிலிய நூலே கிறிஸ்துவர்களுக்கு உண்மை வழிகாட்டி என்றும், யார் கிறிஸ்துவர்களாயிருக்கவேண்டுமென்பது கடவுளால் ஏற்கெனவே விதிக்கப்பட்டுவிட்டதெனவும் (Predestination) பியூரிட்டன்கள் கூறினர். சுய இச்சைப்படி (Free Will) ஒவ்வொருவனும் கிறிஸ்துவனாயிருக்க முடியும் என்றும், அவர்கள்மேல் ஆதிக்கம் செலுத்த மன்னருக்கு உரிமை உண்டென்றும் ஆர்மீனியர்கள் கருதினார்கள். எனவே, ஆர்மீனியக் கருத்து உடையவர்களைப் பாராளுமன்றம் கண்டித்தது. டாக்டர் மாண்டேகு (Dr. Montagu), மன்வாரிங் (Manwaring) போன்ற ஆர்மீனியர்களைப் பாராளுமன்றம் தாக்கியது. டாக்டர் மாண்டேகு கத்தோலிக்க மதத்தைத் தாக்கியும், பிராடெஸ்டன்டு மதத்தை ஆதரித்தும் ஒரு நூல் எழுதினார். ஆனால், அவர் அதில் போப்புக்குப் பதில் மன்னனே மத நிலையத்துக்குத் தலைமை செலுத்த வேண்டுமென்று கூறியிருந்தார். எனவே, சார்லஸ் அவரை ஆதரித்து சிச்செஸ்டர் (Chichestar) என்ற இடத்திற்கு அவரை பிஷப்பாக நியமித்தார். அங்ஙனமே மன்வாரிங், சிப்தார்ப் (Sibtharp) போன்ற ஆர்மீனியர்களுக்கும் சார்லஸ் ஆதரவு காட்டினார். லண்டன் ஆர்ச் பிஷப்பாக இருந்த ஆப்பட் (Abbot) என்பார் சிப்தார்ப் எனும் ஆர்மீனியர் சொற்பொழிவாற்றுவதை அனுமதிக்காததால், பதவியிலிருந்து நீக்கப்பட்டார். பின் வில்லியம் லாட் (William Laud) எனும் ஆர்மீனியக் கொள்கையாளர் அப்பதவிக்கு அமர்த்தப்பட்டார்.

இதையெல்லாம் கண்ட பியூரிட்டன்கள் அச்சமுற்றனர். அவர்களை ஆங்கிலேய மத ஏற்பாட்டுக்குள் அடக்க மன்னனும் அவரது மதநிலைய மேலோரான நண்பர்களும் முயலுவர் என அவர்கள் நினைத்தனர். அவர்கள் நினைத்ததும் சரியாயிற்று. எலிஸபெத் கால 39 கோட்பாடுகளுக்கு யாவரும் கீழ்ப்படிய வேண்டுமென்றும், அதே சமயம் அரசரது இறைமையையும் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்றும் சார்லஸ் ஓர் உத்தரவு பிறப்பித்தார். அந்த 39 கோட்பாடுகளைக் கால்வினீய மதத்துக்கு ஏற்பவே தாங்கள் ஒப்புக்கொள்ள முடியும் எனப் பாராளுமன்றத்தார் கூறினர். ஆர்மீனியத்தைக் கண்டித்தும் அவர்கள் ஒரு தீர்மானத்தை நிறைவேற்றினர். ஆர்மீனியக் கொள்கையை உடையவர்கள் தண்டிக்கப்பட வேண்டுமெனவும், அவர்களது நூல்களுக்குத் தடை விதிக்கப்பட வேண்டுமெனவும், பெரும் பதவிகளிலிருந்து அவர்கள் உடனே நீக்கப்பட வேண்டுமெனவும் அத் தீர்மானம் கூறியது. மறைமுகமாகத் தமது நண்பர்களைத் தாக்கிய இத் தீர்மானத்தைச் சார்லஸ் வெறுத்தார். தமது

தெய்விக உரிமையில் பாராளுமன்றம் தலையிடுவதை அவரால் பொறுக்க முடியவில்லை. கூட்டத்தை ஒத்திப்போடும்படி பாராளுமன்றத்திற்கு அவர் ஆணையிட்டார். அதன் சபாநாயகர் (Speaker) ஃபின்ச் (Finch) என்பார் மன்னரது கட்டளைக்குப் பயந்து, சபையை விட்டு வெளியே செல்ல, இருக்கையை விட்டு எழுந்தார். அப்போது அவரை இரண்டு பேர் அழுத்திப் பிடித்துக்கொள்ள, எலியட் (Eliot) என்பார் மூன்று தீர்மானங்களைப் படித்தார். படிக்கப்பட்ட தீர்மானங்களை ஓட்டுக்கு விடும்படி சபாநாயகரை எலியட் என்பார் கேட்டுக்கொண்டார். சபாநாயகர் தேம்பித் தேம்பி அழுது கொண்டே அத் தீர்மானங்களை ஓட்டுக்குவிட மறுத்துவிட்டார். கோபமடைந்த எலியட் தமது எதிர்ப்புத் தீர்மானங்களை (Protestations) தீயிட்டுக் கொளுத்தினர். அதற்குள் சார்லஸ் பாராளுமன்றத்தினின்றும் மேஸ் (Mace) என்னும் தமது அடையாளச் சின்னத்தை எடுத்துவரும்படி தமது சார்ஜண்டை அனுப்பினர். அச்சின்னத்தைத் தரமுடியாதெனப் பாராளுமன்றம் கூறிவிட்டது. எனவே, அச்சபையைக் கலைக்கும்படி தமது சேவகனைச் சார்லஸ் அனுப்பினர். சேவகன் வருமுன் ஹோல்ஸ் (Holles) என்பார் தம் நினைவிலிருந்த எலியட்டின் தீர்மானங்களை உரக்கக் கூறினர். கதவுகளை மூடிக்கொண்டு அத் தீர்மானங்களைப் பாராளுமன்றமானது ஏகமனதாக நிறைவேற்றியது.

இங்கிலாந்தின் பிராடெஸ்டன்டு மத ஏற்பாட்டை மாற்ற முயலுபவர்களும், பாராளுமன்றத்தின் சம்மதமின்றி டன் எடை வரி, பவுண்டுக் கட்டணம் போன்ற வரிகளை வசூலிப்பவர்களும், அவ்வரிகளைக் கொடுப்பவர்களும் தேசத்துரோகிகளாக மதிக்கப் படத்தக்கவர்கள் என்று அந்தத் தீர்மானம் கூறியது. அதற்குள் பாராளுமன்றத்தைக் கலைக்க வந்த அரச தூதன் அதன் கதவுகளைத் தட்டிக்கொண்டிருந்தான். தீர்மானம் நிறைவேறிய பின்பே கதவுகள் திறக்கப்பட்டன. ஆரவாரத்துடன் மன்ற உறுப்பினர்கள் வெளிவந்தனர். அப்போது மூடப்பட்ட அம் மன்றத்தின் கதவுகள் பதினேர் ஆண்டுகளுக்குத் திறக்கப்படவேயில்லை. சார்லஸ் மற்ற ஐரோப்பிய மன்னர்களைப் போல் தனியாட்சி செலுத்தத் தொடங்கினர்.

# 5. முதலாம் சார்லஸின் தனியாட்சி (1629-1640)

பதினோராண்டுக் கொடுங்கோன்மை (Eleven Years Tyranny).

பொருளாதாரத் துறையில் கொடுங்கோன்மை (1629 - 1637) : டன் எடை வரியும் பவுண்டுக் கட்டணமும், 1629 (Tonnage and Poundage)—நைட் பட்டப் பற்றீடு, 1630 (Distraint of Knighthood)—காடு பாதுகாப்புச் சட்டங்கள், 1637 (Forest Laws)—லண்டன் நகர் விஸ்தரிப்புத் தடைச் சட்டம்—தனியுரிமை விற்றல், 1635 (Sale of Monopolies)—கப்பற் பணம், 1634, 1635, 1636 (Ship Money)—ஹாம்ப்டன் வழக்கு 1637 - 1638.

முழுநிறைக் கொள்கை (Policy of Thorough) : ஸர் தாமஸ் வென்ட் வொர்த்—லாடின் சமயக் கொள்கை: சமயத் துறையில் கொடுங் கோன்மை—லாடும் ஸ்காட்லாந்தும்—முதல் பிஷப்புகள் போர், 1639—குறுகிய பாராளுமன்றம், 1640 (Short Parliament)—இரண்டாம் பிஷப்புகள் போர்—1640.

சார்லஸ் நடத்திய தனியாட்சியின் தன்மை.

## பதினோராண்டுக் கொடுங்கோன்மை (Eleven Years Tyranny)

முதல் மூன்று பாராளுமன்றங்களும் தமது விருப்பத்துக்கு முற்றிலும் மாறான முறையில் நடந்துகொண்டதைக் கண்ட சார்லஸ் உளம் நொந்தார். இனிமேல் கூடியவரை அப்பாராளு மன்றத்தைக் கூட்டாமலேயே ஆட்சி செய்ய அவர் உறுதி பூண்டார். அதன் தயவைத் தாம் எதிர்நோக்க வேண்டியதன் காரணம் தமது பணமுடையே என்பதை அறிந்த சார்லஸ் பல வகையிலும் அக்குறையைப் போக்கிக்கொள்ள முயற்சிபுரிந்தார். தமது வருவாயின் பெரும் பகுதியை விழுங்கிவந்த ஐரோப்பியப் போர்களை அவர் நிறுத்தினர். 1629ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத் தில் ஏற்பட்ட சூசா (Susa) உடன்படிக்கையின்படி அவர் ஃபிரான் ஸோடு சமாதானம் செய்துகொண்டார். 1630ஆம் ஆண்டு நவம்பர் மாதத்தில் ஏற்பட்ட மாட்ரிட் (Madrid) உடன்படிக்கை

யின்படி அவர் ஸ்பெயினோடு புரிந்துவந்த போரை நிறுத்தினார். அதன்பின் பாராளுமன்றத்தின் உதவியின்றி எத்தனை வழிகளிலெல்லாம் பணம் திரட்ட முடியுமோ அத்தனை வழிகளையும் அவர் கையாள ஆரம்பித்தார். பதினோராண்டுகள் அவர் இங்ஙனம் தனியாட்சி செலுத்தினார்.

## பொருளாதாரத் துறையில் கொடுங்கோன்மை (1629-1637)

டன் எடை வரியும் பவுண்டுக் கட்டணமும் (Tonnage and Poundage)

தான்தோன்றித்தனமாய்ச் சார்லஸ் தம் குடிமக்களிடம் பல வரிகளை வசூலித்தார். இச்செயலில் அவருக்குத் துணையாக நின்றவர் அவரது கருவூலத் தலைமைப் பிரபுவான ரிச்சர்டு வெஸ்டன் (Richard Weston) என்பவராவர். அவரது சேவையை மெச்சி, சார்லஸ் அவருக்குப் போர்ட்லண்டு எர்ல் (Earl of Portland) என்ற பட்டத்தை வழங்கினார். அவர் பழைய அரசியலமைப்பு ஏடுகளைப் புரட்டி வெகு நாள்களாகக் கைவிடப்பட்ட பல நில மானியக் கட்டணங்களை எல்லாம் உயிர்ப்பித்தார். அவரது துணை கொண்டு சார்லஸ் முதலில் டன் எடைவரி, பவுண்டுக் கட்டணம் என்ற இரு சுங்க வரிகளை வணிகர்களிடமிருந்து வசூலித்தார். நாட்டினுள் இறக்குமதியாகிற ஒவ்வொரு டன் சாராயத்தின் மீதும் ஒவ்வொரு பவுண்டு வியாபாரப் பண்டங்கள் மீதும் சுங்க வரி விதிக்குமுரிமை தொன்றுதொட்டே அரசர்களுக்கு இருந்துவந்தது தான். ஆனால், பாராளுமன்றத்தின் அனுமதி பெற்றே அரசர்கள் அவற்றை வசூலிப்பது வழக்கம். சார்லஸ் அவ்வழக்கத்துக்கு மாறாக நடந்துகொண்டார். அதை எதிர்த்துச் சேம்பர்ஸ் (Chambers) என்ற வணிகர் வரிகொடுக்க மறுத்தார். பாராளுமன்றத்தின் அனுமதியின்றி வசூலிக்கப்பட்ட அவ்வரிகள் சட்டத்துக்கு விரோதமானவை என அவர் கூறினார். சட்டம் மன்னர் சார்பிலில்லை. எனினும், சட்டத்துக்கு விளக்கம் கூறிய பிரிவி கவுன்ஸில் உறுப்பினர்கள் அவருக்குச் சாதகமாயிருந்தனர். சார்லஸுக்கு முன்பிருந்த மன்னர்கள் பலர் அவ்வரிகளை விதித்துள்ளனரென்றும், வியாபாரத்தைக் கட்டுப்படுத்துமுரிமை மன்னனுக்கே உரியதென்றும், அதனால்தான் உரிமைகள் விண்ணப்பத்தில் கூட அவை கண்டிக்கப்படவில்லையென்றும் அவர்கள் கூறினர். சேம்பர்ஸ் பிரிவு கவுன்ஸில்முன் விசாரிக்கப்பட்டபின் அவர்மீது 2000 பவுன் அபராதம் விதிக்கப்பட்டதோடு, சிறையிலும் தள்ளப்பட்டார். அரசருக்குப் பணிந்து அவரது தனிச்சிறப்பதிகாரத்தை

ஒப்புக்கொண்டால் அவருக்கு விடுதலை கிடைக்குமெனக் கவுன்ஸிலர்கள் அறிவித்தனர். எனினும், சேம்பர்ஸ் பிடிவாதமாக வரிகொடுக்க மறுத்துச் சிறை புகுந்து ஆறு ஆண்டுகள் அங்குத் துன்பப்பட்டார். இங்ஙனம் தனிமனிதர்கள் பொது உரிமைகளுக்காகத் தைரியமாகப் பாடுபட முன்வந்ததாலேயே ஸ்டூவர்ட்டுகள் காலத்துப் பாராளுமன்றம் தனது உரிமைகள் பலவற்றைப் பெற முடிந்தது.

### நைட் பட்டப் பற்றீடு (Distraint of Knighthood, 1630)

உயிர்ப்பிக்கப்பட்ட பழைய நிலமானியக் கட்டணங்களுள் இதுவும் ஒன்ருகும். எட்வர்ட் காலத்தில் ஓர் ஆண்டுக்கு நாற்பது பவுன்களையோ அல்லது அதற்கும் மேற்பட்ட தொகையையோ வருமானமாய்ப் பெறுகிறவர்கள் கட்டாயமாக நைட் வீரர்களாகப் பதிவு செய்துகொள்ள வேண்டுமென்ற சட்டம் அமலில் இருந்தது. அது பல ஆண்டுகளாக வழக்கிழந்துவிட்டது. எனினும், சார்லஸ் அதை மீண்டும் உயிர்ப்பித்தார். இச்சட்டப்படி வீரர்களாகப் பட்டம் பெற்ற ஒவ்வொருவரும் மன்னனுக்கு ஒரு குறிப்பிட்ட தொகையைக் கட்டணமாகச் செலுத்தினர். நைட் வீரர்களாவதற்கு விரும்பாதவர்கள் அதற்கு ஈடாக ஒரு தொகையை அபராதமாகச் செலுத்தும்படி வற்புறுத்தப்பட்டனர். இங்ஙனம் நைட் பட்டத்தைப் பெற்ருர், பெருதார் என்ற இருசாராரிடமிருந்தும் அரசருக்கு வருப்படி கிடைத்தது.

### காடு பாதுகாப்புச் சட்டங்கள் (Forest Laws, 1637)

மன்னனுக்குச் சொந்தமான காடுகளின் எல்லைகளைக் குறிப்பிடும் ‘காடு பாதுகாப்புச் சட்டங்கள்’ உயிர்ப்பிக்கப்பட்டன. முன்பு காடுகளாயிருந்த பல இடங்களில் கனவான்களது வீடுகள் காணப்பட்டன. அவர்களெல்லாம் அத்துமீறி அரசனின் நிலங்களைக் கவர்ந்துகொண்டவர்களாகக் கருதப்பட்டனர். அதற்காகப் பெருந்தொகைகள் அவர்களிடமிருந்து அபராதமாக வசூலிக்கப்பட்டன. சாலிஸ்பரி எர்ல் 20,000 பவுன்களும், வெஸ்ட்மூர்லாந்து எர்ல் என்பார் 19,000 பவுன்களும் ராக்கிங்ஹாம் காடுகளில் வீடுகட்டியதற்காக அபராதம் செலுத்தினர்.

### லண்டன் நகர் விஸ்தரிப்புத் தடைச் சட்டம் (Proclamation against Extension of London)

லண்டன் மாநகர் எல்லையை வரையறுக்கும் தனி ஆணைப் பேரறிவிப்பு ஒன்றைச் சார்லஸ் வெளியிட்டார். அதன்படி குறிப்பிட்ட லண்டன் நகர எல்லைக்கும் வெளியே குடியேறியவர்கள் எல்லாம் அபராதத்துக்குள்ளானுர்கள். பெட்ஃபோர்ட் எர்ல்

(Earl of Bedford) என்பார் கவண்ட் தோட்டத்தில் மாளிகைகளைக் கட்டியதற்காக ஒரு பெருந்தொகையை அபராதமாகச் செலுத்தினர். வேறு சில பிரபுக்கள் தங்களது சொந்த நிலபுலன்களில் (Estates) வாழாது லண்டனில் வாழ்வதற்காக அபராதம் விதிக்கப்பட்டார்கள். மற்றும், சிலர் விளைச்சல் நிலங்களை மேய்ச்சல் நிலங்களாக மாற்றியதற்காக அரசாங்கத்துக்கு நஷ்டவீடு வழங்க வேண்டியிருந்தது. அந்நிலங்களில் வாழ்ந்த பலரையும் அங்கிருந்தும் விரட்டியதாக அன்னார் குற்றம் சாட்டப்பட்டனர். ஒரு சிறு குடிசையைத் தன் நிலபுலன்களினின்றும் அகற்றியவர்கள்கூட மேற்சொன்ன குற்றத்துக்காளாயினர். வேறு எந்தச் சட்டங்களுக்கும் கட்டுப்படாமல் வாழ்ந்த பெருநிலக்கிழார்களை இச்சட்டம் பெரிதும் பாதித்தது. அவர்கள் எல்லாம் அரசரின் பகைவர்களானார்கள்.

### தனியுரிமை விற்றல் (Sale of Monopolies, 1635)

வியாபாரிகளைச் சுங்க வரிகளாலும், கனவான்களைக் கட்டாய நைட் பட்டமளிப்பாலும், பிரபுக்களைக் காடு வரிகளாலும் தாக்கிய சார்லஸ் சாதாரண மக்களைத் தனியுரிமை வழங்குவதன் மூலம் துன்புறுத்தினர். 1624ஆம் ஆண்டுச் சட்டப்படி தனியுரிமை வழங்குவது சட்ட விரோதமேயெனினும் தனிப்பட்டவர்களுக்குத் தனியுரிமை வழங்குவதையே அச்சட்டம் கண்டித்தது. பெரிய கம்பெனிகளுக்கும் கார்ப்பரேஷன்களுக்கும் தனியுரிமை வழங்குவதை அது கண்டிக்கவில்லை. எனவே, சார்லஸ் பல லண்டன் கம்பெனிகளுக்குத் தனியுரிமை வழங்கி அதற்காகக் கட்டணம் வசூலித்துக்கொண்டார். சோப்பு செய்வதில் தனியுரிமை பெற்ற ஒரு கம்பெனி ஒரு டன் சோப்புக்கு நான்கு பவுன் கட்டணம் செலுத்துவதாக ஒப்புக்கொண்டது. அச்சோப்புக் கம்பெனிக்காரர் ஒரு கத்தோலிக்கர். எனவே, கத்தோலிக்கன் கைப்பட்ட அச் சோப்பானது மக்களின் உடம்பையும் ஆன்மாவையும் ஒருங்கே கறைப்படுத்திவிடுமெனப் பலர் கூக்குரலிட்டனனர்.

### கப்பற் பணம் (Ship Money, 1634, 1635, 1636)

அடுத்தபடியாக, சார்லஸ் கப்பற்படை யொன்றைத் திரட்டும் முயற்சியிலீடுபட்டார். டச்சு, ஃபிரெஞ்சுக் கப்பற்படைகளிடமிருந்து இங்கிலாந்தைக் காக்கத் தனக்குக் கப்பல்களை வழங்குமாறு கடற்கரைப் பட்டினங்களுக்கு அவர் ஒரு கட்டளை பிறப்பித்தார் (1634). கப்பல்கள் தர இயலாதவர்கள் அதற்கு ஈடாகக் கப்பல்களை வைத்துப் பராமரிப்பதற்காக ஒரு தொகையைச் செலுத்தும்படி அவர் கூறினர். பெரிய கப்பல்களை அரசர் கேட்டதால் லண்டனைத் தவிர மற்றப் பட்டினங்கள் கப்பல்களுக்குப் பதிலாகப் பணத்தையே

கொடுத்தன. போர்க்காலத்தில் அரசர் துறைமுகப் பட்டினங்களை இவ்விதம் கேட்பது பழையதொரு வழக்கமாகும். ஆனால், சார்லஸ் அமைதிக் காலத்தில் கடற்படை திரட்ட விரும்பியதை மக்கள் சந்தேகித்தனர். மன்னரது நோக்கம் கடற்படை திரட்டுவதல்ல வென்றும், பணம் திரட்டுவதே முக்கிய நோக்கமென்றும் பலர் நினைத்தனர். இவ்வெண்ணத்தை உறுதிப்படுத்துவதேபோல் 1635ஆம் ஆண்டில் சார்லஸ் உள்நாட்டுப் பட்டணங்களிட மிருந்தும் கப்பல்களைக் கேட்டார். அவை கப்பல்களைத் தரமுடியா தெனத் தெரிந்துகொண்டு அவற்றுக்குப் பதிலாக ஒரு குறிப்பிட்ட தொகையைச் செலுத்தும்படி அவர் கட்டளையிட்டார். 1636ஆம் ஆண்டிலும் இதே போன்று உள்நாட்டுப் பட்டணங்களிலிருந்து 'கப்பற் பணம்' என்ற மேற்படி கட்டணத்தை வசூலிக்க ஒரு சட்டம் கொணரப்பட்டது. உள்நாட்டுப் பட்டணங்களில் அக் கட்டணம் வசூலிக்கப்பட்டது அதுவே முதல் தடவை. எனவே, பொதுமக்கள் பீதியுற்றனர். பாராளுமன்றத்தின் அனுமதியின்றிக் கப்பற் பணமானது ஒவ்வோர் ஆண்டும் வசூலிக்கப்பட்டதைக் கண்ட மக்கள், எங்கு அந்தக் கட்டணம் நிரந்தர வரியாக மாறி விடுமோ எனப் பயந்தனர்.

### ஹாம்ப்டன் வழக்கு (Hampton's Case, 1637-1638)

பக்கிங்ஹாம்ஷயரில் வாழ்ந்த கனவானான ஹாம்ப்டன் என்பார் தாம் செலுத்த வேண்டிய கப்பற் பணத்தொகையாகிய 20 ஷில்லிங்கைக் கொடுக்க மறுத்தார். பாராளுமன்றத்தின் அனுமதி யின்றி வசூலிக்கப்பட்டதால், அது சட்ட விரோதமானது என அவர் கூறினார். அவரது வழக்கு எக்ஸ்செக்கர் நீதிமன்றத்தின் முன் கொணரப்பட்டது. நீதிபதிகள் பன்னிருவரில் ஏழு பேர் அரசன் கப்பற் பணம் வசூலித்தல் சட்டரீதியானதே எனக் கூறினர். எனவே, ஹாம்ப்டன் சிறையிடப்பட்டார். ஹாம்ப் டனுக்காக வாதாடிய வழக்கறிஞர்கள் பாராளுமன்றத்தின் அனுமதி யின்றி அரசன் வரியிடக்கூடாதென்று கூறிய உரிமை விண்ணப் பத்தை மேற்கோளாக எடுத்துக்காட்டி அரசனது செய்கையைக் கண்டித்தனர். உரிமை விண்ணப்பம் வரியைப் பற்றித்தான் பேசுகிறதே யொழியக் கப்பற் பணத்தைப்பற்றி ஒன்றும் சொல்ல வில்லையென்றும், கப்பற் பணத்தை வரியென்று கருதமுடியா தென்றும், அரசரது வழக்கறிஞர்கள் எடுத்து விளம்பினர். ஹாம்ப்டனுக்காக வாதாடிய வழக்கறிஞர்களின் வாதங்கள் அச் சிடப்பட்டு நாடெங்கும் பரப்பப்பட்டன. அவற்றைப் படித்த மக்கள் நியாயம் ஹாம்ப்டன் பக்கமே இருப்பதாகவும், அரசனுக்குப் பயந்து நீதிபதிகள் நீதிக்குப் புறம்பாகத் தீர்ப்பளித்துவிட்டனர் எனவும் எண்ணினர். முக்கியமாக நாட்டுப்புறத்தில் ஷெரிப்புக

ளாகவும் அமைதிகாண் நீதிபதிகளாகவும் பணிபுரிந்த நடுத்தர மக்கள் அரசரை ஒரு சட்ட விரோதி என நினைத்தனர். அதோடு, பாராளுமன்றமானது இனித் தனக்கு நீதிமன்றங்கள் மூலம் எந்த நியாயமும் கிடைக்காது என்ற முடிவுக்கு வந்தது. தனது உரிமைக்காகத் தானேதான் போராட வேண்டுமென்று அது தீர்மானித்தது.

இங்ஙனம் சார்லஸ் தமது பொருளாதாரக் கொள்கை மூலம் நாட்டு மக்களிற் பல பிரிவினரையும் ஒருங்கே பகைத்துக்கொண்டார். பாராளுமன்றத்தில் தம்மை எதிர்த்தவர்களை அரசர் நடத்திய விதமும் மக்களின் கோபத்தை வளர்த்தது. எலியட், ஹோல்ஸ், வாலன்டைன் என்ற மூன்று பாராளுமன்ற உறுப்பினர்களும் சிறையிடப்பட்டார்கள். அவர்களது வழக்கு நீதிமன்றத்துக்கு வந்தபொழுது, பாராளுமன்றத்தில் நடந்ததை விசாரிக்க நீதிபதிகளுக்குத் தகுதியில்லையெனக் கூறி, அவர்கள் தங்களது கட்சியை எடுத்து வாதாட மறுத்துவிட்டனர். எனவே, அவர்கள் சிறையிடப்பட்டனர். மற்ற இருவரும் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு சிறையினின்றும் தப்பியபின்னும் எலியட் பிடிவாதமாகச் சிறையிலேயே இருந்தார். அங்கு அவர் 'மனிதனின் முடியரசு' (Monarchy of Man) எனும் நூலை எழுதினார். நடுவில் அவருக்கு எலும்புருக்கி நோய் வந்துவிட்டது. இருட்டும் காற்றின்மையும் கொண்ட சிறையினின்றும் தம்மை வேறிடத்துக்கு மாற்றும்படி எலியட் கேட்டுக்கொண்டார். சார்லஸ் வேண்டுமென்றே அவ்வேண்டுகோளைப் புறக்கணித்தார். எலியட், பாவம், சிறையிலேயே மாண்டார். அவரது சடலத்தை அவர் சொந்த ஊருக்கு எடுத்துச் செல்ல அவரது புதல்வர்கள் விரும்பினர். அதற்கும் சார்லஸ் இடம் கொடுக்கவில்லை. உயிர்ப்பிச்சை கேட்ட எலியட்டைப் புறக்கணித்த அதே சார்லஸ் குடிமக்களிடம் தமது உயிருக்காக மன்றாடும் நாள் வரக்கூடும் என்பதை அவர் அறியாமற்போனார்.

## முழு நிறைக் கொள்கை (Policy of Thorough)

சார்லஸ் தமது தனியாட்சியை இருபெரும் நண்பர்களைக் கொண்டு செலுத்தினார். அவர்களுள் ஒருவர் ஸர் தாமஸ் வென்ட்வோர்த் (Sir Thomas Wentworth) என்பவர்; மற்றவர் வில்லியம் லாட் (William Laud) என்பவர். இவ்விருவரும் அரசரது இரு கைகளென நின்று அவரது அதிகாரத்தைச் செலுத்தினர். அரசரது தனிச்சிறப்பதிகாரத்தை (Prerogative) எவ்வாறேனும் முழுமையாகவும் நிறைவாகவும் நடைமுறையில் கொண்டு செலுத்த வேண்டுமென்பது அவர்களின் குறிக்கோள். இக்குறிக்கோளை அடைய முழுமனத்தோடும் அவர்கள் பாடுபட்டனர். 'எத்தனை

இடையூறுகள் வரினும் அவற்றையெல்லாம் ஊடுருவிச்சென்று எடுத்த காரியத்தை முடித்தே தீருவோம்' என்று அவர்கள் கொண்டிருந்த ஒரு கொள்கைக்கே முழு நிறைக் கொள்கை எனப் பெயர்.

சர் தாமஸ் வென்ட்வொர்த்

முழுநிறைக் கொள்கையை அரசியலில் வெற்றிகரமாகச் செயல்படுத்தியவர் வென்ட்வொர்த் என்பவராவார். இவர் ஆரம்பத்தில் அரசருக்கும் பக்கிங்ஹாமுக்கும் விரோதியாயிருந்தவர். பாராளுமன்றத்தில் பக்கிங்ஹாமின் வெளிநாட்டுக் கொள்கையை வன்மையாகக் கண்டித்தவர். வலிமை பெற்ற அரசாங்கம் அமைய வேண்டுமானால் வீணான வெளிநாட்டு விவகாரங்களில் அரசர்கள் ஈடுபடக்கூடாதென்பது அவர் கருத்து. நாட்டில் நல்ல பல சீர்திருத்தங்களைப் புகுத்த வலிமை மிக்க அரசன் தேவை என அவர் எண்ணினார். எனவே, மன்னனது தனிச்சிறப்பதிகாரங்களை அவர் ஆதரித்தார். அதே சமயம் அரசனது வரம்பு கடந்த செயல்களையும் அவர் கண்டித்தார். 1627ஆம் ஆண்டில் அரசர் விதித்த கட்டாயக் கடன்களை அவர் எதிர்த்துப் பேசினார். உரிமைகள் விண்ணப்பத்தை உள்ளபடியே ஆதரித்தவர்களில் அவரும் ஒருவர். ஆனால், டன் எடைவரி, பவுண்டுக் கட்டணம் என்ற சுங்க வரிகளை வசூலிக்கும் தனிச்சிறப்பதிகாரம் மன்னனுக்குண்டா இல்லையா என்ற விவாதம் பாராளுமன்றத்தில் கிளம்பியபோது, அவர் மன்னரது தனித்தலைமையை ஆதரித்தார். இறுதியான இறைமை மன்னனிடத்தே இருக்க வேண்டுமென்றும், பாராளுமன்றமும் மன்னனுக்குக் கட்டுப்பட்டே இயங்க வேண்டுமென்றும் அவர் வாதித்தார். பாராளுமன்றமானது ஒரேயடியாகத் தனது வரம்பை மீறி மன்னனைக் கட்டுப்படுத்த முயல்வதாக அவர் எண்ணினார். மேலும், அவர் பியூரிட்டன் கொள்கைகளை வெறுப்பவர். பியூரிட்டன்கள் பெரும்பான்மையாக இருந்த பாராளுமன்றத்தை அவர் அடக்க விரும்பினார். அதற்காக மன்னனுடன் சேர்ந்துகொண்டார். உடனே விருதுகள் அவரைத் தேடி வந்தன. முதலில் பாரன் (Baron) பட்டமும், பின்னர் வைகவுன்ட் (Vicount) பட்டமும் அவருக்குக் கிடைத்தன. நாளடைவில் அவர் வட நீதிமன்றத்துக்குத் தலைவராக்கப்பட்டார். அங்கே அவர் வெளிப்படுத்திய நிர்வாகத் திறமை அவர் ஓர் அரசியல் மேதை என்பதை நன்கு எடுத்துக்காட்டிற்று. அடுத்தாற்போல் அவர் அயர்லாந்தின் கவர்னராக நியமிக்கப்பட்டார். அயர்லாந்தில் கவர்னராயிருக்கும் போது அவர் தமது முழுநிறைக் கொள்கையை நடைமுறையில் நன்கு கையாண்டார். லஞ்ச ஊழலும், ஒழுங்கீனமும், பலவீனமும் தாண்டவமாடிய அயர்லாந்து அரசியல் நிர்வாகத்தில் ஒழுங்கையும் திறமையையும் அவர் உண்டாக்கினார். வறியோரான குடி-

யானவர்கள் செல்வந்தர்களான பிரபுக்களால் சுரண்டப்படுவதைத் தடுத்தார். ஏழைகளையும் பெண்டிரையும் ஆதரித்து அவர்களுக்கு உரிமை வழங்கினார். லினன் துணி நெய்தல் போன்ற கைத் தொழில்களையும் வியாபாரத்தையும் வளர்த்தார். சுங்க வரிகளைச் சீர்திருத்தி நாட்டின் வருமானத்தை இரட்டிக்கச் செய்தார். கடற் கொள்ளைக்காரர்களால் அலைக்கழிக்கப்பட்ட வணிகர்களைக் காத்தார். அக்கொள்ளைக்காரர்கள் பூண்டோடு ஒழிக்கப்பட்டனர். இங்ஙனம் பலவகைகளிலும் அயர்லாந்து மக்கள் முன்னேற அவர் வழிவகைகளைச் செய்தார். அமைதியை நிலைநாட்ட ஓர் நிலைப் படையையும் அவர் அங்குத் திரட்டினார். மக்களின் நலனைப் பேணும் ஓர் வல்லாட்சியை அவர் அயர்லாந்தில் நிறுவினார். சார்லஸின் தனியரசுக்குத் தக்கதொரு பிரதிநிதியாய் அவர் அயர்லாந்தில் விளங்கினார். இங்கிலாந்தின் சட்டங்களையும் மத ஏற்பாட்டை யும் பலவந்தமாக அவர் அங்குப் புகுத்தினார். ஆங்கி லிக்கக் கோட்பாடுகளையும் ஆங்கிலேய ஜெபப் புத்தகத்தையும் ஒப்புக்கொள்ளும்படி அயர்லாந்து திருச்சபையை அவர் வற்புறுத் தினார். ஆங்கிலேயப் பிராடெஸ்டன்டுகளை அயர்லாந்தில் குடி யேற்றவேண்டி, கன்னாட் (Cannought) என்ற பிரதேசத்திலிருந்த நிலங்களை எல்லாம் அரசனுக்கே உரியதெனக் கூறி, அவற்றை ஐரிஷ் பிரபுக்களிடமிருந்து பறிமுதல் செய்தார். அதன்பின் அங்கு ஆங்கிலேயர்களைக் குடியேற்றினார். இங்ஙனம் அவர் மக்களின் உரிமைகளைச் சிறிதேனும் மதிக்காது தான் நினைத்ததே சரி என்ற எண்ணத்துடன் காரியங்களைச் செய்துகொண்டே சென்றார். வெண்ட்வொர்த் ஒரு பிரிவினரை இன்னொரு பிரிவினரோடு மோதச்செய்வதன்மூலம் தமது வலிமையை நிலைநாட்ட எண்ணி னார். அதனால் எல்லாப் பிரிவினரின் வெறுப்பையும் அவர் ஒருங்கே தேடிக்கொண்டார். படைகளில் கத்தோலிக்கர்களைச் சேர்த்ததன் மூலம் பிராடெஸ்டன்டுகளையும், ஆங்கிலிக்க மத ஏற்பாட்டைப் புகுத்தியதால் பியூரிட்டன்களையும், கன்னாட் பிரதேச நிலபுலன் களைக் கைப்பற்றியதால் அயர்லாந்தியர்களையும் அவர் பகைத்துக் கொண்டார். அவர்கள் யாவரும் அவரை ஒரு கொடுங்கோலராக எண்ணினர். வெண்ட்வொர்த் அங்ஙனம் அரசியல் துறையில் மன்னரது தனியாட்சியைச் செலுத்திவந்தார்.

## லாடின் சமயக்கொள்கை : சமயத் துறையில் கொடுங்கோன்மை

சமயத் துறையில் தனியாட்சி செலுத்துவதற்குச் சார்லஸுக் குக் கருவியாக இருந்தவர் வில்லியம் லாட் (William Laud) என்பவ ராவர். ஆப்பட் (Abbot) எனும் மதகுரு ஆர்ச்பிஷப் பதவியை விட்டு நீங்கியபின் வில்லியம் லாட், கான்டர்பரி ஆர்ச் பிஷப்பாக அரசரால் நியமிக்கப்பட்டார். சமயத்துறையில் லாட் ஆட்டுகிற

படி எல்லாம் சார்லஸ் ஆடினர். லாட் ஓர் ஆர்மீனியர் எனினும், அவரது கொள்கை சார்லஸுக்குப் பெரிதும் பிடித்திருந்தது. லாடும் சார்லஸைக் கேட்காமல் ஒரு காரியத்திலும் இறங்கமாட்டார். அரசனின் ஆணையைச் சிரமேற்கொண்டு அப்படியே அதை அமல் நடத்துவதை அவர் தமது தலையாய கடமை எனக் கருதினர்.

இங்கிலாந்தில் அச்சமயம் ஆங்கிலிக்க மதமே தேசிய மதமாயிருந்தது. இவ்வாங்கிலிக்கத் திருச்சபையில் பெரும் பதவிகளில் இருந்தவர்களெல்லாம் ஆர்மீனிய மதத்தை ஆதரித்தார்கள். ஆர்மீனிய மதம் கத்தோலிக்கச் சடங்குகளையும் கோட்பாடுகளையும் பெரிதும் தன்னகத்தே கொண்டது. எனினும், போப்பாண்டவரின் ஆதிக்கத்தை அது வெறுத்தது. எனவே, இங்கிலாந்தின் மதநிலைய மேலோர் என்பார் பெரிதும் ஆர்மீனியக் கொள்கைகளையே பின்பற்றினர். திருச்சபையில் மதகுருமார்களின் ஆட்சியே நடைபெறவேண்டுமென்றும், குருமார்களின் கிருபையாலும் நல்வினைகளாலும் சடங்குகளாலும் எவரும் கிறிஸ்துவர்களாக மாறலாமென்றும், யாவரும் ஒரே ஜெபப் புத்தகத்தைக் கைக்கொள்ள வேண்டுமென்றும், திருவிருந்து மேஜையானது திருக்கோயிலின் கிழக்குக் கோடியில் இருக்கவேண்டுமென்றும், திருக்கோயில்கள் வழிபாட்டுக்கு மட்டுமே பயன்படுத்தப்படவேண்டுமென்றும், ஞாயிற்றுக் கிழமைகளில் விளையாட்டுகளில் கலந்து கொள்வதில் தவறில்லை என்றும் ஆங்கிலிக்கர்களும் ஆர்மீனியர்களும் நம்பினர். ஆனல், பியூரிட்டன்கள் இக் கொள்கைகளையெல்லாம் வெறுத்தனர். வீணான புறச்சடங்குகளையும், ஆடம்பர உடைகளை குருமார் அணிவதையும், மதப் பெரியார்களின் நாள்களைக் கொண்டாடுவதையும் ஓய்வு நாளான ஞாயிற்றுக் கிழமைகளில் கேளிக்கைகளிலீடுபடுவதையும் அவர்கள் கண்டித்தனர். கடவுளின் கிருபையால் மட்டுமே ஒருவன் கிறிஸ்துவனுயிருக்க முடியுமேயன்றி மதகுருமார்களாலும் நற்கிரியைகளாலும் ஒருவன் கிறிஸ்துவனுக முடியாதென்றும் அவர்கள் கூறினர். விவிலிய நூலையன்றி வேறு ஜெபப் புத்தகமெதையும் நம்பக் கூடாதென அவர்கள் வாதித்தனர். திருவிருந்து மேஜையானது திருக்கோயிலின் நடுவிலிருப்பதே சிறந்தது என்பது அவர்கள் எண்ணம். இவ்விதம் மாறுபட்ட கருத்துகளைக் கொண்ட மதப் பிரிவினர் வாழ்ந்த இங்கிலாந்தில் லாட் என்பார், ஒரே மாதிரியான வழிபாட்டு முறையைப் புகுத்த விரும்பினர். பியூரிட்டன்களைக் கண்டால் லாடுக்குச் சிறிதும் பிடிக்காது. அவர்களைப் பல வழிகளிலும் ஒறுத்தலில் அவர் முற்பட்டார். அவர் முதன்முதல் ஆக்ஸ்ஃபோர்டு கல்லூரியின் தலைவராயிருந்தவர். கட்டுப்பாடுகளைப் புகுத்துவதில் அவர் ஆர்வம் கொண்டவர். கல்லூரியில் பல

துறைகளிலும் அவர் தம் அடக்குமுறையாட்சியால் ஒழுங்கையும் ஓர்மையையும் உண்டாக்குவதில் அவர் வெற்றி பெற்றவர். அதே போன்று இங்கிலாந்தஜ்த்திலும் மதத்துறையில் ஓர்மையைத் தம் அதிகாரத்தைக் கொண்டு நிலைநாட்டிவிடலாம் என அவர் மனப் பால் குடித்தார். பல்வேறு மனப்பாங்குகளைக் கொண்ட மக்கட் கூட்டத்தில் எத்துறையிலுமே ஒருமாதிரித் தன்மையை ஏற்படுத் துவதென்பது முயற்கொம்பு. அதிலும் மதத்துறையில் அவ்விதம் ஏற்படுத்த முயல்வது அறியாமையாகும் என்பதை அவர் அறிய வில்லை.

மதகுருமார்களில், பழைய வைதிக ஏற்பாட்டைப் பின்பற்றிய வர்களுக்கே மேல்பதவிகளை அவர் கொடுத்தார். அரசர், நீதிபதி கள் மன்றங்களில் ஆர்மீனிய பிஷப்புகளை நியமித்தார். பிஷப் ஜக்ஸன் (Jukson) எனும் அவரது நண்பரை அவர் கருவூலத் தலைமைப் பிரபுவாக்கினுர் (Lord Treasurer). பழைய மதத்துக்குப் புறம்பானவர்களை எல்லாம், இங்கிலாந்தில் இருப்பவர்களை மட்டு மன்றிக் கடல் கடந்து சென்றவர்களையும் அவர் பலவகையிலும் துன்புறுத்தினுர். பிரிவி கவுன்ஸிலின் மூலமாக அவர் தனியாணை களைப் பிறப்பித்துப் பியூரிட்டன் புத்தகங்கள் வெளியிடுவதைத் தடுத்தார். இங்ஙனம் கருத்து வெளியீட்டு உரிமை (Liberty of Press) மக்களிடமிருந்து பறிக்கப்பட்டது. ஆனுல், அங்ஙனம் தடைசெய்யப்பட்ட நூல்களை இரகசியமாகப் பலரும் படித்தனர். பியூரிட்டன் குருமார்கள் அவர்களது முக்கிய சித்தாந்தங்களைப் போதிக்கக்கூடாதெனவும் விவாதிக்கக்கூடாதெனவும் அவர் தடையுத்தரவு போட்டார். பல பியூரிட்டன் சொற்பொழிவாளர் களுக்கு இங்ஙனம் வாய்ப்பூட்டுப் போடப்பட்டது. பியூரிட்டன்கள் தனிப்பட்ட முறையில் கூட்டமாகக் கூடித் தொழுவதும் தடை செய்யப்பட்டது. திருக்கோயில்களில் நடைபெறும் சடங்குகளில் எல்லாம் லாட் தலையிட்டுத் தூய்மைப்படுத்த முனைந்தார். திரு விருந்து வழிபாட்டு மேஜை திருக்கோயிலின் நடுவில் போடப்படு வதால் அதன் தூய்மை கெடும் என அவர் நினைத்து, அதைக் கோயிலின் கிழக்கு மூலைக்கு மாற்றும்படி உத்தரவிட்டார். உண்மையில் பல கோயில்களில் திருவிருந்து வழிபாட்டு மேஜை கள், தொப்பிகளை வைப்பதற்கும் கடிதங்கள் எழுதுவதற்கும் பயன் படுத்தப்பட்டன. எனவே, லாட் அதன் இருப்பிடத்தை மாற்றி யதில் தவறில்லை. ஆனுல், வேறு பல சில்லறைச் சீர்திருத்தங் களையும் குருமார்கள் கடைப்பிடிக்குமாறு அவர் வற்புறுத்தினுர். இதனுல் அதிருப்தி வளர்ந்தது. ஓய்வு நாளான ஞாயிற்றுக் கிழமைகளில் கேளிக்கைகளில் ஈடுபடலாமென லாட் கூறினுர். இதை ஆதரித்துச் சார்லஸ் 'விளையாட்டுகளின் புத்தகம்' (The Book of Sports) என்ற நூலை எழுதி வெளியிட்டார். அதில்

கண்டபடி ஓய்வு நாள்களில் கிறிஸ்துவர்கள் நடனம், வில் விளையாட்டு, கால்பந்து விளையாட்டு முதலிய சட்டத்துக்குட்பட்ட விளையாட்டுகளில் கலந்துகொண்டனர். இதைக் கண்ட பியூரிட்டன்கள் மனம் புழுங்கினர். மேலும், ஒரே ஜெபப் புத்தகத்தையே நாடெங்கும் பயன்படுத்த வேண்டுமென்றும் அவர் ஒரு சட்டம் ஏற்படுத்தினர்.

இங்ஙனம் லாட் வெளிச்சடங்குகளுக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்தார். புறச் சடங்குகளுக்கு ஏற்பவே அகத்தூய்மை அமையும் என்பது அவர் கருத்து. அவரது எண்ணப்படி சீர்திருத்தங்கள் நடைபெற்றனவா என்பதை அவர் நேரே சென்றோ அல்லது தமது ஆள்களை அனுப்பியோ பல கோயில்களைச் சோதித்தார். இந் நேர்முகச் சோதனை (Visitation) முதலில் அவரது ஆளுகைக்குட்பட்ட காண்டர்பரியில் நடைபெற்றது. பின், யார்க் நகரத்திற்கும் அது பரப்பப்பட்டது. ஜெபப் புத்தகத்தை ஒப்புக் கொள்ளாதவர்களும், திருவிருந்து வழிபாட்டு மேஜை திருக் கோயிலின் கீழ்க்கோடிக்கு மாற்றப்படுவதை மறுப்பவர்களும், இயேசுவின் திருநாமம் உச்சரிக்கப்படும்போது தலைவணங்காதவர்களும் முதலில் கண்டித்து எச்சரிக்கப்பட்டார்கள். மேலும் அவர்கள் பிடிவாதமாயிருந்தால் அவர்கள் சிறையில் தள்ளப் பட்டு வதைக்கப்பட்டார்கள் அல்லது பதவிகளினின்றும் அவர்கள் நீக்கப்பட்டார்கள். அங்ஙனம் அவர்களைச் சிறையிடுதற்கு எலிஸபெத் காலத்திய உயர் ஆணை நீதிமன்றங்கள் பயன்படுத்தப் பட்டன.

லெய்ட்டன் (Leighton) என்பார் பியூரிட்டன் மதக் கொள்கைகளை ஆதரித்து ஒரு நூல் எழுதியதற்காகச் சவுக்காலடிக்கப்பட்டுச் சூடுபோடப்பட்டுப் பின் சிறையில் தள்ளப்பட்டார். வில்லியம் பிரைன் (William Prynne) என்ற அறிஞர் அக்காலத்து நாடகங்களின் இழிநிலையைப் பற்றியும், அவற்றைப் பார்ப்பதால் எப்படி மக்களின் ஒழுக்கம் கெடுகிறதென்பதைப் பற்றியும் ஒரு நூல் எழுதினர். சார்லஸும் அவரது மனைவியும் நாடகப் பிரியர்களாதலால் பிரைன் அவர்களையே தம் நூலில் மறைமுகமாகத் தாக்கியிருக்கிறர் என நினைத்து, அவரை நட்சத்திர அறை நீதிமன்றம் நேரில் அழைத்து விசாரித்தபின், கடுமையான தண்டனை கொடுத்தது. இருமுறை அவரது காதுகள் அறுக்கப்பட்டன. பர்ட்டன் என்பார் பலிபீடத்தைத் (Altar) தாக்கிப் பேசியதற்காகவும், பாஸ்ட்விக் (Bastwick) என்பார் பிஷப்புகளைத் தாக்கிப் பேசியதற்காகவும் அதே கதியை யடைந்தனர். அவர்கள் தண்டனைக்கூடத்துக்கு அழைத்துச் செல்லப்படும்போது மக்கள் அன்னர்க்கு வழியில் மலர் தூவி வாயார வாழ்த்தினர். பெரிய தியாகிகளாக

அவர்கள் மதிக்கப்பட்டனர். சாதாரண மக்கள் லாடின் செயல்களைத் தவருகவே புரிந்துகொண்டார்கள். அவரும் சார்லஸின் மனைவியுமாகச் சேர்ந்துகொண்டு இங்கிலாந்துக்குள் மறுபடியும் கத்தோலிக்க மதத்தைப் புகுத்தப் பார்க்கிருர்கள் என்றே மக்கள் அனைவரும் நினைத்தனர். ஆனல், அவரை எதிர்த்துக் கலகம் செய்யுமளவுக்கு அவர்களுக்கு இன்னும் தைரியமேற்படவில்லை.

லாடும் ஸ்காட்லாந்தும்

இங்கிலாந்தில் தாம் விரும்பியபடியெல்லாம் சீர்திருத்தங்களைப் புகுத்திய லாட் என்பார், ஸ்காட்லாந்திலும் அதேமாதிரி ஒரே வழிபாட்டு முறையைப் புகுத்த முயன்ருர். ஸ்காட்லாந்தியர் பிரஸ்பிடீரிய மதக்கொள்கையில் ஊறியவர்கள். அவர்களது திருச்சபையானது மன்னர்களையும் பிரபுக்களையும் கண்டிக்குமளவுக்குப் பலமுடையதாய் விளங்கியது. ஜேம்ஸ் ஸ்காட்லாந்திலே பிறந்து வளர்ந்தவராதலால் அவர்களது உணர்ச்சிகளை ஓரளவு புரிந்துகொண்டிருந்தார். எனவே, அவர்களது சமய ஏற்பாட்டில் அவர் அதிகம் தலையிடவில்லை. ஒருசில பிஷப்புகளை அவர் ஸ்காட்லாந்தில் நியமித்தாலும் பெரும்பாலும் பியூரிட்டன் முறையிலேயே வழிபாடுகள் நடைபெற்றன. திருச்சபை நீதிமன்றங்கள் பழையபடியே தங்கள் அதிகாரங்களைச் செலுத்திவந்தன. ஆனல், சார்லஸோ, ஸ்காட்லாந்துக்கே ஒரு முறைகூடப் போகாதவர். எனவே, ஸ்காட்லாந்தியரின் வழிபாட்டு முறையை இங்கிலாந்தின் முறைக்கேற்ப அவர் மாற்ற முயன்ருர். லாட் என்பவரின் விருப்பமும் அதுவே. சார்லஸின் ஆணையின்படி ஸ்காட்லாந்திய பிஷப்புகள் ஒரு ஜெபப் புத்தகத்தை 1637-ல் தயாரித்தனர். அது பியூரிட்டன் கோட்பாடுகளுக்குப் பெரிதும் மாறுபட்டதாயிருந்தது. உடனே பியூரிட்டன் குருமார்கள் பலரும் அப் புத்தகத்தைக் கண்டிக்க ஆரம்பித்தனர். எனினும், லாட் விடாப்பிடியாக அப் புத்தகத்தின்படியே பிரார்த்தனை நடைபெறவேண்டுமென உத்தரவிட்டார். அதன்படி எடின்பர்க்கிலிருந்த செண்ட் கைல்ஸ் (St. Guiles) திருக்கோயிலில் வழிபாடு நிகழ்த்தப்பட்டது. வழிபாட்டுக்குரிய பகுதிகளைப் பூசாரியானவர் புதிய ஜெபப் புத்தகத்தினின்றும் படித்துக்கொண்டிருக்கும்போது தொழுகைக் கூட்டத்தில் பரபரப்பு ஏற்பட்டது. மங்கையொருத்தி பொங்கி எழுந்தாள். அடுத்த கணம் இருக்கைகள் பல பூசாரியின்மேல் பாய்ந்தன. நல்ல வேளையாகப் பூசாரியின் தலை தப்பியது. இங்ஙனம் லாடின் கொள்கைகளை எதிர்த்து ஸ்காட்லாந்தில் கலகம் ஏற்பட்டது. ஸ்காட்லாந்தியர் அனைவரும் கலகத்தை ஆதரித்தார்கள். கத்தோலிக்கக் கருத்துகள் அந்த ஜெபப் புத்தகத்தில் காணப்பட்டதாலும், அது இங்கிலாந்திலிருந்து கொண்டுவரப்

பட்டதாலும் ஸ்காட்லாந்தியர் அதை வெறுத்தனர். பிரபுக்களுக்குக் கிடைக்கவேண்டிய பதவிகளை எல்லாம் பிஷப்புகள் கைப்பற்றிக்கொண்டதால் அவர்களும் கலகத்தில் சேர்ந்து கொண்டனர். பிரஸ்பிடீரியன் மத ஏற்பாட்டை எவ்வாற்றானும் காக்க உறுதி பூணுவதாகக் கூறிய ஒரு தேசிய ஒப்பந்தத்தில் (National Covenant) யாவரும் கையெழுத்திட்டனர். ஸ்காட்லாந்தை ஆள, பிரபுக்கள், குருமார்கள், நிலப்பிரபுக்கள், பட்டணவாசிகள் என்போர் நான்கு சபையினர் (Four Tables) எனப் பெயர் தரப்பெற்றனர்.

இங்ஙனம் அவர்கள் கலகத்திலிறங்கியதைக் கேட்ட சார்லஸ் திடுக்கிட்டார். ஏனெனில், அவர் அவ்விதம் நேருமென்று சிறிதும் எதிர்பார்க்கவில்லை. உடனே ஸ்காட்லாந்தியர்களைச் சமாதானப் படுத்தும் முயற்சியில் அவர் ஈடுபட்டார். 1638ஆம் ஆண்டில் ஸ்காட்லாந்தில் புகுத்தப்பட்ட ஜெபப் புத்தகம் தடை செய்யப் பட்டது. ஸ்காட்லாந்திய பிஷப்புகளின் அதிகாரங்கள் குறைக்கப் பட்டன. ஸ்காட்லாந்தியரின் குறைகளைக் கேட்க கிளாஸ்கோ நகரில் ஒரு மாநாடு கூட்டப்பட்டது. இதில் 96 பிரபுக்களும் 144 சமயக் குருமார்களும் கலந்துகொண்டனர். சமயக் குருமார்கள் ஸ்காட்லாந்திய பிஷப்புகளை வன்மையாகக் கண்டித்ததோடு அவர்களைத் தீர விசாரிக்க வேண்டுமெனவும் கூறினர். சார்லஸின் பிரதிநிதியாக அக் கூட்டத்துக்குச் சென்றிருந்த ஹாமில்டன் பிரபு (Marquis of Hamilton) என்பார் கூட்டத்தைக் கலைக்குமாறு கூறினார். ஆனால், அவர் சொன்னதை யாரும் ஒரு பொருட்டாக எடுத்துக்கொள்ளவில்லை. பிஷப்புகளைப் பதவியினின்றும் நீக்கிப் பிரஸ்பிடீரிய மதத்தை நாட்டில் நிலைநாட்ட வேண்டுமென்று ஒரு தீர்மானம் அச்சபையில் ஏகமனதாக நிறைவேறியது.

## முதல் பிஷப்புகள் போர் (1639)

சார்லஸுக்கும் ஸ்காட்லாந்தியருக்கும் இங்ஙனம் சமரசப் பேச்சுகள் முரிந்துவிட்டதால் அவர் தம் கௌரவத்தைக் காப்பாற்றிக்கொள்ள ஸ்காட்லாந்துமீது படையெடுக்கத் தீர்மானித்தார். அங்குமிங்குமாகக் கடன் வாங்கி அவர் ஐம்பதினாயிரம் பவுன்களைச் சேர்த்தார். அதைக்கொண்டு அவர் ஒரு படையைத் திரட்டிக்கொண்டு ஸ்காட்லாந்து நோக்கிச் சென்றார். சார்லஸின் படையில் இருந்த வீரர்களிற் பலர் பியூரிட்டன்கள். அவர்களுக்கு ஸ்காட்லாந்தியர் உறவினர்களாகவே காட்சியளித்தனர். எனவே, சிலர் வலிய எதிரியின் பக்கம் போய்ச் சேர்ந்தனர். படையில் கலகம் கிளம்பியது. மேலும், ஸ்காட்லாந்துப் படையில் நல்ல வீரர்கள் நிறைய இருந்தனர். ஐரோப்பாவில் கத்தோலிக்கர்

களுக்கு எதிராக முப்பதாண்டுப் போரில் கலந்துகொண்டு, அவர்கள் நல்ல பயிற்சி பெற்றிருந்தார்கள். அலெக்ஸாண்டர் லெஸ்லி (Alexander Leslie) என்ற திறமையுள்ள தளகர்த்தர் அப் படையினரை நடத்திக்கொண்டுவந்தார். இதையறிந்த சார்லஸ் போர் நடைபெறுமுன்பே ஸ்காட்லாந்தியரிடம் பெர்விக் (Berwick) என்ற இடத்தில் ஓர் உடன்பாட்டைச் செய்துகொண்டார். ஒரு பொதுச் சபையின்மூலம் (General Assembly) ஸ்காட்லாந்தின் சிவில், இராணுவப் பிரச்சினைகள் தீர்க்கப்படவேண்டுமென்பதை அவர் அவ்வுடன்பாட்டின் மூலம் ஒப்புக்கொண்டார். சார்லஸ் இவ்வுடன்பாட்டைச் செய்துகொண்டது, மேலும் நன்கு ஆயத்தம் செய்துகொண்டபின் ஸ்காட்லாந்தியரைத் தோற்கடிக்க வேண்டுமென்ற எண்ணத்தாலேதான். எனவே, அவர் இங்கிலாந்து சென்றதும் தமது நண்பரான வெண்ட்வொர்த்தை அயர்லாந்திலிருந்து வரவழைத்தார். அவருக்கு ஸ்டிராஃபோர்ட் எர்ல் (Earl of Strafford) என்ற பட்டத்தைச் சார்லஸ் வழங்கினர். ஸ்டிராஃபோர்டு சார்லஸின் தலைமை ஆலோசகரானர். பாராளுமன்றத்தை மறுபடியும் கூட்டுவதே நல்லது எனச் சார்லஸுக்கு அவர் யோசனை கூறினர்.

### குறுகிய பாராளுமன்றம் (Short Parliament, 1640)

ஸ்டிராஃபோர்டின் விருப்பப்படியே சார்லஸ் ஒரு பாராளுமன்றத்தைக் கூட்டினர். அம் மன்றமானது எடுத்தவுடனேயே தனது குறைகளையெல்லாம் கூறி, அவற்றை அரசன் நீக்கினலொழிய மேற்கொண்டு எந்தக் காரியத்தையும் செய்யமுடியாதெனக் கூறியது. மேலும், தனது இறைமையை ஒப்புக்கொள்ளும்படியும், ஸ்காட்லாந்துடன் நடத்திவந்த போரைக் கைவிடும்படியும் அது அரசரைக் கேட்டுக்கொண்டது. இதைக் கேட்ட அரசர் உடனே அதைக் கலைத்துவிட்டார். மூன்றே மூன்று வாரங்களுக்கு மட்டுமே நிலைத்ததால் இது 'குறுகிய பாராளுமன்றம்' (Short Parliament) எனப் பெயர் பெறுகிறது.

### இரண்டாம் பிஷப்புகள் போர் (1640)

சார்லஸ் தம் படைவீரர்களை ஒருங்கு சேர்த்துக்கொண்டு 1640-ல் ஸ்காட்லாந்துமீது மறுபடியும் போர் தொடுத்தார். ஆங்கிலேய சேனை பியூரிட்டன்களை எதிர்க்க மறுத்தது. அதற்குப் பதிலாக ஸ்காட்லாந்தியப் படை இங்கிலாந்தில் நுழைந்தது. அவர்களை நண்பர்கள்போல் ஆங்கிலேயர் வரவேற்றனர். என்ன செய்வது என்று தெரியாத சார்லஸ், பிரபுக்கள் அடங்கிய கவுன்ஸில் சபையை அழைத்து யோசனை கேட்டார். அவர்கள் மறுபடியும் பாராளுமன்றத்தைக் கூட்டுவதே சாலவும் சிறந்தது

என அபிப்பிராயம் தெரிவித்தனர். அதன் வழியே சார்லஸும் 1641-ல் பாராளுமன்றத்தைக் கூட்டினார். அதனோடு அவரது தனியாட்சி முடிவடைந்தது.

## சார்லஸின் தனியாட்சியின் தன்மை
(Character of the Personal Rule)

சார்லஸின் தனியாட்சியானது பொதுவாகக் 'கொடுங்கோன்மை' (Tyranny) என்ற பெயரால் வழங்கப்படுகிறது. தற்காலக் கண்கொண்டு பார்க்கும்போது அது அங்ஙனம் காட்சியளித்தல் இயல்புதான். ஆனால், அவர் வாழ்ந்த காலத்துக் கண்கொண்டு பார்க்கும்போது அவருடைய தனியாட்சி அவ்வளவு குரூரமானது எனச் சொல்வதற்கில்லை. அவரது சம காலத்தவர்களாகிய (Contemporaries) ஐரோப்பிய மன்னர்கள் சட்டசபைகளைக் கூட்டாமலேயே தனியாட்சி செலுத்தினர். சார்லஸோவெனின், மூன்று முறை சட்டசபைகளைக் கூட்டிய பின்னரே தனியாட்சியைச் செலுத்த ஆரம்பித்தார். ஃபிரான்ஸில் லெட்டர்ஸ் டெகேச்சட் (Letters de Catchet) எனும் ஆணைப் பத்திரங்கள்மூலம் மன்னரும் பிரபுக்களும் யாரையும் காரணமின்றிச் சிறையிடலாம். ஆனால், சார்லஸ் மிகச் சிலரையே சிறை செய்தார். வெகு சிலரே சித்திரவதை செய்யப்பட்டனர். அதுவும் டியூடர்கள் காலத்து நடைபெற்ற சித்திரவதைகளைப்போன்ற கடூரமான முறைகளைச் சார்லஸ் கையாளவில்லை. ஒரு சிலரது காதுகள் அறுக்கப்பட்டனவேயன்றி உயிர்கள் வாங்கப்படவில்லை. ஆனால். டியூடர் காலத்து அவரை எதிர்த்தோர் யாராயிருந்தாலும் மரண தண்டனை விதிக்கப்பட்டனர். டியூடர்களின் கெடுபிடிகளையும் ஐரோப்பிய மன்னர்களின் ஆட்சி முறைகளையும் பார்க்கும்போது சார்லஸ் எவ்வளவோ நல்லவராகத் தோன்றுகிறார். உண்மையில் அவர் நல்லவர்தான். அவரது படிப்பும் நண்பர்களின் ஆலோசனைகளும் அவரை மக்களுக்கெதிராக மாற்றிவிட்டன. தாம் தெய்வத்தால் நியமிக்கப்பட்டவர்; தம்மை எதிர்க்க யாருக்கும் உரிமையில்லை யென்னும் கொள்கையை விடாப்பிடியாய்ப் பிடித்துக்கொண்டிருந்ததாலேயே சார்லஸுக்கு எதிர்ப்பு வலுத்துக்கொண்டு சென்றது. போதாக் குறைக்கு அவரது நண்பர்கள் அவரது அதிகாரத்தை மிகைப்படுத்திப் புகழ்ந்தனர். அவர்களது புகழுரையும் பணிவார்ந்த செயல்களும் சார்லஸுக்கு அதிகார போதையை உண்டாக்கி, உள்ள நிலைமையைப் புரிந்துகொள்ள முடியாமல் செய்துவிட்டன.

மற்றபடி சார்லஸின் ஆட்சியில் இங்கிலாந்தின் செல்வமும் சிறப்பும் ஒருசிறிதும் குன்றிவிடவில்லை. புதிய சாகுபடி முறைகள்

கையாளப்பட்டு விவசாயம் வளர்ந்தது. தனியுரிமை வழங்கலால் தொழில் வளர்ச்சி ஓரளவு தடைப்பட்டாலும் பொதுவாக நாட்டின் வளம் பெருகியது. மத ஒறுத்தல் காரணமாகப் பல பியூரிட்டன்கள் கடல் கடந்து சென்று நியூ இங்கிலாந்து என்ற வட அமெரிக்கப் பகுதியில் குடியேற்ற நாட்டை ஏற்படுத்தினர். தம்மை அறியாமலேயே சார்லஸ் பிரிட்டிஷ் பேரரசுக்கு அடிகோலினர். இலக்கியமும் கலைகளும்கூடச் சார்லஸின் காலத்து நன்கு வளர்ந்தன. எனவே, சார்லஸின் ஆட்சியைக் 'கொடுங்கோலாட்சி' என்று கூறுவதைவிட ஒரு 'மிதமான தனியரசு' என்று பகர்தல் சாலவும் பொருத்தமுடையதாகும்.

# 6. நீடித்த பாராளுமன்றம் (1640—1642)

## (Long Parliament)

நீடித்த பாராளுமன்றத்தின் அமைப்பு.

நீடித்த பாராளுமன்றத்தின் நோக்கங்கள்.

நீடித்த பாராளுமன்றத்தின் சீர்திருத்தச் செயல்கள் : ஸ்டிராஃபோர்டின் விசாரணை—மன்னரது தனிச்சிறப்பதிகாரம் குலைக்கப்படுதல்—நீடித்த பாராளுமன்றமும் சமய ஏற்பாடும்.

இடைநிகழ்ச்சி (Incident), 1641.

அயர்லாந்துக் கலகம், 1641.

பெருங்கண்டனப் பத்திரம் (Grand Remonstrance, 1641).

ஐந்து உறுப்பினர் கைது, 1641.

பத்தொன்பது முன்மொழிக் கூற்றுகள் (Nineteen Propositions, 1642).

சார்லஸ் மன்னர் 1640ஆம் ஆண்டு, நவம்பர் மாதம், மூன்றும் தேதியன்று ஒரு பாராளுமன்றத்தைக் கூட்டினர். அன்று கூடிய அம்மன்றம் அடுத்த இருபது ஆண்டுகள்வரை கலைக்கப்படவே இல்லை. எனவேதான், அது நீடித்த பாராளுமன்றம் என்ற பெயரைப் பெறுகிறது. இங்கிலாந்து அதுவரை கண்டிராத ஒரு புதிய பாராளுமன்றமாய் அது விளங்கிற்று. டியூடர்கள் காலத்தில் மன்னருக்கும் பிரிவி கவுன்சிலர்களுக்கும் வெறும் தலையாட்டி பொம்மையாய் இருந்துவந்த பாராளுமன்றமானது ஜேம்ஸ் மன்னரது காலத்தில் அரசரது தனிச்சிறப்பதிகாரங்களைக் கண்டிக்குமளவுக்குத் துணிவைப் பெறுகிறது. அதன்பின் சார்லஸின் காலத்தில் கூடிய இப்பாராளுமன்றமானது மன்னரது இடத்தையே கைப்பற்றிவிடுகிறது. பிரிவி கவுன்ஸிலர்களின் உதவியின்றித் தானுகவே சட்டம் செய்யவும், படையைத் திரட்டவும், போர் புரியவும் அது ஆரம்பிக்கிறது. கடைசியில், மன்னரது தலையை வாங்கவும் அது துணிந்துவிடுகிறது. வியத்தகு செயல் பல புரிந்த இப்பாராளுமன்றம் உண்மையிலேயே பாராட்டப்படக் கூடியதொன்ருகுமென்பதில் சிறிதும் ஐயமில்லை.

## நீடித்த பாராளுமன்றத்தின் அமைப்பு (Composition)

பிரபுக்கள் சபையில், லௌகிகப் பிரபுக்களின் (Lay Peers) எண்ணிக்கை அறுபத்தொன்பதிலிருந்து நூற்று இருபத்து நான்காக உயர்ந்தது. ஆனால், பொதுமக்கள் சபை உறுப்பினர்களின் எண்ணிக்கை மாறவில்லை. குறுகிய பாராளுமன்றத்தில் இடம்பெற்றிருந்த 493 பேர்களில் 294 பேர் பொதுமக்கள் சபையில் மீண்டும் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். அவர்களில் பலர் திறமையும், அறிவும், உரிமை ஆர்வமும் ஒருங்கே கொண்ட தேசபக்தர்களாவர். அவர்கள் யாவருக்கும் தலைவராய் விளங்கிய பிம் (Pym) என்பவர் தலையாய பண்புகள் பல பெற்றுத் திகழ்ந்தார். டாவிஸ்டாக் (Tavistock) என்ற தொகுதியின் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட அவருக்குப் பாராளுமன்றத்திற்கு உள்ளேயும் வெளியேயும் ஏராளமான செல்வாக்கு இருந்தது. பாராளுமன்றத்தில், முப்பதுக்கு மேற்பட்ட உறுப்பினர்கள் அவரது உறவினர்களாவர். மற்றும், அவர்களது நண்பர்களும் ஏராளமாய் அதில் உறுப்பினராயிருந்தனர். அவர் உதவியால் அதற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட லண்டன் நகர் பியூரிட்டன்கள் அவர் காலால் இட்ட பணியைத் தலையால் செய்யக் காத்திருந்தனர். அவர் கையசைத்தால் கலகத்திலிறங்கக்கூடிய ஆயிரக்கணக்கான குடியானவர்கள் பக்கிங்காம் ஷயரில் இருந்தனர். சோமர்ஷட் ஷயரில் பிறந்த கனவானாகிய பிம், அமெரிக்காவோடு வியாபாரம் செய்துவந்த பிராவிடன்ட் கம்பெனியின் (Provident Company) உறுப்பினர். பிரபுக்கள் சபை உறுப்பினரான சாயே பிரபு (Lord Saye) அக்கம்பெனியின் மற்றோர் உறுப்பினர். ஜான் ஹாம்ப்டன் (John Hampton) என்னும் புகழ்பெற்ற பொதுமக்கள் சபை உறுப்பினர் அமெரிக்காவில் கனெக்டிகட் என்ற குடியேற்ற நாட்டை உருவாக்கிவந்தார். குடியேற்ற நாடுகளில் ஒரு பியூரிட்டன் அரசாங்கத்தை அமைக்கும் கூட்டு முயற்சியில் இங்ஙனம் பல பாராளுமன்ற உறுப்பினர்கள் ஈடுபட்டிருந்ததால், அவர்களுக்குள் ஒருவித ஒற்றுமையும் நம்பிக்கையும் ஏற்பட்டன. பிரபுக்கள் சபையாரும் பொதுமக்கள் சபையாரும் ஒன்றுசேர்ந்து கூட்டு மகாநாடுகள் (Joint Conferences) நடத்திப் பல காரியங்களைச் செய்தனர் கொள்கைகள் வகுப்பதிலும் அவற்றை நடைமுறையில் கொண்டு செலுத்துவதிலும் அவர்கள் போதிய பயிற்சியும் திறமையும் பெற்றனர். பெட்ஃபோர்டு (Bedford) பிரபு, எஸ்ஸெக்ஸ் பிரபு (Essex), கிம்போல்டன் பிரபு (Kimbolton) என்னும் பிரபுக்கள் சபையினர் பிம் என்பவருடன் தோளோடு தோள் சேர்ந்து பாராளுமன்றத்தின் உரிமைக்காகப் போராடினர். சுறுசுறுப்பும் நுண்ணறிவும் ஒருங்கே கொண்ட வேன் (Vane) என்ற இளைஞரும், கருமவீரர் கிராம்வெல்லும், உரிமை வீரர் ஸ்டிரோடும் (Strode) இன்னும்

பலரும் பொதுமக்கள் சபையில் பிம்மின் முழு ஆதரவாளர்களா யிருந்தனர். பிம் என்பார் அவர்களை யெல்லாம் ஒன்று திரட்டி ஊக்கமூட்டிவருவதில் தனித்திறமை கொண்டவர். ஆற்றுப் பெருக்குப்போல் தங்குதடையின்றிப் பாய்ந்த அவரது சொற் பொழிவுகள் பாராளுமன்றத்தினரைப் பரவசத்திலாழ்த்தின. அவரது அயரா உழைப்பும், செயல் திறனும், பாராளுமன்ற அலுவல் களைக் கவனித்துக்கொள்ளுவதில் அவர் காட்டிய அக்கறையும் அவரை நீடித்த பாராளுமன்றத்தின் ஓர் ஒப்பற்ற தலைவராக ஆக்கின. அவரைச் சுற்றிச் சதா ஒரு சிறு நண்பர் குழாம் இருந்து கொண்டே யிருக்கும். அதைக் கண்டு பொறாமையுற்ற அவரது எதிரிகள் அவரை 'அரசர் பிம்' (King Pym) என்று கேலியாகக் கூறுவது வழக்கம். பிம் உயர்ந்த குறிக்கோள்களை உடையவர். அரசியல் அமைப்பில் பாராளுமன்றமே தலையாய இடத்தைப் பெற வேண்டும் எனவும், அதிலும் பொதுமக்கள் சபையே பெரிதும் முக்கியத்துவம் அடைய வேண்டுமெனவும், பிஷப்புகள் உலகியல் துறையில் செலுத்திவந்த அதிகாரங்கள் குறைக்கப்பட வேண்டு மெனவும் அவர் பெரிதும் விரும்பினர். அதற்காக அவர் ஓயாது பாடுபட்டார்.

## நீடித்த பாராளுமன்றத்தின் நோக்கங்கள்

நீடித்த பாராளுமன்றத்தின் உறுப்பினர்கள் ஆரம்பத்திலேயே ஓர் உறுதியும் தீர்மானமும் கொண்டவர்களாகத் தோற்றமளித் தனர். அரசர் அதுகாறும் செலுத்திவந்த கொடுங்கோன்மைக்கு எவ்வாறேனும் ஓர் முற்றுப்புள்ளி வைக்கவேண்டுமென்று அவர்கள் தீர்மானித்தனர். வடக்கே முகாமிட்டிருந்த ஸ்காட்லாந்தியப் படைக்கு 850 பவுன் தினப்படி வழங்குதற்கு வேண்டிய பணம் கேட்கவே சார்லஸ் பாராளுமன்றத்தைக் கூட்டியிருக்கிறார் என்பதை அவர்கள் நன்கு அறிந்திருந்தனர். அவரது இக்கட்டான இந்நிலையைப் பயன்படுத்திக்கொண்டு தமது நோக்கங்களை நிறை வேற்றிக்கொள்ள அவர்கள் விரும்பினர்கள். மன்னருக்குப் பண மானியமளிக்குமுன் பல சீர்திருத்தங்களைச் செய்துவிட அவர்கள் நினைத்தனர். மூன்று பெருங் குறிக்கோள்கள் அவர்கள் முன் காட்சியளித்தன. முதலில் சார்லஸின் கொடுங்கோன்மைக்கு இலக் கான பலரையும் சிறையினின்றும் விடுவிக்க வேண்டும். பின்னர் அக்கொடுங்கோன்மைக்குத் துணைபுரிந்த அனைவரையும் தண்டிக்க வேண்டும். அதன்பின், மீண்டும் அத்தகைய கொடுங்கோன்மை ஏற்படாமலிருத்தற்கான வழிவகைகளை வகுக்க வேண்டும். இம் மூன்று பெரு நோக்கங்களை நிறைவேற்றும் முயற்சியில் பாராளு மன்றம் இறங்கியது.

## நீடித்த பாராளுமன்றத்தின் சீர்திருத்தச் செயல்கள் (1640—1642)

ஆர்ச் பிஷப் லாடின் கொடுங்கோன்மைக்கு இலக்கான பலரும் முதலில் விடுவிக்கப்பட்டனர். லெய்ட்டன் (Leighton) என்பார் சிறையினின்றும் விடுவிக்கப்பட்டதோடு ஆறாயிரம் பவுன் நஷ்ட ஈடும் தரப்பெற்றார். கத்தோலிக்க சமயத்தைச் சாடியதால் சிறை புகுந்த பிரேய்ன் (Prynne), பர்ட்டன் (Burton), பஸ்டாவிக் (Basta-wic) என்போரும் சிறையினின்றும் விடுதலை பெற்றனர். அவர்கள் சிறையினின்றும் வெளிவந்தபோது மக்கள் அவர்களது வழிகளில் மலர் தூவி அன்னவரை வரவேற்றனர். மகிழ்ச்சி ஆரவாரம் எங்குப் பார்த்தாலும் ஒலித்தது. கப்பற் பணத்தைக் கொடுக்க மறுத்த ஹாம்ப்டன் விடுவிக்கப்பட்டதோடு அவரது வழக்கில் அவருக்கு எதிராகத் தீர்ப்புச் சொன்ன நீதிபதிகளும் சிறையிடப்பட்டனர்.

அடுத்தாற்போல், பாராளுமன்றமானது அரசனது துன் மந்திரிகளை விசாரித்து அவர்களைத் தண்டிப்பதில் முனைந்தது. அந்த ஆண்டு முடிவதற்குள்ளாகவே ஸ்டிராஃபோர்டு எர்லும் (Earl of Strafford) வில்லியம் லாடும் (William Laud) சிறையிடப் பட்டனர். அவர்கள்மீது அரசியல் துரோகக் குற்றம் சாட்டப் பட்டது. இன்னும் பலர்மீதும் அரசியல் துரோகக் குற்றம் சாட்டப் பட்டது. ஸ்டிராஃபோர்டு என்பவர் உடனே விசாரிக்கப்பட்டார். ஆனால், லாட் நான்காண்டுகள்வரை சிறையிலேயே விசாரணை யின்றிக் கிடந்தார். சார்லஸின் இரு கைகளென விளங்கிய ஸ்டிராஃபோர்டும் லாடும் அடைந்த கதியைக் கண்டபலர் நாட்டை விட்டே ஓடிவிட்டனர். விண்டி பாங்க் (Winde bank) என்ற செய லாளரும் ஃபின்ச் (Finch) என்பவரும் அங்ஙனம் ஓடியவர்களே யாவர். இதன்பின் ஸ்காட் படையினருக்கு ஓர் உதவித் தொகை யைப் (3,00,000 பவுன்) பாராளுமன்றம் அளித்தது. தனது சீர் திருத்த வேலைகள் முடியும்வரை கலையவேண்டாமென அப்படை யினரை வேண்டிக்கொண்டபின், பாராளுமன்றமானது தனது மூன்றாவது நோக்கத்தை நிறைவேற்றிக்கொள்ள முற்பட்டது.

### ஸ்டிராஃபோர்டின் விசாரணை (Trial of Strafford, 1641)

ஸ்டிராஃபோர்டு சில காலமாக அயர்லாந்தின் கவர்னராக இருந்து வல்லாட்சி புரிந்துகொண்டுவந்தார். அவரது செயல்கள் இங்கிலாந்தில் இருப்பவர்களால் பெரிதும் கண்டிக்கப்பட்டன. எனினும், அவர் அயர்லாந்தில் ஒழுங்கையும் அமைதியையும் நிலை நாட்டியதால் சார்லஸ் அவரைப் போற்றினார். நீடித்த பாராளு மன்றம் தனக்கு விரோதமாய் இருப்பதை அறிந்துகொண்ட

சார்லஸ், தனக்கொரு பக்கபலமாக வைத்துக்கொள்ளவும், நெருக்கடியான சமயங்களில் ஆலோசனைகளைப் பெறவும் வேண்டி இங்கிலாந்துக்கு வரும்படி ஸ்டிராஃபோர்டைக் கேட்டுக்கொண்டார். தம்மை விரும்பாதவர்கள் பலர் பாராளுமன்றத்தில் இருப்பதை அறிந்த ஸ்டிராஃபோர்ட், இங்கிலாந்துக்கு வரத் தயங்கினர். ஆனால், சார்லஸ் பிடிவாதமாக அவரை அழைத்ததோடு அவருக்கு எந்தவிதத் தீங்கும் நேராது தாம் அவரைக் காப்பதாகவும் வாக்குறுதியளித்தார். அரைமனத்துடன் ஸ்டிராஃபோர்டு இங்கிலாந்து வந்து சேர்ந்தார். கூடிய விரைவில் பாராளுமன்றத்திலிருந்து தனது எதிரிகளை இராஜத்துரோகக் குற்றம் சாட்டிச் சிறையிட்டுவிட வேண்டும் என ஸ்டிராஃபோர்டு திட்டமிட்டார். இதை எங்ஙனமோ அறிந்துவிட்ட பொதுமக்கள் சபைத் தலைவரான பிம், ஸ்டிராஃபோர்டை முந்திக்கொண்டார். பாராளுமன்றத்தின் கதவுகளை மூடிக்கொண்டு அவசரம் அவசரமாக ஸ்டிராஃபோர்டுமீது ஓர் இராஜத்துரோகக் குற்றப் பத்திரத்தைத் தயாரித்து எடுத்துக்கொண்டு அவர் பிரபுக்கள் சபைக்கு ஓடினர். குற்றப் பத்திரத்தை அவர் அச் சபையில் படித்துக்கொண்டிருக்கும்போது, ஸ்டிராஃபோர்டு அதனுள் நுழைந்தார். பீடுநடை போட்டுக் கம்பீரப் பார்வையுடன் அவர் தம் இருக்கையை நோக்கி நடந்தார். அப்போது 'விலகு', 'விலகு' என்ற குரல்கள் நாற்புறமும் ஒலித்தன. அவர் சற்றுத் தயங்கினர். அப்போதுதான் அவர்மீது இராஜத்துரோகக் குற்றம் பொதுமக்கள் சபையால் சாட்டப்பட்டிருப்பது அவருக்குத் தெரியவந்தது. உடனே அவர் கைதுசெய்யப்பட்டுக் குற்றவாளி கூண்டுக்கு இட்டுச் செல்லப்பட்டார். ஒரு மணி நேரத்துக்குமுன் அவர் விரலசைத்தால் இங்கிலாந்தே அலறக்கூடிய ஒரு நிலை இருந்தது. அப்போது அவரை ஏறிட்டுப் பார்க்கக் கூடியவர்கள்கூடப் பிரபுக்கள் சபையில் ஒருவருமில்லை. ஆனால், அவர் கைதியானவுடன் அதே பிரபுக்கள் அவர்மீது ஏளனப் பார்வையை அள்ளி வீசி எள்ளி நகையாடினர். பல நாள்கள் வரை ஸ்டிராஃபோர்டு விசாரிக்கப்பட்டார். பிம் அவர்மீது குற்றங்களை அடுக்கிக்கொண்டே சென்றார். அவரது பேச்சில் உணர்ச்சி பெருக்கெடுத்து ஓடியது. நாகபாசத்தாற் கட்டுண்டாற்போல் ஸ்டிராஃபோர்டு திகைத்தார். மின்சாரத்தால் தாக்குண்டவர்போல் சார்லஸ் அவ்வப்போது அதிர்ச்சியடைந்தார். பின்வரப்போவனவற்றை ஒரு தீர்க்கதரிசிபோல் பிம் எடுத்து விளம்பினர். பொதுமக்கள் சபையினர் பிரபுக்கள் சபையில் கூட்டம் கூடிக்கொண்டு, பிம்முக்கு ஆதரவாக ஆரவாரஞ் செய்தவண்ணமிருந்தனர். இவ்வளவு ஆர்ப்பாட்டங்களுக்கிடையிலும், ஸ்டிராஃபோர்டு கலங்காது கல்போன்று நின்று, கேட்போர் வியக்கும் வண்ணம் தமது கட்சியைத் தாமே எடுத்து வாதாடினர். சட்டப்படி அவரை

இராஜத்துரோகியெனச் சொல்வதற்குப் போதிய ஆதாரமில்லை. மூன்றும் எட்வர்ட் காலத்து ஏற்பட்ட இராஜத்துரோகச் சட்டப்படி (Treason Law) அரசனது உயிரை வாங்கச் சதி செய்தவர்களும், அவருக்கு எதிராகப் போர் புரியப் படை திரட்டினவர்களுமே இராஜத்துரோகிகளெனக் கருதப்படத் தக்கவர்கள். ஆனால், ஸ்டிராஃபோர்டு அரசனது உற்ற நண்பர் என்பது யாவருக்கும் தெரியும். அயர்லாந்தில் அவர் ஒரு படை திரட்டினர் என்பது உண்மை. ஆனால், அது அரசனுக்கு எதிராகத் திரட்டப்பட்டதன்று. அதற்குப் பதிலாக அவ்வரசருக்கு உதவியாயிருக்கவே அது திரட்டப்பட்டது. ஸ்காட்லாந்தில் கலகம் ஏற்பட்டபோது, அயர்லாந்துப் படையை ஸ்காட்லாந்துக்கு எதிராக அவசியமானல் பயன்படுத்திக்கொள்ளும்படி அவர் சார்லஸிடம் சொன்னர். பிரிவி கவுன்ஸில் கூட்டமொன்றில் அவர் இக் கருத்தை வெளியிட்டார். அதை அப்போது பிரிவி கவுன்ஸிலிலிருந்த வேன் (Van) என்பார் தமது குறிப்பேட்டில் குறித்து வைத்திருந்தார். அதன் பிரதியொன்றை அவரது குமாரர் பாராளுமன்றத்தில் ஸ்டிராஃபோர்டுக்கு எதிராகத் தாக்கல் செய்தார். அவர் இராஜத்துரோகக் குற்றம் செய்தார் என்பதற்கு அக்குறிப்புப் பிரதியே போதுமெனப் பிம் வாதாடினர். அக் குறிப்பில் காணப்பட்ட வாசகம் ‘அயர்லாந்தில் ஒரு படையுள்ளது. அதை இந்த இராஜ்யத்தை அடக்க நீர் பயன்படுத்திக்கொள்ளலாம்’ என்பதேயாகும். அவ்வாசகத்தில் ‘இந்த இராஜ்யம்’ என்னும் சொற்றொடர் ஸ்காட்லாந்தையே குறித்தது. என்றாலும், அது இங்கிலாந்தைத்தான் குறிக்குமென்று வலிந்து பொருள் கொண்டு பிம் வாதாடினர். இங்கிலாந்துக்கு அயர்லாந்துப் படையைக் கொண்டுவருவது அரசருக்கு விரோதமாகப் படையெடுப்பதாகும் எனப் பிம் கூறினர். அது பொது அறிவுக்கு ஏற்றதாயில்லை. அரசருக்கு விரோதமாகப் போரிடப்போகிறவன் அரசரிடத்திலேயே அதைப் பற்றிச் சொல்லுவான் என்பதை எவர்தாம் ஏற்றுக்கொள்வர்? எனவே, பிரபுக்கள் சபையினர் பிம்மின் வாதத்தை ஒப்புக்கொள்ள மறுத்து விசாரணையைக் கைவிட்டுவிட்டனர். ஸ்டிராஃபோர்டு வெற்றிப் புன்னகை புரிந்தார். எனினும், அவரை விடுவிக்கப் பொதுமக்கள் சபையினர் ஒப்புக்கொள்ளவில்லை. விரைவில் அவருக்கெதிராக ஓர் அரசியல் துரோக மரண தண்டனைச் சட்டத்தை (Act of Attainder) அச் சபையினர் நிறைவேற்றினர். இச் சட்டம் பாராளுமன்றத்தால் ஒரு சாதாரணச் சட்டம் போன்று கொண்டுவரப்பட்டு நிறைவேறலாம். வழக்குப் பதிவோ, விசாரணையோ, சாட்சிகளோ இதற்குத் தேவையில்லை. தங்களது எதிரிகளைத் தண்டிக்க டியூடர் மன்னர்கள் இம் முறையைத்தான் கையாண்டனர். இப்போது பாராளுமன்றம் தனது

எதிரிகளை ஒழிக்க இம் முறையைக் கடைப்பிடிக்க முன்வந்தது. நாட்டின் அடிப்படையான சட்டங்களையும், அரசாட்சி முறையையும் மாற்றியதன் மூலம் மன்னனது மதிப்பையும் கண்ணியத்தையும் ஸ்டிராஃபோர்டு குறைத்துவிட்டதால் அவர் உண்மையில் இராஜத்துரோகியே என அவர்மீது குற்றம் சாட்டப்பட்டது. பொதுமக்கள் சபையிலேயே பலருக்கு இம்முறை பிடிக்கவில்லை. மசோதா சபைக்கு விவாதத்திற்கு வரும்போது சுமார் இருநூறு பேர்களே வந்திருந்தனர். அவர்களில் ஐம்பத்தொன்பது பேர் மசோதாவை எதிர்த்து வாக்களித்தனர். அங்ஙனம் வாக்களித்தவர்களின் பெயர்களோடு, 'ஸ்டிராஃபோர்டின் ஆதரவாளர்கள்—நாட்டைக் காட்டிக்கொடுப்பவர்கள்' என்ற வாசகமும் எழுதப்பட்ட அட்டைகளைத் தூக்கிக்கொண்டு லண்டன் நகர மக்கள், வீதிகளில் ஊர்வலம் வந்தனர்.

பொதுமக்கள் சபையில் மரண தண்டனை மசோதா நிறைவேறிய பின், அது பிரபுக்கள் சபைக்கு எடுத்துச் செல்லப்பட்டது. அச் சபையில் பலர் கூட்டத்திற்கே வரவில்லை. அரசனுக்குச் சாதகமாயிருக்கக்கூடிய பெட்ஃபோர்டு (Bedford) என்ற செல்வாக்கு மிக்க பிரபுவும் இச் சமயத்தில் இறந்துவிட்டார். எஞ்சியிருந்தவர்கள் ஒரு முடிவுக்கும் வர முடியாமல் திகைத்தனர். இச் சமயத்தில் 'படையினர் சதி' (Army Plot) என்ற ஒரு சதி வெளியிடப்பட்டது. வடக்கே முன்பு ஸ்காட்லாந்தை வெல்லத் தயார் செய்யப்பட்ட படையினரைக் கொணர்ந்து பாராளுமன்றத்தை ஒழிக்க இராணியார் ஒரு சதி செய்வது அப்போது நன்கு தெரிய வந்தது. இதையறிந்த பிரபுக்கள் சபையினர் மனம் மாறினர் லண்டன் மாநகர மக்களும், பிரபுக்கள் போகிற வழியில் கூடிக்கொண்டு 'ஸ்டிராஃபோர்டு ஒழிக' என்று கூச்சலிட்ட வண்ணமிருந்தனர். இதனால் பீதியுற்ற பிரபுக்கள் மரண தண்டனை மசோதாவை நிறைவேற்றினர். சபைக்கு வந்திருந்த 45 பிரபுக்களில் 29 பேர் மசோதாவுக்குச் சாதகமாக வாக்களித்தனர். பிரபுக்கள் சபையிலிருந்து மசோதா மன்னனிடம் சென்றது. சார்லஸுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. உற்றுழி உதவும் நண்பன் ஒருபுறம்; அன்புக்குப் பாத்திரமான மனைவி மக்கள் இன்னொரு புறம்; பண நெருக்கடி வேறொரு புறம் எப்பக்கம் சாய்வதென்பது அவருக்குப் புரியவில்லை. மசோதாவை ஒப்புக்கொள்ளாவிட்டால், பணமானியம் கிடைக்காதெனவும், இராணியார்மீது அரசியல் துரோகக் குற்றம் சாட்ட முயற்சிகள் நடைபெறுமெனவும் சார்லஸ் அறிந்தார். அதே சமயம் ஒரு தீங்கும் வராது பாதுகாப்பதாக அவர் தம் நண்பருக்கு ஏற்கெனவேயே ஒரு வாக்குறுதியும் தந்திருந்தார். இருதலைக் கொள்ளி எறும்பு போல் அரசர் இரண்டு நாள்கள் ஒரு முடிவுக்கும் வராமல்

தத்தளித்தார். வில்லியம்ஸ் என்ற யார்க் நகர ஆர்ச்பிஷப்பை அவர் ஆலோசனை கேட்டார். உள்நாட்டுப் போர் ஏற்படுவதைத் தவிர்க்க வேண்டுமானால், மசோதாவை ஒப்புக்கொள்வதைத் தவிர வேறு வழியில்லை என அவரும் கூறிவிட்டார். இராணியாரும் மசோதாவை ஒப்புக்கொள்ளும்படி அரசரைத் தூண்டிக்கொண்டிருந்தார். இச்சமயத்தில் ஸ்டிராஃபோர்டிடமிருந்து மன்னர் அளித்த வாக்குறுதியைத் தாம் திருப்பிப் பெற்றுக்கொள்வதாக ஒரு கடிதம் வந்தது. அதை உண்மையென நம்பி அவர் மசோதாவில் கையெழுத்திட்டுவிட்டார். இங்ஙனம் தமது நன்மைக்காக உண்மையாக உழைக்கக்கூடிய ஒரே நண்பரைச் சார்லஸ் காட்டிக் கொடுத்துவிட்டார். ஸ்டிராஃபோர்டு இதையறிந்து திடுக்கிட்டார். எனினும், உறுதியுடன் அவர் தண்டனையை ஏற்றார். சிரச்சேதம் செய்யப்படும்போது கண்களைக் கட்டிக்கொள்ளவும், அவர் மறுத்துவிட்டார். 'அரசர்கள்மீது நம்பிக்கை வைக்காதே' என்ற இறுதிச் சொற்களுடன் ஸ்டிராஃபோர்டு உயிர் துறந்தார். 'ஸ்டிராஃபோர்டையே கைவிட்டுவிட்ட மன்னர் இனி எதைத்தான் காப்பாற்றப்போகிறார்' என பிம் கூறினார். லண்டன் நகர மக்கள் மகிழ்ச்சிப் பெருக்கால் ஆரவாரித்துக் கூத்தாடினர். மாபெரும் விழாவாக ஸ்டிராஃபோர்டின் மரணம் கொண்டாடப்பட்டது.

### மன்னரது தனிச் சிறப்பதிகாரம் குலைக்கப்படுதல் (1641)

அடுத்தாற்போல், பாராளுமன்றமானது அரசனது முறையற்ற செயல்களையெல்லாம் சட்டவிரோதமாக்கியது. 'நைட்' (Knight) பதவியைப் பலவந்தமாக அரசர் குடிமக்கள்மீது திணித்துப் பணம் வாங்குவதும், அப் பதவியைப் பெற மறுப்பவர்களிடமிருந்து அதற்கு ஈடாக 'நைட் பட்டப் பற்றீடு' என்ற கட்டணத்தை வசூலிப்பதும், சட்ட விரோதமென அது அறிவித்தது. காடுகளின் எல்லைகளை அரசர் நிர்ணயிக்கக் கூடாதெனவும், கப்பற் பணத்தை அவர் வசூலிக்கக்கூடாதெனவும், தனியுரிமைகளை விற்கக் கூடாதெனவும், டன் எடை வரி, பவுண்டுக் கட்டணம் என்ற சுங்க வரிகளை அரசர் தம்மிச்சையாக வசூலிக்கலாகாதென்றும் கூறுகிற பல சட்டங்களை அது இயற்றியது. அரசரின் யதேச்சாதிகாரத்திற்குத் துணையாயிருந்த சிறப்பு நீதிமன்றங்களான விண்மீன் மண்டப நீதிமன்றமும், உயர் ஆணை நீதிமன்றமும், வட நீதிமன்றம், மேலை நீதிமன்றம் என்ற நீதிமன்றங்களும் ஒழிக்கப்பட்டன. பிரிவி கவுன்ஸிலின் நியாயம் வழங்கும் அதிகாரம் கட்டுப்படுத்தப்பட்டது. வழக்குகள் அனைத்தும் பிரிவி கவுன்ஸிலில் விசாரிக்கப்படலாகாது எனவும் கட்டுப்பாடுகள் ஏற்படுத்தப்பட்டன. இதனால் மன்னரது யதேச்சாதிகார இறகுகள் துண்டிக்கப்பட்டுவிட்டன எனலாம். பிரபுக்களை அடக்கி

ஒடுக்க, டியூடர்களால் ஏற்படுத்தப்பட்ட அந் நீதிமன்றங்களைத் தங்களது எதிரிகளை ஒடுக்க ஸ்டூவர்ட்டு மன்னர்கள் பயன்படுத்திக் கொண்டார்கள். உயர் ஆணை நீதிமன்றமும், சமயத் துறையில் சிறு குற்றம் புரிந்தோரையும் ஒறுக்க, லாட் என்பவரால் பயன்படுத் தப்பட்டது. இவை யாவும் ஒழிக்கப்பட்டது பாராளுமன்றத் திற்கு ஒரு பெரிய வெற்றியே என்பதில் சிறிதும் ஐயமில்லை.

அடுத்தாற்போல் பாராளுமன்றமானது மூவாண்டுச் சட்டம் (Triennial Act) என்னும் ஓர் சட்டத்தை இயற்றியது. அச் சட்டம் மூன்றாண்டுகளுக்கு ஒரு முறை அரசர் கட்டளையிட்டாலும் இடா விட்டாலும் பாராளுமன்ற உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்று கூறியது. மூன்றாண்டுகள் கழித்துத் தேர்தல் வைக்கும்படி மன்னரும் அவரது சான்சலரும் கட்டளை பிறப்பிக்க வேண்டும். அவர்கள் அங்ஙனம் செய்யத் தவறினால் பிரபுக்கள் சபை அக் கடமையைச் செய்ய வேண்டும். பிரபுக்களும் தவறினால் கட்டளை ஏதுமின்றியே அந்தந்த இடங்களில் ஷெரீப்புகளாயிருப் போர் தேர்தல்களை நடத்தலாம். அவர்களும் தவறினால், வாக் காளர்கள் தாங்களாகவே பாராளுமன்ற உறுப்பினரைத் தேர்ந் தெடுத்து அனுப்பலாம் மேலும், ஒரு பாராளுமன்றம் கூட்டப் பட்ட 50 நாட்களுக்குள் அதை அரசர் கலைக்கக்கூடாது. இங்ஙனம் கூறி மூவாண்டுச் சட்டமானது அரசர்கள் பாராளுமன் றத்தைக் கூட்டாமலேயே தனியாட்சி செலுத்துவதைத் தடுக்க முயன்றது. ஆனால், பாராளுமன்றத்தைக் கூட்டவேண்டுமென வற்புறுத்திய இச் சட்டம் அதை அரசர் கலைக்கக் கூடாது என்று ஒன்றும் சொல்லவில்லை. எனவே, மூன்றாண்டுக் கொருமுறை அரசர் பாராளுமன்றத்தைக் கூட்டி, உடனேயே அதைக் கலைக்கக் கூடிய அபாயம் இச் சட்டத்தால் தவிர்க்கப்படவில்லை எனலாம்.

தானே கலைந்துவிட விரும்பினாலன்றித் தன்னைக் கலைக்க அரசருக்கு உரிமையில்லை என்ற ஒரு விசித்திரமான சட்டத்தை யும் நீடித்த பாராளுமன்றம் இயற்றியது. இங்ஙனம் அம் மன்ற மானது தனது நிலையைப் பலப்படுத்திக் கொண்டதற்கு ஒரு முக்கியமான காரணமுமிருந்தது. ஸ்காட்லாந்தியப் படைக்குத் தினப்படி கொடுக்கப் பாராளுமன்றம் லண்டன் வியாபாரிகளிட மிருந்து கடன் வாங்கி இருந்தது. சுங்க வரிகளால் வரும் பணத் தைக் கொண்டு அக் கடனை அடைத்துவிடுவதாக அது வியாபாரி களுக்கு ஒரு வாக்குறுதி அளித்திருந்தது. தான் பதவியிலிருந் தாலன்றி மக்களிடமிருந்து சுங்க வரிகளை வாங்க முடியாதாகை யால் பாராளுமன்றம் தன் பதவிக் காலத்தை உறுதிப்படுத்திக் கொள்ள நினைத்ததில் தவறொன்றுமில்லை.

## நீடித்த பாராளுமன்றமும் சமய ஏற்பாடும் (1641)

இங்ஙனம் பலவகையிலும் மன்னரது தனிச் சிறப்பதிகாரத்தைப் பறித்துக்கொண்ட பாராளுமன்றம் அடுத்துச் சமயத்துறையைப் பற்றிய சிக்கல்களைத் தீர்க்க முற்பட்டது. அப்போதுதான் அதில் பல பிளவுகள் இருப்பது தெற்றெனத் தெரியவந்தது. அழிவு வேலைகளில் ஒருமித்துத் தொழில் புரிந்த பல பிரிவினரும், புதியதோர் திருச்சபை ஏற்பாட்டைக் கொணர்தல் என்னும் ஆக்க வேலையிலீடுபட்டபோது தம்முள் அவர்கள் பெரிதும் மாறுபட்டனர். இரண்டு வகையான கொள்கையினர் பாராளுமன்றத்தில் அப்போது பலம் பெற்றிருந்தனர். ஒரு வகையினர் திருச்சபையில் பிஷப்புகள் போன்ற குருமார்களின் ஆட்சி முறையை அறவே ஒழிக்க வேண்டுமென விரும்பினார்கள். அவர்களுக்குப் பதிலாக மக்களின் பிரதிநிதிகள் அடங்கிய சபைகளால் திருச்சபை ஆளப்படவேண்டுமென மற்றொரு சாரார் கூறினர். அவர்கள் குருமார் துரைத்தனத்தையே வேரறுக்க விரும்பியதால் வேரோடழிக்கும் கூட்டத்தினரென (Root and Branch Men) அன்னார் அழைக்கப்பட்டனர் இன்னொரு குழுவினர் கொஞ்சம் மிதவாதிகள். ஓரளவு கட்டுப்பாடுகளுக்குட்பட்ட குருமார் துரைத்தனத்தை அவர்கள் ஆதரித்தனர். டிக்பி (Digby), ஹைட் (Hide), ஃபாக்லந்து (Falkland) போன்றோர் இக் குழுவினரைச் சேர்ந்தவர்கள். மன்னர் இம் மிதவாதிகள் பக்கம் சேர்ந்திருந்தால், அவரது செல்வாக்கு மறுபடியும் உயிர் பெற்றிருக்க முடியும். ஆனால், அரசர் தமது கொள்கை என்னவென்று வாய்விட்டுச் சொல்லாமலேயே இருந்துவிட்டார். எனவே, வேரோடு அழிக்கும் கூட்டத்தினரின் கை வலுத்தது. வேரோடு அழிக்கும் மசோதா (Root and Branch Bill) என்ற ஒரு மசோதா பொதுமக்கள் சபையில் கொண்டுவரப்பட்டது. பலத்த விவாதத்துக்குப்பின் அது கைவிடப்பட்டது. அம் மசோதாவை ஆதரித்த பியூரிட்டன்கள் ஒரு கட்சியாகவும் அதை எதிர்த்த மிதவாதிகள் இன்னொரு கட்சியாகவும் மாறினர். இங்ஙனம் பாராளுமன்றத்தில் ஒரு பிளவு ஏற்பட்டது.

1641ஆம் ஆண்டில் அரசர் பிரபுக்கள் சபையில் தமக்கு வேண்டிய பல பிரபுக்களை நியமிக்க விரும்பினார். ஆனால், பொதுமக்கள் சபையார், பிஷப்புகள் பிரபுக்கள் சபையில் நியமிக்கப்படக் கூடாதென்று கூறும் முதல் பிஷப்புகள் விலக்கு மசோதாவைக் (First Bishops Exclusion Bill) கொணர்ந்தனர். இம் மசோதா பொதுமக்கள் சபையில் ஒப்புக்கொள்ளப்பட்டாலும், பிரபுக்கள் சபையில் தோற்றுவிட்டது. எனவே, பிரபுக்களின் ஆதிக்கத்தை ஒழிக்கவேண்டுமென்ற பொதுமக்கள் சபையின் விருப்பம் நிறைவேறுவதில் சிறிது தடை ஏற்பட்டது. இதற்கப்

புறம் பாராளுமன்றம் அரசருக்கு ஒரு மானியத் தொகையை அளித்தது. டன் வரி, பவுண்டுக் கட்டணம் என்ற வரிகளை வசூலிக்கும் உரிமையை இரண்டு மாதங்களுக்கு மட்டுமே அது அரசருக்கு அளித்தது. அதன்பின் பாராளுமன்றம் சிறிது காலத்துக்கு ஒத்தி வைக்கப்பட்டது. இவ்விடைவெளிக் காலத்தில் மன்னர் சார்லஸ் ஸ்காட்லாந்துக்குப் பயணமானார். அங்கே அமைதியை நிலைநாட்டுவதற்காகவே தாம் செல்வதாகச் சார்லஸ் கூறிச் சென்றாரெனினும் அவர் ஸ்காட்லாந்தியப் பிரபுக்களின் உதவியை நாடியே செல்கின்றார் என்ற ஐயப்பாடு பாராளுமன்றத்தாருக்கு உதித்தது. ஸ்காட்லாந்தில் அவர் நடவடிக்கைகளைக் கூர்ந்து கவனிக்கப் பாராளுமன்றம் ஒரு கமிஷனை நியமித்தது. உண்மையில் சார்லஸ் ஸ்காட்லாந்துப் பிரபுக்களின் நட்பைப் பெற்றுப் பாராளுமன்றத்தை அடக்கவே விரும்பினார். அவர் ஸ்காட்லாந்து சென்றவுடன் பல பிரபுக்கள் வந்து அவரைப் பேட்டி கண்டனர். அவர்களுக்கு மதச் சுதந்திரம் அளிப்பதாகச் சார்லஸ் வாக்களித்தார். அதற்குப் பதிலாக அவசியமானபோது தமக்கு உதவி செய்யும்படியும், அவர் அவர்களைக் கேட்டுக் கொண்டார். அவர்களும் சம்மதித்தனர்.

## இடை நிகழ்ச்சி (Incident, 1641)

பாராளுமன்றத்தின் ஐயத்தை மேலும் கிளறக்கூடிய ஒரு நிகழ்ச்சி ஸ்காட்லாந்தில் இச்சமயம் நிகழ்ந்தது. அர்கையில் பிரபுவான ஆர்ச்சிபால்ட் கேம்ப்பெல் (Archibald Campell) என்பவரையும், ஹாமில்டன் பிரபு என்பவரையும் சிறையிட ஓர் முயற்சி நடைபெற்றது. அவர்கள் ஸ்காட்லாந்து பாராளுமன்றத்தில் மிகவும் செல்வாக்குப் பெற்றவர்கள். எனவே, சார்லஸின் அனுமதியின் பேரிலேயே அவர்களைக் கைது செய்யும் முயற்சி நடைபெற்றிருக்க வேண்டுமென ஆங்கிலப் பாராளுமன்றத்தார் நினைத்தனர். அவர்களுக்கு நேர்ந்த கதியே தங்களுக்கும் நேருமென பாராளுமன்றத் தலைவர்கள் பயந்தனர். 1641ஆம் ஆண்டு அக்டோபர் 23ஆம் தேதி பாராளுமன்றம் மீண்டும் கூடியது.

## அயர்லாந்துக் கலகம் (1641)

பாராளுமன்றம் மீண்டும் கூடிய மூன்று நாட்களுக்குள், அயர்லாந்தில் ஒரு பெருங் கலகம் கிளம்பியது. வலிமைமிக்க ஸ்டிராஃபோர்டு அங்கிருந்து வந்துவிட்ட பின்னர், அங்கு ஏற்பட்ட அரசாங்கம் மிகப் பலஹீனமாயிருந்தது. ஸ்டிராஃபோர்டு கொல்லப்பட்டதால், ஐரிஸ் படைகளும் மக்களும் தைரியமடைந்தனர்.

ஸ்டிராஃபோர்டின் ஆட்சிக் காலத்துக் கன்னுட் பிரதேசத்தில் கத்தோலிக்கரது நிலங்கள் பல பறிக்கப்பட்டுப் பிராடெஸ்டண்டு களுக்குக் கொடுக்கப்பட்டன. இதனால் மனம் புழுங்கிக் கொண் டிருந்த பலர் திடீர் எனப் புரட்சியில் இறங்கினர். இங்கிலாந்தி லிருந்த பியூரிட்டன் பாராளுமன்றமானது மேலும் பல கொடுமை களைத் தங்கள்மேல் சுமத்தக்கூடும் என்ற அச்சமும் ஐரிஸ் கலகத் திற்கு ஒரு காரணமாகும். ஆயிரக்கணக்கான ஆங்கிலப் பிரா டெஸ்டண்டுகள் கொலை செய்யப்பட்டனர். இதைக் கேட்ட ஆங்கிலேயர் பழிக்குப் பழி வாங்க விரும்பினர். அதற்காக ஒரு படை திரட்டப்பட்டாக வேண்டிய இன்றியமையாமை ஏற்பட்டு விட்டது. ஆனால், படையை அரசன் வசம் ஒப்படைத்தால் அதே படையைக் கொண்டு அவர் பாராளுமன்றத்தையே அடக்கக் கூடும் எனவும் யாவரும் பயந்தனர்.

ஐரிஸ் கலகமானது ஆங்கிலேயப் பியூரிட்டன்களிடையே ஒரு பீதியைத் தோற்றுவித்து, ஆங்கிலேயரை ஒழிக்க ஐரோப் பியக் கத்தோலிக்க நாடுகள் ஏதோ சதித் திட்டம் தீட்டியுள்ளன வென்றும், அதன் முதற் பகுதியே அயர்லாந்தில் நிறைவேறியது என்றும், அவர்கள் நினைத்தனர். 'அரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்' என்னும் பழமொழிக்கேற்பச் சிறு நிகழ்ச்சிகள்கூட லண்டன் மக்களை இச் சமயத்தில் அலற வைத் தன. ஒரு சமயம் பாராளுமன்றத்தில் 'கிரிச்' என்று ஒரு சத்தம் கேட்டது. உடனே பாராளுமன்றத்தைக் கத்தோலிக்கர் வெடி மருந்து வைத்துத் தகர்த்துவிட்டனர் என்ற வதந்தி லண்டன் மாநகர் எங்கும் பரவிவிட்டது. நகரக் காவற் படைகள் ஓடோடியும் வந்தன. வந்து பார்த்த பின்னர்தான் அது வீண் புரளி என்பது தெரிந்தது.

இங்ஙனம் பயந்த ஆங்கிலேயப் பாராளுமன்ற உறுப்பினர்கள் தங்களைப் பாதுகாக்க நூறு போர் வீரர்களைத் தாங்களே அமர்த் திக் கொண்டனர். இச் சமயத்தில் அரசியானவள் வேற்று நாட் டாரின் உதவிகளை நாடுவதாக ஒரு வதந்தி ஏற்பட்டது. உண்மை யில் இராணியார், ஹாலந்து நாடு, ஸ்பெயின் நாடு இவைகளிடம் முதலில் உதவி கேட்டார். அது மறுக்கப்பட்ட பின், அவர் போப்பின் உதவியைக் கோரினர். சார்லஸ் கத்தோலிக்கராக மாறினாலன்றித் தாம் எந்தவித உதவியும் செய்ய முடியாதெனப் போப்பாண்டவர் சொல்லிவிட்டார். இவையெல்லாம் ஆங்கிலேய ருக்குத் தெரியாது. இருப்பினும், தங்களுக்கு விரோதமாகப் பெருஞ் சதியொன்று நடப்பதாகவும், அதற்கு இராணியாரும் உடந்தையாயிருக்கிறார் என்றும் லண்டன் மக்கள் உணர்ந்தனர். அதற்கேற்றாற்போல் படை வீரர்கள் பலர் லண்டனுக்கு வரவழைக்

கப்பட்டனர். வீதிகளில் கூடிய மக்கட் கூட்டத்தைச் சிதறடிக்க அப்படை பயன்படுத்தப்பட்டது. இது போன்று, பாரிஸில் ஒரு படையைக் கொண்டுவந்து வைக்கும்படி மரியா அந்துவானெத் தனது கணவரான பதினாறும் லூயியைத் தூண்டியதாலேயே ஃபிரஞ்சுப் புரட்சி பாரிஸ் நகரில் தோன்றியது.

## பெருங் கண்டனப் பத்திரம் (1641)
(Grand Remonstrance)

இச் சமயத்தில் பிம், பெருங் கண்டனப் பத்திரம் (Grand Remonstrance) எனப்படும் ஒரு பத்திரத்தைத் தயார் செய்தார். அதில் பெரும் பகுதி மன்னனின் முறையற்ற செயல்களைக் கண்டித்து அதற்கு மாறான சீர்திருத்தங்களைக் கோருகிறது. மற்றும் அது மந்திரிகளைப் பாராளுமன்றத்தின் விருப்பப்படியே மன்னர் தேர்ந்துகொள்ள வேண்டுமெனவும், பிஷப்புகளின் அதிகாரங்களைக் குறைக்க வேண்டுமெனவும், திருச்சபையானது பாராளுமன்றத்தால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு சபையினரால் நிர்வகிக்கப்பட வேண்டுமெனவும் கோருகிறது. பிரபுக்களின் சபை தன்னை ஆதரித்ததென அறிந்த பொதுமக்கள் சபை, இந்தப் பத்திரத்தை மக்களின் முன்னிலையில் சார்லஸுக்கு எதிராக ஒரு வேண்டுகோளாக விடுத்தது. சார்லஸ் பல வகையிலும், இப் பத்திரத்தில் கண்டிக்கப்பட்டிருந்தார். அதில் காணப்பட்ட தீவிர அரசியல் சமயக் கொள்கைகளைப் பிடிக்காத மிதவாதிகள் பலர், அரசனது ஆதரவாளர்களாக (Royalists) மாறினர். ஆனால், பியூரிட்டன்களது முழு ஆதரவும் பொதுமக்கள் சபைக்குக் கிடைத்தது. இப் பத்திரம் பாராளுமன்றத்தில் விவாதிக்கப் பட்டபோது, எங்கு உறுப்பினர்களில் சிலர் கைகலக்க நேரிடுமோ என்ற பயம் பலருக்கு ஏற்பட்டது. பலர் தங்கள் உடைவாளை உருவிய வண்ணம் நின்றுகொண்டிருந்தனர். 'பெருங் கண்டனப் பத்திரம் நிறைவேறாவிடில் நான் என் சொத்துகளை யெல்லாம் விற்றுவிட்டு, அமெரிக்காவுக்குப் போய்விடுவேன்' என்று கிராம்வெல் என்பார் கூறுரைத்தார். கடைசியாகப் பதினொரு வாக்குகளை அதிகம் பெற்று, அது பொதுமக்கள் சபையில் நிறைவேறியது. பின்னர், அது அச்சிடப்பட்டுப் பலருக்கும் வழங்கப்பட்டது. பெருங்கண்டனப் பத்திரம் நிறைவேறி இரண்டு நாட்களுக்குப் பின் சார்லஸ் ஸ்காட்லாந்திலிருந்து இங்கிலாந்துக்குத் திரும்பினார். அவருக்கு ஒரு பெரிய விருந்து நகரத்தின் புது மேயரால் அளிக்கப் பட்டது. பாராளுமன்றத்திலும் ஒரு பெரும் பகுதியினர் மன்னரை ஆதரிப்பவர்களாக மாறினர். ஃபாக்லண்டு, ஹைட் போன்ற மிதவாதிகளுக்குப் பிம் போன்றோரின் தீவிரக் கொள்கைகள்

பிடிக்கவில்லை. அரசர் பாராளுமன்றத்தின் நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்களையே மந்திரிகளாக வைத்துக்கொள்ளவேண்டும் என்றும், அப்போதுதான் அயர்லாந்துக்கு எதிராகப் படை திரட்டத் தாம் சம்மதிக்க முடியுமென்றும் பிம் கட்சியினர் கூறினர். மந்திரிகளைப் பொறுக்கிக்கொள்ளும் சுதந்திரம் அரசருக்கே உரியது என்று ஃபாக்லண்டு கட்சியினர் வாதாடினர். சமயத்துறையிலும் இரு கட்சியாரும் வெவ்வேறு கருத்துடையவர்களாயிருந்தனர். குருமார்களின் ஆட்சி முறையை அறவே ஒழிக்க வேண்டுமென்பது பிம் குழுவினரின் திட்டம். அதை ஓரளவு சீர்திருத்தி விட்டால் போதுமென்பது ஃபாக்லண்டின் திட்டம். இங்ஙனம் பாராளுமன்றத்தில் இரு கட்சிகள் தோன்றின. சமய வேறுபாடும், அரசியல் வேறுபாடும் இரண்டும் கலந்து இவ்விரு கட்சிகளைத் தோற்றுவித்தன. அரசனை ஆதரித்தோர் 'வீம்பு நடை வீரர்' என்று பொருள்படும் கவலியர் (Cavalier) என்றும், பாராளுமன்றத்தை ஆதரித்தோர் உருண்டைத் தலையர்கள் (Round Heads) (மயிரை நெருங்க வெட்டி கிராப் செய்துகொண்டிருந்ததால்) என்றும் கேலியாக அழைக்கப்பட்டனர்.

உருண்டைத் தலையினருக்கும் கவலியர்களுக்கும் அடிக்கடி லண்டன் வீதிகளில் மோதல் ஏற்பட்டது. இந்த நிலையில் தனக்கு ஒரு பாதுகாப்புப் படை வேண்டுமெனப் பாராளுமன்றம் அரசரைக் கேட்டது. அதைச் சார்லஸ் மறுத்துவிட்டார். ஐரிஸ் கலகத்தை அடக்குவதற்காகவே தாம் படை திரட்டுவதாகவும் பாராளுமன்றத்தின் உரிமைகளுக்குச் சிறிதும் பழுது வராமல் தாம் காப்பாற்றுவதாகவும், சார்லஸ் வாக்குறுதி தந்தார். அதற்கப்புறம் அவர் கவலியர்களிலே மிகக் கொடூரமான லன்ஸ்ஃபோர்டு (Lunsford) என்பவனை டவர் (Tower) என்னும் லண்டன் சிறைச்சாலைக்குத் தலைவராக்கினர். இதை எதிர்த்த லண்டன் நகர மக்கள் கலகம் செய்தனர். இதைக் கண்ட சார்லஸ், லன்ஸ்ஃபோர்டை வேலையினின்று நீக்கினர். அதன்பின் லண்டன் நகர மக்கள் பிரபுக்களுக்கு எதிராகக் கூச்சல் போட்டுக்கொண்டே இருந்தனர்.

## ஐந்து உறுப்பினர் கைது
(Arrest of the Five Members, 1643)

இச்சமயம், இராணியாரையும் அவரது மக்களையும் அரசியல் துரோகக் குற்றம் சாட்டப் பாராளுமன்றத்தினர் முயற்சி செய்து வருகின்றனர் என ஒரு வதந்தி கிளம்பிற்று. இதைக் கேட்ட இராணி சார்லஸை நேரில் சென்று பாராளுமன்றத் தலைவர்களைக் கைது செய்து வரும்படி தூண்டினுள். தம் கணவரை ஒரு கோழை

எனப் பழித்துவிட்டு, அவரைப் பகைத்தவர்களைக் காதைப் பிடித்துப் பாராளுமன்றத்திலிருந்து வெளியே இழுத்து வரும்படி அவள் சார்லஸை ஏவினாள். இதே போன்று மக்களின் உணர்ச்சிகளை மதிக்காமல் மரியா அந்துவானெத் எனும் ஃபிரெஞ்சு அரசி பேசிப் பேசித்தான் தனது கணவரின் சிரச்சேதத்திற்கு வழி செய்தாள். ஆராயாமல் பெண் பேச்சைக் கேட்டுப் பல அரசர்கள் அழிந்தனர் எனப் புராணங்களிலே நாம் படிக்கிறோம். வரலாற்றிலும் அங்ஙனம் கெட்டவர்கள் பலரை நாம் பார்க்கின்றோம். பின் விளைவை எண்ணாமல் உணர்ச்சி வசத்தில் பெண்கள் சொல்லும் ஆலோசனைகளை நன்கு சிந்தித்த பின்னரே செயல்படுத்த வேண்டும் எனும் உண்மையைச் சார்லஸ் அறியாமல் போனார். அட்டார்னி ஜெனரலை அனுப்பிப் பாராளுமன்றத்தில் ஐந்து பேர் மீது அரசியல் துரோகக் குற்றம் சாட்டும்படி அவர் கட்டளையிட்டார். இங்கிலாந்தின் அடிப்படைச் சட்டங்களைத் திரிக்க முயன்றதாகவும், இங்கிலாந்துக்கு எதிராக ஸ்காட்லாந்தியரை உதவிக்கு அழைத்ததாகவும் அவர்கள் மீது குற்றம் சாட்டும்படியும் அவர் கூறினார். அட்டார்னி ஜெனரல் அரசரின் கட்டளையை நிறைவேற்றினார். இங்ஙனம் அட்டார்னி ஜெனரல் பாராளுமன்ற உறுப்பினர் மீது குற்றம் சாட்டியபோது பாராளுமன்றத்தினர் அனைவருமே தங்கட்கு ஆபத்து வந்துவிட்டதாக எண்ணிப் பயந்தனர். பாராளுமன்றத்திற்கு ஓர் ஆபத்தும் நேராமல் தாம் பாதுகாப்பதாகச் சார்லஸ் வாக்குறுதி அளித்தார். ஆனால், அதற்கு அடுத்த நாளே அவர் தம் வாக்குறுதியை மீறினார். மனைவியால் தூண்டப்பட்ட சார்லஸ், மதியிழந்து 300 அல்லது 400 போர் வீரர்களுடன் புறப்பட்டுச் சென்று திடும் எனப் பொதுமக்கள் சபையில் பிரவேசித்தார். இந்த இரகசியத்தை இராணியின் நண்பர் ஒருவர் மூலம் அறிந்த பாராளுமன்றம் தனது தலைவர்களை லண்டன் நகருக்குள் ஒளித்து வைத்துவிட்டது. பிம் (Pym), ஹாம்ப்டன் (Hampden), ஹேஸ்லிரிக் (Hazlerigg), ஹோல்ஸ் (Holles), ஸ்டிரோட் (Strode) என்ற ஐவரும் எங்கே எனச் சபாநாயகரைச் சார்லஸ் கேட்டார். சபையினது உத்தரவின்றி எதையுமே கேட்பதற்குக் காதுகளோ, பார்ப்பதற்குக் கண்களோ தனக்குக் கிடையாது என முழங்காலிட்டபடியே லெந்தால் (Lenthall) எனும் சபாநாயகர் பணிவுடன் பதிலளித்தார். இதன் பின் சார்லஸ் தாமே மண்டபம் முழுவதும் அவர்களை நன்கு தேடிப்பார்த்தார். ஒருவருமில்லாது போகவே 'பறவைகள் பறந்து விட்டன போலும்' என்று கூறிக்கொண்டே அவர் வெளியே சென்றுவிட்டார். அவர் சபையை விட்டு வெளியே வரும்போது, 'சிறப்புரிமை, சிறப்புரிமை' என்று பொதுமக்கள் சபையினர் கூச்சலிட்டனர். சார்லஸின் இந்தச் சிறு அவசரச் செயலானது அவருக்கு

மக்களிடம் கொஞ்சநஞ்சம் இருந்த நம்பிக்கையையும் குலைத்து விட்டது. ஒரு நாளைக்கு முன்புதான் பாராளுமன்றத்தைப் பாது காப்பதாகச் சார்லஸ் வாக்குறுதி கொடுத்திருந்தார். அடுத்தநாளே அவர் அதைக் காற்றிலே பறக்க விட்டுவிட்டார். எனவே, இனிச் சார்லஸின் வார்த்தைகளை நம்பக்கூடாது என்றும் அவர் தமது எதிரி என்றும் பாராளுமன்றம் கருதியது. அதன் உறுப்பினர்கள் மீது அரசியல் துரோகக் குற்றம் சாட்டவோ அதனுள் புகுந்து அவர்களைச் சிறை செய்யவோ உண்மையில் அரசருக்கு உரிமை எதுவும் இல்லை. அங்ஙனம் செய்வது பாராளுமன்றத்தின் சிறப் புரிமைகளை அலட்சியம் செய்வதாகுமென்பதைச் சார்லஸ் அறிய வில்லை. லண்டன் மக்கள் சார்லஸுக்கு விரோதமாகப் பாராளு மன்றத்தின் உதவிக்கு மார்தட்டி முன் வந்தனர். மன்னனுக்கும் மக்களுக்குமிடையே இருந்து வந்த பூசல் முற்றிப் புரட்சியாக வடி வெடுத்தது. மன்னன் லண்டனை விட்டு வெளியேறினர். ஒரு மாதங்கழித்து அவர் தம் மனைவியை ஹாலந்து தேசத்துக்கு அனுப்பிவிட்டார். 1642ஆம் ஆண்டு பிப்ரவரியில் அவர் பிரபுக்கள் சபையில் சமய குருமார்கள் உறுப்பினராவதைத் தடுக் கின்ற 'பிஷப்புகளின் விலக்கு மசோதாவை' (Bishops Exclusion Bill) ஒப்புக்கொண்டார் ஆனல், அதே ஆண்டில் பொதுமக்கள் சபை யார் கொணர்ந்த நாட்டுப்படை மசோதாவை (Militia Bill) அவர் ஒப்புக்கொள்ள மறுத்தார். பாராளுமன்றம் அதை லட்சியம் செய்யாது மசோதாவை அவசரச் சட்ட மூலம் (Ordinance) அமலாக்கியது. அதன் மூலம் நாட்டுப்படையைத் திரட்டும் அதிகாரம் தனக்கே உரியதெனப் பாராளுமன்றம் நிலை நாட்டியது. அவசரச் சட்டங்களைச் சாதாரணமாகப் பொதுமக்கள் சபை கூடாத வேளையில், அரசனும் பிரபுக்கள் சபையினரும் சேர்ந்து வெளியிடுவதே மரபு. அதற்குப் பதிலாகப் பொதுமக்கள் சபை தனிப்பட்ட முறையில் அவசரச் சட்டங்களைப் பிறப்பிக்க ஆரம் பித்தது அதுவே முதல் தடவை. பாராளுமன்றத்திற்கு விரோத மாக மன்னரும், அணிவகுப்புக் கமிஷன்களை (Commission of Array) ஏற்படுத்தி அவர்கள்மூலம் படை திரட்டினர். லெப்டெனன்ட் பிரபுக்களை (Lords Lieutenants) இராணுவத் தளபதிகளாகப் பாராளு மன்றம் ஆங்காங்கே நியமித்துப் படைதிரட்டியது. இங்ஙனம் மன்ன ரும் பாராளுமன்றமும் சட்டவிரோதமான செயல்களில் ஈடுபட்டனர்.

சார்லஸ் அரசர் நேரே ஹல் துறைமுகத்துக்குச் சென்று அங்கிருந்த படைக்கலச்சாலையைக் (Arsenal) கைப்பற்ற எண்ணி ஞர். ஆனல், அது ஏற்கெனவே பாராளுமன்றத்தினரின் கைகளுக்குச் சென்றுவிட்டது. சர் ஜான் ஹோதாம் ((Sir John Hotham) என்ற பாராளுமன்றத் தளகர்த்தன் அரசரை ஹல் துறை முகத்தினுள் விட மறுத்துவிட்டான்.

## பத்தொன்பது முன்மொழிக் கூற்றுகள்
## (Nineteen Propositions, 1642)

கடைசி வேண்டுகோள் ஒன்றைப் பாராளுமன்றம் அரசனுக்கு அறிவித்தது. பத்தொன்பது முன்மொழிக் கூற்றுகள் (Nineteen Propositions) என்ற அவ்வேண்டுகோளில் பாராளுமன்றமானது அரசரது புதல்வர்கள் மீதும், பிரிவி கவுன்சிலர்கள், மந்திரிகள் மீதும் கட்டுப்பாடு விதிக்க அனுமதி கோரியது. சார்லஸ் அவைகளை மறுத்துவிட்டார். அவற்றை ஒப்புக்கொண்டால் தாம் வெறும் பொம்மையரசராகவே இருக்க நேருமென அவர் கூறிவிட்டார்.

இங்ஙனம் பாராளுமன்றத்தாரும் அரசரும் வெவ்வேறு குறிக்கோள்களை வற்புறுத்தி வந்தனர். இருவரும் தாம் தாம் சொல்வதே சரி எனக் கருதினர்கள். 'மூர்க்கரும் முதலையும் கொண்டது விடா' என்ற பழமொழி சார்லஸுக்கே தகும். அவர் சிறிதும் அவரது அதிகாரத்தை விட்டுக்கொடாமல் தமது சிறப்பதிகாரத்தைச் செலுத்த முயற்சித்தார். வரி வசூலித்தல், மந்திரிகளை நியமித்தல், வெளிநாட்டுக் கொள்கைகளை நிர்ணயித்தல் போன்ற அரசியல் விவகாரங்களில் தம் பிரியப்படியே அதிகாரம் செய்யச் சார்லஸ் விழைந்தார். ஆனல், பாராளுமன்றமோ அரசர் தமக்குக் கட்டுப்பட்டே மேற்படி காரியங்களிலிறங்க வேண்டுமெனக் கூறியது. சமயத் துறையில் பிஷப்புகளின் ஆட்சி முறையை அவர் ஆதரித்தார். ஆனல், பாராளுமன்றமோ குருமார்கள் ஆட்சி முறையை அறவே ஒழிக்க விரும்பியது. 'ஒருவர் பொறை இருவர் நட்பு' என்பார்கள். ஆனல், இருவரில் ஒருவருமே பொறையைக் கடைப்பிடிக்கும் நிலையிலில்லை. இருவரது கொள்கைகளில் எது சரியானது என்பதை வாள் முனையில் வைத்துத் தீர்ப்புச் செய்வதைத் தவிர வேறு வழியில்லை எனச் சார்லஸ் உணர்ந்தார். 1642ஆம் ஆண்டு ஆகஸ்டு 22ஆம் தேதி சார்லஸ் நாட்டிங்ஹாம் நகரில் தமது போர்க் கொடியைப் பறக்கவிட்டார். மன்னனுக்கும் பாராளுமன்றத்துக்கும் சண்டை மூண்டது.

# 7. உள்நாட்டுப் போர் (1642-1649)

## (Civil War)

முதல் உள்நாட்டுப் போர், 1642—1646: கட்சிகளின் நிலை—இரு சாராரையும் ஆதரித்த நிலப்பகுதிகள்—இருதரப்பினரின் இராணுவ பலம்—இருதரப்பினரின் பொருளாதார பலம்—போரின் தன்மையும் போக்கும்—முதலாவதாண்டுப் போர், 1642—போர்க்களங்கள்: எட்ஜ்ஹில், பிரிண்ட்போர்டு, டர்ன் ஹாம்கிரின், யார்க்—இரண்டாவதாண்டுப் போர், 1643—போர்க்களங்கள்: சார்ல்க்ரோவ்பீல்டு, அட்வால்டன்மூர், ஸ்டிராட்டன், ரவுண்ட்வேடவுன், பிரிஸ்டல், நியூபரி—புனிதக் கூட்டுறவும் ஒப்பந்தமும் (Solemn league and covenant)—மூன்றாவதாண்டுப் போர் 1644-1645—போர்க்களங்கள்: நாண்ட்விச், யார்க், மார்ஸ்டன்மூர், யார்க் நகர், குரோப்ரெடி பிரிட்ஜ், லாண்ட்டு விதியல்—ஸ்காட்லாந்தில் போர்: திப்பர் மியூர், இன்வர்லாக்கி, கில்ஸித், பிலிப்பா—நான்காவதாண்டுப் போர், 1645—போர்க்களங்கள்: லீசெஸ்டர், நேஸ்பீ—ஐந்தாவதாண்டுப் போர், 1646—போர்க்களங்கள்: பிரிட்ஜ்வட்டர், வில்ட்ஷயர், பேஸிங்ஸ்பிரிஸ்டல், ரௌடன் மூர், ட்ரூரோ, ஸ்டோவான் தி வோல்ட்.

அயர்லாந்தில் உள்நாட்டுப் போரின் எதிரொலி, 1641—1645.

## முதல் உள்நாட்டுப் போர் (1642—1646)

சார்லஸுக்கும் அவரது பாராளுமன்றத்துக்கும் ஏற்பட்ட போரானது நாட்டில் அப்போது உலவிவந்த இருவேறு முரண்பட்ட கொள்கைகளுக்கிடையே ஏற்பட்ட மோதலின் வெளித் தோற்றமே எனக் கருதல் தகும். வரையறைக்குட்படாத கோனாட்சி, அரசரின் தெய்விக உரிமைக் கொள்கை, பிஷப்புகளால் ஆளப்படும் எபிஸ் கோபல் திருச்சபை ஏற்பாடு என்ற இவைகளின் உருவகமாக மன்னர் நின்றார். பாராளுமன்றத்துக்குக் கட்டுப்பட்ட கோனாட்சி, தொழுவோரின் பிரதிநிதிகளடங்கிய சபைகளால் ஆளப்படும் பிரஸ்பிடீரிய திருச்சபை ஏற்பாடு என்ற இவற்றின் உருவகமாகப் பாராளுமன்றத்தார் திகழ்ந்தனர். இவர்களில் ஒருவராவது

கொள்கைகளைச் சிறிதேனும் விட்டுக் கொடுக்கத் தயாராயில்லை. இரு கட்சியினர்பாலும் காணப்பட்ட முரட்டுப் பிடிவாதமும், பரஸ்பர சந்தேகமும் சேர்ந்து நாட்டில் போரைத் தோற்றுவித்தன.

கட்சிகளின் நிலை

முதல் உள்நாட்டுப் போரில் கலந்துகொண்டவர்கள் இன்னின்ன வகுப்பார் இன்னின்ன கட்சியினர் என்றோ, அன்றி இன்னின்ன நிலப்பகுதிகள் இன்னின்ன கட்சியை ஆதரித்தன என்றோ வரையறுத்துக் கூறுதல் இயலாத தொன்றாகும். ஏனெனில், ஒரே வகுப்பைச் சேர்ந்தோரும், ஒரே குடும்பத்தைச் சேர்ந்தோரும், ஒரே நிலப்பகுதியில் வாழ்ந்தோரும், மாறுபட்ட கட்சிகளில் நின்று போரிடும் காட்சியை நாம் இப்போரில் காண்கின்றோம். எனினும், பொதுப்படையாக, மன்னரையும் பாராளுமன்றத்தையும் ஆதரித்த வகுப்பினரையும், நிலப்பகுதிகளையும் நாம் ஒருவாறு தீர்மானிக்கலாம்.

அநேகமாக எல்லாப் பிரபுக்களும், உயர்தர வகுப்பாரும் மன்னரை ஆதரித்தனர். பொதுமக்கள் சபையிலிருந்த நடுத்தர வகுப்பாரின் செல்வாக்கும் அதிகாரமும் வளர்ந்துகொண்டே போவது அவர்களின் கண்களை உறுத்தியது. அவர்தம் ஆதிக்கத்தை முளையிலேயே கிள்ளி எறியவில்லையெனில் மன்னரது கொடுங்கோன்மைக்குப் பதிலாகப் பெரும்பான்மையோரின் கொடுங்கோன்மை (Tyranny of the Majority) ஏற்பட்டுவிடுமோ எனப் பிரபுக்கள் பலரும் பயந்தனர். மேலும், பிரபுக்களில் பலர் மிதவாதிகள் ; சட்ட உணர்ச்சி நிரம்பியவர்கள். மன்னரது உதவியின்றியே பாராளுமன்றம் சட்டம் செய்ய முன்வந்ததெல்லாம் அவர்களுக்குப் பிடிக்கவில்லை. எனவே, ஃபாக்லாண்டு (Falkland), ஹைட் (Hyde) போன்ற மிதிவாதிகள் சட்டத்தையும் ஒழுங்கையும் காக்கவேண்டி மன்னரை ஆதரித்தனர். பிரபுக்களிற் பெரும்பாலோர் பிஷப்புகளால் ஆளப்படும் எபிஸ்கோபல் மதத்தினராவர். பிஷப்புகள் ஆட்சியை அறவே ஒழிக்கப் பொதுமக்கள் சபையார் கங்கணம் கட்டிக்கொண்டிருந்ததைக் கண்ட அவர்கள் 'பிஷப்புகளின்றேல் மன்னருமில்லை' என்று சொன்ன அரசரை ஆதரித்ததில் ஆச்சரியமொன்றுமில்லை. வேறு சிலர் செஞ்சோற்றுக் கடனைக் கழிக்கவேண்டி மன்னர் பக்கம் சேர்ந்தனர். 'கடந்த முப்பதாண்டுகளாக நான் அரசரது உப்பை உண்டு அவருக்குப் பணி புரிந்துள்ளேன். இனிமேல் போய் நான் அவரைப் பிரிந்து செல்கின்ற கீழான செய்கையைச் செய்ய மாட்டேன்' என்று எட்ஜ்ஹில் போரில் கொடிதாங்கிய வண்ணம் உயிரிழந்த வெர்னே (Verney) என்ற பிரபு கூறினர். 'அரசரது ஆதரவாளர்களில் பலர் இந்த நன்றியுணர்ச்சியால் உந்தப்பட்டவர்

களே யாவர். பழைய சமுதாயம் (Old Society) மறுபடி ஏற்பட வேண்டுமென விரும்பிய பிரபுக்களும், எலிஸபெத் இராணிகால இங்கிலாந்தை மீண்டும் உருவாக்க வேண்டுமென விரும்பிய ஸ்கொயர்கள் எனும் பெருநிலக் கிழார்களும், சமயப் பிளவுகளையும் கலக மனப்பான்மையையும், ஜனநாயக மனப்பான்மையையும் வெறுத்த பழமை விரும்பிகளும் மன்னரை ஆதரித்தனர். இங்ஙனம் பிரபுக்கள் சபையில் முப்பது பேர்களைத் தவிர மற்ற யாவரும் அரசர் கட்சியில் சேர்ந்தனர். பொதுமக்கள் சபையில் நூற்றெழுபத்தைந்து பேர் மன்னர் பக்கம் சேர்ந்தனர். மீதி முந்நூறு பேர்கள் பாராளுமன்றக் கட்சியை ஆதரித்தனர். ஸ்கொயர்கள் எனும் பெருநிலக்கிழார்கள் பலரும் அரசரை ஆதரிக்க, யோமென்கள் எனும் சிறுநிலக்கிழாரில் பெரும்பான்மை யோர் பாராளுமன்றத்தை ஆதரித்தனர். இங்கிலாந்தின் கல்விக் களஞ்சியங்களான ஆக்ஸ்ஃபோர்டு, கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகங்கள் மன்னரை ஆதரித்தன. பாமர மக்களின் பாசறை யாகப் பாராளுமன்றத்தின் கட்சி திகழ்ந்தது. நடுத்தர கனவான் களில் பாதிப்பேரும் வணிகர்களிற் பெரும்பான்மையோரும் பாராளுமன்றத்தை ஆதரித்தனர். எஸ்ஸெக்ஸ் பிரபு, மான்செஸ்டர் பிரபு போன்ற ஒரு சில பிரபுக்களின் ஆதரவும் பாராளுமன்றத்துக்கு இருந்தது. பொதுவாக நகரவாசிகள் அனைவரும், சிறப்பாக லண்டன் நகரவாசிகளும் பாராளுமன்றத்தை ஆதரித்தனர். ஏனெனில், அவர்களிற் பெரும்பான்மையோர் பியூரிட்டன் மதப் பிரிவினைச் சேர்ந்தவர்கள். மற்றைய உணர்ச்சிகள் எல்லா வற்றையும்விட மதவுணர்ச்சிதான் உள்நாட்டுப் போரில் கலந்து கொண்ட அனைவர்பாலும் தலைதூக்கி நின்றதெனலாம்.

## இரு சாராரையும் ஆதரித்த நிலப்பகுதிகள்

பொதுவாகப் பார்க்குமிடத்து, இங்கிலாந்தின் வடபகுதியும் மேற்குப் பகுதியும் மன்னரையும், தெற்குப் பகுதியும் கிழக்குப் பகுதியும் பாராளுமன்றத்தையும் ஆதரித்தன எனக் கூறலாம். வட இங்கிலாந்தும், வேல்ஸ், கார்ன்வால், டெவன், லங்காஷயர் என்ற பகுதிகளும் அரசரை ஆதரித்தன. அப் பகுதிகளில் வாழ்ந் தோர் அனைவரும் ஏழைகள். எனவேதான் ஆக்ஸ்ஃபோர்டு பாராளுமன்றமானது மன்னருக்குத் தாராளமாக மானியமளித்தும் கூட அதை மக்களிடமிருந்து அவரால் வசூலிக்க முடியவில்லை. படை வீரர்கள் கொள்ளையடித்து உயிர் வாழவேண்டியதாயிற்று. அவர்கள் கொள்ளையடிப்பதை மன்னரது தளகர்த்தரான ரூபர்ட் இளவரசர் வேறு வழியின்றி அனுமதித்தார். எனவே, அவரை மக்கள் 'கொள்ளைக்கார இளவரசர்' (Prince Robber) என்று அழைத்தனர்.

ஆனால், பாராளுமன்றமோவெனின் செல்வம் கொழித்த லண்டன் மாநகரின் ஆதரவையும், ஹம்பருக்குத் தெற்கேயிருந்த கிழக்குக் கவுன்டிகள், போர்ட்ஸ்மவுத் வரையிருந்த தெற்குக் கவுன்டிகள், மான்ச்செஸ்டர், வெஸ்ட் ரைடிங், சோமெர்செட் போன்ற துணி வியாபாரத்துக்குப் பேர்போன நகரங்கள் முதலியவற்றின் முழு ஆதரவையும் பெற்றது. லண்டன் நகரம், பாராளு மன்றத்தின் பக்கமிருந்தது அதன் நற்பேறு என்றே கருதல் தகும். ஏனெனில், நாட்டின் வியாபாரம் அனைத்துக்கும் அதுவே கேந்திர நிலையமாக விளங்கியது. சுங்கவரி வசூலிக்கும் நிலையம் அங்குதான் இருந்தது. எனவே, பாராளுமன்றத்துக்கு நிறைய வருமானம் கிடைத்தது. மேலும், லண்டன் நகர் பியூரிட்டன் களின் கோட்டை. அதற்குச் சுற்றுப்புறத்திலிருந்த கிழக்கு நாடு களும் பியூரிட்டன் மதப் பிரிவைச் சேர்ந்தவையே. எனவே, அவைகள் ஒற்றுமையாகவும், உற்சாகத்தோடும் போரிட வசதியா யிருந்தது. நாட்டு மக்களின் அபிப்பிராயங்களை உருவாக்கும் அச்சியந்திர சாலைகள் பலவும் லண்டனிலேயே இருந்தன. இருபது வார இதழ்கள் அங்கிருந்து அச்சிடப்பட்டு வெளியாயின. உள் நாட்டுப் போர் நடைபெற்ற இருபது ஆண்டுகளுக்குள் சுமார் 30,000 துண்டுப் பிரசுரங்கள் லண்டனிலிருந்து வெளிவந்தன. இங்ஙனம் லண்டன் நகரம் கருத்துகளின் கருவூலமாகவும், உற்சாகத்தின் உறைவிடமாகவும் திகழ்ந்தது. லண்டன் வீரர்கள் மற்றெல்லா வீரர்களையும்விடத் திறமையுடையவராயிருந்தனர். லண்டனை மையமாகக் கொண்டு அதனைச் சுற்றியிருந்த அரசரைச் சார்ந்த இடங்களைத் தாக்குவது அவர்களுக்கு எளிதாக இருந்தது. மற்றும் நீதிமன்றங்களும், சட்டசபையும் இயங்குகின்ற லண்டன் நகர் பாராளுமன்றத்தின் வசம் இருந்ததானது வெளிப்பார்வைக் குப் பாராளுமன்றமே சட்டப்படி நியாயமாகப் போரிடுவது போன்றும், அரசரே அநியாயமாக அந்நிய நாட்டின் உதவி கொண்டு இங்கிலாந்தைப் படையெடுத்து லண்டனைக் கைப்பற்ற முயற்சிப்பது போலவும் தோன்றும்படி செய்தது. மேலும், லண்டன் கப்பற்படையானது பாராளுமன்றத்துக்குப் பெரிதும் உதவியா யிருந்தது. ஹல்லிலிருந்து போர்ட்ஸ்மவுத் வரையிருந்த எல்லாத் துறைமுகங்களும் பாராளுமன்றத்தின் வசமே இருந்தன. இதனால் அரசருக்கு வெளிநாட்டிலிருந்து தளவாட உதவியும் மற்ற உதவி களும் வரமுடியாவண்ணம் பாராளுமன்றம் தடுக்க முடிந்தது. இங்ஙனம் சூழ்நிலை பலவகைகளிலும் பாராளுமன்றத்துக்குச் சாதகமாக இருந்தது.

### இரு தரப்பினரின் இராணுவ பலம்

இரு தரப்பிலும் போரிட்டவர்கள் உண்மையில் போர்ப் பயிற்சி அதிகமில்லாதவர்கள். அவர்கள் அந்தந்த மாவட்டங்களில்

உள்ள செல்வாக்கு மிக்க கனவான்களால் திரட்டப்பட்டார்கள். எனவே, அவர்கள் தங்கள் தங்கள் மாவட்டங்களுக்காகப் போரிட விரும்பினார்களேயன்றி அவைகளை விட்டு வெளியே செல்ல முணு முணுத்தார்கள். அவர்களை ஒன்று சேர்த்துப் பெருத்த அளவில் போரிடச் செய்வது மிக அரியதொரு சாதனையாக இருந்தது. பெரும் பிரபுக்களும் அவர்களது பணியாட்களும் நல்ல குதிரை வீரர்களாக இருந்ததால் மன்னரது குதிரைப்படை மிகவும் திறமையுடையதாக இருந்தது. மன்னரது மைத்துனரான ரூபர்ட் இளவரசர் அவரது சேனைக்குத் தலைமை தாங்கினார். அவர் இளமை முறுக்கும் சுறுசுறுப்புமுடையவரேனும் அவசர புத்திக்காரர்; ஆழ்ந்த அனுபவம் இல்லாதவர். பாராளுமன்றத்தின் தரப்பில் காலாட்படையே பெரிதும் வலிமையுடையதாயிருந்தது. அதன் உதவிக்கு வந்த ஸ்காட்லாந்துப் படைகள் முப்பதாண்டுப் போரில் ஐரோப்பாவில் கலந்துகொண்டு நல்ல அனுபவம் பெற்றிருந்தன பயிற்சி அளிக்கப்பட்ட லண்டன் நகரக் காவல் வீரர்கள் (Trained Bands) பாராளுமன்றத்துக்குத் தக்கதோர் பக்க பலமாய் இருந்தனர். எனினும், திறமையில் அவர்கள் பெரிதும் குன்றியவர்களாய்க் காணப்பட்டனர். எஸ்ஸெக்ஸ் பிரபு (Essex) பாராளுமன்றப் படைகளுக்குத் தலைமை தாங்கினார். அவர் தைரியம் மிக்கவர்; ஆனால், காரியங்களைச் செய்வதில் சுறுசுறுப் பற்றவர். பிற்காலத்தில் கிராம்வெல், ஃபேர்ஃபாக்ஸ் (Fairfox) போன்ற பெருந் தளகர்த்தர்கள் பாராளுமன்றத்தின் தரப்பில் வந்து சேர்ந்தனர். இரு தரப்பிலும் வெடி மருந்துப் படை (Artillery) அவ்வளவு சிறந்ததாய் இல்லை. கடற்படை முழுவதும் பாராளுமன்றத்தார்க்குத் துணையாகச் சென்றுவிட்டது. கடற்படைத் தலைவரான வார்விக் எர்ல் (Earl of Warwick) என்பார் கவனத்தோடு துறைமுகங்களைப் பாதுகாத்து மன்னருக்கு வெளிநாட்டு உதவி ஏதும் வராமல் தடை செய்தார்.

### இருதரப்பினரின் பொருளாதார பலம் (Financial Strength)

அரசருக்கு நிலையான வரும்படி ஏதும் இல்லை. தனிப்பட்ட பிரபுக்களின் நன்கொடையை நம்பியே அவர் வாழ்ந்தார். அதுவும் சிந்நாளில் வறண்டுவிட்டது. எனவேதான் அரசரது படைகள் கொள்ளையடிக்க ஆரம்பித்தன. ஆக்ஸ்ஃபோர்டும், கேம்பிரிட்ஜும் அவற்றுக்குச் சொந்தமான தங்கத் தட்டுகளை விற்று அரசருக்குப் பொருளுதவி செய்தன. எனினும், அரசரது வறுமை தீரவில்லை. அவருக்கு உதவி செய்த நிலப்பகுதிகளும் வறுமையில் வாடின. எனவே, அங்கிருந்து வரி தண்டலும் அரிதாயிருந்தது. ஆனால், பாராளுமன்றத்துக்கோ சுங்கவரிகள் மூலம் ஏராளமாகப் பொருள் கிடைத்தது. மேலும் அது அந்தந்த நிலப்பகுதிகளில் வாழும்

மக்களிடம் ஒரு குறிப்பிட்ட தொகையை மாதாமாதம் உள்ளூர் அதிகாரிகள் மூலம் வசூலித்துக்கொண்டது. நுகர்வுப் பொருள்கள்மீது (consumption goods) ஒரு வரி விதித்து அதன் மூலமும் அது பெரும் பொருள் திரட்டியது. செல்வத்தில் சிறந்த கைத்தொழில் பிரதேசங்கள் எல்லாம் அதை ஆதரித்தன. அவைகள் மூலம் மாதத்துக்கு 120,000 பவுன்கள் அதற்குக் கிடைத்ததால், குதிரைப்படை வீரர்களுக்கு ஒரு நாளைக்கு 2 ஷில்லிங் வீதம் சம்பளம் தரப்பட்டது. எனவே, சம்பளம் சரிவரத் தரப்படாத அரசரது வீரர்கள் பலர் பாராளுமன்றத்தின் படைகளில் அவ்வப்போது வந்து சேர்ந்துகொண்டனர். சுருங்கக் கூறுமிடத்து வெற்றிக்கு வழி கோலுகின்ற பொருள் பலமும், ஆள்பலமும் மன்னனைவிடப் பாராளுமன்றத்திற்கே அதிகமாய் இருந்தது எனலாம்.

### போரின் தன்மையும் போக்கும்

போரில் கலந்துகொண்ட பலரும் ஆரம்பத்தில் உற்சாகமில்லாதவராகக் காணப்பட்டனர். தந்தையோடு பிள்ளையும், சகோதரரோடு சகோதரரும் போரிடவேண்டிய இக்கட்டான நிலைமை ஏற்பட்டதால் அவர்கள் கொடூரமான செயல்கள் எதிலும் ஈடுபடவில்லை. இங்கிலாந்தில் நடைபெற்ற ரோஜாப்பூ அடையாள உள்நாட்டுப் போர்களிலும் ஃபிரெஞ்சு உள்நாட்டுப் போர்களிலும் காணப்பட்டது போன்று, கொலையும் கொள்ளையும் அதிகமாக இப்போரில் காணப்படவில்லை.

போரானது மூன்று ஆண்டுகள் தொடர்ந்து நடைபெற்றது. அதற்கப்புறம் இரண்டாண்டுகளுக்கு இடையிடையே விட்டு விட்டுப் போர் நிகழ்ந்தது. 1642-ல் நடைபெற்ற போரில் இருதரப்பினருமே மனமின்றி ஏனோதானோவென்று போரிட்டனர். இருவருமே சமாதான முயற்சியில் ஈடுபட்டவண்ணமிருந்தனர். 1643-ல் நிகழ்ந்த போரிலும் படைகளை ஓர் இடத்தில் குவிக்கத் தெரியாத காரணத்தால், இருதரப்பாரும் வெற்றியடையாமல் போயினர். 1644ஆம் ஆண்டு ஸ்காட்லாந்தியர் பாராளுமன்றத்திற்குத் துணை புரிய முன் வருகின்றனர். அதனால் அதனின் கை வலுக்கிறது. 1645ஆம் ஆண்டில் அது ஒரு தீர்மானமான வெற்றியை நேஸ்பி என்னுமிடத்தில் பெறுகிறது. 1646-ல் மன்னனுக்குச் சொந்தமாயிருந்த எல்லாக் கோட்டைகளும் பாராளுமன்றப் படைகளால் கைப்பற்றப்படுகின்றன. இவ்வாண்டுகள் முழுவதிலும் இங்கிலாந்தை அடுத்துள்ள அயர்லாந்திலும், ஸ்காட்லாந்திலும் இங்கிலாந்தின் போர்களுக்கு எதிரொலியாகப் பல் போர்கள் நிகழ்கின்றன.

முதலாவதாண்டுப் போர் (1642)

ஆரம்பத்தில் சார்லஸ் போதிய அளவு போர்த்தளவாடங்களும் பொருளுமின்றிப் பலவீனமாயிருந்தார். இச்சமயத்தில் பாராளுமன்றத்தின் படைத் தலைவரான எஸ்ஸெக்ஸ் பிரபு காலம் தாழ்த்தாது அரசரைத் தாக்கியிருந்தால், எளிதிலே வெற்றி பெற்றிருக்கலாம். ஆனால், பாராளுமன்றத்தின் படைவீரர்கள் போதிய போர்ப் பயிற்சி யற்றவர்களாயிருந்ததால், எஸ்ஸெக்ஸ் பிரபு அவ்விதம் செய்யவில்லை. சார்லஸ் தமது படைகளுடன் லண்டனை நோக்கிப் புறப்பட்டார். அவருக்கு இணையாக எஸ்ஸெக்ஸ் பிரபுவும் லண்டனை நோக்கி விரைந்தார். வழியில் இருவரது படைகளும் எட்ஜ்ஹில் எனுமிடத்தில் 1641 ஆம் ஆண்டு அக்டோபர் 23 ஆம் தேதி கைகலந்தன. நன்கு பழக்கப்பெற்றிருந்த அரசருடைய குதிரைப் படை எதிரிகளது இரண்டு பக்கவாட்டு அணிவகுப்புகளையும் முரியடித்துத் துரத்தியது. ஆனால், வெகு தூரம்வரை ரூபர்ட் இளவரசர் பாராளுமன்றத்தாரின் படைகளைத் துரத்திச் சென்றார். இதற்கு இடையில் அரசரது காலாட்படை பாராளுமன்றத்தின் குதிரைவீரர்களால் தோற்கடிக்கப்பட்டது. எனினும், அவ் வீரர்களால் சார்லஸின் முன்னேற்றத்தைத் தடுக்க முடியவில்லை. ஆனால், சார்லஸ் தமது படைகளை ஆமை வேகத்தில் நடத்திச் சென்று காலந்தாழ்த்தினார். அதற்குள் எஸ்ஸெக்ஸ் பிரபு தமது படைகளை வேகமாக நடத்திச் சென்று அரசருக்கு முன்பாக லண்டனை அடைந்துவிட்டார். ரூபர்ட் இளவரசர் நவம்பர் மாத இறுதியில் பிரன்ட்ஃபோர்டு (Brentford) என்னுமிடத்தைக் கைப்பற்றினார். ஆனால், பாராளுமன்றத்தின் படைகள் டர்ன்ஹாம்கிரீன் (Turnhamgreen) என்ற இடத்தை அடைந்து, லண்டனுக்குள் அரசரின் படைகள் நுழையாதவாறு அவற்றைத் தடுத்து நின்றன. லண்டன் நகர்ப் படையானது பாராளுமன்றத்துக்குப் பெரிதும் உதவியாயிருந்தது. அதற்குள் மாரிக்காலம் வந்துவிடவே சார்லஸ் ஆக்ஸ்ஃபோர்டு நகரத்திற்குச் சென்றுவிட்டார். அப்போதிருந்து ஆக்ஸ்ஃபோர்டு நகரம் மன்னனின் தலைநகராகத் திகழ்ந்தது. லண்டன் நகருக்கு வெகு அருகிலே வந்த சார்லஸ் அதற்குள் நுழையும் அரிய தருணத்தை நழுவவிட்டுவிட்டார். அதற்குப் பின்னர் ஒரு முறைகூட அவரால் லண்டனுக்கு அவ்வளவு அருகில் செல்ல முடியவேயில்லை.

அரசருக்கு மற்றைய இடங்களில் வெற்றிக்கு மேல் வெற்றி கிட்டிற்று. வடக்கே இருந்த நியூகாசில் பிரபு, பாராளுமன்றப் படைகளைத் தோற்கடித்து, யார்க் என்ற நகரத்தைக் கைப்பற்றினார். ஹாப்டன் (Hopton) எனும் தளகர்த்தர், கார்ன்வால், டெவன் என்ற இடங்களைப் பிடித்தார். இங்ஙனம் முதலாண்டில் அரச

ருக்குப் பல வெற்றிகள் கிடைத்தன. லண்டன் நகரப் பியூரிட்டன்கள் சமாதானத்தை நாடினர். ஆக்ஸ்ஃபோர்டு உடன்பாடு என்ற ஒரு சமாதான ஏற்பாடும் தயாரிக்கப்பட்டது. ஆனால், நாட்டுப்படையைத் (Militia) தானே நிர்வகிக்க வேண்டுமெனவும், எபிஸ்கோபல் திருச்சபையை ஒழித்துவிட வேண்டுமெனவும் பாராளுமன்றம் கோரியதால் சமாதானப் பேச்சுவார்த்தைகள் முறிந்தன.

இரண்டாவதாண்டுப் போர் : மேலும் அரசருக்கு வெற்றிகள் (1643)

இந்த ஆண்டிலும் மன்னருக்குப் பல வெற்றிகள் கிடைத்தன. மன்னர் ஒரு புதிய படையெடுப்புத் திட்டத்தை உருவாக்கினர். அதன்படி லண்டன் மாநகர் முத்திக்குகளிலிருந்தும் தாக்கப்பட்டது. வடக்கிலிருந்து நியூகாசில் பிரபுவும், தென்மேற்கிலிருந்து ஹாம்ப்டன் தளகர்த்தரும், மேற்கிலிருந்து சார்லஸும் ஒரே சமயத்தில் லண்டனை நோக்கி முன்னேறினர். தமது படைகளுடன் லண்டனை நோக்கிப் புறப்பட்ட அரசர், வழியில் ஆக்ஸ்ஃபோர்டுஷயரில், பாராளுமன்றத்தின் தளகர்த்தரான ஹாம்ப்டன் என்பவரைத் தோற்கடித்தார். சால்க்ரோவ்ஃபீல்டு (Chalgrove field) எனுமிடத்தில் ஹாம்ப்டன் கொல்லப்பட்டார். நியூகாசில் பிரபு வடக்கேயிருந்து புறப்பட்டு வந்து, ஃபேர்பாக்ஸ் (Fairfox) என்ற பாராளுமன்றத் தளகர்த்தரை அட்வால்டன்மூர் (Advaltonmoor) எனுமிடத்தில் தோற்கடித்தார். ஹல் என்ற துறைமுகத்தைத் தவிர மற்றைய வடபகுதிகள் எல்லாம் அரசரின் படைகளால் கைப்பற்றப்பட்டன. ஹல் துறைமுகம் பாராளுமன்றத்தின் வசமிருந்ததால் அதை விட்டுவிட்டுவர மனமின்றி நியூகாசிலின் படைகள் அங்கேயே தயங்கி நின்றன.

மேற்கேயிருந்து ஹாப்டன் என்பார் புறப்பட்டு வந்து, கார்ன்வால் மாகாணத்தில் உள்ள ஸ்டிராட்டன் (Stratton) நகரில் ஒரு வெற்றி பெற்றுர். தளகர்த்தர் க்ரென்வில் (Crenville) என்பார் இங்கே கொல்லப்பட்டார். பாராளுமன்றத் தளகர்த்தரான சர் வில்லியம் வேலர் என்பார் ஸ்டிராட்டன் நகரில் மட்டுமன்றி ரவுண்ட்வேடவுன் (Roundwaydown) என்ற இடத்திலும் தோற்கடிக்கப்பட்டார். ரூபர்ட் இளவரசர் பிரிஸ்டல் நகரைப் பிடித்தார். இங்ஙனம் இங்கிலாந்தின் மேற்குப் பாகம் அரசரின் வசமாயிற்று.

அரசரின் மூன்று படைகளும் திட்டமிட்டபடி ஒன்றுசேர்ந்து லண்டனைத் தாக்கியிருந்தால் அரசருக்கு வெற்றி எளிதில் கிடைத்திருக்கும். ஆனால், அந்தந்த நிலப்பகுதிப் படைகள் அங்கங்கே இருந்த ஹல், க்லவ்செஸ்டர் (Gloucestor), பிளிமவுத் (Plymouth)

# உள்நாட்டுப் போர்
1643



※ முக்கிய போர்க்களங்கள்.
1643 - ஆம் ஆண்டு இறுதியில் பாராளுமன்றத்தை ஆதரித்த நிலப்பகுதிகள்.
அதே ஆண்டில் அரசனை ஆதரித்த நிலப்பகுதிகள்.

போன்ற துறைமுகங்களைப் பாராளுமன்றத்தின் கையிலிருந்து விடுவிப்பதிலேயே கண்ணும் கருத்துமாய் இருந்தன. இதனால் காலம் தாழ்த்தப்பட்டுப் பாராளுமன்றத்தின் கை வலுத்தது. கிராம்வெல் எனும் தளகர்த்தர் பாராளுமன்றப் படைகளில் தோன்றினார். அவர் ஹல் துறைமுகத்தை விடுவித்தார். எஸ்ஸெக்ஸ் பிரபு க்ளௌசெஸ்டரை அரசரிடமிருந்து விடுவித்து லண்டனை நோக்கிப் பின்னடைந்தார். அரசர் அவரை வழியில் நிறுத்த முயன்றார். ஆனால், முடியவில்லை. ரீடிங்கை மட்டுமே அவரால் கைப்பற்ற முடிந்தது. நியூபரி என்னுமிடத்தில் எஸ்ஸெக்ஸ் மன்னரோடு போரிட்டார். அப்போர்க்களத்தில் அரசரின் தளகர்த்தரான ஃபாக்லாண்டு என்பார் மனமுடைந்து, போர் செய்யாமலேயே, 'சமாதானம், சமாதானம்' எனக் கூறிக்கொண்டே இறந்தார். எனினும், அரசருக்கே வெற்றி கிடைத்தது. இங்கிலாந்தின் முக்கால் பகுதி சார்லஸின் வசமாகிவிட்டது. அவரது பலம் உச்ச நிலையை அடைந்தது.

## புனிதக் கூட்டுறவும் ஒப்பந்தமும் (Solemn League and Covenant)

சார்லஸின் படைகள் மேலும் மேலும் வெற்றி பெறுவதைக் கண்ட பாராளுமன்றத் தலைவர்கள், ஸ்காட்லாந்தின் உதவியை நாடினர். பாராளுமன்றத்தின் உதவியின்றித் தங்களுடைய பிரஸ்பிடீரிய மதத்தைக் காத்துக்கொள்ள முடியாதென நினைத்த ஸ்காட்லாந்தியரும் அதனோடு ஓர் உடன்படிக்கையைச் செய்துகொண்டனர். அதன் பெயர் 'புனிதக் கூட்டும் ஒப்பந்தமும்' என்பதாகும். அதன்படி ஸ்காட்லாந்தியப் பிரஸ்பிடீரிய மதம் இங்கிலாந்தில் நிலைநாட்டப்பட வேண்டும்; அதற்கு ஈடாக ஸ்காட்லாந்துப் படைகள் பாராளுமன்றத்துக்கு உதவி செய்யவேண்டும். பாராளுமன்றத்தின் படைகளை வழிநடத்த இரு இராஜ்யங்களின் கமிட்டி (A Committee of both Kingdoms) என்ற ஒரு குழு அமைக்கப்படவேண்டும். இங்ஙனம் பாராளுமன்றத்தார் ஸ்காட்லாந்தியர் உதவியை நாடியதைப் போலவே சார்லஸும் அயர்லாந்தியர் உதவியை நாடினர். கலகம் செய்துகொண்டிருந்த அயர்லாந்தியரோடு அவர் ஓராண்டுப் போர்நிறுத்த ஒப்பந்தம் (Cessation) செய்துகொண்டார் (செப்டம்பர் 1643). அயர்லாந்திய ரோமன் கத்தோலிக்கர்களுக்கு அவர் சமயப் பொறை வழங்கினார். இதன்மூலம் அயர்லாந்தில் போரிட்டுக்கொண்டிருந்த ஆங்கிலப் படையினரின் உதவி சார்லஸுக்குக் கிடைத்தது.

பாராளுமன்றமானது படைக்கு ஆள் திரட்ட வேண்டி ஒரு புதிய முறையைக் கையாண்டது. நெருங்கியுள்ள பல கவுண்டிகள் ஒன்றுசேர்ந்து படை திரட்டும் சங்கங்களை அமைத்துக்

கொண்டன. பல்வேறு நிலப்பகுதிகளினின்றும் திரட்டப்பட்ட படைகளுக்குள் இருந்த பொறுமையும், ஒற்றுமையின்மையும் இதனால் தவிர்க்கப்பட்டன. கீழைக் கவுடின்கள் யாவும் ஒன்று சேர்ந்து கீழைச்சங்கம் (Eastern Association) என்ற ஒரு சங்கத்தைத் தோற்றுவித்தன. அதற்குக் கிராம்வெல் என்பவர் தலைமை தாங்கினர். போர்களில் வெற்றி பெறவேண்டுமானால், வெறும் உடல் பலம் மட்டும் போதாதென்றும், உள்ள உரமும் ஊக்கமும் அதற்குத் தேவையென்றும் அவர் கண்டுகொண்டார். எனவே, பாராளுமன்றத்தின் கொள்கைகளை, சிறப்பாகப் பியூரிட்டன் மதக் கொள்கைகளை ஆதரித்தவர்களாகப் பார்த்து அவர் தம் படையில் சேர்த்தார். அரசரை ஆதரித்தவர்கள் தங்களது கௌரவத்தைக் காப்பதில் காட்டிய ஊக்கத்துக்குச் சமமாகக் கிராம்வெல்லின் படையினர் தம் சுதந்திரத்தைக் காப்பதில் உற்சாகம் காட்டினர். தென்கிழக்குச் சங்கம் (South Eastern Association) என்ற படை திரட்டும் சங்கத்தைத் தளகர்த்தர் வேலர் (Waller) தோற்றுவித்தார். பாராளுமன்றத்தின் படைகள் புதுத் தெம்புடன் போரிட்டுச் சில வெற்றிகளைப் பெற்றன. கிராம்வெல், கெயின்ஸ்பரோ (Cainsborough), வின்ஸ்பீ (Winceby) என்ற இடங்களில் பெரு வெற்றிகள் பெற்றார். இங்ஙனம் லின்கன்ஷயரிலும் (Lincolnshire) தென்கிழக்கு யார்க்ஷயரிலும் (Yorkshire) பாராளுமன்றப் படைகள் வெற்றிகளைப் பெற்றன. நியூகாசில் பிரபு, ஹல் துறைமுகத்தைக் கைவிட்டுப் பின்வாங்கினர். இச் சமயத்தில் பாராளுமன்றத்தாரின் தரப்பில் ஒரு பெரிய விபத்து நேர்ந்தது. அவர்களுக்குத் தனித்தலைவராய் நின்று ஊக்கமும் ஆக்கமும் அளித்து வந்த பிம் என்பார் டிசம்பர் 6 ஆம் தேதி திடீரென்று காலமானர். அச் செய்தி கேட்ட பாராளுமன்றப் படைகள் திடுக்கிட்டுத் திகைப்படைந்தன. பிம், தம் வாழ்நாள் அனைத்தும் ஆங்கிலேயரின் உரிமைகளுக்காகவும், பிராடெஸ்டன்டு மதத்துக்காகவும் போரிட்டார். வரம்புக்குட்பட்ட முடியாட்சியை நிலைநாட்ட அவர் பெரிதும் பாடுபட்டார். பியூரிட்டன்கள் வாழவேண்டுமென விரும்பிய அவர் கத்தோலிக்கர்களுக்கு இங்கிலாந்தில் இடமில்லை எனக் கருதினர். இறுதியாக ஸ்காட்லாந்தோடு ஓர் உடன்பாட்டைச் செய்துகொண்ட பின்னரே அவர் இறந்தார். அவ்வுடன்பாட்டின் மூலம் அவர் பாராளுமன்றத்தின் வெற்றிக்கு வித்திட்டுச் சென்றார் எனலாம். அவருடைய மரணம் பாராளுமன்றத்துக்குப் பெரிய தோர் இழப்பாகும். அவர் இருக்கும்வரை பல சேனைத் தளகர்த்தர்களும் அவருக்குக் கட்டுப்பட்டு நடந்தனர். அவர்களிடையே ஒற்றுமை நிலவியது. ஆனால், அவரது மரணத்துக்குப்பின் அவர்களிடையே பிளவு ஏற்பட்டது. பிரஸ்பிடீரியர்களும் சுயேச்சையாளர்களும் தமக்குள் சச்சரவிட ஆரம்பித்தனர். அவர்களை

அதட்டிக் கேட்டு ஒற்றுமைப்படுத்த பிம்மைப்போன்று வேறு ஒருவரும் பாராளுமன்றத் தரப்பில் அப்போது இல்லாது போயினர்.

மூன்ருவதாண்டுப் போர் (1644)

இவ்வாண்டில் பாராளுமன்றத்தாரின் கை ஓங்கியது. ஸ்காட்லாந்திலிருந்து இருபதினுயிரம் வீரர்கள் அடங்கிய படை ஒன்று அலெக்ஸாண்டர் லெஸ்லி (Alexander Leslie) என்பவரின் தலைமையில் பாராளுமன்றத்துக்கு உதவியாக இங்கிலாந்துக்கு வந்து சேர்ந்தது. அதே சமயம் அயர்லாந்திலிருந்தும் அரசருக்கு உதவியாக ஒரு படை வந்துசேர்ந்தது. அயர்லாந்துப் படையினர் கத்தோலிக்கராதலால் அரசனை ஆதரித்த ஆங்கிலேயர்கூட அவர்களை வெறுத்தனர். ஐரிஷ் படையானது நான்ட்விச் (Nantwich) எனுமிடத்தில் ஃபேர்ஃபாக்ஸ் (Fairfox) எனும் பாராளுமன்றத்துத் தளகர்த்தரால் தோற்கடிக்கப்பட்டது. இதற்குள் கிராம்வெல் எனும் வீரர் தமது படைகளோடு பாராளுமன்றத்துக்கு உதவியாக வந்து சேர்ந்தார். அவர் பாராளுமன்றத்தின் படைகளில் ஊக்கம் குறைந்திருப்பதே அதன் தோல்விக்குக் காரணம் எனக் கருதினுர். மன்னரை ஆதரித்தவர்கள் மிக ஆர்வத்தோடு போரில் ஈடுபட்டது போன்று பாராளுமன்றத்தின் படை வீரர்களும், ஓர் உறுதியுடனும் நம்பிக்கையுடனும் போரிடவேண்டுமென விரும்பி, அதற்கான உற்சாகத்தைத் தம் வீரர்களுக்கு ஊட்டினுர். கிராம்வெல்லை அவர்கள் தெய்வம்போல் போற்றினுர்கள். இவ்விதம் வலிமை வாய்ந்த கிராம்வெல்லின் படைகளும் ஸ்காட்லாந்தின் படைகளும் ஃபேர்ஃபாக்ஸின் படைகளும் ஒன்றுசேர்ந்து 'யார்க்' நகரத்தை முற்றுகையிட்டன. யார்க் நகரைக் காத்துவந்த அரசரது தளகர்த்தரான நியூகாசில் பிரபு வெளிவர இயலாது அந்நகரில் அடைப்பட்டுக் கிடந்தார். ரூபர்ட் இளவரசர், நியூகாசில் பிரபுவின் விருப்பத்துக்கு மாருக யார்க் நகரை மீட்கப் புறப்பட்டு வந்தார். அவர் வசம் பதினேழாயிரம் போர்வீரர்களே இருந்தனர். ஆனுல், பாராளுமன்றத்தின் தரப்பிலோ இருபத்து ஏழாயிரம் போர்வீரர்கள் இருந்தனர். ரூபர்ட் சிறிது அவசரப்பட்டுவிட்டார். ரூபர்ட்டின் நோக்கத்தையறிந்த பாராளுமன்றத்தின் படைகள் முந்திக்கொண்டன. மார்ஸ்டன்மூர் (Marstonmoor) எனுமிடத்தில் அவை அரசரது படைகளை எதிர்த்தன. மாலை ஆறு மணிக்கு ரூபர்ட் இளவரசர் இரவு உணவு அருந்திக்கொண்டிருந்தார். நியூகாசில் தமது இருக்கையினின்று புகைபிடித்துக் கொண்டிருந்தார். இச்சமயம் பார்த்துக் கிராம்வெல் போரைத் தொடங்கினுர். அவரது படையினர் அரசரின் வலதுபாக அணிவகுப்பை முரியடித்தனர். அரசரது இடதுபாக அணிவகுப்பின்

தளகர்த்தரான கோரிங் (Goring) என்பார், பாராளுமன்றத் தளகர்த்தரான ஃபேர்ஃபாக்ஸின் படைகளைத் தோற்கடித்து, அவற்றை வெகுதூரம் துரத்திக்கொண்டு சென்றார். இடையில் பாராளுமன்றத்தின் நடு அணிவகுப்பும் தோற்கடிக்கப்பட்டது. இருப்பினும், அவ்வணிவகுப்பிலிருந்த ஸ்காட்லாந்தியர் கலையாமல் நியூகாசில் பிரபுவின் வெண்சட்டைப் படையினரோடு (White Coats) போரிட்டு வந்தனர். கிராம்வெல் தமது படைகளைத் திருப்பி, வெற்றிபெற்ற அரசரது படைகளைப் பக்கவாட்டில் தாக்கினார். மன்னரது படைகள் சிதறடிக்கப்பட்டன. நியூகாசில் பிரபு படைக்களத்தைவிட்டு ஓடிவிட்டார். பின்னர் வெளிநாட்டுக்குச் சென்றுவிட்டார். அரசர் தமது வட பகுதியை இழந்தார். யார்க் நகரம் பிடிபட்டது. இப் போரில் கிராம்வெல்லின் புகழ் ஓங்கியது. இங்குதான் அவரது வீரர்கள் 'இரும்புப் படையினர்' (Iron sides) என்ற பெயரைப் பெற்றனர். பாராளுமன்றத்தின் படைகள் ஆரம்பத்தில் மேற்கண்டபடி வெற்றி பெற்றாலும் கொஞ்ச நாள்களில் பல தோல்விகளை எய்தின. படைகளை நிர்வகித்து வந்த, இரு இராஜ்யங்களின் கமிட்டியில்' பிளவு ஏற்பட்டது. பிரஸ்பிடீரியர்களுக்கும் சுயேச்சையாளர்களுக்கும் கருத்து வேறுபாடு ஏற்பட்டதால் அவர்கள் படைகளை நன்கு நடத்த முடியவில்லை. வேலர் (Waller), ஹாப்டனை, செரிடன் (Cheritan) எனுமிடத்தில் தோற்கடித்து ஆக்ஸ்ஃபோர்டு சென்று எஸ்ஸெக்ஸுக்கு உதவி புரிந்தார். ஆனால், இருவரும் சீக்கிரமே பிரிந்தனர். மத்தியப் பிரதேசத்தில் சார்லஸ் இப் பிரிவைப் பயன்படுத்திக் கொண்டு இருவரையும் தனித்தனியே தோற்கடித்தார். வேலர் என்பார் செர்வல் (Cherwell) நதிக்கரை மேலுள்ள குரோப்ரெடி பிரிட்ஜ் (Cropredy Bridge) எனும் இடத்தில் தோற்கடிக்கப்பட்டார். கார்னிஸ் நிலப்பகுதி மக்கள் சார்லஸுக்கு உதவி செய்ய முன்வந்தனர். பாராளுமன்றத்தின் படைகள், எஸ்ஸெக்ஸ் பிரபுவின் தலைமையில் டான்டன் (Taunton) நகரை மீட்க முயன்றனர். சார்லஸ் அவரைப் பின்தொடர்ந்து சென்று, லாஸ்ட்டுவிதியல் (Lostwithiel) எனுமிடத்தில் ஒரு பெரும் வெற்றியைப் பெற்றார். அதன்பின் அவர் தடையின்றிக் கார்ன்வாலிலிருந்து நியூபரிவரை சென்றார். எனினும், அவர் லண்டனை அடைய முடியவில்லை. கீழைச்சங்கப் படைகள் அவரை மேலும் முன்னேற விடாமல் தடுத்துவிட்டன. அவர் நேரே ஆக்ஸ்ஃபோர்டுக்குச் சென்று அங்குத் தம் படைகளை வலுப்படுத்துவதில் ஈடுபட்டார். இங்கிலாந்தின் வடபகுதியை அவர் இழந்துவிட்டாலும் மத்தியப் பகுதியையும் கார்ன்வாலையும் பெற்றார். பாராளுமன்றத்தின் தரப்பில் பிரஸ்பிடீரியர்களுக்கும் சுயேச்சையாளர்களுக்கும் ஏற்பட்ட சச்சரவே சார்லஸின் வெற்றிக்குக் காரணமாகும். சுயேச்சை

யாளர்கள் சேனையில் பெரும்பான்மையினராக இருந்தனர். அவர்கள் அரசனை ஒழித்துவிட்டுக் குடியரசை ஏற்படுத்த விரும்பினர். ஆனால், பிரஸ்பிடீரியர்கள் வரம்புக்குட்பட்ட முடியாட்சியை விரும்பினர். பிரஸ்பிடீரியர்கள் ஸ்காட்லாந்தில் நிலவிய மத ஏற்பாட்டை அப்படியே இங்கிலாந்தில் திணிக்க விரும்பினர். ஆனால், சுயேச்சையாளர்கள் சமயத்துறையில் பலரும் சுயேச்சையாகப் பிரியம்போல் தொழுவதற்கு வாய்ப்பிருக்கவேண்டும் என்றனர். பிரஸ்பிடீரியர்கள் ஸ்காட்லாந்தோடு நீங்காத உறவு கொண்டாட விரும்பினர். ஆனால், சுயேச்சையாளர்கள் ஸ்காட்லாந்தின் உறவை முறித்துக்கொள்ள விரும்பினர். இந் நிலையில் அரசரோடு அக்ஸ்பிரிட்ஜ் (Uxbridge) எனுமிடத்தில் சமாதானப் பேச்சு வார்த்தை நடைபெற்றது. பிரஸ்பிடீரிய மதத்தை இங்கிலாந்தில் நிலைநாட்ட வேண்டுமென்றும், நாட்டுப் படையின்மீது தாங்களே அதிகாரத்தைச் செலுத்த வேண்டுமென்றும் பாராளுமன்றத்தார் விரும்பினர். அதை அரசர் ஒப்புக்கொள்ளவில்லை. மேலும், அப்போதுதான் அரசரின் நண்பரான லாட் என்பவரை அரசியல் துரோகக் குற்றம் சாட்டிப் பாராளுமன்றம் சிரச்சேதம் செய்தது. எனவே, சமாதானப் பேச்சுவார்த்தைகள் முறிந்தன. மறுபடியும் போர் தொடர்ந்தது.

### ஸ்காட்லாந்தில் போர் (1644—1645)

ஸ்காட்லாந்தில் மன்னருக்குச் சாதகமாக மான்ட்ரோஸ் பிரபு கிளம்பினார். பாராளுமன்றத்துக்குச் சாதகமாக ஆர்கைல் பிரபு பிரஸ்பிடீரிய ஸ்காட்டுகளை ஒன்றுதிரட்டினார். ஹைலாந்தியர்கள் (Highlanders) மான்ட்ரோஸையும் லோலாந்தியர்கள் (Lowlanders) ஆர்கைலையும் ஆதரித்தனர். மான்ட்ரோஸ் ஆரம்பத்தில் பல வெற்றிகளைப் பெற்றார். திப்பர்மியூர் (Tippermuir) எனுமிடத்தில் அவர் ஆர்கைலின் படையினைக் கலைத்தார். இன்வர்லாக்கி (Inver-locky) எனுமிடத்தில் மற்றொரு வெற்றியும், கிளாஸ்கோவுக்கருகில் கில்ஸித் (Kilsyth) எனுமிடத்தில் இன்னொரு வெற்றியும் அவர் பெற்றார். ஆனால், மலைப்பாங்கான நாட்டில் போர்புரிவதிலுள்ள சிரமங்களாலும் பனித்தொல்லைகளாலும் வீரர்கள் பலர் மான்ட்ரோஸைக் கைவிட்டனர். கடைசியில் அவர் பிலிப்பா (Philiphaugh) எனுமிடத்தில் 1645 செப்டம்பரில் தோற்கடிக்கப்பட்டார்

### நான்காவதாண்டுப் போர் (1645)

கிராம்வெல் பாராளுமன்றத் தரப்புத் தளகர்த்தர்களைக் குறைகூறினார். அவர்கள் திறமையற்றவர்கள் எனப் பழித்தார். பிரஸ்பிடீரிய தளகர்த்தர்களான எஸ்ஸெக்ஸ், மான்செஸ்டர், வேலர் என்ற பிரபுக்கள் சமாதானத்தை விரும்புபவர்களென்றும்,

அரசரை அரைமனத்தோடேயே எதிர்ப்பவர்கள் என்றும், அவர்கள் படையினின்றும் நீக்கப்பட்டாலொழிய வெற்றி கிட்டுதல் அரிது என்றும் கிராம்வெல் வாதாடினார். படைகள் புதிய முறையில் சீர்திருத்தி அமைக்கப்பட வேண்டும் என அவர் கூறியதை ஒப்புக் கொண்டு பாராளுமன்றம் இரண்டு தீர்மானங்களை நிறை வேற்றியது. தன்னலமிழப்பு அவசரச் சட்டம் (Self denying Ordinance) ஒன்றை அது கொணர்ந்தது. பாராளுமன்றத்தில் உறுப்பினர்களாயிருப்பவர்கள் சேனையில் தமக்கிருக்கும் பதவிகளை விட்டுவிட வேண்டும் என அச்சட்டம் கூறியதால், எஸ்ஸெக்ஸ் பிரபுவும், மான்ச்செஸ்டர் பிரபுவும், கிராம்வெல்லும் தம் பதவிகளை இழந்தனர். படையினரின் வேண்டுக்கோளுக்கிணங்கிக் கிராம்வெல் மட்டும் ஒரு மாதம் கழிந்து மீண்டும் படைத்தலைவரானார். இன்னொரு சட்டத்தின் மூலம் 22,000 படைவீரரடங்கிய புதுமாதிரிப் படை ஒன்று (New Model Army) திரட்ட ஏற்பாடு செய்யப் பட்டது. 1645-ல் இப்படையினரின் எண்ணிக்கை 80,000 ஆக உயர்ந்தது. ஸ்கிப்பன் என்பார் அப்படைக்கு மேஜர், ஜெனரலாகவும் ஃபேர்ஃபாக்ஸ் சேனாதிபதியாகவும் நியமிக்கப்பட்டார்கள். கிராம்வெல் லெப்டெனன்ட்-ஜெனரலாக நியமிக்கப்பட்டார். படையில் சேர்க்கப்பட்டவர்களில் பெரும்பான்மையோர் சுயேச்சையாளர்கள். சமயச் சார்பை ஒரு பொருட்டாக மதியாமல் திறமையுள்ளவர்கள் எல்லாம் அப்படையில் சேர்க்கப்பட்டனர். படையில் சேருவதற்கு முன் உறுதிப் பத்திரத்தை (Covenant) அவர்கள் நப்புவதாக வாக்களிக்க வேண்டுமென்பது ஒரு நிபந்தனையெனினும், பலர் அங்ஙனம் வற்புறுத்தப்படவில்லை. மன்னரது சார்பில் போரிட்டவர்கள் பலர் இப்படையில் சேர்ந்துகொண்டனர். ஏனெனில், மன்னரது படையில் அவர்களுக்குச் சம்பளம் கிடைப்பது அரிதாயிருக்கையில், புதுமாதிரிப் படையில் ஒழுங்காகச் சம்பளம் கிடைத்தது. கிராம்வெல் இப்படைக்குத் தலைமை தாங்கி வீரர்களுக்குப் புதிய ஊக்கத்தையும் உற்சாகத்தையும் ஊட்டினார்.

ஸ்காட்லாந்தில் அரசருக்கு உதவியாக இருந்த மான்ட்ரோஸின் வெற்றியைக் கண்ட பாராளுமன்றத்தின் ஸ்காட்லாந்துப் படைகள் இங்கிலாந்துக்கு வராமல் அங்கேயே இருந்தன. அதனால் மன்னரது படைகள் மான்ட்ரோஸின் படைகளோடு ஒன்றுசேர முடியவில்லை. சார்லஸ் ஆக்ஸ்ஃபோர்டில் காலம் தாழ்த்தினார். அதற்குள் புதுமாதிரிப் படையும் உருவாக்கப்பட்டுவிட்டது. 'கூழுக்கும் ஆசை மீசைக்கும் ஆசை' என்றபடி சார்லஸ் மான்ட்ரோஸோடு சேரவும் விரும்பினார். அதே சமயம் ஆக்ஸ்ஃபோர்டைக் காக்கவும் விரும்பினார். பின்னர், அவர் அரைமனதாகப் புறப்பட்டு வடக்கே சென்று லீசெஸ்டரைத் (Leicestor) தாக்கினார். ஆனால், கோரிங் என்பார் ஆக்ஸ்

ஃபோர்டைக் காக்க முடியாமல் தவிப்பதைக் கேட்டுத் தெற்கே திரும்பிவந்தார். வரும் வழியில் புதுமாதிரிப் படையினர் அவரது படைகளை நேஸ்பி (Naseby) என்ற இடத்தில் வளைத்துக்கொண்டனர். ரூபர்ட் மும்முரமாகத் தமக்கு எதிரிலிருந்த பாராளுமன்றப் படையைத் தோற்கடித்தார். அதன்பின் மார்ஸ்டன் மூர் போரில் செய்ததுபோல் அவர்களைத் துரத்திக்கொண்டு அவர் வெகு தூரம் சென்றுவிட்டார். அவர் திரும்பிவருவதற்குள் கிராம்வெல், லாங்டேல் என்பாரின் குதிரைப் படையைத் தோற்கடித்துவிட்டுத் தமது மூர்க்கம் நிறைந்த வெல்ஸ் வீரர்களை ஒன்று சேர்த்து மன்னரின் எஞ்சிய படைகளையும் தோற்கடித்துவிட்டார். இது புதுமாதிரிப் படைக்கு ஒரு மகத்தான வெற்றியாகும். இதே சமயத்தில் மன்னரோடு சேர்ந்துகொள்ள வந்த மான்ட்ரோஸ் பிரபுவும் வடக்கே பிலிப்பாவில் தோற்கடிக்கப்பட்டார். இவ்விரண்டு வெற்றிகளும் ஏறக்குறைய மன்னரது படைகளிற் பெரும் பகுதியைக் குலைத்துவிட்டன. மன்னர் தமது வெடிப்படையை (Artillery) அதற்கு ஈடு செய்யுமளவுக்கு அவரை அப்போது ஆதரித்த வேல்ஸ் நாடு செல்வமுடையதாயில்லை. அதோடு இன்னொரு வகையில் நேஸ்பி சண்டை முக்கியத்துவம் பெறுகிறது. மன்னரது இரகசியக் கடிதங்களடங்கிய ஒரு பெட்டி பாராளுமன்றத்தின் கைகளுக்குக் கிடைத்தது. அதில் அரசர் வெளிநாடுகளோடும் அயர்லாந்தோடும் பேரம்பேசி அவற்றின் படைகளின் உதவியைக் கோரியிருந்த பல கடிதங்கள் இருந்தன. அவற்றை உடனே அச்சடித்துப் பாராளுமன்றத்தார் இங்கிலாந்தெங்கும் பரப்பினர். மன்னருக்குக் கொஞ்சநஞ்சமிருந்த ஆதரவும் இதனால் மறைந்தது. எனினும், அவர் தமது எதிரிகளின் கருத்து வேற்றுமையைப் பயன்படுத்திக்கொள்ள ஒரு வாய்ப்பிருந்தது. பிலிப்பாவில் பெற்ற வெற்றி பிரஸ்பிடீரிய மதத்தின் வெற்றியாகக் கருதப்பட்டது. நேஸ்பியில் பெற்ற வெற்றி சுயேச்சையாளர்களின் வெற்றியாகக் கருதப்பட்டது. சமயப் பொறையைப் பற்றிச் சுயேச்சையாளர்கள் பேசியதைப் பிரஸ்பிடீரியர்கள் பெரிதும் வெறுத்தனர்.

## ஐந்தாவதாண்டுப் போர் (1646)

ஐந்தாவதாண்டில் மன்னருக்கு இன்னும் சொந்தமாயிருந்த சிற்சில இடங்களும் பாராளுமன்றத்தின் படைகளால் கைப்பற்றப்பட்டன. ஃபேர்ஃபாக்ஸ் என்னும் பாராளுமன்றத் தளகர்த்தர், கோரிங் என்ற மன்னரது தளகர்த்தரை லேங்போர்ட் (Langport) எனுமிடத்தில் தோற்கடித்து, இங்கிலாந்தின் தென்மேற்குப் பகுதியைக் கைப்பற்றினர். பிரிட்ஜ்வாட்டர் (Bridgewater) என்ற இடமும் அவரால் கைப்பற்றப்பட்டது. வில்ட்ஷையர்

(Wiltshire) படைகளையும் பேஸிங்கிலிருந்த (Basing) படைகளையும் கிராம்வெல் தளகர்த்தர் தோற்கடித்தார். ரூபர்ட் இளவரசர் பிரிஸ்டல் (Bristol) நகரில் சரணடைந்தார். தம் கட்சி தோற்று விட்டதை அவர் ஒப்புக்கொண்டார். ஆனால், சார்லஸுக்கு இன்னும் நம்பிக்கை இருந்தது. நியாயம் தம் பக்கமிருப்பதாகவும், அநியாயக்காரரான தம் எதிரிகள் வெற்றிபெறக் கடவுள் அனுமதிக்க மாட்டாரென்றும் அவர் கருதினர். வடக்கே இருந்த மான்ட்ரோஸ் பிரபுவோடு சேர்ந்துகொள்ளக் கருதி அவர் புறப்பட்டார். ஆனால், வழியில் அவர் செஸ்டர் (Chestor) நகருக்கருகிலிருந்த ரௌடன்மூர் (Rowtonmoor) எனுமிடத்தில் தோற்கடிக்கப்பட்டார். தளகர்த்தர் ஹாப்டன் (Hopton) ஃபேர்ஃபாக்ஸிடம் ட்ரூரோ (Truro) எனுமிடத்தில் சரணடைந்தார். சர் ஜேகப் ஆஸ்ட்லி (Sir Jacob Astley) எனும் மன்னரது தளகர்த்தர் ஸ்டோ ஆன் தி ஓல்ட் (Stow on the World) என்ற இடத்தில் 1646ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் படுதோல்வியுற்ருர். இந்நிலையில் முடிதுறந்து வெளிநாட்டுக்கு ஓடிப்போயிருந்தால் ஒருவேளை சார்லஸ் பிழைத்திருக்கலாம். ஆனால், கேடு வரும் பின்னே, மதி கெட்டுவரும் முன்னே' என்ற பழமொழிக்கிணங்க அவரது புத்தி தடுமாறியது. ஸ்காட்லாந்தியரை அவர் இன்னும் மலைபோல நம்பியிருந்தார். ஸ்காட்லாந்தியர் ஃபிலிப்பாவில் அடைந்த தோல்விக்குப் பின் மனமுடைந்துபோயினர். அவர்களை நம்பிப் போர் தொடுப்பது மண்குதிரையை நம்பி ஆற்றிலிறங்குவதாக முடியும் என்பதைச் சார்லஸ் அறியாதுபோனர். பாராளுமன்றத்தின் படைகள் ஆக்ஸ்ஃபோர்டு நகரை நெருங்க நெருங்கச் சார்லஸுக்குப் பயம் ஏற்பட்டது. அவர் ஒரு வேலைக்காரனைப் போன்று மாறுவேடம் பூண்டு நாட்டிங்ஹாமில் (Nottingham) இருந்த தமது ஆதரவாளர்களிடம் 1646ஆம் ஆண்டு மே மாதத்தில் சென்று சேர்ந்தார். ஜூன் மாதத்தில் ஆக்ஸ்ஃபோர்டு சரணடைந்தது. சார்லஸின் புதல்வரான வேல்ஸ் இளவரசர் ஃபிரான்ஸுக்கு ஓடிவிட்டார். யார்க் கோமகன் என்பார் சிறைப்பட்டார். ராக்லன் (Raglan) எனுமிடத்தில் மன்னரின் கடைசிப் படையானது தோல்வியுற்றது. மான்ட்ரோஸ் பிரபுவும் ஸ்காட்லாந்திலிருந்து ஐரோப்பாவுக்கு ஓடிப்போனர். மே மாதத்தில் சார்லஸ் மனம் முரிந்து நிவார்க் (Newark) எனும் நகரில் முகாமிட்டிருந்த ஸ்காட்லாந்துப் படைகளிடம் சரணடைந்தார். அடுத்த மாதத்தில் அவர் தமது கொடி பறக்கும் இடங்களையெல்லாம் சரணடையும்படி உத்தரவிட்டார். அதோடு முதல் உள்நாட்டுப் போர் முடிவடைந்தது எனக் கருதலாம். அரசருக்குச் சொந்தமான ஹார்லெக் கோட்டையினர் (Harleck Castle) மட்டும் 1647ஆம் ஆண்டு மார்ச்சு மாதம்வரை பணியாமல் போரிட்டனர்.

## அயர்லாந்தில் முதல் உள்நாட்டுப் போரின் எதிரொலி (1641—1645)

1641ஆம் ஆண்டில் அயர்லாந்தில் அல்ஸ்டர் பகுதியில் ஒரு கலகம் தோன்றியது. அயர்லாந்தின் விவசாயிகள் தாங்கள் இழந்துவிட்ட தம் பரம்பரைச் சொத்தான நிலங்களையும் பரம்பரைப் பழக்கவழக்கங்களையும் மீண்டும் பெறுவான் கருதிக் கலகத்திலீடுபட்டனர். இங்ஙனம் ஆரம்பத்தில் விவசாயப் புரட்சியாக ஆரம்பித்த கலகமானது நாளடைவில் வகுப்புவாத அரசியல் புரட்சியாக வடிவெடுத்தது. 1642ஆம் ஆண்டில் அக் கலகக்காரர்கள் பேல் (Pale) பிரதேசத்திலிருந்த ஆங்கிலக் குடியேறிகளோடு (Settlers) சேர்ந்துகொண்டனர். பியூரிட்டன் பாராளுமன்றத்துக்குப் பயந்தே ஆங்கிலேயர்கள் அயர்லாந்திய ரோடு சேர்ந்தனர். அவர்கள் கூட்டிணைப்புக் கத்தோலிக்கர் (Confederate Catholics) எனத் தங்களை அழைத்துக்கொண்டனர். இக் கத்தோலிக்கரை ஆங்கிலப் பாராளுமன்றத்தின் படைகள் தாக்கித் துன்புறுத்தின. டப்ளினிலிருந்து அயர்லாந்து அரசாங்கமும் ஆங்கிலப் பாராளுமன்றத்தின் உதவிபெற்றுக் கலகக் காரர்களை ஒறுத்தது. மன்ரோ (Munrow) என்பாரின் தலைமையில் ஸ்காட்லாந்துப் படை ஒன்று அயர்லாந்தின் வடபகுதியைக் கலகக் காரரிடமிருந்து பாதுகாத்துவந்தது. அரசரது ஆதரவாளர்கள் ஆர்மாண்ட் (Ormande) எனும் தளகர்த்தரின் தலைமையில் கலகக் காரரையும் பாராளுமன்றத்தின் ஆதரவாளர்களையும் எதிர்த்தனர். இப்படிப் பலரும் பல நோக்கங்களுக்காகப் போரிட்டுவந்த அயர் லாந்தியரின் உதவியைப் பெற அரசரும் பாராளுமன்றத்தாரும் ஒருங்கே விரும்பினர். தலையாய கவுன்ஸில் (Supreme Council) என்ற ஒரு குழுவைக் கொண்டு கூட்டிணைப்புக் கத்தோலிக்கர் அயர்லாந்தில் வரிபோட்டும் பணம் அச்சடித்தும் அரசாட்சி செலுத்தினர். பல பிரபுக்கள் அரசனை ஆதரித்தனர். எனவே, அரசர் அக் கத்தோலிக்கரோடு 1643ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் ஒரு போர்நிறுத்த ஒப்பந்தத்தைச் (Cessation) செய்து கொண்டார். அதன்படி ஓராண்டுக்கு இருகட்சியினரும் போர் செய்வதில்லை என ஒப்புக்கொண்டனர். அயர்லாந்தில் போரிட்ட ஆர்மாண்டின் படைகள் அரசனுக்கு உதவ இங்கிலாந்துக்குச் சென்றன. 1645ஆம் ஆண்டு சார்லஸின் நண்பரான கிளமார்கன் (Glamorgan) என்பார் இராணியாரின் விருப்பப்படி அயர்லாந்துக் கத்தோலிக்கரோடு ஓர் உடன்பாடு செய்துகொண்டார். அதற்குக் கிளமார்கன் உடன்படிக்கை (Treaty of Glamorgan) எனப் பெயர். கத்தோலிக்க கவர்னரை நியமிப்பதாகவும், கத்தோலிக்கரைப் பாராளுமன்றம், திருச்சபை, பல்கலைக்கழகம் இவைகளில் நிரப்புவ

தாகவும் அவ்வுடன்படிக்கை வாக்குறுதியளித்தது. இவ்வுடன்பாடு பிராடெஸ்டன்டான ஆர்மாண்டுவுக்குப் பிடிக்கவில்லை. எனவே, அவரை அரசர் தம் கட்சியினின்றும் நீக்கினர். இவ்வுடன்பாட்டால் அரசருக்கு ஒன்றும் இலாபமேற்படவில்லை. 1646 ஆம் ஆண்டில் செஸ்டர் வீழ்ச்சியுற்றபோது தளகர்த்தர் ஹாப்டன் சரணடைந்ததால் அயர்லாந்தின் படைகள் இங்கிலாந்துக்குள் புகமுடியவில்லை. ஓ நீல் (O'Neil) என்ற தேசியத்தளபதி ஸ்காட்லாந்துப் படைகளை பென்பெர்ப் (Benberb) என்னுமிடத்தில் தோற்கடித்தார். போப்பின் தூதுவரும் (Legate) மிதவாதக் கூட்டிணைப்பாளர்களும் சிறையிடப்பட்டனர். ஆர்மாண்ட் என்பார் டப்ளின் நகரைப் பிடித்துப் பியூரிட்டன்களிடம் ஒப்படைத்தார். இங்ஙனம் அரசரின் கட்சி அயர்லாந்தில் படுதோல்வியுற்றது.

# 8. முடியரசின் வீழ்ச்சி (1647-1649)
## (The Fall of Monarchy)

மன்னரும் பாராளுமன்றமும் : மன்னர் சிறைப்படல், 1647.

பாராளுமன்றமும் மத ஏற்பாடும்—வெஸ்ட்மினிஸ்டர் மதகுருமார் சபை, 1647.

பாராளுமன்றமும் சேனையும், 1647.

சேனையும் மன்னனும்—முன்மொழித் தலைப்புகள், 1647—ஸ்காட்லாந்து உடன்பாடு, 1647-1649.

இரண்டாவது உள்நாட்டுப் போர் 1648—போர்க்களங்கள்—பிரெஸ்டன்—வாரிங்டன் பிரைடின் கழிப்பு.

அரசரின் விசாரணையும் சிரச்சேதமும், 1649.

### மன்னரும் பாராளுமன்றமும் (1647)

சார்லஸ் அரசர் ஸ்காட்லாந்துப் படையினரிடம் சரணடைந்த பின்னும் பாராளுமன்றம் அரசரோடு சமாதானம் செய்துகொள்ள முயன்றது. நியூகாஸில் உடன்படிக்கை (Treaty of Newcastle) என்ற ஒரு சமாதான ஏற்பாட்டை அது மன்னரிடம் சமர்ப்பித்தது. அதன்படி பாராளுமன்றமானது நாட்டுப் படையைத் (Militia) தன் கட்டுப்பாட்டிற்குள் மேலும் இருபது ஆண்டுகளுக்கு வைத்துக்கொள்ளவும், எபிஸ்கோபல் மதத்தை (Episcopacy) ஒழித்து விட்டு அதற்குப் பதிலாகப் பிரஸ்பிடீரிய மதத்தை இங்கிலாந்தில் ஏற்படுத்தவும் விரும்பியது. ஆனால், அரசர், நாட்டுப் படையானது பத்து ஆண்டுகளுக்கு மட்டுமே பாராளுமன்றத்தின் கட்டுப்பாட்டுக்குள் இருக்கலாமெனவும், பிரஸ்பிடீரிய மதம் மூன்று ஆண்டுகளுக்கு மட்டுமே இங்கிலாந்தில் நிலைபெற அனுமதிக்க முடியுமென்றும் கூறிவிட்டார், பாராளுமன்றத்தின் நிபந்தனைகளை ஒப்புக்கொள்ளும்படி ஸ்காட்லாந்துப் படையினர் சார்லஸைக் கேட்டுக்கொண்டும்கூட அவர் பிடிவாதமாக அவற்றை ஒப்புக் கொள்ள மறுத்துவிட்டார். எனவே, அப் படையினர் 4,000,00

பவுன்களை வாங்கிக்கொண்டு அரசரைப் பாராளுமன்றத்திடம் ஒப்படைத்துவிட்டுத் தம் நாடு திரும்பினர். ஹோல்ம்பி ஹவுஸ் (Holmby House) எனுமிடத்தில் பாராளுமன்றம் அரசரைச் சிறை வைத்தது.

## பாராளுமன்றமும் மத ஏற்பாடும்: வெஸ்ட்மின்ஸ்டர் மதகுருமார் சபை (1647)

(The Westminister Assembly of Divines)

பாராளுமன்றத்தில் ஏற்கெனவே பிரஸ்பிடீரியர்கள், எபிஸ் கோபலியர்கள் என இருவித மதப் பிரிவினர் இருந்தனர். ஆனால், உள்நாட்டுப் போரின்போது ஒரு மூன்ருவது கட்சி அங்குத் தோன்றியது. அதுவே சுயேச்சையாளர் கட்சியாகும். நேஸ்பி சண்டைக்குப்பின் நடைபெற்ற தேர்தலில் 150 புதிய உறுப்பினர் கள் பாராளுமன்றத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். அவர்களிற் பெரும்பாலோர் சுயேச்சையாளர்கள். அதே ஆண்டுக்குள் (1646) அவர்களில் 246 பேர் சுயேச்சையாளர்களாக மாறினர். பிரஸ்பிடீரியர்களும் சுயேச்சையாளர்களும் அதில் ஏறக்குறைய ஒரே எண்ணிக்கையுடையவராயிருந்தனர்.

நீடித்த பாராளுமன்றமானது 1642-ல் எபிஸ்கோபலிய மதத்தை ஒழித்தபின், மத ஏற்பாட்டை நன்கு சீர்திருத்த வெஸ்ட் மின்ஸ்டர் நகரில் ஒரு மத குருமார் சபையை ஏற்படுத்தியது. அச் சபையில் பெரும்பாலோர் பிரஸ்பிடீரியர்கள். ஒரு சில எராஸ்டிரியர்கள் (Erastrians) இருந்தனர். அவர்கள் பாராளு மன்றமே திருச்சபையைக் கட்டியாளவேண்டும் என எண்ணியவர் கள். சமயப் பொறை நாட்டில் நிலைநாட்டப்படவேண்டுமென எண்ணிய சுயேச்சையாளர்களும் அதில் ஒரு சிலர் இருந்தனர். இருப்பினும், பெரும்பான்மையோரான பிரஸ்பிடீரியக் குருமார்கள் தங்களது மதத்தையே இங்கிலாந்தின் மதமாக ஆக்கினர். அதைப் பாராளுமன்றமும் ஒப்புக்கொண்டது. வெளிப்படைத் தொழுகைக் காக ஒரு தகவல் தொகுதி (Directory) வகுக்கப்பட்டு அது எல்லோர் மேலும் சுமத்தப்பட்டது. பழைய ஜெபப் புத்தகமும் எபிஸ்கோபல் வழிபாட்டு முறையும் ஒழிக்கப்பட்டன. திருச் சபையை நிர்வகிக்க ஸினுட் (Synods) சபைகள் பல ஏற்படுத்தப் பட்டன. இந்த முறைகளைச் சுயேச்சையாளர் மறுத்தனர். தொழுகைச் சுதந்திரம் யாவருக்கும் வழங்கப்படவேண்டுமென வும், வேண்டியார் வேண்டியாங்கு சமயத் திருக்கூட்டங்களை (Congregations) நடத்திக்கொள்ளலாமென்றும் அவர்கள் வாதித் தனர். நேஸ்பியில் வெற்றிபெற்ற சேனையில் பெரும்பான்மை

யோர் சுயேச்சையாளர்கள். ரிச்சார்டு பாக்ஸ்டர் (Richard Baxter) என்பார் தமது சலியாத பிரசாரத்தால் சுயேச்சையாளர்கள் கொள்கைகளைப் படை வீரர்களிடம் பரப்பிவிட்டார். அவர்கள் மதத்துறையிலன்றி அரசியல் துறையிலும் ஜனநாயகம் வளர வேண்டுமென்று கூறினர். இதையெல்லாம் கண்ட பாராளுமன்றம் எங்குச் சேனையானது தன்னைக் கட்டுப்படுத்திவிடுமோ என அஞ்சி, அரசனோடு சமாதானம் செய்துகொண்டு, தன் வலிமையைப் பெருக்கிக்கொள்ள முயன்றது. அம் முயற்சி பலிக்காமற் போகவே சேனையின் பலத்தை, முக்கியமாக அதிலிருந்த சுயேச்சையாளர்களின் செல்வாக்கைக் குறைக்க அது முயன்றது.

## பாராளுமன்றமும் சேனையும் (1647)

புதுமாதிரிப் படையைக் கலைக்கும் முயற்சியில் பாராளுமன்றம் ஈடுபட்டது. 7,000 குதிரை வீரர்களும் 14,000 காலாட்படையினரும் இருந்த சேனையில் 6,600 குதிரை வீரரை மட்டுமே வைத்துக்கொள்வதென அது தீர்மானித்தது. சேனாதிபதியான ஃபேர்ஃபாக்ஸைத் தவிர மற்ற எல்லாத் தளபதிகளும் வேலையை விட்டு நீக்கப்படவேண்டுமென்றும், பாராளுமன்றத்தில் உறுப்பினராயிருப்பவர் எவரும் படையில் பதவி வகிக்கலாகாதென்றும், 4,200 குதிரை வீரர்கள், 8,400 காலாட்படை வீரர்கள் கொண்ட ஒரு படை அயர்லாந்துக்குச் செல்லவேண்டுமென்றும் அது தீர்மானித்தது. 6,000 போர்வீரர்களைச் சேனையினின்றும் நீக்கிவிடுவதென்று அது முடிவுக்கு வந்தது. அவர்களை ஒன்றும் ஆரவாரமின்றி வேலையினின்றும் நீக்கியிருந்தால் பரவாயில்லை. அதற்குப் பதிலாக அவர்களது சம்பளப் பாக்கித் தொகைகள் அவர்களுக்குச் சரிவரக் கொடுக்கப்படவில்லை. காலாட்படையினருக்கு 18 வாரச் சம்பளமும் குதிரைப் படையினருக்கு 43 வாரச் சம்பளமும் கொடுக்கப்படவில்லை. தாங்கள் படையினின்றும் கலைக்கப்படுமுன்போ அல்லது அயர்லாந்துக்குப் போகுமுன்போ, தங்களது பழைய சம்பளப் பாக்கிகளைக் கொடுத்துவிடும்படி அவ்வீரர்கள் கேட்டுக்கொண்டனர். அதன்பின் ௨ வார பாக்கிச் சம்பளங்களைக் கொடுக்கப் பாராளுமன்றம் ஒப்புக்கொண்டது. இதைச் சேனாவீரர் பலரும் மறுத்தனர். தங்களது குறைகளைத் தங்கள் தளபதிகளிடம் எடுத்து விளம்பி, அவற்றைப் போக்கிக் கொள்ள வேண்டி, ஒவ்வொரு படைப் பிரிவிலும் (Regiment) இருந்து இரண்டு நபர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். அவர்கள் 'கிளர்ச்சியாளர்கள்' (Agitators) என அழைக்கப்பட்டனர். கிராம்வெல் முதலில் இவ்வியக்கத்தை ஆதரித்தார் எனினும், கட்டுப்பாட்டையும் ஒழுங்கையும் யாரும் மீறக்கூடாதென அவர்

அனைவரையும் எச்சரித்தார். லில்பர்ன் (Lilburn) என்பார் சேனு ஜனநாயகம் (Army Democracy) என்பதைப்பற்றிப் பேசிக் கிராம் வெல் அத்தகைய ஜனநாயகத்துக்கு எதிரி எனக் கூறினர். ஃபேர்ஃபாக்ஸ், அயர்ட்டன் என்ற இருவரும் 'கிளர்ச்சியாளர் களின் கவுன்சில்' (Council of Agitators) என்ற சபையைத் தோற்றுவித்தனர்.

இதையெல்லாம் கண்ட பாராளுமன்றம் வெகுண்டது. பலாத் காரத்தைக் கையாண்டு தன் வலிமையைப் பெருக்கிக்கொள்ள அது முயன்றது. லண்டன் நகர வீரர்கள் (18,000 பேர்) ஒரு படையினராகத் திரட்டப்பட்டனர். புதுமாதிரிப் படையை மிரட்ட, ஸ்காட்லாந்துப் படையைக் கொணரத் தீவிர ஏற்பாடுகள் நடை பெற்றன. வெடிமருந்துப் படையை ஆக்ஸ்ஃபோர்டு நகரத்தி லிருந்து டவருக்குக் (Tower) கொண்டு வருவதெனவும் மன்னரை ஹோல்ம்பி ஹவுஸிலிருந்து லண்டனுக்குக் கொண்டுவந்துவிடுவ தெனவும் அது தீர்மானித்தது.

இத் திட்டத்தை எப்படியோ சேனுவீரர் அறிந்துவிட்டனர். ஒரு சிறு குதிரைப்படையை அனுப்பி ஆக்ஸ்ஃபோர்டிலிருந்த வெடி மருந்துப் படையை அவர்கள் கைப்பற்றினர். கார்னெட் ஜாய்ஸ் (Cornet Joyce) என்பார் ஹோல்ம்பி ஹவுஸ் சென்று அரசரைக் கைப்பற்றி நியூ-மார்க்கெட் என்னுமிடத்துக்குக் கொண்டுவந்தார். இங்ஙனம் அரசரும் பாராளுமன்றமும் பிரிக்கப்பட்டனர்.

சேனையானது தன்னை ஆள ஒரு சபையை ஏற்படுத்திக் கொண்டது. பழைய கிளர்ச்சியாளர்களின் கவுன்ஸிலையும் போர்க் கவுன்ஸிலையும் இணைத்து, மகத்தான கவுன்ஸில் (Grand Council) என்றதோர் சபையை அது தோற்றுவித்தது. அதில் எல்லாத் தளபதிகளும், இரண்டு அதிகாரிகளும், ஒவ்வொரு படைப் பிரி வாலும் தேர்ந்தெடுக்கப்பட்ட இரண்டு பிரதிநிதிகளும் இடம் பெற்றனர். சேனையின் சார்பில் இக் கவுன்ஸிலானது சேனையின் அறிவிப்பு (Declaration of the Army) என்னும் ஒரு பத்திரத்தைப் பாராளுமன்றத்தின் முன் வைத்தது. அப் பத்திரம் ஒரு விசித்திர மான அரசியல் திட்டத்தை வெளியிட்டது. ஆங்கிலேயர் சார் பாகப் பேசச் சேனைக்கு மட்டுமே உரிமை உண்டு என்றும், அப் போதைய பாராளுமன்றமானது கலைக்கப்பட்டுக் குறுகிய காலப் பாராளுமன்றங்கள் ஏற்படுத்தப்பட வேண்டுமென்றும், ஊழல் நிறைந்த குறிப்பிட்ட பதினோர் உறுப்பினர்கள் நீடித்த பாராளு மன்றத்திலிருந்து நீக்கப்பட வேண்டுமென்றும் அவ்வறிவிப்புக் கூறியது. அந் நிபந்தனைகளை ஓரளவு நிறைவேற்றப் பாராளு மன்றம் விரும்பியது. ஆனால், அதன் ஆதரவாளர்களான

லண்டன் நகர மக்கள் அவ்வறிக்கையை ஒப்புக்கொள்ளக்கூடாது எனக் கூச்சலிட்டனர். பாராளுமன்றக் கட்டடத்தை ஒரு பெருங் கூட்டம் வளைத்துக்கொண்டது. பாராளுமன்றத்தாரைக் காக்க சேனை முன்வந்து கூட்டத்தைக் கலைத்தது. லண்டன் நகரம் சேனையின் வசமாயிற்று. பாராளுமன்றமும் சேனைக்குப் பணிந்தது.

## சேனையும் மன்னனும் (1647 - 1648)

பாராளுமன்றத்திடம் வெற்றிபெற்ற சேனையானது அரசரோடு பேரம் பேச ஆரம்பித்தது. முன்மொழித் தலைப்புகள் (Heads of Proposals) என்றதொரு திட்டத்தை அது அரசர் முன் 1647ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் சமர்ப்பித்தது. அதில் கண்டிருந்த நிபந்தனைகளை ஒப்புக்கொண்டால் அரசர் மீண்டும் இங்கிலாந்தின் மகுடத்தைப் பெறலாம் எனச் சேனை கூறியது. அத் திட்டமானது முதலில் மன்னரைப் பாராளுமன்றத்தின் கட்டுப்பாடுகளுக்குட்படச் செய்ய விரும்பியது ; நாட்டுப் படையின்மீதும், கடற்படைமீதும், பெரிய அதிகாரிகள்மீதும் பாராளுமன்றம் பத்தாண்டுகளுக்கு ஆதிக்கம் செலுத்த வேண்டுமெனவும், கத்தோலிக்கர்களைத் தவிர மற்ற எல்லா மதப் பிரிவினருக்கும் சமயப்பொறை வழங்கப்பட வேண்டுமெனவும், பாராளுமன்றமானது இரண்டு ஆண்டுகளுக் கொரு முறை தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமெனவும், அது குறைந்தது 120 நாட்களாவது அமர்ந்து பணிபுரிய வேண்டு மெனவும், கவுன்டிகள், பரோக்கள் (Counties and Boroughs) என்ற நாட்டுப் பிரிவுகளிடமிருந்து சமமாக உறுப்பினர்கள் தேர்ந்தெடுக் கப்படவேண்டுமெனவும், நசித்துப்போன பரோக்களினின்றும் (Rotten Boroughs) உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்படலாகா தெனவும், ஏழு ஆண்டுகட்கு அதிகாரம் வகிக்கின்ற ஒரு ராஜ்யக் கவுன்ஸில் (Council of State) ஏற்படுத்தப்படவேண்டுமெனவும், வெளிநாட்டு விவகாரம், நாட்டுப்படை இவற்றை அக் கவுன் ஸிலே கண்காணிக்க வேண்டுமெனவும், அத் தலைப்புகள் கூறின. ஆனால், அரசன் அவற்றை ஒப்புக்கொள்ளவில்லை. அரசனுடைய தனிச்சிறப்பதிகாரங்களைப் பறிக்கும் எந்தத் திட்டத்தையும் அவர் ஒப்புக்கொள்ள இசையவில்லை. தம்முடைய தனி ஆட்சி இங்கி லாந்துக்கு இன்றியமையாதது என்றும், ஒரு கட்சியை இன்னொரு கட்சியின்மேல் ஏவிவிடுவதன் மூலமும், ஸ்காட்லாந்தியர் உதவி யாலும் மீண்டும் தமது பதவியைக் கைப்பற்றிவிடலாம் எனவும் சார்லஸ் நம்பினர். அந்த நம்பிக்கையால் அவர் ஸ்காட்லாந்திய ரோடு ஓர் உடன்பாடு (Engagement) செய்துகொண்டார். அதில், இங்கிலாந்தில் மூன்று ஆண்டுகளுக்குப் பிரஸ்பிடீரிய மதத்தை ஏற்படுத்த இசைந்தால், சார்லஸை மீண்டும் தாங்கள் அரசராக்கு

வதாக ஸ்காட்லாந்தியர் வாக்களித்தனர். அரசர் அதற்கிசைந்து உடன்பாட்டில் கையெழுத்திட்டார். பின்னர் நவம்பர் மாதத்தில் ஐல் ஆஃப் வைட் (Isle of Wight) எனுமிடத்திலிருந்த காரிஸ்ப்ரூக் கோட்டையில் (Carisbrooke Castle) ஒளிந்துகொண்டார். அது வரை மன்னரைப்பற்றி ஒன்றும் கேவலமாய்ப் பேசாத கிராம்வெல் கூட அரசரது சில்லரைச் சதி நடவடிக்கைகளைக் கண்டு அவரை எதிர்க்க ஆரம்பித்தார். அரசரோடு எந்தவிதப் பேச்சு வார்த்தை யையும் இனிப் பாராளுமன்றம் நடத்தக் கூடாதென்ற ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

## இரண்டாவது உள்நாட்டுப் போர் (1648)

மன்னருக்குச் சாதகமாகப் பல இடங்களில் கலகங்கள் கிளம்பின. தெற்கு வேல்ஸில் ஒரு பெருங் கலகம் தோன்றியது. கிராம்வெல் அங்குச் சென்று டென்பி (Tenby), செப்ஸ்டோவ் (Chepstow), பெம்பிரோக் (Pembroke) முதலிய இடங்களைக் கலகத் தலைவரான பாயர் (Poyer) என்பவரிடமிருந்து கைப்பற்றினர். கென்டிலும், எஸ்ஸெக்ஸிலும் ஏற்பட்ட கலகங்களை ஃபேர் ஃபாக்ஸ் அடக்கிவிட்டார்.

ஸ்காட்லாந்திலிருந்து அரசருக்கு உதவியாக 10,000 போர் வீரரடங்கிய படையொன்று இங்கிலாந்துக்குள் புகுந்தது. ஹாமில்டன் (Hamilton) என்பார் அப் படைக்குத் தலைமை தாங்கி நடத்திவந்தார். இங்கிலாந்தில் அரசரை ஆதரிப்பவர்களெல்லாம் ஹாமில்டன் படையில் சேர்ந்தனர். அதன் எண்ணிக்கை 21,000 ஆகப் பெருகியது. கிராம்வெல் வேல்ஸ் கலகத்தை அடக்கிய பின் தமது 8,600 படை வீரரைக் கொண்டு, ஹாமில் டனது பெரும் படையை பிரஸ்டன் (Preston) எனுமிடத்தில் தாக்கி யாவரும் வியக்கும் வண்ணம் அதைத் தோற்கடித்தார். வாரிங்டன் (Warrington) எனுமிடத்தில் ஹாமில்டன் மறுபடியும் கிராம்வெல்லால் தோற்கடிக்கப்பட்டார். கடைசியில் அவர் லாம் பர்ட் (Lambert) எனும் தளபதியிடம் சரணடைந்தார். பின்னர் அவர் சிரச்சேதம் செய்யப்பட்டார். கிராம்வெல் ஸ்காட்லாந்திய ஆர்கையில் பிரபுவோடு ஒரு நட்புடன்படிக்கையைச் செய்து கொண்டார். பிரெஸ்டனில் போரிட்டவர்களிற் பெரும்பாலோர் சுயேச்சையாளர்கள். ஆனால், நேஸ்பியில் போரிட்ட வீரர்களிற் பெரும்பான்மையோர் பிரஸ்பிடீரியர்கள். எனவே, நேஸ்பியில் பிரஸ்பிடீரியமும், பிரெஸ்டனில் சுயேச்சைவாதமும் (Independency) வெற்றி பெற்றதாகக் கருதலாம்.

பிரெஸ்டன் வெற்றிக்குப் பதினைந்து நாள் கழிந்து இரண்டு சட்டசபைகளும் அரசரோடு சமாதானப் பேச்சு வார்த்தைகளை ஆரம்பித்தன. ஆனால், முடியரசரையும் பிரபுக்கள் சபையையும் ஒழிக்கவேண்டுமெனக் கோரி 40,000 பேர்கள் சேர்ந்து லண்டனிலிருந்து ஒரு குறை விண்ணப்பத்தைப் பாராளுமன்றத்துக்கு அனுப்பினர். ஆகஸ்ட் 1648-ல் பாராளுமன்றமானது நியூபோர்ட் (Newport) உடன்படிக்கையைத் தயாரித்தது. எபிஸ்கோபலிய மதத்தை ஒழித்துவிட்டு நாட்டுப்படையின்மீது அதிகாரத்தைத் தனக்கு வழங்கினால் மறுபடியும் சார்லஸை அரசராக்குவதாகப் பாராளுமன்றம் அவ்வுடன்படிக்கையில் குறிப்பிட்டது. மன்னர் அவ்விரண்டு நிபந்தனைகளையுமே ஒப்புக் கொள்ளவில்லை.

பாராளுமன்றத்தின் சமாதான முயற்சிகளைச் சேனையானது அறவே கண்டித்தது. சமநிலைவாதிகள் (Levellers) என்ற கூட்டத்தார், உள்நாட்டுப் போரை ஏற்படுத்தி மக்களின் ரத்தத்தைச் சிந்திய குற்றத்துக்காகச் சார்லஸ் தண்டிக்கப்படவேண்டுமெனக் கூக்குரலிட்டனர். அதிகாரிகளின் கவுன்ஸில் (Council of Officers) என்ற சேனை நிர்வாக சபையானது சேனையின் பெருங்கண்டனம் (Grand Army Remonstrance) என்ற ஒரு பத்திரத்தைப் பாராளுமன்றத்தின் முன் சமர்ப்பித்தது. 'நாட்டின் துன்பங்கட்கெல்லாம் தலையாய பெரிய மூலகாரண புருஷரான சார்லஸ் அரசியல் துரோகத்துக்காக விசாரிக்கப்படல் வேண்டும்' என அதில் வற்புறுத்தப்பட்டிருந்தது. அதோடு அப்போதிருந்த பாராளுமன்றம் கலைக்கப்படவேண்டுமெனவும் அப் பத்திரம் கூறிற்று. அந்தக் கண்டனத்தைப் பாராளுமன்றமானது ஏறெடுத்துக்கூடப் பார்க்கவில்லை. பாராளுமன்றம் தனது விருப்பங்களுக்கு ஒத்துவராததால், சேனையானது அரசனைக் கைப்பற்றிச் சிறை செய்தது. பாராளுமன்றத்திலிருந்த 153 பிரஸ்பிடீரிய உறுப்பினர்கள் அதனின்று விலக்கப்பட்டார்கள். டிசம்பர் 6 ஆம் தேதியில் காலனல் பிரைட் (Pride) என்பாரால் அவ்வுறுப்பினர்கள் பாராளுமன்றத்தினின்றும் வெளியேற்றப்பட்ட இந் நிகழ்ச்சி 'பிரைடின் கழிப்பு' (Pride's Purge) என அழைக்கப்படுகிறது. நீக்கப்பட்டவர்களைத் தவிர எஞ்சி இருந்தவர்கள் யாவரும் சுயேச்சையாளர்கள். 'எஞ்சிய பாராளுமன்றம்' (Rump Parliament) என்ற அப் பாராளுமன்றமானது சார்லஸ்மீது அரசியல் துரோகக் குற்றம் சாட்டியது. பாராளுமன்றத்துக்கும் இங்கிலாந்து நாட்டுக்கும் எதிராகப் போரிட்ட பெருங் குற்றத்தால் அவர் ஓர் அரசியல் துரோகி என அது கூறியது. அவரை விசாரிக்க உயர்நீதிமன்றம் (High Court of Justice) ஒன்றையும் அது ஏற்படுத்தியது.

## அரசரின் விசாரணையும் சிரச்சேதமும் (1649)

உயர் நீதிமன்றம் ஏற்படுத்தப்பட்டது சட்டத்துக்கு விரோத மானதாகும். அங்ஙனம் ஒரு நீதிமன்றத்தை ஏற்படுத்த எஞ்சிய பாராளுமன்றத்துக்கு எவ்வாற்றேனும் தகுதியில்லை. ஏனெனில், ஒரு சில சுயேச்சையாளர்களைத் தவிர நாட்டின் உண்மையான பிரதிநிதிகள் பலரும் அப்போது அதில் இல்லை. பிரபுக்கள் பலர் இந்த நீதிமன்றம் ஏற்படுத்துவதை ஒப்புக்கொள்ள மறுத்தனர். சார்லஸூம் அந் நீதிமன்றம் சட்டவிரோதமானதென்றும், அதன் தீர்ப்பைத் தாம் ஏற்றுக்கொள்ள முடியாதென்றும் கூறித் தமது கட்சியை எடுத்து வாதாட மறுத்துவிட்டார். சேனையும், எஞ்சிய பாராளுமன்றமும் சேர்ந்துகொண்டு நாட்டின் சட்டத்தையும் உரிமையையும் பாழாக்குவதாகச் சார்லஸ் புலம்பினார். எனினும், ஓர் அவசரச் சட்ட மூலம் மேற்சொன்ன நீதிமன்றம் ஏற்படுத்தப் பட்டது. அதில் மூன்று நீதிபதிகளும், 150 ஆணையாளர்களும் (Commissioners) விசாரணையாளர்களாக அமர்த்தப்பட்டனர். பிரபுக்கள் சபை அவசரச் சட்டத்தை ஏற்றுக்கொள்ள மறுத்து விட்டது. மூன்று நீதிபதிகளும் தங்கள் பதவிகளை ஏற்றுக்கொள்ள மறுத்தனர். அதன்பின் பொதுமக்கள் சபையானது இரண்டு தீர்மானங்கள் மூலம் மன்னனது பதவியையும் பிரபுக்கள் சபையை யும் நிராகரித்துவிட்டு மூன்றாவது தீர்மானத்தின்மூலம் ஓர் உயர் நீதிமன்றத்தைத் தானே உண்டாக்கியது. அதில் 150 ஆணை யாளர்கள் நீதிபதிகளாகவும் ஜூரிகளாகவும் அமர்த்தப்பட்டனர். அல்ஜெர்னென் ஸிட்னி (Algernon Sydney) என்பார் அரசனை விசாரிக்க அந் நீதிமன்றத்துக்கு உரிமை இல்லை என வாதித்தார். அதற்குக் கிராம்வெல் கோபாவேசமாக, ‘நான் உனக்குச் சொல்லு கிறேன், அரசனுடைய தலையை மட்டுமன்று, அத் தலையின்மீது வைக்கப்பட்டுள்ள மகுடத்தையும் சேர்த்து நாங்கள் வெட்டி யெறியப் போகிறோம்’ என்று பதிலளித்தார். 1649ஆம் ஆண்டு ஜனவரி 20ஆம் தேதியன்று விசாரணை ஆரம்பித்தது. பிராட்ஷா (Bradshaw) என்ற கல்நெஞ்சர் அதற்குத் தலைமை தாங்கினார். ஜனவரி 27ஆம் தேதி அரசருக்கு மரண தண்டனை விதிக்கப் பட்டது. 135 நீதிபதிகளில் 35 பேரே அன்றைய விசாரணைக்கு வந்திருந்தனர். கடைசி வரையில் சார்லஸ் தமது குற்றத்தை ஒப்புக்கொள்ள மறுத்துவிட்டார். தம் பக்கம் நியாயம் இருப்ப தாகவே அவர் வாதித்தார். ஜனவரி 30ஆம் தேதி அவரது அரண்மனையான வெண் மாளிகைக்கு (White Hall) எதிரிலேயே அவரது சிரம் துண்டிக்கப்பட்டது. சாகும்போது அரசர் காட்டிய அசாதாரணமான தைரியமும் கண்ணியமும் மக்களது உள்ளங் களை உருக்கின. நகரெங்கும் ஓவென்ற அலறல் ஓசை கேட்டது. மக்கள் பெருவாரியாகக் கூடிக் கண்ணீருகுத்தனர். எபிஸ்கோபல்

மதத்துக்காகத் தம் உயிரைத் தத்தம் செய்த ஒரு மாபெரும் தியாகியாகச் சார்லஸ் கருதப்பட்டார்.

வெறும் சட்டங்களை மட்டும் புரட்டிப் பார்த்தால் சார்லஸ் குற்றவாளியல்லரென்பதே புலப்படும். பாராளுமன்றத்துக்கு எதிராகப் போர் செய்ததாக அவர் குற்றம் சாட்டப்பட்டார். ஆனால், பாராளுமன்றத்தின் ஒரு சபையான பிரபுக்கள் சபையில் பலரும் அவரை ஆதரித்தனர். மேலும் ஹல் துறைமுகத்துள் புக விடாதபடி மன்னரை முதலில் தடுத்தது, பாராளுமன்றம்தான். எனவே, சட்டப்படி முதல் குற்றவாளி பாராளுமன்றமேயாகும். ஆனால், சட்டம் வேறு. நீதி வேறு சார்லஸ், மக்களின் உரிமைகளைக் கடைசிவரையில் மதிக்கவில்லை. உரிமைகள் மக்களுக்கு இருப்பதாக அவர் ஒப்புக்கொள்ளவுமில்லை. 'ஆளும் மன்னனுக்கும் ஆளப்படும் மக்களுக்கும் வெகு தூரம்' என்று சாவதற்குச் சற்று முன்புகூடச் சார்லஸ் கூறினார் என்றால், அவரது மனப்பான்மை எவ்வளவு சீர்திருத்த முடியாதது என்பது தெற்றென விளங்கும். பொதுமக்களின் முதல் எதிரியாகச் சார்லஸ் விளங்கினார். அவரைக் கொல்ல வேண்டியது, உரிமை விரும்பும் ஆங்கிலேயர்களுக்கு ஓர் இன்றியமையாத கடமையாகிவிட்டது. ஆனால், அரசன் கொல்லப்பட்டதைப் பொதுமக்களில் பெரும்பான்மையோர் விரும்பியதாகத் தெரியவில்லை. அரசர் கொல்லப்பட்ட போது லண்டனில் எழுந்த ஓலக்குரலே அதற்கொரு பெருஞ் சான்றாகும். ஒரு சில சுயேச்சையாளர்கள் சேர்ந்துகொண்டே மன்னரைப் பலவந்தமாகக் கொன்றனர். ஆனால், அச் சிறுபான்மையினரே உண்மையில் விடுதலை வேட்கையும், உரிமை உணர்ச்சியுமுடையவர்களாயிருந்தனர். அவர்களுடைய அபிப்பிராயமே பொதுமக்களபிப்பிராயம் எனக் கருதலே முறை. அன்றி ராஜ பக்தி எனும் உணர்ச்சி வசப்பட்டு அழுத மக்கள் கூட்டத்தின் கருத்தை நாம் ஒரு பொருட்டாக எடுத்துக்கொள்ள வேண்டியது அவசியமில்லை. சார்லஸ் உயிரோடிருந்திருப்பாராகில் அவர் ஒருகாலும் பியூரிட்டன்களுக்குச் சமயப் பொறையை வழங்கியிருக்க மாட்டார். பிராடெஸ்டன்டு மதமும் இங்கிலாந்தில் நிலைபெற்றிராது. அரசரது தனிச் சிறப்பதிகாரங்களும் எள்ளளவும் குறைக்கப்பட்டிருக்காது. பாராளுமன்றத்தின் அதிகார வளர்ச்சிக்கு ஒரு நிரந்தர முட்டுக்கட்டையாகவே அவர் இருந்திருப்பார். எனவே, நாட்டின் எதிர்கால முன்னேற்றத்தைக் கருத்திற்கொண்டு பார்க்கும்போது, மன்னரின் சிரச்சேதம் உண்மையில் நியாயமானதொன்றேயென்பது தெள்ளிதின் புலப்படும்.

# 9. முன்னைய ஸ்டூவர்ட்டுகளும் அரசியலமைப்புச் சிக்கல்களும்
## (Early Tudors and Constitutional Issues)

### 1. தெய்வீக உரிமைக் கொள்கை
### (Divine Right Theory)

முன்னைய இரு ஸ்டூவர்ட்டுகள் காலத்தே நடைபெற்ற மன்னர் பாராளுமன்றப் போராட்டத்தை நுணுகி ஆராயுமிடத்து, தெய்வீக உரிமைக் கொள்கையில் அம் மன்னர்களுக்கு இருந்த அசைக்க முடியாத நம்பிக்கையே அதற்கு மூலகாரணம் என்பது நன்கு பெறப்படும். மன்னர் சட்டத்துக்குக் கட்டுப்பட்டவரா அல்லது தெய்வத்துக்கு மட்டுமே கட்டுப்பாடுடையவரா என்பதே அப்போது விடையளிக்க இயலாத கேள்வியாயிருந்தது. 'நாங்கள் தெய்வத்தால் நியமிக்கப்பட்டோம். எனவே, அத் தெய்வத்துக்கு மட்டுமே நாங்கள் பொறுப்புடையவர்கள்' என்பது மன்னர்களின் வாதமாயிருந்தது. 'மக்களின் நன்மைக்காக அவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவரே மன்னர். எனவே, அவர் பாராளுமன்றத்துக்கும் அதனுல் ஆக்கப்பட்ட சட்டங்களுக்கும் கட்டுப்படுவதே முறை' என்பது பாராளுமன்றத்தின் வாதம். இந்த வாதமே நாளடைவில் போராக வடிவெடுத்து இறுதியில பாராளுமன்றத்தின் வெற்றியில் முடிந்தது என்பதை நாம் சென்ற அத்தியாயங்களில் பார்த்தோம்.

இங்ஙனம், ஸ்டூவர்ட் மன்னர்களில் முன்னையோர் இருவரும் தங்களது தெய்வீக உரிமையை வற்புறுத்தியதற்கு முக்கிய காரணம், அவர்கள் அரசு எய்தியபொழுது இங்கிலாந்தில் நிலவிய ஓர் அபாயமான சூழ்நிலையேயாகுமென்பதில் ஐயமில்லை. நாம் ஏற்கெனவே பார்த்தபடி எட்டாம் ஹென்றியின் உயிலில் எழுதப்பட்டிருந்ததற்கேற்பவும், பொதுமைச் சட்டப்படியும் ஸ்டூவர்ட்டுகள்

ஆங்கில மகுடத்துக்கு அருகதையற்றவர்களாகவே காணப்பட்டனர். கத்தோலிக்க மதத்தைச் சேர்ந்த அரபெல்லா ஸ்டூவர்ட்டே அரசியாக வேண்டுமெனப் பலர் வாதித்தனர். இருப்பினும், எலிஸபெத் இராணியாரின் விருப்பப்படியும், ஆங்கிலப் பிரமுகர்களின் விருப்பப்படியும் முதலாம் ஜேம்ஸ் ஆங்கிலேயரின் மன்னராக அரியணையேறினர். இங்ஙனம் நடைமுறையில் ஏற்பட்டுவிட்ட ஓர் நிகழ்ச்சிக்கு ஸ்டூவர்ட்டுகள் தத்துவரீதியான விளக்கம் தர முற்பட்டதுதான் அவர்களின் முதல் தவறுதான். சட்டப்படி தாங்கள் ஆங்கில மகுடத்துக்கு உரிமையற்றவர்களே எனினும், தெய்வீக உரிமைப்படி அதாவது, இறந்துபோன ஒரு மன்னரின் மூத்த புதல்வரோ அல்லது அன்னாரின் வழிவந்தவரோதான் மகுடத்துக்கு உரியவர் என்ற கொள்கையின்படி தாங்களே ஆங்கில அரியணைக்கு உரியவர்கள் என்று அவர்கள் தம்பட்டமடித்துக் கொண்டனர். அவர்களது அரசுரிமையை மறுத்த கத்தோலிக்கர்களுக்கு இவ் வாதம் நல்ல பதிலாய் அமைந்தது. அதோடு நில்லாது அக் கொள்கையை ஒப்புக்கொள்ளும்படி அவர்கள் ஆங்கிலப் பாராளுமன்றத்தைக் கட்டாயப்படுத்தியதுதான் நெருக்கடியான நிலைமைத் தோற்றுவித்துவிட்டது. ஜேம்ஸை மன்னராக ஏற்றுக் கொள்ள ஆங்கிலேயர் தயங்கவில்லை. ஆனால், வழிவழியாக வந்த பாரம்பரிய உரிமையின்படியே தான் மன்னராக வந்ததாகவும், அதை யாராலும் எப்போதும் மாற்றமுடியாதென்றும் அவர் வற்புறுத்தியதைத்தான் அவர்களால் ஏற்றுக்கொள்ள இயலவில்லை. அப்படி ஏற்றுக்கொண்டால், மன்னர்கள் தங்கள் மனம்போன போக்கெல்லாம் வரைதுறையின்றி வல்லாட்சி செலுத்த நேரிட்டு விடுமே என அவர்கள் அஞ்சினர். அவ்வச்சமே மன்னர் பாராளு மன்றச் சச்சரவின் அடிப்படையாயமைந்தது.

தெய்வீக உரிமைக் கொள்கையின்படி அரசரொருவருக்கு இரு வகையான அதிகாரங்கள் இருப்பதாகக் கருதலாம். ஒன்று சாதாரண அதிகாரம் (Ordinary power). அது சட்டத்துக்குக் கட்டுப்பட்டு இயங்குவது. இன்னொன்று தனிச் சிறப்பதிகாரம் (Prerogative); அது சட்டத்துக்குக் கட்டுப்படாதது. அதைச் செலுத்தும்போது மன்னர் கடவுளுக்கு மட்டுமே பொறுப்பானவர். இந்தச் சிறப்பதிகாரத்தையே முன்னைய இரு ஸ்டூவர்ட் மன்னர்களும் பெரிதும் கொண்டாடினார்கள். இத்தகைய அதிகாரத்தின் அடிப்படையிலேயே அவர்கள் இடுவரி (Impositions) கப்பற் பணம் (Ship money) போன்ற வரிகளை மக்கள் மீது விதித்தனர். தனியாணைப் பேரறிவிப்புகள் (Proclamations) வெளியிடவும், நீதிபதிகளைக் கட்டுப்படுத்தவும், கட்டாயக் கடன்களை வசூலிக்கவும் அவர்கள் கொண்டாடிய உரிமை அத்தகைய சிறப்பதிகாரத்தின்பாற் பட்டவையேயாகும்.

எந்த ஓர் அரசியலமைப்பிலும், எதற்குமே கட்டுப்படாத முடிவான ஓர் சிறப்பதிகாரம் (Prerogative) அதாவது, எல்லா அரசியல் நிறுவனங்களுக்கும் சட்டரீதியாக அளிக்கப்பட்டுள்ள அதிகாரங்கள் போக மீதியுள்ள எஞ்சிய அதிகாரமானது (Reserve power) ஏதாவதோர் இடத்தில் இருக்கவேண்டுமென்பதை எல்லாருமே ஒப்புக்கொள்கின்றனர். சாதாரணமாக ஒரு நாட்டின் நிர்வாகத் தலைவரிடம் அத்தகைய அதிகாரம் ஒப்படைக்கப்படுதல் வழக்கம். அவர் அதை நாட்டின் அவசரத் தேவைக்காகப் பயன் படுத்துவாராதலால் அது நெருக்கடி கால அதிகாரம் (Emergency power) அல்லது சமயோசித அதிகாரம் (Discretionary powers) எனவும் அழைக்கப்பெறும். அத்தகைய அதிகாரத்தை ஆங்கில மன்னர்கள், சிறப்பாக டியூடர் மன்னர்கள் நடைமுறையில் செலுத்திவந்தனர். கட்டாயக் கடன்களை அவர்கள் வசூலித்தனர். தனியாணைப் பேரறிவிப்புகளை வெளியிட்டனர். பாராளுமன்றத்தின் உரிமைகளில் தலையிட்டனர். திருச்சபையின்மீது தனியாதிக்கம் செலுத்தினர். ஆனால், அவைகளை மாற்றவியலாத உரிமைகள் என அவர்கள் சாதிக்கவில்லை. சமயத்தில் விட்டுக்கொடுக்கவும் அவர்கள் முன்வந்தனர். ஆனால், ஸ்டூவர்ட்டுகள் காலத்தே கட்டற்ற வல்லரசின் தேவையின்மை ஏற்பட்டது ஒருபுறமிருக்க, அவைகளை எவராலும் மாற்றமுடியாத தெய்வீக உரிமையாக அவர்கள் கொண்டாடியதைத்தான் மக்களால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. தற்காலிக தேவைக்கேற்ப அரசர்கள் செலுத்திவந்த சிறப்பதிகாரத்தைக் கட்டற்ற அதிகாரமாக (absolute power) நிரந்தரமாய்ச் செலுத்த ஸ்டூவர்ட்டுகள் முயன் றதைத்தான் பாராளுமன்றம் தடுத்தது. நடைமுறையில் செலுத்து வதைவிடக் கொள்கை அளவில் நிலைநாட்டுவதைத்தான் அது பெரிதும் மறுத்தது. ஆனால், பொதுக் கோட்பாடுகளை வரையறுப் பதிலும், படாடோபமாக அவற்றைப்பற்றிப் பேசுவதிலும் ஜேம்ஸ் கொண்டிருந்த தனிவிருப்பம் அவரைப் பாராளுமன்றத்தின் எதிரி யாக மாற்றிவிட்டது.

மன்னரின் தெய்வீக உரிமை பற்றியும், தனிச்சிறப்பதிகாரம் பற்றியும் இங்கிலாந்தில் முதன்முதல் எண்ணியவரும் பேசியவரும் ஜேம்ஸ் அரசரேயாவார். 'சுதந்திர முடியரசின் உண்மையான சட்டம்' (The True Law of the Free Monarchy) என்ற நூலில் அவர் 'அரசரின் விருப்பப்படியே பாராளுமன்றம் சட்டம் செய்ய உரிமை யுடையதே தவிர, தனிப்பட்ட முறையில் சட்டங்களை ஆக்க அதற்கு உரிமை இல்லை' என்றும், 'ஒரு நல்ல அரசர் பாராளுமன்றத்தின் சட்டங்களுக்கு அடங்கி நடப்பது குடிமக்களுக்கு ஒரு முன்மாதிரியா யிருப்பதற்காக சுய இச்சைப்படி செய்யப்படுமோர் காரியமே தவிர, தவிர்க்க முடியாத கடமை அல்லது கட்டுப்பாட்டின் காரண

மாக அல்ல' என்றும் கூறியுள்ளார். 1616 ஆம் ஆண்டில் அவர் தமது நீதிபதிகள் முன்பு நிகழ்த்திய சொற்பொழிவில் பின்வருமாறு கூறினர் :[1] 'அரச பீடத்தின் தனிச்சிறப்புரிமைபற்றிப் பேச எந்த ஒரு வழக்கறிஞனுக்கும் வாய் கிடையாது. அதைப்பற்றி வழக்காடுதலென்பது சட்டவிரோதமாகும். கடவுள் எதைதைச் செய்யவேண்டுமென்று வழக்குரைப்பது நாத்திகமும் தெய்வ நிந்தனையுமாகும். நல்ல கிறிஸ்தவர்கள் அவரது சொற்களால் வெளிப்படுத்தப்பட்டுள்ள அவரது விருப்பத்தை அறிவதிலேயே திருப்தி அடைவார்கள். அதுபோலவே அரசர் இதைச் செய்ய வேண்டும் அதைச் செய்யவேண்டும் என்று கூறி வழக்காடுவது ஒரு குடிமகனுக்கு அழகன்று. அப்படிச் செய்வது அரசரை அவமதிப்பதாகும். அரசரது விருப்பம் என்ன என்பதை அவரது சட்டங்கள் மூலமாக அவர்கள் அறிந்து அதன் வழி நிற்பதில் அமைதி பெறவேண்டும்.'[2]

இவ்வாறெல்லாம் அவர் மன்னர்கள் சட்டமன்றங்களுக்குக் கட்டுப்படாதவர் என்பதைக் கூறிக்கொண்டாரேயன்றி, பாராளு மன்ற ஆட்சி முறையை அவர் அழிக்க முன்வரவில்லை. ஆனால், அவரது நண்பர்கள் பாராளுமன்றத்தைக் கண்டிக்கத் தயங்க வில்லை. கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்தில் சிவில் சட்டப் பேரா சிரியராயிருந்த டாக்டர் கௌல் (Dr. Cowell) என்பார் அவரது சட்ட அகராதியில் (Interpreter) 'மன்னர் கட்டற்ற முழு அதிகார முள்ளவர். எனவே, அவர் சட்டத்துக்கு மேம்பட்டவர்; 'பாராளு மன்றம் தனது சட்டங்களின் மூலம் அரசரைக் கட்டுப்படுத்த எத்தனிப்பது கட்டற்ற முடியரசு அமைப்புக்கே முரணானதாகும்'[3] என்று கூறுகின்றார் (1607). பாராளுமன்றத்தின் அனுமதியின்றி அரசர் வரிவிதிக்கலாமென்றும், அரசரது சிறப்பதிகாரம் விவாதத் துக்கு அப்பாற்பட்டது என்றும் அவர் எழுதியுள்ளார். அவரது நூலைச் சுட்டுப் பொசுக்கிவிடும்படி பாராளுமன்றம் ஆணை யிட்டது. ஆனால், நூலைத்தான் பொசுக்க முடிந்ததேயன்றி, அதனால் தூண்டிவிடப்பட்ட மனப்போக்கை யாராலும் தடுக்க முடியவில்லை. ஆங்கிலிக திருச்சபையைச் சேர்ந்தவர்கள் மேற் சொன்ன கருத்தை வரவேற்றுப் போற்றினர். ஏனெனில், திருச் சபையின் தனித் தலைவராக விளங்கியவர் மன்னரேயாவர். அவர்களின் முன்னேற்றமே அரசரது தயவில்தான் அடங்கி இருந்தது. எனவே, அவர்கள் மன்னரை வானளாவப் புகழ்ந்தனர். போப்பாண்டவரது தலைமையை மறுத்த ஆர்மீனியர்களும் மன்னரது சிறப்புரிமையை ஆதரித்தனர். மன்னரது தீர்ப்புகளை

[1] & [2] See 'The Crisis of English Liberty', by Marriott, J. A. R., p 35.

[3] See 'Constitutional Conflicts of the Seventeenth Century', by Tanner, p. 21.

மறுப்பது பாவம் என ஆர்ச்பிஷப் லாட் என்பார் கூறினர். டாக்டர் சிப்தார்ப் (Dr. Sibthorp) என்பவரும் (1626) டாக்டர் மான்வாரிங் (Manwaring) என்பாரும் (1617) அரசர் விதிக்கின்ற வரிகள் நியாயமற்றவையாயிருப்பினும் குடிமக்கள் அவற்றை மறுக்காமல் கொடுத்துவிடுவதே முறை என்றும், மன்னரை எதிர்த்துக் கலகம் செய்வது கடவுளுக்கெதிராகக் கலகம் செய்வதற்கு நிகராகும் என்றும் அவர்கள் கூறிவந்தனர்.[1] தங்கள் கூற்றுக்குச் சாதகமாக அவர்கள் பைபிளிலிருந்து மேற்கோள் எடுத்துக் காட்டினர். 'ரோமானியர்களுக்கு எழுதிய கடிதங்கள்' (Episte to the Romans) என்ற பகுதியில் பதின்மூன்ருவது இயலில் கூறப்பட்டுள்ளதை அவர்கள் எடுத்துக் காட்டினர். அதாவது, 'ஒவ்வோர் ஆன்மாவும் தன்னை விட உயர்ந்த சக்திகளுக்குக் கட்டுப்பட்டிருப்பதாக! ஏனெனில், இவ்வுலகில் கடவுளைவிட உயர்ந்த சக்தி வேறொன்றுமில்லை. அப்படி எவையேனும் இருக்குமானால், அவையெல்லாம் கடவுளால் ஏற்படுத்தப்பட்டவை. எனவே, அத்தகைய சக்தியை எதிர்ப்பவர்கள் இறைவனின் கட்டளையை மீறியவர்களாவர்'[2] என்பதாகும். இந்தக் கொள்கையைத்தான் 1642ஆம் ஆண்டில், உள்நாட்டுப் போர் துவங்குமுன் பாராளுமன்றம் எதிர்த்து ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியது. 'அரசர்கள் தாங்கள் ஆளுகிற நாட்டைத் தங்களுக்கே சொந்தம் என்றும், அதை எப்படி வேண்டுமானாலும் தங்கள் விருப்பப்படி ஆளலாமென்றும் இந்தத் தவருன கருத்தானது அரசர்கள் மனத்தில் எப்படியோ புகுந்துவிட்டது. நாட்டுக்காக அரசர்களே அன்றி அரசர்களுக்காக நாடு அல்ல என்பதை அவர்கள் உணரவேண்டும்'[3] என்பதே அத் தீர்மானமாகும்.

இங்ஙனம் மதவாதிகளால் ஆதரிக்கப்பட்ட ஸ்டுவர்ட் மன்னர்கள் ஆங்கில அரசுரிமையைத் தாங்கள் பெற்றது தெய்வ விருப்பத்தின்படியே என்பதை நன்கு நிறுவினர். பின்னர் அதை ஒட்டித் தாங்கள் தெய்வத்துக்கு மட்டுமே பொறுப்பாளிகள் என்ற கருத்தை வெளியிட்டனர். அதையும் திருச்சபையினர் ஆதரித்து அரசரை எதிர்ப்பது பாவம் என்ற எதிர்ப்பு மறுப்புக் கொள்கையை (Principle of Non Resistance) உருவாக்கினர். இதன் விளைவாக ஆங்கிலிக குருமார்கள் மன்னரின் விசுவாசிகளாக மாறினர். 1688ஆம் ஆண்டுப் புரட்சியின்போதுகூட இக் கொள்கைக்கு முரணாக நடக்க மனமின்றிப் பலர் பதவியிழந்தனர்.

தெய்வத்தால் உண்டாக்கப்பட்ட ஒரு சக்தியை எதிர்ப்பது பாவம் என்ற கொள்கையை முதலில் உலகில் புகுத்தியவர்கள்

[1] See 'Constitutional Conflicts of the Seventeenth Century', by Tanner, p. 21.

[2] & [3] See 'Constitutional Conflicts of the Seventeenth Century' by Tanner, p. 22.

போப்பாண்டவர்கள். அவர்கள் தெய்வத்தால் திருச் சபையின் தலைவர்களாக நியமிக்கப்பட்டவர்களென்றும், பரலோகக் கதவுகளின் சாவி அவர்களிடம் தரப்பட்டுள்ளதாகவும் அவர்களை எதிர்ப்பது பாவம் என்றும் அன்னூர் கூறிவந்தனர். நாளடைவில் போப்பாண்டவரை எதிர்த்த பேரரசர்கள் இவ்வுரிமையைக் கொண்டாடலாயினர். போப்பாண்டவர்களின் தயவால் தங்களுக்கு அதிகாரம் ஏற்படவில்லை என்றும். இறைவனது அருளாலேயே அது ஏற்பட்டது என்றும் அவர்கள் கூறலாயினர். நவீன காலத்தில் ஃபிரான்ஸில் நான்காம் ஹென்றி இத்தகைய வாதத்தின் அடிப்படையிலேயே அரசுரிமையை வேண்டினூர். இங்கிலாந்தில் ஜேம்ஸும் அதே அடிப்படையிலேயே அரசுரிமையைப் பெற்ருர்.

இத்தகைய வாதங்களெல்லாம் போப்பாண்டவரிடமிருந்து மன்னரது நிலைமைக்கு ஆபத்து ஏற்படும் என்று இருந்த காலத்தில் அரசுரிமையை நிலைநாட்டப் பெரிதும் பயன்பட்டது. ஆனல், பதினேழாம் நூற்ருண்டில் அத்தகைய அபாயம் அகன்றுவிட்டது. போப்பாண்டவர் வலிமையற்றுப் போனூர். அவரை எதிர்த்துத் தேசிய திருச்சபையானது இங்கிலாந்தில் ஏற்பட்டுவிட்டது. தெய்வீக உரிமை கொண்டாடிய போப்பாண்டவரது அதிகாரத்தையே எதிர்த்து வெற்றி பெற முடியுமென்ருல் அரசரின் அதிகாரத்தை ஏன் எதிர்க்கக்கூடாது என அறிஞர்கள் எண்ணமிடலாயினர். முக்கியமாகப் பியூரிடன்கள் அத்தகைய எதிர்ப்பில் இறங்கினர். மன்னரை மட்டுமின்றி அவரால் ஆதரிக்கப்பட்ட ஆங்கிலிகர், ஆர்மீனியர்களையும், குருமாராட்சியையும் (Episcopacy) அவர்கள் கண்டித்தனர். எனவே, தங்கள் நிலையைக் காக்கவேண்டி அவர்கள் அரசரை இன்னுமதிகமாக ஆதரிக்கலாயினர். அரசரை ஆதரித்த கூட்டமும், எதிர்த்த கூட்டமும் நாட்டில் வளரலாயிற்று. இறுதியில் எதிர்த்த கூட்டம் வெற்றிபெற்றது.

இங்ஙனம் ஸ்டுவர்ட் மன்னர்களால் பெரிதும் போற்றப்பட்ட தெய்வீக உரிமைக் கொள்கையானது ஒரு சில அடிப்படைக் கருத்துகளை வற்புறுத்தியது. இக் கொள்கையின்படி, கோனுட்சி முறை (Monarchy) ஒன்றே கடவுளுக்கு ஏற்புடைத்தான அரசியலமைப்பாகும். ஒவ்வொரு நாடும் ஒவ்வோர் அரசனுல் ஆளப்படுவதே முறை. அவ்வரசர் யார் என்பதை இறைவனே தேர்ந்தெடுத்து நியமனம் செய்கிருர். எனவே, அரசர் தெய்வத்துக்கே கடமைப்பட்டவர். மக்களுக்கு எவ்வாற்ருனும் அவர்கள் பொறுப்பாளிகளல்லர். மக்கள் அவர்களுக்கு மனமுவந்து கீழ்ப்படிய வேண்டும். அன்றி அவர்களுக்கு எதிராகக் கலகம் செய்தால், அது ராஜத் துரோகம் மட்டுமின்றி தெய்வ நிந்தனையும் பாவமுமாகும். தங்களை ஆளுகின்ற அரசர் முட்டாளாகவோ கொடுங்கோல

ஞகவோ இருந்தாலும்கூட, குடிமக்கள் அவர்களை எதிர்க்கக் கூடாது. மன்னர்களின் கொடுங்கோன்மையைத் தாங்கள் செய்த பாவங்களுக்காக இறைவனால் தங்களுக்கு அளிக்கப்பெற்ற சாபம் என நினைந்து வாளாவிருந்து பொறுத்துக்கொள்ள வேண்டும். நோன்பு நோற்றும் உண்ணாவிரதமிருந்தும் கழுவாய் தேடிக் கொள்ளவேண்டும். அன்றி அரசர்களை அரியணையினின்றும் நீக்கவோ அவர்களைத் தண்டிக்கவோ அவர்களுக்கு உரிமை இல்லை.

அறத்தினின்றும் முறை பிறழ்கின்ற மன்னர்களைக் கடவுள் சும்மா விடமாட்டார். மன்னர்கள் தங்கள் சொந்த வாழ்க்கையில் மட்டுமின்றிப் பொது வாழ்வில் செய்யும் தவறுகளுக்காகவும் இறைவனிடம் பதில் சொல்ல வேண்டியவர்களாவர். அவர்களுக்குத் தக்க தண்டனை வழங்கவேண்டியது கடவுளின் பொறுப்பு. மக்கள் அந்தப் பொறுப்பினை மேற்கொள்ளக்கூடாது. இந்த அடிப்படையில்தான் முதலாம் சார்லஸ் தனது விரோதிகளுக்குப் பதில் கூறினர். ‘என்னுடைய செய்கைகளுக்காக நான் கடவுள் ஒருவருக்கு மட்டுமே பதில் சொல்ல வேண்டியவன்’ என்று அவர் 1628 ஆம் ஆண்டில் கூறினர். அவர்மீது தேசத் துரோகக் குற்றம் சாட்டப் பட்டு விசாரணை நடந்தபோது, நீதிபதி பிராட்ஷாவிடம் (Bradshah) அவர் ‘அவர் ஓர் அரசரை விசாரிக்கக்கூடிய உயர் அதிகாரம் பெற்ற நிறுவனம் இவ்வுலகில் ஒன்றுமே இல்லை’ என்றும், ‘மன்னர் தவறு செய்யக்கூடாதவர்; எனவே, அவர் மீது குற்றம் சாட்டுவதென்பது இயலாது’ என்றும் அவர் வாதாடினர். தூக்கு மேடையில் நின்ற சமயத்தில்கூட அவர் ‘குடி மக்கள் வேறு, மன்னன் வேறு’ என்றும், சட்டங்களின் பயனை நுகர்வதே குடிமக்கள் கடமையே அன்றி அரசாங்கத்தின் செயல் களில் பங்கு பெறும் உரிமையானது கிஞ்சித்தேனும் அவர்களுக்கு இல்லை’ என்றும் அறைந்தார். இத்தகைய விடாப்பிடிக் கொள்கையே முடியரசு ஒழிப்புக்கு இட்டுச் சென்றது.

மன்னர் ஒருவரைக் கடவுள் நியமிக்கிறார் என்றால் அவர் உயிர் நீத்தபின் யார் பட்டத்துக்கு வருவதென்பதையும் அவரே தீர்மானிக்கிறார். பரம்பரையாக அரசுரிமை வரவேண்டுமென் பதே கடவுளின் விருப்பமாகும். ஓர் அரசர் இறந்தபின் அவரது மூத்த மகன் பட்டத்துக்கு வருவதே முறை. மக்கள் இல்லா விட்டால் அவருக்கு மிக நெருங்கிய மூத்த உறவினர் பட்டத்தை எய்த வேண்டும். வமிசாவழிப் பட்டியலைப் பார்த்து அதன்படியே தான் வாரிசுரிமை தீர்மானிக்கப்பட வேண்டும். அரசரின் நெருங்கிய உறவினரல்லாதவர் போர் மூலமாக அரசுரிமையைக் கைப்பற்றக்கூடும். ஆனால், இறுதியில் பரம்பரை வாரிசுதாரரே

வெற்றி பெறுவார். அதுவரை மக்கள் பொறுமையோடு காத்திருக்க வேண்டும். இடையில் வரும் மன்னர்கள் மக்கள் செய்த பாவத்தின் விளைவாக வருபவர்கள் என்று அனைவரும் எண்ணிக் கொள்ள வேண்டும்.

தெய்வீக உரிமை என்பது வெறும் சிறப்புரிமை மட்டுமன்று. தப்பித்துக்கொள்ள முடியாத கடமையுமாகும். கடவுளின் விருப்பத்துக்கேற்ப அரசர்கள் தங்கள் அதிகாரங்களைத் தாங்களே செலுத்தவேண்டும். அவற்றை வேற்று மனிதர்களுக்கு மாற்றும் அதிகாரம் அவர்களுக்கில்லை. அதிகாரங்களைக் குடிமக்களோடு பகிர்ந்துகொள்வதுகூட முறையற்ற செயலேயாகும். அப்படிச் செய்வது கடவுளுக்குச் செய்யும் நம்பிக்கைத் துரோகமாகும். இப்படிப்பட்ட கொள்கையின் காரணமாகத்தான் முன்னைய ஸ்டூவர்ட்டுகள் பாராளுமன்றத்துக்கு உரிமைகளை விட்டுக் கொடுக்க மறுத்தனர். அப்படி மறுப்பதே அவர்களது தலையாய கடமை என அவர்கள் எண்ணினர்.

காலத்துக் கொவ்வாத இக் கொள்கையை ஸ்டூவர்ட்டுகள் விடாப் பிடியாய்க் கடைப்பிடித்தனர். நடைமுறையில் கடைப் பிடிப்பதோடு அவர்கள் நின்றிருந்தால் பரவாயில்லை. ஆனால், அதை ஒரு கொள்கையாக நிலைக்கவைக்க அவர்கள் பாடுபட்டனர். எனவே, அதை எதிர்த்தவர்களுக்கும் தங்களது கொள்கைகளை நிலைநாட்டவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. அதன் விளைவாகவே அரசர் தமது தலையையும் அதை அலங்கரித்த மகுடத்தையும் ஒருங்கே இழக்கவேண்டிய நிலை ஏற்பட்டது.

## 2. பாராளுமன்றத்தின் சிறப்புரிமை
(Parliamentary Privilege)

### (அ) காப்புரை தாள் (A Form of Apology)

நாம் ஏற்கெனவே பார்த்தபடி, மாறிவிட்ட சூழ்நிலையின் காரணமாக, டியூடர் காலத்துப் பணிவோடு அரசருக்குப் பணி செய்த பாராளுமன்றம் ஸ்டூவர்ட்டுகள் காலத்துத் தனது சிறப்புரிமைகளுக்காகப் போராட ஆரம்பித்தது. ஜேம்ஸ் அரியணை ஏறிய உடனேயே, பொதுமக்கள் சபையானது தனது சிறப்புரிமைகளை எல்லாம் தொகுத்து 'காப்புரை தாள்' (A Form of Apology) என்ற ஓர் பத்திரத்தைத் தயாரித்து அவரிடம் சமர்ப்பித்தது. பாராளுமன்றத்தின் சிறப்புரிமைகள் தொன்றுதொட்டு வழக்கத்திலுள்ள உரிமைகள் அல்லவென்றும், மன்னரது கருணையால் வழங்கப் பட்டவையே அவை என்றும் யாரோ தவருக அவருக்குக் கூறி

யிருப்பதைப்பற்றி முதலில் அது வருத்தம் தெரிவித்தது. பின்னர் அது தனது உண்மை நிலையை அரசருக்கு உணர்த்தியது. அதன்படி 'பாராளுமன்றத்தின் சிறப்புரிமைகள் பண்டை நாள் தொட்டு வரும் வழக்காற்றின் பயனேயாகும்; அவற்றைக் குறைக்கவோ பறிக்கவோ மன்னருக்கு உரிமை இல்லை; மன்னரிடம் உரிமைகளைக் கோருவது ஏற்கெனவே இருக்கின்ற சொத்துரிமை போன்ற உரிமைகளைக் கோருவது போன்றதே அன்றிப் புதிதாக ஒன்றை வேண்டுவதென்பது இல்லை; நாட்டிலுள்ள தலையாய நீதிமன்றம் பாராளுமன்றமேயாகும்; ஏனைய நீதிமன்றங்கள் யாவும் அதனிடமிருந்தே அதிகாரங்களைப் பெறுகின்றன; பாராளுமன்றத்தில் உறுப்பினராவதற்கு யார் தகுதியுடையவர்கள் என்பதைத் தீர்மானிக்குமுரிமை பாராளுமன்றத்துக்கு மட்டுமே உண்டு. சான்சரி நீதிமன்றமோ, வேறு நீதிமன்றங்களோ பாராளுமன்றத்தின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்த இயலாது'. இங்ஙனம் கூறியபின், பாராளுமன்ற உறுப்பினர்களின், பேச்சுரிமை சிறையிடப்படா உரிமை, தொழுகை உரிமை, தேர்தல் உரிமை போன்ற உரிமைகளை அது வற்புறுத்துகிறது.

(ஆ) தேர்தல் வழக்குகளில் தீர்ப்பளிக்கும் உரிமை (Right to decide disputed elections)

முதலில், தேர்தல்பற்றிய வழக்குகளில் முடிவான தீர்ப்புக் கூறும் உரிமை பாராளுமன்றத்துக்கே உரியது என்ற சிறப்புரிமையைப் பொதுமக்கள் சபை வற்புறுத்தியது. காட்வின் வழக்கில் இவ்வுரிமை பற்றிய வாதம் கிளம்பியது. அரசரது ஆணையின்படி காட்வினின் தேர்தல் முறையற்றது எனக் கூறப்பட்டபோதிலும், பொதுமக்கள் சபை அவரது தேர்தல் சரியானதே எனக் கூறியது. காட்வினுக்குப் பதிலாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவரை ஏற்றுக் கொள்ளவும் அச்சபை மறுத்தது. தனது உறுப்பினரின் தகுதிபற்றி நிர்ணயிக்கும் சிறப்புரிமை தனக்கே உரியதெனப் பொதுமக்கள் சபை வாதித்தது. தன் மூலமாகவே சபையினர் சிறப்புரிமைகளைப் பெற முடியும் என்று பகர்ந்த அரசர் சான்சரி நீதிமன்ற நீதிபதிகளோடு கலந்து ஒரு முடிவுக்கு வரும்படி ஆணையிட்டார். இவ்வாணை சபையின் உறுப்பினர்களுக்குப் பெரும் அதிர்ச்சியை உண்டு பண்ணியது. எனினும், நீதிபதிகளோடு கலந்தாலோசனை செய்ய கமிட்டி ஒன்றை அது நியமித்தது. மன்னரது முன்னிலையிலும், பிரிவி கவுன்ஸில் முன்னிலையிலும் ஆலோசனை நடைபெற்றது. இரண்டு தேர்தல்களையும் ரத்துச் செய்துவிட்டு மூன்றும் முறை தேர்தல் நடத்தவேண்டுமென்று கூறிய அரசரது ஆலோசனையைப் பொதுமக்கள் சபையினர் ஏற்றனர். அதன்படி புதிய உறுப்பினர் ஒருவர் தேர்ந்தெடுக்கப்பட்டார். இதன்பின் ஏற்பட்ட

இரண்டு தேர்தல் வழக்குகளிலும் பொதுமக்கள் சபையே முடிவான தீர்ப்பை அளித்தது. அரசர் தலையிடவில்லை. எனவே, தேர்தல் பற்றிய வழக்குகளில் இறுதித் தீர்ப்புக் கூறும் அதிகாரத்தைப் பொதுமக்கள் சபை நிரந்தரமாகப் பெற்றது.

(இ) சிறையிடப்படா உரிமை (Freedom From Arrest)

அடுத்து சபை உறுப்பினர்கள், சபை நடைபெறும்போது எவராலும் சிறையிடப்படக்கூடாது என்ற உரிமை பற்றிய வாதம் கிளம்பியது. இவ் வுரிமை தொன்றுதொட்டு வழங்கிவந்த ஒன்றாகும். 1543ஆம் ஆண்டில் ஃபெர்ரர்ஸ் (Ferrers) என்ற பொதுமக்கள் சபை உறுப்பினரைச் சிறையினின்றும் மீட்கும்படி சபை ஆணையிட்டது. ஜேம்ஸ் காலத்தில் ஷேர்லி (Shirley) என்ற பொதுமக்கள் சபை உறுப்பினர், அவரது கடன்காரர்களால் கைது செய்யப்பட்டார். அவரை விடுவிக்கும்படி சபை உத்தரவிட்டது. அங்ஙனமே அவர் விடுதலை செய்யப்பட்டதோடு அவரைச் சிறை செய்யக் காரணமாயிருந்தவர்களும் சிறைக்கு அனுப்பப்பட்டனர். அவரைச் சிறையினின்றும் விடுவிக்க மறுத்த சிறையதிகாரியும் சிறை செய்யப்பட்டார். முடிவில் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு அவர் சிறையினின்றும் விடுதலை பெற்றார். இந்த வழக்கில் அரசர் பாராளுமன்றத்தை ஆதரித்தார்.

(ஈ) பேச்சுரிமை (Freedom of Speech)

பொதுமக்கள் சபையினரின் பேச்சுரிமை பற்றிப் பின்னர் விவாதம் ஏற்பட்டது. மன்னர் இடுவரிகளை விதிக்கலாமா கூடாதா என்பதைப் பொதுமக்கள் சபை விவாதிக்க விரும்பியது. ஜேம்ஸ் அது கூடாது எனத் தடை விதித்தார். உடனே, மன்னர் சபையினரின் பண்டைய சிறப்புரிமையில் தலையிடுவதாகப் பெருங் கூக்குரல் கிளம்பியது. அதைக் கேட்ட மன்னர் வாளா இருந்து விட்டார். இடுவரிகளைப் பற்றி ஓர் பெருத்த விவாதம் சபையில் நடைபெற்றது. 1621ஆம் ஆண்டில், முப்பதாண்டுப் போரில் இங்கிலாந்து தலையிடுவதுபற்றிப் பொதுமக்கள் சபையினர் விவாதிக்க முற்பட்டனர். அத்தகைய உயர் கொள்கைகளைப் பற்றிப் பேசும் உரிமை சபையினர்க்குக் கிடையாதென்று ஜேம்ஸ் மறுத்தார். மீண்டும் தங்கள் உரிமையை வற்புறுத்தி ஓர் எதிர்ப்புத் தீர்மானத்தைச் சபை நிறைவேற்றியபோது, அத் தீர்மானம் பதியப்பெற்ற ஏட்டினை ஜேம்ஸ் தன் கரங்களாலேயே கிழித்தெறிந் தார்.

முதலாம் சார்லஸின் காலத்தில் பாராளுமன்றத்தின் உரிமைகள் பற்றி 1621ஆம் ஆண்டில் மீண்டும் விவாதம் ஏற்பட்டது.

பாராளுமன்றத்தில் சிறப்பான சொற்பொழிவுகள் நிகழ்த்திய சர் ஜான் எலியட் என்பவரையும் வேறு எட்டு பேர்களையும் சார்லஸ் சிறை செய்தார். உடலுரிமைக் கட்டளைகள் மூலம் அநேகமாக அவ்வெண்மரும் விடுதலை பெற்றனர். ஆனால், பாராளுமன்ற உறுப்பினர் என்ற முறையில் தான் விடுவிக்கப்படவேண்டியது தனது சிறப்புரிமையாகும் என எலியட் கடைசிவரை வாளா இருந்தார். சிறையிலேயே அவர் மாண்டார். பாராளுமன்றத்தின் சிறப்புரிமைகள் இப்படிப்பட்ட தியாகிகளால்தான் நன்கு நிலைநாட்டப் பட்டன எனலாம்.

## பொருளாதாரச் சிக்கல்கள்
## (Financial Issues)

### (அ) இடுவரிகள் (Impositions)

ஸ்டூவர்ட்டுகள் அடிக்கடி பாராளுமன்றத்தைக் கூட்டியதற்குக் காரணம் அவர்களது பொருளாதார முட்டுப்பாடுகளே யாகும். ஸ்டூவர்ட்டுகளின் ஊதாரித்தனம் ஓரளவு அவர்களது வறுமைக்குக் காரணமென்றாலும், விலைவாசிகளின் ஏற்றமும், நாணய மதிப்புக் குறைவுமே அவர்களின் பண முட்டுப்பாட்டுக்குக் காரணமாகும். ஜேம்ஸ் தமது பண வறட்சியைப் போக்கிக் கொள்ள ஏற்கெனவே இருந்த ஏற்றுமதி இறக்குமதி வரிகளோடு இடுவரி (Imposition) ஒன்றையும் அவர் அதிகப்படியாக விதித்தார், இப்படிப்பட்ட வரியை டியூடர் மன்னர்கள்கூட விதித்துவந்தனர். எனவே, ஜேம்ஸும் தைரியமாக உலர்ந்த முந்திரிப் பழங்கள்மீது மேற்சொன்ன வரியை விதித்தார். லெவாண்ட் என்ற வியாபாரக் கம்பெனியைச் சேர்ந்த ஜான் பேட்ஸ் (Bates) என்பார் இவ்வரியைக் கொடுக்க மறுத்தார். பாராளுமன்றத்தின் அனுமதியின்றிப் போடப் பட்ட அவ் வரி சட்டத்துக்கு முரணானது என அவர் வாதாடினார். வழக்கு எக்ஸெக்கர் நீதிமன்றத்தின் முன் கொண்டு செல்லப் பட்டது. நீதிபதிகள் அரசருக்குச் சாதகமாகத் தீர்ப்பு வழங்கினர். அதோடு நிறுத்திக்கொள்ளாமல் அரசரது அதிகாரங்கள் பற்றியும் அவர்கள் ஓர் விளக்கம் தந்தனர். மன்னருக்குச் சாதாரண அதிகாரங்கள் என்றும், பிரத்தியேக அதிகாரங்கள் என்றும் இருவகை அதிகாரங்கள் உண்டென்றும், முன்னைய அதிகாரங்கள் சட்டங்களுக்குக் கட்டுப்பட்டவை எனினும், பின்னையவை மன்னரின் விருப்பப்படியே செலுத்தப்படத்தக்கன என்றும், அவ்வதிகாரங்களின்படி, வரி விதிக்கும் அதிகாரம் அரசனுக்கு உண்டென்றும் அவர்கள் வாதித்தனர். அதை அடிப்படையாகக் கொண்டு அவர் மேலும் பல வரிகளை விதித்து வரி விகிதப் புத்தகமொன்றையும் வெளியிட்டார். பிறநாட்டிலிருந்து வந்த சுகபோகப் பொருள்கள்மீது வரிவிதிக்கப்பட்டதால், ஆங்கில உற்பத்தியாளர்களுக்கு இருந்த

போட்டி குறைந்தது. அரசருக்கும் நல்ல வரும்படி கிடைத்தது (ஆண்டுக்கு £ 70,000). ஜேம்ஸ் 1610ஆம் ஆண்டில் கூடிய பாராளுமன்றத்தில் தனது மேற்படி சிறப்புரிமையை வற்புறுத்திப் பேசினார். அப்போதுதான் சபையினர் விழித்துக்கொண்டனர். இடுவரியைப்பற்றி ஓர் பெரிய விவாதம் பதினொரு நாள்களுக்கு நடைபெற்றது. பேக்கன் என்ற அறிஞரும் பிறரும் அரசரது சிறப்பதிகாரங்களை ஆதரித்துப் பேசினர். நாட்டின் ஏற்றுமதி, இறக்குமதி வாணிபத்தைக் கட்டுப்படுத்தும் அதிகாரம் மன்னருக்கு எப்போதுமே உண்டென்றும், பிறநாட்டுப் போட்டியைத் தடுக்க வேண்டி அந்நாட்டுப் பொருள்கள் இங்கிலாந்தில் இறக்குமதியாகா வண்ணம் தடுப்பது மன்னர் கடமை என்றும், அங்ஙனம் தடுக்கும் போது அப் பொருள்களின்மீது ஒரு வரியைப் போடுவதில் தவறில்லை எனவும் அவர்கள் வாதித்தனர். மன்னரை எதிர்த்தவர் களுக்கு இவ் வாதம் உடன்பாடாக இல்லை. பாராளுமன்றத்தின் அனுமதியின்றி மன்னர் தன்னிச்சைப்படி வரி விதிக்கக் கூடுமா என ஹேக்வெல் (Hakewill) என்பார் வினவினார். அப்படிச் செய்வது தவறு என்பதற்கு ஆதாரங்கள் பல பழைய பாராளுமன்ற ஏடுகளிலே உள்ளன என அவர் கூறினார். வொயிட்லாக் (White-locke) என்பார், நாட்டின் தனித்தலைமை யாரிடத்துள்ளதோ அவருக்குச் சில சிறப்புரிமைகள் உண்டு என்பதை ஒப்புக்கொண் டார். அத்தகைய இறைமை மன்னருக்குத் தனியே கிடையா தென்றும், பாராளுமன்றத்தோடு கூடிய மன்னருக்கு அத்தகைய உரிமை உண்டென்றும் அவர் விளக்கம் செய்தார். அவ் விளக்கத்தை ஜேம்ஸ் ஏற்றுக்கொண்டிருந்தால், ஒருவேளை சச்சரவு அதோடு தீர்ந்திருக்கும். பெரும் ஒப்பந்தம் என்ற ஓர் சமசர உடன் பாடு மன்னருக்கும் பாராளுமன்றத்துக்கும் ஏற்பட்ட பின்பும் அது அமலுக்கு வருமுன்பே மன்னர் பாராளுமன்றத்தைக் கலைத்து விட்டதால், அம் முயற்சி பயனற்றுப் போய்விட்டது.

மூன்றுண்டுகளுக்குப் பின் கூட்டப்பட்ட பாராளுமன்றம் இடுவரி பற்றிய விவாதத்தைத் தொடர்ந்தது. பிரபுக்கள் சபை யோடு கலந்து விவாதிக்க அது விரும்பியது. ஆனால், அச் சபை அத்தகைய விவாதத்துக்கு இணங்கவில்லை. நீல் எனும் பிஷப் (Bishop Neil) பொதுமக்கள் சபையைக் கண்டித்துப் பேசினார். அதை எதிர்த்துப் பொதுமக்கள் சபையினர் பேசினர். வெறும் வாதத்திலேயே காலம் கழிந்தது. பயனில்லாமல் வாதமிட்டபின் இரண்டு மாதங்களில் அதை ஜேம்ஸ் கலைத்தார். 1621ஆம் ஆண்டில் கூட்டப்பட்ட பாராளுமன்றம் அரசர் தனி உரிமைகள் விற்பதைக் கண்டித்தது. 1624-ல் கூடிய பாராளுமன்றம் அதைச் சட்டவிரோதமாக்கியது.

முதலாம் சார்லஸ் பட்டத்துக்கு வந்தபோது அவரை வறுமை வாட்டியது. அதோடு ஸ்பெயினோடு போர் நடத்துவதற்கும் பெரும் பொருள் தேவையாயிருந்தது. ஆனால், அரசரது அமைச்சரான பக்கிங்ஹாம் பிரபு மீது பாராளுமன்றத்துக்கு இருந்த அவநம்பிக்கையின் காரணமாக, அது போதிய மானியத்தை அரசருக்கு அளிக்கவில்லை. டன்னேஜ், பவுண்டேஜ் என்ற வரிகளை வசூலிக்கும் உரிமையையும் அது ஓராண்டுக்கு மட்டுமே மன்னருக்கு வழங்கியது. ஃபிரெஞ்சு கத்தோலிக்க இளவரசியை மன்னர் மணந்ததைக் குறைகூறிய பாராளுமன்றம் அது பற்றிய முழு விபரங்கள் தெரியுமுன் மேற்கொண்டு மானியம் தர மறுத்தது. திருமண உடன்பாட்டில், கத்தோலிக்கர்களுக்குச் சலுகைகள் தரப்பட்டதும், ஃபிரெஞ்சு பிராட்டஸ்டென்டுகளுக்கு எதிராக மன்னர் கடற்படை ஒன்றை அனுப்ப ஒப்புக்கொண்டதும் உண்மையா என அவர்கள் தெரிந்துகொள்ள விரும்பினர். பக்கிங்ஹாம் தலைமை இருக்கும்வரை மேற்கொண்டு மானியம் தரப் பாராளுமன்றம் மறுத்தது. தனது நண்பரைக் குறைகூறிய பாராளுமன்றத்தை அவர் கலைத்தார் (1625, ஆகஸ்ட் மாதம்).

### (ஆ) கட்டாயக் கடன் (Forced Loan)

ஆனால், பணவறட்சியின் காரணமாக 1626ஆம் ஆண்டு பிப்ரவரியில் மீண்டும் சார்லஸ் பாராளுமன்றத்தைக் கூட்டினார். அப் பாராளுமன்றம் அரசரது தவறுகளுக்கெல்லாம் காரணம் பக்கிங்ஹாம் பிரபுவே எனக்கூறி அவர்மீது அரச துரோகக் குற்றம் சாட்டியது. எனவே, சார்லஸ் அதையும் கலைத்தார். அதன் பின் அவர் கட்டாயக் கடன்களை (Forced Loans) வசூலித்தார். அதைக் கொடுக்க மறுத்த பலர் சிறையிடப்பட்டனர். அப்படிச் சிறையிடப்பட்ட ஐந்து நைட்டுகள் உடல் உரிமைக் கட்டளையின் துணை கொண்டு விடுதலை கேட்டனர். நீதிபதிகள் அதை மறுத்தனர். இறுதியில் அவர்கள் விடுதலை செய்யப்பட்டனர்.

### (இ) டன்னேஜ், பவுண்டேஜ் (Tonnage and Poundage)

சார்லஸின் மூன்றும் பாராளுமன்றமும் (1629) அரசரது பண வறட்சியைப் பயன்படுத்திக்கொண்டு தனது உரிமைகளை வற்புறுத்தியது. பாராளுமன்றத்தின் அனுமதியின்றி வரிவிதிக்கும் உரிமை மன்னருக்கில்லை என்ற தீர்மானத்தை அது நிறைவேற்றியது. உரிமைகள் விண்ணப்பமும் (Petition of Rights) மன்னர் பாராளுமன்றச் சட்டத்தின் சம்மதமின்றி கடனையோ, நன்கொடையையோ, வரிப்பணத்தையோ மக்களிடமிருந்து கட்டாயப்படுத்தி வாங்கக் கூடாது எனத் திட்டவட்டமாய் அறிவித்தது. எனினும், பணமுடை காரணமாக மன்னர் தொடர்ந்து

டன்னேஜ், பவுண்டேஜ் வரிகளை வசூலித்துவந்தார். அதைக் கண்டித்து ஓர் கண்டனத் தீர்மானத்தைப் (Remonstrance) பாராளுமன்றம் நிறைவேற்றியது. கலைந்து போகும்படி மன்னர் ஆணையிட்டபோது, கதவுகளை மூடிக்கொண்டே தனது அனுமதியின்றி டன்னேஜ், பவுண்டேஜ் வரிகளை மன்னர் வசூலிப்பதும், அதை மக்கள் தருவதும் சட்டவிரோதம் என்ற தீர்மானத்தை நிறைவேற்றிவிட்டே பாராளுமன்றம் கலைந்தது.

சார்லஸ் தனது சிறப்புரிமையைக் காப்பாற்றிக்கொள்ளும் திறமையும் செல்வாக்கும் அற்றவராக விளங்கினார். அவற்றை ஒப்புக்கொள்ளும்படி பாராளுமன்றத்தைத் தூண்டிவிடக்கூடிய இராஜதந்திரமும் அவருக்கில்லை. எனவேதான் உள்நாட்டுப் போர் தவிர்க்க முடியாததொன்றாகிவிட்டது.

## 4. தன்னுரிமைபற்றிய சிக்கல்கள்
## (Problems of Personal Liberty)

### (அ) சொத்துரிமை (Right to Property)

குடிமகன் ஒருவன் சுயேச்சையாக வாழவேண்டுமானால், அவனது சொத்துரிமை நன்கு காக்கப்படவேண்டும். சொத்துரிமையின் விளைவாகவே மக்களின் சுதந்திரம் நிலைபெறக்கூடும். ஸ்டுவர்ட்டுகளின் வல்லரசு கொள்கை வெற்றி பெற்றிருக்குமேயானால், மக்களின் சொத்துரிமை பறிபோயிருக்கும். அரசர்கள் விருப்பம்போல் குடிமக்களின் உடைமைகளைச் சூறையாடுதற்கான உரிமையானது ஏற்பட்டிருக்கும். மன்னரது வரிவிதிக்கும் அதிகாரத்தைக் கட்டுப்படுத்தியதன் மூலம் பாராளுமன்றமானது மக்களின் சொத்துரிமையில் மன்னர்கள் தலையிடுவதைத் தடுத்தது. அதன் மூலம் அவர்களின் சுதந்திர வளர்ச்சிக்கான ஒரு சூழ்நிலையை அது ஏற்படுத்திக் கொடுத்தது.

### (ஆ) தன்னுரிமைகள் (Personal Liberties)

சொத்துரிமையைவிட மக்களுக்குப் பெரிதும் இன்றியமையாதது மக்கள் தனிப்பட்ட முறையில் நுகரும் பல தன்னுரிமைகள் ஆகும். தான் விரும்பிய வினையினைச் செய்யவும், விருப்பப்படி எண்ணவும், பேசவும், போக விரும்புமிடத்துக்குப் போகவும் ஒருவனுக்குச் சுதந்திரம் வேண்டும். அதில் அரசாங்கம் தலையிடலாகாது. அத்தகைய சுதந்திரமே தன்னுரிமை எனப்படும். தன்னுரிமை வளரவேண்டுமானால் சட்டமன்றங்களும், நிர்வாக நிறுவனங்களும், நீதி நிறுவனங்களும் தனி மனிதர்களின் வாழ்க்கையில் அனுவசியமாகத் தலையிடாமல் அன்னாரின் உரிமைகளைப்

பேணும் வகையில் செயல்படவேண்டும். அந் நிறுவனங்களிடையே சரியான தொடர்பு அமையப் பெறவேண்டும். கூடியவரை அவை சுயேச்சையாகத் தொழில்பட வேண்டும். அத்தகைய ஓர் தொடர்பை ஏற்படுத்தவே ஸ்டூவர்ட்டுகள் காலப் பாராளுமன்றம் முயற்சி செய்தது.

ஸ்டூவர்ட்டுகள் காலத்தே நிர்வாகத்துக்கும் நீதித் துறைக்கும் அவ்வளவாக வேறுபாடு காணப்படவில்லை. நிர்வாகத்தில் ஈடுபட்ட பிரிவி கவுன்ஸிலர்கள் பலர் நட்சத்திர நீதிமன்றத்திலும் இடம் பெற்றிருந்தனர். நிர்வாகத்தினரின் கைப் பாவையாக விளங்கிய தனிப்பட்ட நீதிமன்றங்கள் பல அவர்கள் காலத்தே இயங்கிவந்தன. அவைகள் தனிப்பட்ட சட்டங்களைப் பின்பற்றி தனிப்பட்ட முறையில் தீர்ப்புகளை வழங்கிவந்தன. அவற்றால் கடைப்பிடிக்கப்பட்ட ஆட்சித்துறைச் சட்டத்துக்கும் (Administrative Law) நாட்டில் தொன்றுதொட்டு வரும் பொதுமைச் சட்டத்துக்கும் (Common Law) இயல்பாகவே மோதல்கள் ஏற்பட்டன. நிர்வாகத்தினர் கையாண்ட ஆட்சித்துறைச் சட்டம் நீதி நிறுவனத்தினர் கடைப்பிடித்த சாதாரணச் சட்டம் ஆகிய இரண்டில் எதனுடைய ஆதிக்கம் நாட்டுக்குத் தேவை என்ற வினா கிளம்பியது. மன்னர், அவரின் ஆதிக்கத்துக்குட்பட்ட நீதிமன்றங்கள் ஆகியவைகளால் கையாளப்பெற்ற சட்டங்களே உயர்ந்தவை என்று பேக்கன் போன்ற அறிஞர்களும், சாதாரண நீதிமன்றங்களில் வழங்கிவரும் பொதுமைச் சட்டங்களே நாட்டில் தலைமை வாய்ந்தவை என கோக் (Coke), வென்ட்வொர்த் (Wentworth) போன்ற அறிஞர்களும் வாதித்தனர். இறுதியில் பொதுமைச் சட்டத்தின் இறைமையே (Rule of Law) வென்றது.

முதலாம் ஜேம்ஸ் காலத்தில் இங்கிலாந்தின் பொது வழக்கு நீதிமன்றத்தின் (Court of Common Pleas) தலைமை நீதிபதியாக விளங்கியவர் கோக் எனும் அறிஞராவார். அவர் நுண்மாண் நுழைபுல அறிவும், ஆழ்ந்த படிப்பும், உயர்ந்த ஊக்கமும், உழைப்புத் திறனும் ஒருங்கே பெற்றவராயிருந்தார். அதே சமயத்தில் ஓரளவு முரட்டுச் சுபாவமும், எதையும் எதிர்த்துப் போராடும் குணமும் அவர்பால் இயல்பாகவே குடிகொண்டிருந்தன. எனவே, அவர் நாட்டில் தொன்றுதொட்டு நிலவிவரும் பொதுமைச் சட்டத்தின் காவலனாக நின்று, அதற்கு எதிராக இருந்த சமய நீதிமன்றங்கள், சான்சரி நீதிமன்றம், நிர்வாக நீதிமன்றங்கள், அரசரின் தனிச் சிறப்பதிகாரம் ஆகியவைகளை வன்மையாகத் தாக்குவதிலேயே தம் வாழ்நாள் முழுதும் மும்மரமாக ஈடுபட்டிருந்தார். எலிஸபெத் இராணியார் காலத்தில் அரசியின் சிறப்பதிகாரங்களை ஆதரித்துவந்த அவர் ஜேம்ஸ் காலத்தில் முற்றிலும் அதற்கு

எதிரியாக மாறிவிட்டார். அவரது கொள்கையை எதிர்த்தவர்களுள் தலை சிறந்தவர் பேக்கன் எனும் அறிஞராவார். தொழில் துறையிலும் அவர்கள் ஒருவருக்கொருவர் எதிரிகளாக விளங்கினர். இங்ஙனம் அவர்களிருவரும் தனிப்பட்ட வாழ்க்கை, பொது வாழ்க்கை இரண்டிலும் விரோதிகளாகவே வாழ்ந்தனர்.

(இ) தடை அறிவிப்புகள் (Prohibitions)

முதன் முதலாக ஆர்ச் பிஷப் பேன்கிராஃப்ட் (Archbishop Bancraft) என்பாருக்கும், கோக்குக்கும் மோதல் ஏற்பட்டது. எந்தெந்த வழக்குகளைச் சமய நீதிமன்றங்கள் விசாரணைக்கு எடுத்துக்கொள்ளக் கூடாது என்பதுபற்றி அவைகளுக்குப் பொதுமைச் சட்ட நீதிமன்றங்கள் அவ்வப்போது, அரசரது பெயரால் தடை அறிவிப்புகளை (Prohibitions) அனுப்புவது வழக்கம். கோக் தலைமை நீதிபதியானபின் இத்தகைய அறிவிப்புகளின் எண்ணிக்கை அளவுக்குமீறி அதிகமாயிற்று. எனவே, ஆர்ச்பிஷப் பேன்கிராஃப்ட் அரசரிடம் இதுபற்றி முறையிட்டார். தடை அறிவிப்புகளை வெளியிடும் உரிமை சான்சரி நீதிமன்றத்துக்கே தரப்பட வேண்டும் என அவர் கேட்டுக்கொண்டார். இருவகை நீதிமன்றங்களின் அதிகார வரம்பை யார் நிர்ணயிப்பது என்ற கேள்வி எழுந்தது. அதைச் சோதிப்பதைப்போன்று இச்சமயம் ஒரு வழக்கு எழுந்தது. ஃபுல்லர் (Fuller) எனும் வழக்குரைஞர், தன் கட்சிக்காரர் ஒருவருக்காகச் சமய உயர்ஆணை நீதிமன்றத்தின் (High Commission Court) முன் வாதாடும்போது அதன் அதிகார வரம்பைப்பற்றித் தாக்கிப்பேசி அந் நீதிமன்றத்தை அவமதித்ததாகக் கூறி, அம் மன்றம் அவர்மீது அபராதம் விதித்து அவரைச் சிறையில் அடைத்தது. பொதுமைச் சட்ட நீதிபதிகள், அத்தகைய வழக்கில் தீர்ப்புக் கூறும் அதிகாரம் தங்களுக்கே உரியதென வாதித்தனர். பேன்கிராஃப்ட் இதுபற்றி அரசரிடம் முறையிட்டுக் கொண்டார். அரசர் பொதுமைச் சட்ட நீதிபதிகளை அழைத்து, நீதிமன்றங்கள் யாவும் அரசரிடமிருந்தே தத்தம் அதிகாரங்களைப் பெறுகின்றன என்றும், எந்தெந்த வழக்குகள் எந்தெந்த நீதிமன்றங்களில் விசாரிக்கப்படத் தக்கவை என்பதை நிர்ணயிக்கும் மேலான அதிகாரம் தனக்கே உரியதென்றும் எடுத்துக் கூறினர். அத்தகைய தகுதி சட்ட நுணுக்கங்களில் பயிற்சி பெறாத மன்னருக்குக் கிடையாது என நீதிபதி கோக் விளக்கினர். மன்னருக்கும் தலைமை நீதிபதிக்கும் சச்சரவு முற்றிற்று. அரசர் சட்டத்துக்கு உட்பட்டவரா அல்லது அதற்கு மேம்பட்டவரா என்ற கேள்வி எழுந்தது. குடிமக்களின் உரிமைகள் அரசருடைய அருளால் பிறந்தவைகளா, அன்றி மன்னராலும் மாற்ற முடியாத சட்டங்களின் அடிப்படையில் ஏற்பட்டவையா என்ற வினா தோன்றியது.

1688 ஆம் ஆண்டு வரை இவ் வினாவுக்கு ஏற்ற பதில் கிடைக்கவே இல்லை. சார்லஸ் பிடிவாதமாகத் தனது தனியுரிமையை வற்புறுத்தினார். தன்னை ஆதரித்த சமய நீதிமன்றங்களை அவர் ஆதரித்து, ஃபுல்லர் தண்டிக்கப்பட்டது சரியே என்று அறிவித்தார். இத்தகைய பிடிவாதமே இறுதியில் அவரது உயிருக்கே உலை வைத்தது.

(ஈ) தனியாணைப் பேரறிவிப்புகள் (Proclamations)

மன்னர் தனியாணைப் பேரறிவிப்புகளை வெளியிடும் உரிமை பெற்றவரா இல்லையா என்பதுபற்றி ஜேம்சுக்கும் நீதிமன்றங்களுக்கும் பலத்ததொரு சச்சரவு ஏற்பட்டது. நாட்டில் சட்டங்களை ஆக்கும் உரிமை பாராளுமன்றத்துக்கே உரியது எனும் கொள்கை இங்கிலாந்தில் பதின்ஞன்கு, பதினைந்தாம் நூற்றுண்டுகளில் நன்கு ஒப்புக்கொள்ளப்பட்டுவிட்டது. எனினும், அவ்வப்போது அவசரத் தேவைகளை முன்னிட்டு அவசரச் சட்டங்களை (Ordinances) ஆக்கும் உரிமையும் மன்னர்களுக்கு இருந்துவந்தது. இவ்வுரிமையை டியூடர்கள் பெருவாரியாகப் பயன்படுத்தினர். 1539 ஆம் ஆண்டில் தனியாணைப் பேரறிவிப்புகள் மூலம் (Proclamations) சட்டம் செய்யும் உரிமையை எட்டாம் ஹென்றிக்குப் பாராளுமன்றம் அளித்தது அதே சமயத்தில் மக்களுடைய சொத்து, சுதந்திரம், பதவி, உயிர் ஆகியவற்றைப் பாதிக்கின்ற வகையில் அரசர்கள் ஆணைகளை வெளியிடக் கூடாது என்றும் அச் சட்டம் கூறியது. ஆறும் எட்வர்ட், மேரி ஆகியோர் காலத்தில் அச் சட்டம் ரத்து செய்யப்பட்டது. தனியாணைப் பேரறிவிப்புகள் மூலம், புதிய சட்டங்களை ஆக்கக்கூடாது என்றும், ஏற்கெனவே இருக்கின்ற சட்டங்களை உறுதிப்படுத்தவும் அங்கீகரிக்கவுமே அவை பயன்படுத்தப்படவேண்டும் எனவும் பாராளுமன்றம் அறிவித்துவிட்டது. எலிஸபெத் இராணியார் தனியாணைப் பேரறிவிப்புகள் மூலம் சமயத் துறையில் மக்கள் சட்டங்களுக்குப் பணிந்து நடக்குமாறு செய்தாரே அன்றிப் புதிய சட்டங்களை உண்டாக்கவில்லை. ஆனால், ஜேம்சோவெனின், அத்தகைய அறிவிப்புகளைக் கொண்டு புதிய சட்டங்களையும் குற்றங்களையும் ஏற்படுத்தினார். சட்டப் பாதுகாப்பற்றவர்கள் (outlaws) பாராளுமன்றத்தில் நுழைவதைத் தடுக்கவும், நசித்துப்போன நகரங்களிலிருந்து பாராளுமன்றத்துக்குப் பிரதிநிதிகள் புதிய சுங்கவரிகளை விதிக்கவும், லண்டன் நகரத்தில் கட்டடம் கட்டுவதைத் தடுக்கவும் இன்னும் இப்படிப் பல்வேறு காரியங்களுக்காகவும் பேரறிவிப்புகளைப் பயன்படுத்தினார். இதனால் துணுக்குற்ற பாராளுமன்றம் 1610 ஆம் ஆண்டில் மன்னரது செய்கையைத் தாழ்மையுடன் கண்டித்தது. ஏற்கெனவே இருக்கின்ற சட்டங்களை யாராவது மீறினார் என்று நிருபிக்கப்

பட்டாலொழிய அவர்கள்மீது அபராதம் விதிக்கவோ தண்டனை விடவோ, மன்னர் தனியாணைப் பேரறிவிப்புகளை வெளியிடுதல் முறையல்ல என்று அது மன்னருக்கு எடுத்துக்காட்டியது. ஒரு சில பேரறிவிப்புகளின் சட்ட நீர்மை குறித்துக் கருத்துத் தெரிவிக்கும்படி பாராளுமன்றம் கோக் என்பாரைக் கேட்டுக் கொண்டது. மற்ற நீதிபதிகளைக் கலந்தாலோசித்த பின் பிரிவி கவுன்ஸில் முன் அவர் கூறிய கருத்து வருமாறு: 'தனியாணைப் பேரறிவிப்புகள் மூலம் மன்னர், முன்பே வழக்காற்றிலில்லாத புதிய குற்றங்களை உண்டாக்க முடியாது. ஏனெனில், அப்படிச் செய்வதால் நாட்டின் சட்டங்களை அவர் மாற்ற முடியும் என்ற நிலை ஏற்பட்டுவிடும்......நாட்டின் சட்டங்கள் அனுமதிக்குமளவுக்கும் மேலாக மன்னனுக்குத் தனிச் சிறப்பதிகாரம் கிடையாது. ஆனால், தனது குடிமக்களைச் சட்டங்களுக்குக் கீழ்ப்படியும்படி வற்புறுத்தவும், அவற்றை மீருதவாறு தடுக்கவும், மீறியவர்களைத் தண்டிக்கவும் பேரறிவிப்புகளை அவர் வெளியிடலாம்.'

இந்தக் கருத்தை யாவரும் ஒப்புக்கொண்டனர். எனினும், மன்னர்கள் தொடர்ந்து அத்தகைய சிறப்பதிகாரத்தைக் கையாண்டு வந்தனர். தனிப்பட்ட நீதிமன்றங்களை நீடித்த பாராளுமன்றம் ஒழித்த பின்னரே இவ் வழக்கம் மாய்ந்தது. அதன் பின்னரும் குறிப்பிட்ட சட்டங்களை ஒருசில நபர்கள்பால் செல்லாதவாறு விலக்கி வைக்கும் சட்ட விலக்கதிகாரத்தையும் (Dispensing Power) குறிப்பிட்ட சட்டமொன்றைக் குறிப்பிட்ட காலத்துக்கோ, நிரந்தரமாகவோ நிறுத்திவைக்கின்ற சட்ட நிறுத்ததிகாரத்தையும் (Suspending Power) பின்னைய ஸ்டூவர்ட் மன்னர்கள் கையாண்டனர். 1688ஆம் ஆண்டுப் புரட்சிக்குப் பின்னரே அவ் வழக்கங்கள் நின்று, சட்டமாக்கும் தனியுரிமையைப் பாராளுமன்றம் பெற்றது.

(உ) பீச்சாம் வழக்கு (Peacham's Case)

அரசர் நீதிபதிகளிடம் பேசி அவர்களை மாற்ற முயற்சிப்பது நியாயமா என்ற கேள்வியானது பீச்சாம் வழக்கில் எழுந்தது. அவதூறு செய்த குற்றத்துக்காகவும், ராஜதுரோகக் குற்றத்துக்காகவும் மரண தண்டனை அவர்மீது விதிக்கப்பெறுமுன், பொதுமைச் சட்ட நீதிபதிகளின் ஒப்புதலைப் பெற பேக்கன் விரும்பினர். கோக் என்பார் அவரது எதிரியாதலால், தனித்தனியே நீதிபதிகளை மன்னர் சந்தித்துப் பேசிப் பெரும்பான்மையான நீதிபதிகளின் இசைவினைப் பெறுவதே முடியக் கூடிய காரியம் என பேக்கன் எண்ணினர். அதன்படியே மன்னரும் பேக்கனும் தனித்தனியே நீதிபதிகளைக் கலந்தாலோசித்து அவர்களது சம்மதத்தைப் பெற்றனர். நீதிபதிகளைக் கூட்டாகக் கலந்தாலோசிப்பதே முறை

என்றும், தனித்தனியே சந்தித்துப் பேசுவது சட்ட விரோத மெனவும் கோக் கண்டித்தார்.

(ஊ) பிரௌன்லோ, மிச்சல் வழக்கு (Brownlow v. Michell)

அரசரின் சிறப்பதிகாரங்களை ஆதரித்துப் பேணி வந்த சான்சரி நீதிமன்றத்துக்கும், குடிமக்களின் உரிமைகளைப் பேணி வளர்த்த பொதுமைச் சட்ட நீதிமன்றங்களுக்கும் ஏற்பட்ட சச்சரவானது பிரௌன்லோ, மிச்சல் வழக்கில் உச்ச கட்டத்தை அடைந்தது. பொதுமைச் சட்ட நீதிமன்றத்தில் வழக்காடி வெற்றிபெற்ற பின்பும் ஒருவர் அவ் வெற்றியை அனுபவிக்கா வண்ணம் தடுக்கும் உரிமை சான்சரி நீதிமன்றத்துக்கிருந்தது. அவ்வுரிமைப்படி மேற்படி வழக்கில் தனது கருத்தைத் தெரிவிக்கும்வரை, பொதுமைச் சட்ட நீதிமன்றம் மேற்கொண்டு நடவடிக்கை எடுக்கக்கூடாது எனப் பேக்கன் அறிவித்தார். கோக் அதை மறுத்து ஓர் அறிக்கை விடுத்தார். தனக்குச் சாதகமாகப் பேக்கன் பழைய ஏடுகளிலிருந்து ஓர் சட்டத்தை மேற்கோளாகக் காட்டினர் (De Non Procedendo Rege Inconsulto). அதன்படி அரசரது நலன்களை உட்கொண்ட வழக்கு எதுவாயினும், அதை மேற்கொண்டு விசாரிக்குமுன், பொதுமைச் சட்ட நீதிமன்றங்கள் சான்சரி நீதிமன்றத்தைக் கலந்துகொண்டு அதன் அனுமதியைப் பெற்றாக வேண்டும். இந்த வழக்கில் மன்னர் சட்ட அதிகாரிகளின் முடிவைக் கோரினர். அவர்கள் சான்சரி நீதிமன்றத்தின் உரிமையை ஒப்புக் கொண்டனர். பேக்கன் வென்றார்; கோக்கின் கட்சி தோற்றது.

(எ) கம்மெண்டாம்ஸ் வழக்கு (Case of Commendams)

அரசர் சம்பந்தப்பட்ட வழக்கில் நீதிபதிகள் அவரைக் கலந்தாலோசிப்பதே முறை என்ற கருத்தானது கம்மெண்டாம்ஸ் வழக்கில் நன்கு வற்புறுததப்பட்டது. ஒன்றுக்கு மேற்பட்ட வரும்படியைப் பெறும் உரிமையை மன்னர் தனது நண்பரான டாக்டர் ரிச்சர்ட் நீல் (Dr. Richard Neil) எனும் பிஷப்புக்கு வழங்கியது முறையா என்ற கேள்விக்கு விடைகாண எக்ஸெக்கர் நீதிமன்றம் முயன்றது. அச்சமயம் நீதிபதிகள் தன்னைக் கலந்தாலோசிக்க வேண்டும் என மன்னர் வற்புறுத்தினர். நீதிபதி கோக்கைத் தவிர ஏனையோர் அனைவரும் அரசரது கருத்தை ஏற்றனர். கலந்து ஆலோசனை செய்தபின் பிஷப்புக்கு விரோதமாகவே நீதிபதிகள் தீர்ப்புக் கூறினர். எனினும், அரசரின் சிறப்பதிகாரம் நன்கு வலியுறுத்தப்பெற்றது. நீதிபதிகளே அதை ஒப்புக்கொண்டனர். கோக் மட்டும் பிடிவாதமாக மன்னரின் சிறப்பதிகாரத்தை மறுத்தார். சில வாரங்கள் கழிந்து ஜேம்ஸ் நீதிபதிகளை அழைத்து, தனது தெய்வீக உரிமை பற்றி ஒரு சொற்பொழிவு நிகழ்த்தி, அதில்

தலையிடும் உரிமை நீதிமன்றங்களுக்கில்லை என்பதை வற்புறுத்தினர். அதன் பின்னும் கோக் அரசருக்கு அடிபணிய மறுத்ததால், ஜேம்ஸ் அவரைப் பதவியினின்றும் நீக்கினர். எனினும், அவரது செல்வாக்குக் குறையவில்லை. 1617-ல் ஜேம்ஸ் அவருக்குப் பிரிவி கவுன்ஸிலில் இடம் தந்தார். 1621-ல் அவர் பாராளுமன்ற உறுப்பினரானர். அங்குச் சென்றபின் அவர் பாராளுமன்றத்தின் உரிமைகளுக்காகப் போராடலானர். தனியுரிமைகளை மன்னர் விற்பதை அவர் கண்டித்தார். தனியுரிமை ஊழல்களுக்காக சர் ஃபிரான்சிஸ் மிட்ச்சல் என்பாரும், சர் கைல்ஸ் மாம்பிசன் என்பாரும் அரச துரோகக் குற்றம் சாட்டப்பட்டது அவரது முயற்சியாலேதான் எனலாம். கடைசியில் லஞ்ச ஊழலுக்காக பேக்கன் மீதே அரச துரோகக் குற்றம் சாட்டப்பட்டது. அதற்கும் கோக் தான் காரணம். பேக்கன் குற்றத்தை ஒப்புக்கொண்டு தமது சான்சலர் பதவியை இழந்தார். இங்ஙனம் தனது ஜென்ம விரோதியின் மீது கோக் இறுதியில் நன்கு பழிதீர்த்துக்கொண்டார். நீதிமன்றத்தை அரசரின் கைப்பாவையாக ஆக்க முயன்ற பேக்கன் தோற்ருர். நீதிமன்றத்தின் உரிமைக்காகப் போராடிய கோக் வெற்றி பெற்ருர். எனினும், அரசியலமைப்பு பற்றிய சிக்கல்களில் நீதிமன்றமே தீர்ப்புக் கூறவேண்டுமென்று அவர் கூறியது அளவுக்கு மீறிய உரிமை வாதமாகும். சட்டமன்றமே அத்தகைய சிக்கல்களைத் தீர்க்கும் முறைகளை வகுக்கவேண்டுமென்பதே அரசியலறிஞர்களின் துணிபாகும்.

## (ஏ) உரிமைகள் விண்ணப்பம் (Petition of Rights)

பேக்கன் இறந்த பின்னும், மக்களின் தன்னுரிமைகளுக்காக கோக் ஓயாது போராடி வந்தார். 1628ஆம் ஆண்டில் கட்டாயக் கடனைக் கொடுக்க மறுத்த ஐந்து நைட்டுகளைச் சிறை செய்தது தவறு என்று அவர் எடுத்துக்கூறினர். மன்னரது ஆணையின்பேரில் அவர்கள் கைது செய்யப்பட்டது நியாயமே எனினும், கைது செய்ததற்கான காரணத்தை அரசர் காட்டாதது தவறு என்பதை நீதிபதிகளே எடுத்துக் காட்டினர். கோக்கும் ஏனைய பாராளுமன்ற உறுப்பினர்களும் சேர்ந்துதான் உரிமைகள் சாசனத்தைத் (Petition of Rights) தயார் செய்து, அதற்கு மன்னரின் ஒப்பத்தையும் பெற்றனர். காரணமின்றி யாரையும் மன்னன் சிறை செய்வதையும், பாராளுமன்ற இசைவின்றி வரி விதிப்பதையும், தனிப்பட்டோர் வீடுகளில் படை வீரர்களை வைத்துப் பராமரிக்கச் செய்வதையும், இராணுவச் சட்டத்தை அமைதிக் காலத்தில் அமல் நடத்துவதையும் கண்டித்ததன்மூலம் உரிமைகள் விண்ணப்பமானது மக்களின் தன்னுரிமைகளைப் பெரிதும் காப்பாற்றியது என்பதில் ஐயமில்லை. ஆனல், அரசனல் முறையின்றிச் சிறையிடப்

பட்ட ஒருவர் விடுதலை பெறுவண்ணம் தடுக்கப் பல மறைமுக வழிகள் இருந்துவந்தன. அவற்றை எல்லாம் போக்கவே உடலுரிமைச் சட்டச் சீர்திருத்தமானது 1679-ல் இரண்டாம் சார்லஸ் காலத்தில் ஏற்பட்டது. ஒருவர் சிறை செய்யப்பட்ட இருபது நாள்களுக்குள் விசாரணை நடைபெறவேண்டுமென்றும், உடலுரிமைக் கட்டளையானது வெளியிடப்பட்ட இடம் சிறைச்சாலைக்கு இருபது மைல் தொலைவுக்குள் இருந்தால் மூன்றே நாட்களில் அவர் விசாரிக்கப்பட வேண்டுமென்றும், இடையில் சிறையிடப்பட்டவர் ஜாமீனில் விடுதலை பெறலாமென்றும், விடுதலையளிக்கும் கட்டளையை விடுமுறைக் காலத்தும்கூட ஒரு தனி நீதிபதி வெளியிடலாமென்றும் அச் சட்டம் கூறியது. இங்ஙனம் காப்பாற்றப்பட்ட மக்களின் உரிமைகளை, விரும்பினால், அரசரும் நிர்வாகமும் பறித்துக் கொள்ளக்கூடிய அபாயம் முற்றிலும் தவிர்ந்தபாடில்லை. இறுதியாக 1701ஆம் ஆண்டில் ஏற்பட்ட அரசுரிமை நிர்ணயச் சட்டத்தால்தான் (Act of Settlement) நீதிபதிகளின் சுதந்திரம் நிலைநாட்டப்பட்டது. பாராளுமன்றத்தின் இரு சபைகளும் வேண்டிக்கொண்டாலன்றி, நீதிபதிகளைப் பதவியினின்றும் மன்னர் நீக்கலாகாது என அச் சட்டம் கூறியது. நீதிபதிகளை அச்சுறுத்தி மக்களின் உரிமைகளை மன்னர்கள் பறிக்க இயலாத சூழ்நிலையை அச் சட்டம் தோற்றுவித்தது. இதன் பின்னரும்கூடப் பொது வாரன்டுகளைப் (General Warrants) பிறப்பிப்பதன் மூலம் தனி நபர்களை நிர்வாகத்தார் சிறை செய்யும் அதிகாரம் தொடர்ந்து நடைமுறையிலிருந்துவந்தது. 1763ஆம் ஆண்டில் நடைபெற்ற வில்க்ஸ் வழக்கில்தான் (Wilks Case) இந்தச் சிறப்பதிகாரம் நிர்வாகத்தினரிடமிருந்து முற்றிலும் நீக்கப்பட்டது. அப்போதிருந்து நிர்வாக நிறுவனத்தின் தலையீடு எதுவுமின்றி நீதி நிறுவனம் இங்கிலாந்தில் இயங்கிவருகிறது. சட்டத்தின் இறைமை (Rule of Law) நன்கு நிலைபெற்றுள்ளது. மக்களின் தன்னுரிமைகளும் நன்கு பேணப்பட்டு வருகின்றன.

இங்ஙனம் பல்வேறு உரிமைகளுக்காகப் பாராளுமன்றம் முதல் இரண்டு ஸ்டூவர்ட் மன்னர்களோடு போராடியது. மன்னர்கள் விட்டுக் கொடுக்காமல் பிடிவாதமாய்த் தங்களது சிறப்பதிகாரங்களைக் காக்க முயன்றதால் உள்நாட்டுப் போர் ஏற்பட்டது. போரினால் சிக்கல்கள் தீர்ந்துவிடவில்லை. பாராளுமன்றத்தின் ஆதிக்கத்துக்குப் பதிலாகக் கிராம்வெல் என்ற தனி மனிதரின் யதேச்சாதிகாரம் நாட்டில் ஏற்பட்டது. இறுதியில் 1688ஆம் ஆண்டில்தான் பாராளுமன்றம் தனது குறிக்கோளை எய்தியது. அக் குறிக்கோளை எய்துதற்கான போராட்டமானது முன்னைய இரு ஸ்டூவர்ட் மன்னர்கள் காலத்தே உச்ச கட்டத்தை அடைந்ததென்பதில் ஐயமில்லை.

# 10. பொதுநல அரசு (1649-1653)

## (Commonwealth)

எஞ்சிய பாராளுமன்றம் (Rump Parliament, 1649).

பொதுநல அரசு ஏற்பாடு (Establishment of Commonwealth, 1649).

பொதுநல அரசுக்கு ஏற்பட்ட எதிர்ப்புகள்.

அயர்லாந்தில் கலகம், 1649 : ட்ரோகிடா, வெக்ஸ்ஃபோர்டு—வாட்டர்ஃபோர்டு—லிமெரிக்—கில்கெனி கோட்பாடுகள்.

ஸ்காட்லாந்தில் கலகம், 1650—1651 : டன்பார்—வோர்செஸ்டர்.

முதலாம் டச்சுப்போர், 1652—1653 : டெக்ஸல்.

எஞ்சிய பாராளுமன்றத்தின் கலைப்பு, 1653.

பார்போன் பாராளுமன்றம் (Barebone's Parliament, 1653).

துரைத்தன அமைப்புப் பத்திரம் (Instrument of Government, 1653).

### எஞ்சிய பாராளுமன்றம்

(Rump Parliament)

முதலாம் சார்லஸின் தலையைக் கொய்த ‘எஞ்சிய பாராளு மன்றம்’ பழைய நீடித்த பாராளுமன்றத்தின் ஒரு பகுதியேயாகும். அதில் சுமார் 56 சுயேச்சையாளர்களே உறுப்பினராயிருந்தனர். முழுமையான பாராளுமன்றமென்றால் அதில், மன்னர், பிரபுக்கள் சபையினர், பொதுமக்கள் சபையினர் ஆகிய அனைவரும் இடம் பெற்றிருக்க வேண்டும். ஆனால், எஞ்சிய பாராளுமன்றத்தில் மன்னரும் பிரபுக்களும் இல்லை. பொதுமக்கள் சபையினரிலும் ஒரு சிலரே அதில் இடம்பெற்றிருந்தனர். எனவே, பாராளுமன்றம் எனக் கூறிக்கொள்ள அது முற்றிலும் தகுதியற்றதாயிருந்தது. எனினும், அவ்வெஞ்சிய பாராளுமன்றமானது துணிந்து, தானே சட்ட ரீதியான பாராளுமன்றம் எனத் தன்னை அறிவித்துக்கொண்டது. அதோடு தனது அனுமதியின்றித் தன்னைக் கலைக்க யாருக்கும் உரிமையில்லையென்றும் அது ஓர் தீர்மானத்தை நிறைவேற்றியது. அதன்பின் அது இங்கிலாந்தின் அரசியல் அமைப்பை வகுக்க முனைந்தது. நாட்டின் அரசாங்கத்தையும் அதுவே நடத்தியது.

## பொதுநல அரசு ஏற்பாடு
(Commonwealth Settlement)

'அரச பதவியும், பிரபுக்கள் சபையும் பயனற்றவை; ஆனால், அபாயகரமானவை' என்று அறிவிக்கப்பட்டு ஒழிக்கப்பட்டன. அதன்பின் இங்கிலாந்தானது ஒரு 'சுயேச்சையான பொதுநலக் குடியரசு' (Free Commonwealth) என அறிவிக்கப்பட்டது. நாட்டையாள்வதற்கு நாற்பத்தோர் உறுப்பினர்கள் அடங்கிய 'ராஜீய கவுன்ஸில்' (Council of State) ஒன்று ஏற்படுத்தப்பட்டது. எஞ்சிய பாராளுமன்றத்தின் முப்பது உறுப்பினர்கள் கவுன்ஸிலில் இடம் பெற்றனர். எனவே, சட்டசபையும் நிர்வாக சபையும் இணைந்து தம்முள் ஒற்றுமையுடன் செயல்படலாயின. நிர்வாக சபைக்குத் தலைவராகப் பிராட்ஷா (Bradsha) என்பார் நியமிக்கப் பட்டார். பலதிறப்பட்ட நிர்வாகக் காரியங்களைக் கவனித்துக் கொள்ள வெவ்வேறு துறைகளில் திறமை பெற்றவர்கள் அடங்கிய கமிட்டிகள் பல ஏற்படுத்தப்பட்டன.

நாட்டின் நீதிமன்றமான, அரசரது பெஞ்ச் நீதிமன்றம் (King's Bench) சீர்திருத்தி அமைக்கப்பட்டது. அரசரைச் சிரச்சேதம் செய்வதற்கு ஒப்பாமல் தங்கள் பதவிகளை ராஜிநாமாச் செய்த ஆறு நீதிபதிகளுக்குப் பதிலாக வேறு அறுவர் நியமிக்கப்பட்டனர். உயர் நீதிமன்றம் (Highcourt of Justice) ஒன்றும் ஏற்படுத்தப்பட்டது.

இங்ஙனம் ஏற்படுத்தப்பட்ட துரைத்தனத்தில் மிகவும் செல்வாக்குடன் விளங்கியவர்கள் வெகு சிலரே. நிர்வாக சபையின் தலைவரான பிராட்ஷா என்பவரும், சேனாதிபதியான ஃபேர்ஃபாக்ஸ் என்பவரும், லெப்டினன்ட் ஜெனரலான கிராம்வெல்லும், கடற்படைத் தலைவரான 'வேன்' என்பாரும், வெளிநாட்டுச் செயலாளரான மில்டன் எனும் கவிஞரும்தாம் உண்மையில் அரசாங்கத்தை நடத்திவந்தார்கள்.

இங்கிலாந்து கண்ட இந்த முதல் குடியரசு மிகவும் சிறப்பு வாய்ந்தது. ஏனெனில், ஐரோப்பாவில் அப்போது விளங்கிய பல குடியரசுகளும் உண்மையான குடியரசுகளாக இல்லை. இத்தாலியக் குடியரசுகள் ஒரு பேரரசரைத் தங்களது தலைவராக ஏற்றுக் கொண்டன. நெதர்லாந்துக் குடியரசும் ஒரு மன்னரைத் தனது தலைவராகக் கொண்டிருந்தது. ஆனால், இங்கிலாந்தில் மட்டுமே அரசனும் பிரபுக்கள் சபையும் இல்லாத ஒரு குடியரசு ஏற்படுத்தப் பட்டது. ஆனால், இக் குடியரசை இங்கிலாந்தின் பெரும்பான்மையான மக்கள் ஆதரிக்கவில்லை. தொன்றுதொட்டு வந்த கோனாட்சியே அவர்களுக்குப் பெரிதும் பிடித்திருந்தது.

## பொதுநல அரசுக்கு ஏற்பட்ட எதிர்ப்புகள்

பொதுநலத் துரைத்தனமானது நாற்புறமும் எதிர்ப்புகளால் சூழப்பட்டுத் துன்புறுத்தப்பட்டது. ருஷ்யா இங்கிலாந்தோடு தான் கொண்டிருந்த தொடர்புகளைக் கத்தரித்துக்கொண்டது. மாட்ரிட் நகரிலும், ஹேக் நகரிலும், இங்கிலாந்தின் தூதர்கள் கொல்லப்பட்டனர். வர்ஜீனியா, பார்படாஸ் போன்ற குடியேற்ற நாடுகள் பாராளுமன்றத்தின் அதிகாரத்தை ரத்துச் செய்தன. ஸ்காட்லாந்தியர் இரண்டாம் சார்லஸை ஆதரித்துப் படை திரட்டினர். அயர்லாந்தில் அரசரை ஆதரித்த ஆர்மாண்ட் பிரபு மீண்டும் அங்குப் போர் தொடங்கினர். இங்கிலாந்திலும் அரசர் கண்ணியமான முறையில் தமது மரண தண்டனையை வரவேற்றதைக் கண்ட பலர் இராஜ விசுவாசிகளாக மாறினர். அவர்கள் அரசர் கொல்லப்படுவதற்குக் காரணமாயிருந்த எஞ்சிய பாராளுமன்றத்தை வெறுத்தனர். மேலும், அரசர் சிறையிலிருக்கும்போது எழுதியதாகக் கருதப்பட்ட 'மன்னரின் பிரதிமை' (King's Image or Eikon Basilica) என்ற நூல் ஒன்றும் அப்போது வெளியிடப்பட்டது. அந் நூல் மக்களிடை மேலும் இராஜபக்தியைத் தூண்டிவிட்டது. அதில் அரசரது உயர்ந்த குறிக்கோள்களும், கருணை உள்ளமும், மிக உருக்கமாக வருணிக்கப்பட்டிருந்தன. அதை எழுதியவர் உண்மையில் காடன் (Gaden) என்ற ஆங்கிலிக்க மதகுரு ஆவர். எனினும், அப்போதைக்கு அந் நூல் மன்னராலேயே எழுதப்பட்டது என யாவராலும் மதிக்கப்பட்டது. அதனால் மன்னரை விசுவாசிப்போரின் எண்ணிக்கை பெரிதும் வளர்ந்தது. மில்டன் என்பார் குடியரசுக்குச் சாதகமாகவும் மேற்சொன்ன நூலுக்கு எதிராகவும் எவ்வளவோ எழுதிப் பார்த்தும் பயனில்லை.

அன்றியும் சேனையிலேயே பாராளுமன்றத்திற்குப் பல பகைவர்கள் தோன்றினர்கள். ஜான் லில்பர்ன் (John Lilburne) என்பவர் சமநிலைவாதிகள் எனும் கூட்டத்தினருக்குத் தலைவராகத் திகழ்ந்தார். அவர் தற்காலத்துச் சமுதாய உடைமைக் கொள்கைகளைப் போன்ற கருத்துகளைப் போர்வீரர்களிடம் பிரசாரம் செய்தார். எஞ்சிய பாராளுமன்றமானது உடனே கலைக்கப்பட வேண்டுமென அவர் கூறினர். அவர் நீதிமன்றத்தில் விசாரிக்கப்பட்டு இருமுறை குற்றம் சாட்டப்பட்டார். ஆனால், ஜூரிகள் அவர் குற்றமற்றவரெனக் கூறி அவரை விடுதலை செய்தனர். அவர் விடுதலை செய்யப்பட்டபோது போர்வீரர்களும் நகர மக்களும் அடைந்த குதூகலத்துக்கு ஓர் அளவில்லை எனலாம். சேனையில் இந்தச் சமநிலைவாதிகள் தூண்டலால் சில கலகங்கள் தோன்றின. அவற்றை ஃபேர்ஃபாக்ஸும், கிராம்வெல்லும் வெகு பாடுபட்டு அடக்கினர்கள்.

அரசன் சிரச்சேதம் செய்யப்பட்டதைப் பல ஐரோப்பிய நாடுகள் வெறுத்தன. ஃபிரான்ஸும் ஸ்பெயினும் பொதுநலத் துரைத்தனத்தைப் பழிவாங்க எண்ணின. ஆனால், ஃபிரான்ஸில் உள்நாட்டுப் போர் நிகழ்ந்து வந்தமையாலும், ஸ்பெயினது போர்ச்சுகல் நாட்டுக் கலகத்தைச் சமாளிக்கவேண்டி இருந்ததாலும், அவைகள் இங்கிலாந்து விவகாரங்களில் தலையிடக்கூடிய நிலையில் இல்லை. ஹாலந்து தேசத்தில் சார்லஸின் குடும்பம் அடைக்கலம் புகுந்திருந்தது. எனினும், ஹாலந்து அரசர் இங்கிலாந்தின் விவகாரங்களில் தலையிடத் தயாராகவில்லை. ரூபர்ட் இளவரசர் ஒரு கடற்படையுடன் ஆங்கிலக் கால்வாயில் உலவிக்கொண்டிருந்தார். அவர் பொதுநலத் துரைத்தனத்தைக் கவிழ்க்கச் சூழ்ச்சிகள் செய்த வண்ணமிருந்தார். ஸ்காட்லாந்திலும் அயர்லாந்திலும் பாராளுமன்றத்துக்கு விரோதமாகப் பல கலகங்கள் கிளம்பின.

## அயர்லாந்தில் கலகம் (1649)

சார்லஸின் மரணத்துக்குப் பின் அயர்லாந்தில் பெரியதொரு கலகம் கிளம்பியது. அரசரை ஆதரித்த அனைவரும் 'ஆர்மாண்ட்' (Ormonde) எனும் தலைவரின் கீழ் ஒன்று சேர்ந்து கலகம் விளைத்தனர். அவர்களோடு ஓநீல் (O'Neill) என்பாரது தலைமையில் போரிட்டுவந்த கூட்டிணைப்புக் கத்தோலிக்கர்களும் (Confederate Catholics) ஒன்று சேர்ந்தனர். அல்ஸ்டர் மாகாணத்தில் இருந்த ஸ்காட்லாந்தியப் படைகளும் எஞ்சிய பாராளுமன்றத்துக்கு விரோதமாகக் கலகம் செய்தன. அவர்களுக்கு உதவியாக ரூபர்ட் இளவரசர் தமது கடற்படையுடன் அயர்லாந்தின் தென் கரையில் தோன்றினர். இதைக் கண்ட கிராம்வெல் 12,000 போர் வீரர்களைக் கொண்ட ஒரு பெரும் படையுடன் தாமே நேரில் அயர்லாந்துக்குச் சென்றார். 1649ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் அவர் டப்ளின் (Dublin) துறைமுகத்தில் இறங்கினர். தமக்கு உடனே பணிந்துவிடும்படி ட்ரோகிடா (Drogheda), வெக்ஸ்ஃபோர்டு (Wexford) என்ற இடங்களிலிருந்த படை வீரர்களுக்குக் கிராம்வெல் ஆணை விதித்தார். ஆனால், அயர்லாந்துப் படைகள் அவ்வாணையை மதிக்கவில்லை. இதனால் கோபம் அடைந்த கிராம்வெல் அவ்விரு இடங்களையும் தாக்கிக் கோட்டைகளைப் பாதுகாத்துவந்த வீரர்களையும் குருமார்களையும் ஏராளமாக ஈவு இரக்கமின்றிக் கொன்று குவித்தார். தம்மை எதிர்த்த அனைவருக்கும் ஒரு பாடமாக இருக்கும்படியே அவர் அவ்வளவு கடுமையான கொலையில் ஈடுபட்டார். உண்மையில் அது நல்ல பயனைத் தந்தது. விறுவிறுவென்று மற்ற எதிரிகள் அனைவரும் பணிந்தனர். ஆர்மாண்ட் பிரபு ஃபிரான்ஸுக்கு ஓடிப்போனர். அல்ஸ்டர் மாகாணத்துப்

படைகள் கிராம்வெல்லுக்குப் பணிந்தன. ஓநீல் தளகர்த்தரால் காக்கப்பட்டு வந்த க்ளோன்மெல் (Clonmel) என்ற இடத்தையும் கிராம்வெல் கைப்பற்றினர். இங்ஙனம் பாதி அயர்லாந்தை வென்ற பின் மீதியுள்ள அயர்லாந்தைக் கைப்பற்றும்படி அயர்ட்டன் (Ireton), லட்லோ (Ludlow) என்ற இரு தளகர்த்தர்களுக்கும் கட்டளையிட்டுவிட்டுக் கிராம்வெல் இங்கிலாந்து திரும்பினர். அங்ஙனமே அயர்ட்டன்என்பார் வாட்டர்ஃபோர்டு (Waterford), லிமெரிக் (Limerick) என்ற இடங்களைக் கைப்பற்றினர். லட்லோ என்பார் கால்வே (Galway) என்னும் இடத்தைக் கைப்பற்றினர். அதோடு அயர்லாந்தில் போர் ஓய்ந்தது. 1651, 1652 ஆம் ஆண்டு மே திங்கள் 'கில்கெனி கோட்பாடுகள்' (Articles of Kilkenny) என்ற சமாதான ஒப்பந்தம் அயர்லாந்துக்கும் இங்கிலாந்துக்கும் இடையே ஏற்பட்டது. அதன்படி அயர்லாந்துப் பாராளுமன்றம் ஒழிக்கப்பட்டது. இங்கிலாந்தின் பாராளுமன்றமே அயர்லாந்திற்கும் பாராளுமன்றம் ஆயிற்று. இங்கிலாந்துப் பாராளுமன்றத்திற்கு அயர்லாந்தானது முப்பது பிரதிநிதிகளை அனுப்புவது என்றும் ஒப்புக்கொள்ளப்பட்டது. போப்பின் ஆதரவாளர்கள் பெரும் பதவிகளிலிருந்து நீக்கப்பட்டார்கள். பல ரோமன் கத்தோலிக்கர்கள் கன்னட் (Connaught) என்ற வறண்ட பிரதேசத்திற்கு அனுப்பப்பட்டார்கள். அங்கே அவர்கள் சோற்றுக்கு வழியின்றிக் கொள்ளையடிப்பதில் இறங்கினர். அவர்களுக்கு 'டோரிகள்' என்ற பரிகாசப் பெயர் (nick name) ஏற்பட்டது.

தமக்கு உதவி செய்த ஆங்கிலேயப் படைவீரர்களுக்கும் பணக்காரர்களுக்கும் கிராம்வெல் அயர்லாநதின் நிலங்களைத் தாராளமாக வழங்கினர். அயர்லாந்துப் பெருநிலக் கிழார்களின் நிலங்கள் பறிக்கப்பட்டு ஆங்கிலேயக் குடியேறிகளுக்குக் கொடுக்கப்பட்டன. இங்ஙனம் அயர்லாந்தில் ஆங்கிலேயச் சிறு நிலக்கிழார் பலர் குடியேற்றப்பட்டனர். அவர்களுக்கு அடங்கி அயர்லாந்தியக் குடியானவர்கள் பணிபுரிய வேண்டிய நிலைமை ஏற்பட்டது. இந்நிலையை விரும்பாத பல அயர்லாந்தியர், சுமார் 30,000 பேர் வெளிநாடுகளுக்குச் சென்றுவிட்டனர். பலர் 'பார்படாஸ்' (Barbados) தீவுகளுக்கு அனுப்பப்பட்டனர். அயர்லாந்தியரின் எண்ணிக்கை பாதியாகக் குறைந்தது. அயர்ட்டன், அயர்லாந்தின் கவர்னராக நியமிக்கப்பட்டார்.

## ஸ்காட்லாந்தில் கலகம் (1650-1651)

பொதுநலத் துரைத்தனத்தை எதிர்த்து, ஸ்காட்லாந்தில் மான்ட்ரோஸ் (Montrose) பிரபுவின் தலைமையில் ஒரு பெருங் கலகம் தோன்றியது. கலகக்காரர்கள் இளவரசர் சார்லஸை

இங்கிலாந்தின் மன்னராக்குவதற்கு விரும்பினர். இளவரசர் சார்லஸ் ஸ்காட்லாந்தியரின் அழைப்பை ஏற்காது ஒத்திப்போட்டுக் கொண்டே வந்தார். இதற்குள் ஸ்காட்லாந்திய ஒப்பந்தக்காரர்கள் (Convenanters) பாராளுமன்றத்திற்குச் சாதகமாகக் கிளம்பி மான்ட்ரோஸைத் தோற்கடித்துக் கொன்றனர். இதை அறிந்த சார்லஸ் ஒப்பந்தக்காரர்களின் நிபந்தனைகளுக்கு இணங்குவதாக ஒப்புக்கொண்டார். ஆரம்பத்தில் அவர் மான்ட்ரோஸ் பிரபுவின் உதவியால் தமது பதவியைப் பெற்றுவிடலாமென்று நினைத்தார். ஆனால், மான்ட்ரோஸ் மாண்டதால், அவர் தம் மனச்சான்றுக்கு விரோதமாக ஸ்காட்லாந்தியப் பிரஸ்பிடீரியர்களுக்கு ஆதரவு தந்தார். அவர் கத்தோலிக்க மதத்தினராயினும் பிரஸ்பிடீரிய மதத்தை இங்கிலாந்து, ஸ்காட்லாந்து, அயர்லாந்து ஆகிய மூந்நாடுகளிலும் நிலைநாட்டுவதாக ஒப்புக்கொண்டார். 1650 ஆம் ஆண்டு ஜூன் மாதம் அவர் வீத் (Weeth) என்னும் இடத்தில் வந்து இறங்கினர். ஸ்காட்லாந்தியர் அவரைத் தங்களது அரசராக ஏற்றுக்கொண்டு, ஸ்கோன் (Scone) என்னும் இடத்தில் அவருக்கு முடி சூட்டினர்கள் அதன்பின் ஸ்காட்லாந்தியர் இங்கிலாந்தின் மேல் படையெடுக்க ஆயத்தம் செய்தனர். இதை அறிந்த கிராம்வெல் ஸ்காட்லாந்தியரின் திட்டத்தில் மண்ணைப்போட விரும்பினர். ஃபேர்ஃபாக்ஸை ஸ்காட்லாந்தின்மேல் படையெடுக்கும்படி அவர் கேட்டுக்கொண்டார். ஆனல், தம்முடைய இராஜவிசுவாசமுள்ள மனைவியின் தூண்டுதலால், அவர் ஸ்காட்லாந்தின்மேல் படையெடுக்க மறுத்ததோடு, தம் பதவியையும் ராஜிநாமாச் செய்துவிட்டார். எனவே, கிராம்வெல் தாமே ஒரு படையோடு ஸ்காட்லாந்திற்குப் புறப்பட்டுச் சென்றார். எடின்பரோவுக்கு அருகில் ஸ்காட்லாந்தின் படையினர் மிக வலிவுடன் இருப்பதை அறிந்து, கிராம்வெல் கடல் மூலமாக உணவுப் பொருள்களைப் பெற வேண்டி, டன்பர் (Dunbur) துறைமுகத்தை நோக்கிச் சென்றார். அங்கே டேவிட் லெஸ்லி என்பார் தலைமையில் ஸ்காட்லாந்துப் படையானது கிராம்வெல்லின் படைகளை வளைத்துக்கொண்டது. கடலுக்கும் ஸ்காட்லாந்தியப் படைகளுக்கும் இடையில் அகப்பட்டுக்கொண்ட கிராம்வெல்லின் படைகள் போரிடுவதைத் தவிர வேறு வழியில்லை. பின் நடைபெற்ற போரில் கிராம்வெல் 1650 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 3 ஆம் தேதி பெரு வெற்றி அடைந்தார். 3,000 ஸ்காட் வீரர்கள் கொலையுண்டனர்; 10,000 வீரர்கள் சிறைப்பட்டனர். இதன்பின் கிராம்வெல் சார்லஸைத் தேடி வடக்கு நோக்கிப்புறப்பட்டார். இதை அறிந்த சார்லஸ் ஹாமில்டன் பிரபுவின் உதவியுடன் தெற்கு நோக்கி வந்து, இங்கிலாந்தின்மேல் படையெடுத்தார். கிராம்வெல் இதை அறிந்தும் அறியாதவர் போல நடந்துகொண்டார். சார்லஸ் இங்கிலாந்தை அடைந்து

விட்டாரென்று கேள்விப்பட்டவுடன் கிராம்வெல் விரைவாக இங்கிலாந்து நோக்கி ஓடிவந்தார். சார்லஸ், தமக்குச் சாதகமாகப் பல பிரபுக்கள் படையுடன் வந்து உதவுவர் என்று எதிர்பார்த்தார். டெர்பி (Derby) பிரபு ஒருவரைத் தவிர மற்ற எவரும் அரசருக்கு உதவி செய்ய முன்வரவில்லை. டெர்பி பிரபு பாராளுமன்றத்தின் படைகளால் தோற்கடிக்கப்பட்டுக் கொல்லப்பட்டார். அரசரின் படைகளை லாம்பர்ட், ஹாரிசன் என்ற பாராளுமன்றத் தளபதிகள் வழிமறித்துத் தாக்கினர். கிராம்வெல் மின்னல் வேகத்தில் வந்து சார்லஸின் படைகளை ஓர் செஸ்டர் (Worecester) எனும் இடத்தில் 1651 ஆம் ஆண்டு செப்டம்பர் 3ஆம் தேதி வளைத்துப் போரிட்டு முறியடித்தார். ஹாமில்டன் பிரபு இப்போரில் மாண்டார். சார்லஸ் ஃபிரான்ஸுக்குத் தப்பியோடிவிட்டார். அவரைப் பிடித்துத் தருவோருக்கு ஆயிரம் பவுன்கள் வெகுமதியளிப்பதாகக் கிராம்வெல் அறிவித்தார். இங்ஙனம் ஸ்காட்லாந்தியரின் முயற்சி தோல்வியுற்றது. மான்க் (Monk) என்னும் தளபதி பாராளுமன்றத்தின் ஆதிக்கத்தை ஸ்காட்லாந்தின் தெற்கில் நன்கு நிலை நாட்டினர். 1652ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் இங்கிலாந்தும் ஸ்காட்லாந்தும் ஒரே நாடென அறிவிக்கப்பட்டது. முப்பது பிரதிநிதிகளை ஸ்காட்லாந்து இங்கிலாந்தின் பாராளுமன்றத்துக்கு அனுப்பவேண்டுமென ஏற்பட்டது. இங்ஙனம் இரு நாடுகளும் ஐக்கியம் அடைந்தன. இரு நாடுகளிடையே சுயேச்சையான வியாபாரத் தொடர்பு ஏற்படுத்தப்பட்டது. சமயப் பொறை ஸ்காட்லாந்தியருக்கு வழங்கப்பட்டது. பிரஸ்பிடீரிய மதம் ஒன்றே ஸ்காட்லாந்தில் தழைக்கவேண்டுமென விரும்பிய ஒப்பந்தக்காரர்கள் இவ்வேற்பாட்டை வெறுத்தனர். தங்கள் தேசிய சுதந்திரம் பறிபோய்விட்டதாக அவர்கள் கருதினர்.

## முதலாம் டச்சுப் போர் (1652-1653)

டச்சுக்காரர்களுக்கும் ஆங்கிலேயர்களுக்கும் பல நாள்களாகவே பகைமை இருந்துவந்தது. 1623ஆம் ஆண்டு கிழக்கிந்தியத் தீவுகளில் அம்பாய்னு (Amboyna) எனுமிடத்தில் பல ஆங்கிலேயர்களை ஈவு இரக்கமின்றி டச்சுக்காரர்கள் கொலை செய்தனர். அதிலிருந்தே ஆங்கிலேயருக்கும் டச்சுக்காரர்களுக்கும் விரோதம் ஏற்பட்டது. டச்சுக்காரர்கள் கிழக்கிந்தியத் தீவுகளில் தனி வியாபாரம் செய்துவந்ததைக் கண்டு ஆங்கிலேயர் பொறுமையுற்றனர். அதனுல் டச்சுக்கார மீன்பிடிப்போர் இங்கிலாந்தின் கடற்கரையோரமாக வந்தபோதெல்லாம் ஆங்கிலேயர்கள் அவர்களைத் துன்புறுத்தினர். மேலும், ஸ்டூவர்ட்டு மன்னர்களை டச்சுக்காரர்கள் ஆதரித்தனர். பொதுநலத் துரைத்தனத்தின் தூதுவர்

ஒருவர் ஹாலந்து தேசத்தில் கொல்லப்பட்டார். இதனாலெல்லாம் கோபமடைந்த எஞ்சிய பாராளுமன்றமானது 1651 ஆம் ஆண்டு நாவாய்ச் சட்டம் (Navigation Act) ஒன்றை நிறைவேற்றியது. அதன்படி இங்கிலாந்தின் துறைமுகங்களுக்குள் கொண்டுவரப்படும் வியாபாரப் பொருள்கள் இங்கிலாந்தின் கப்பல்களிலேயே வரவேண்டும் என்பது வற்புறுத்தப்பட்டது. அதுவரை டச்சுக்காரர்களின் கப்பல்களே அப் பொருள்களை ஏற்றி வந்துகொண்டிருந்தன. எனவே, அவர்களின் வரும்படி மிகவும் குறைந்தது. டச்சுக்காரர்களுக்கும் ஆங்கிலேயர்களுக்கும் போர் மூண்டது. பிளேக் (Blake) எனும் ஆங்கிலேய கப்பல் தளபதி டச்சுக்காரர்களின் தளபதியான வான் ட்ராம்ப் (Von Tromp) என்பவரை எதிர்த்துச் சில வெற்றிகளைப் பெற்றார். ஆங்கிலக் கால்வாயில் அவரது பலம் ஓங்கியது. எனினும், ட்ராம்ப் என்பார் தேம்ஸ் நதிக்குள் நுழைந்து, பின் திரும்பிவந்து, ஆங்கிலக் கால்வாயில் வெற்றியோடு உலவினார். 1653 ஆம் ஆண்டு, ட்ராம்ப், டெக்ஸல் (Texel) என்னும் இடத்தில் தோற்கடிக்கப்பட்டுக் கொல்லப்பட்டார். 1654 ஆம் ஆண்டு இரு நாடுகளுக்கும் வெஸ்ட்மின்ஸ்டர் உடன்படிக்கையின்படி சமாதானம் ஏற்பட்டது. அம்பாய்னு படுகொலைக்குத் தக்க நஷ்ட ஈடு கொடுப்பதாகவும், நாவாய்ச் சட்டத்தை ஒப்புக்கொள்ளுவதாகவும், ஆங்கில மன்னரை ஆதரித்தவர்களுக்கு உதவி செய்வதில்லை என்றும் டச்சுக்காரர்கள் ஒப்புக்கொண்டனர்.

## எஞ்சிய பாராளுமன்றத்தின் கலைப்பு (1653)

இங்ஙனம் 1653 ஆம் ஆண்டுக்குள் பொதுநலத் துரைத்தனத்தின் எதிரிகள் அனைவரும் அனேகமாக அடக்கப்பட்டுவிட்டனர். அதற்குப்பின் எஞ்சிய பாராளுமன்றத்தின் செல்வாக்கானது கொஞ்சம்கொஞ்சமாகக் குறையத் தொடங்கியது. நெருக்கடிகள் பல தீர்ந்துவிட்டபடியால், பாராளுமன்றம் கலைக்கப்படவேண்டுமெனவும், புதுத் தேர்தல் வைக்கப்படவேண்டுமெனவும் பலர் விரும்பினர். ஆனால், அதிகார ருசி கண்ட எஞ்சிய பாராளுமன்றத்தார்க்குப் பதவியைவிட்டுப் போக மனம் வரவில்லை. மறுபடியும் தேர்தல் வைத்தால் தாங்கள் மீண்டும் பதவிக்கு வர முடியாதென அவர்கள் அஞ்சினர். எனவே, 1653 ஆம் ஆண்டு அவர்கள் தங்கள் பதவிகளைக் காத்துக்கொள்ள ஒரு சட்டம் கொண்டுவந்தனர். புதிய பாராளுமன்றமானது தேர்ந்தெடுக்கப்படவேண்டுமெனவும், அதில் பழைய எஞ்சிய பாராளுமன்றத்தின் உறுப்பினர்கள் அனைவரும் அப்படியே இடம் பெறவேண்டுமெனவும், அதில் புதிதாக இடம் பெறவேண்டியவர்கள் இன்னின்னார் என்பதைத் தீர்மானிக்கும் உரிமை அவ்வெஞ்சிய

பாராளுமன்றத்துக்கே இருக்கவேண்டுமெனவும் அச் சட்டம் கூறியது. இதை அறிந்த கிராம்வெல் பெரிதும் குமுறினர். பாராளுமன்றத்தில் அவர் கோபாவேசத்துடன் ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினர். அதில் அவர் எஞ்சிய பாராளுமன்றத்தின் சேவைகளை முதலில் புகழ்ந்துவிட்டு, பின்னர், தனிநபர்களைக் குறிப்பிட்டு அவர்களைச் சுயநலக்காரர்களென்றும் வஞ்சகர்களென்றும் தாறுமாருகத் திட்டினர். அதன்பின், கலைந்துபோகும்படி பாராளுமன்றத்தை அவர் கேட்டுக்கொண்டார். பாராளுமன்றம் அதற்கு இணங்காததால் போர்வீரர்களின் உதவியைக்கொண்டு அவர் அதைக் கலைத்தார். அங்கிருந்த அரசரின் சின்னமான கதாயுதத்தைப் (Mace) பார்த்து, 'பயனற்ற இக் கதாயுதத்தை நாம் என்ன செய்வது? அதைத் தூக்கி வெளியே கொண்டு செல்லுங்கள்' என்று அவர் இரைந்தார். இத்தகைய முறையில் எஞ்சிய பாராளுமன்றத்திற்குக் கிராம்வெல் முற்றுப்புள்ளி வைத்தார். அதோடு இராஜீய கவுன்ஸிலையும் அவர் கலைத்தார். நாட்டின் தனிப்பெருந் தலைவராய் அவர் திகழ்ந்தார். அவரை எதிர்க்கக்கூடியவர்கள் நாட்டில் ஒருவருமே இல்லாதுபோயினர்.

## பார்போன் பாராளுமன்றம்
## (Barbones Parliament, 1653)

கிராம்வெல் உள்ளத்தால் ஓர் எதேச்சாதிகாரியாயினும், வெளிக்கு அரசியல் அமைப்பை ஒட்டிச் செயலாற்றுபவராகக் காட்டிக்கொள்ள விரும்பினர். எனவே, அவர் மறுபடியும் எழுவர் அடங்கிய நிர்வாக சபையை ஏற்படுத்தினர். ஒவ்வொரு கவுன்டியிலும் இருந்த பியூரிட்டன் தொழுகைக் கூட்டத்தினரைப் பாராளுமன்றத்திற்கு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கும்படி அவர் பணித்தார். அவர்கள் தேர்ந்தெடுத்த நபர்களில் நூற்றிருபத்தொன்பது (129) பேர்களையே கிராம்வெல் ஏற்றுக்கொண்டார். ஸ்காட்லாந்துக்கு ஐந்து உறுப்பினர்களும், அயர்லாந்துக்கு ஆறு உறுப்பினர்களும் இத்தகைய முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இப் பாராளுமன்றத்திற்கு பார்போன் பாராளுமன்றம் (Barbones Parliament) எனப் பெயர். இது பெரும்பாலும் மிதவாதிகளையே உட்கொண்டிருந்தது. அவர்கள் நடைமுறையில் காரியங்களைச் செய்வதில் ஊக்கமற்றவர்களாக இருந்தனர். ஏதேதோ பெரும் பெருந் திட்டங்களைப் போட்டார்களே அன்றி அவற்றையெல்லாம் செயலாக்கும் திறன் அவர்களுக்கு இல்லை. எனவே, அப் பாராளுமன்றமானது தானுகவே கலைந்துவிட்டது. இதன் பின்னர், கிராம்வெல் சேனையின் தலைவர்களைக் கலந்து ஆலோசித்தார். அவர்களின் பிரதிநிதிகள் அடங்கிய சபை ஒன்று துரைத்தன அமைப்புப்

பத்திரம் ((Instrument of Government) என்னும் ஓர் அரசியல் திட்டத்தை வகுத்துக்கொடுத்தது.

## அரசாங்க அமைப்புப் பத்திரம்
## (Instrument of Government)

அரசாங்க அமைப்புப் பத்திரமானது, இங்கிலாந்து, ஸ்காட்லாந்து, அயர்லாந்து ஆகிய மூன்று நாடுகளும் ஒரே காப்பாளர் (Protector) ஆட்சியின் கீழ் வரவேண்டும் எனவும், அக் காப்பாளர் கிராம்வெல்லாக இருக்கவேண்டும் எனவும் குறிப்பிட்டது. அவருக்கு ஆலோசனை கூறவும் நிர்வாகத்தை நடத்தவும், பதினைந்து பேர்களடங்கிய 'இராஜீயக் கவுன்ஸில்' (Council of State) ஒன்று ஏற்படுத்தப்பட வேண்டும் எனவும், சட்டங்களை ஆக்குவதற்கு நானூற்றறுபது பேர்கள் அடங்கிய ஒரு பாராளுமன்றம் மூன்றாண்டுகளுக்கொரு முறை கூட்டப்படவேண்டும் எனவும், குறைந்தது ஐந்து மாதங்களாவது பணியாற்றி முடிவதற்குமுன் அது கலைக்கப்படக்கூடாது எனவும் அப் பத்திரம் கூறியது.

இவ்வரசியலமைப்புப்படி, கவுன்டிகளில் ஆண்டுக்கு 200 பவுன் வரும்படி உள்ளவர்கள் மட்டுமே வாக்குரிமை பெற்றனர். இதனால் பாராளுமன்றத்தின் கவுன்டிகளிலிருந்து வரும் பிரதிநிதிகளின் எண்ணிக்கை உயர்ந்தது. பரோக்களிலிருந்தவர்கள் வழக்கம்போல் வாக்குரிமை பெற்றனர். கவுன்டி பிரதிநிதிகளின் எண்ணிக்கையோடு ஒப்பிடப்படும்போது பரோ பிரதிநிதிகளின் எண்ணிக்கை குறைவாகவே காணப்பட்டது. அரசனை ஆதரித்த பலரும் வாக்குரிமையை இழந்தனர். முதல் நான்கு பாராளுமன்றங்களில் அவர்கள் எக் காரணம் பற்றியும் இடம்பெறலாகாது என்பது வற்புறுத்தப்பட்டது. அயர்லாந்தில் பாராளுமன்றத்துக்கெதிராகக் கலகம் செய்தோருக்கும் ரோமன் கத்தோலிக்கர்களுக்கும் நிரந்தரமாகவே வாக்குரிமையும் சட்டசபையில் உறுப்பினராகுமுரிமையும் மறுக்கப்பட்டன.

இராஜீயக் கவுன்ஸிலில் யார்யார் இருக்கவேண்டுமென்பதை அரசியல் அமைப்பே தீர்மானித்துவிட்டது. கவுன்ஸிலில் பதவி ஏதாகிலும் காலியானுல் அதற்குத் தகுதியானவர்கள் ஆறு பேரின் பெயர்களைப் பாராளுமன்றமானது குறிப்பிடவேண்டும். அவர்களுள் மூன்று பேர்களைக் கவுன்ஸில் தேர்ந்தெடுக்கும். அம் மூவரில் ஒருவரைக் காப்பாளர் தேர்ந்தெடுப்பார்.

30,000 போர்வீரர்களடங்கிய நிலைப்படையையும் ஒரு கடற்படையையும் வைத்துப் பராமரிக்க ஆண்டு ஒன்றுக்கு ஒரு குறிப்

பிட்ட தொகையைப் பாராளுமன்றமானது வழங்க வேண்டும். உள்நாட்டு அரசாட்சியைச் செலுத்த 200,000 பவுன்களை அது காப்பாளருக்கு மானியமாக வழங்க வேண்டும். அரசாங்கத்துக்கு எவ்வளவு பொருள் தேவை என்பதையும், அதைப் பெறுதற்கு எவ்வித வரிகளை விதிக்கவேண்டுமென்பதையும் காப்பாளரும் அவரது கவுன்ஸிலும் தீர்மானிக்கும். அங்ஙனம் தீர்மானிக்கப் பட்ட தொகையைக் குறைக்கப் பாராளுமன்றத்துக்கு அதிகார மில்லை. போர்க்காலத்துச் செலவுகளைச் சமாளிக்கப் பாராளு மன்றமே பொருள் வழங்கும். அது கூடாத காலத்தில் அவசர மாகப் பொருள் வேண்டுமானால், காப்பாளரும் கவுன்ஸிலும் சேர்ந்து பணம் திரட்டலாம். அப்படிப்பட்ட அவசர காலங்களில் (Emergencies) பாராளுமன்றமானது கூடிய விரைவில் கூட்டப்பட வேண்டும்.

சட்டம் செய்யும் உரிமை பாராளுமன்றத்துக்கே உரியது. அதில் நிறைவேறுகிற ஒவ்வொரு மசோதாவும் பாதுகாப்பாளரிடம் சமர்ப்பிக்கப்பட வேண்டும். அவர் அதற்குத் தம் ஒப்பத்தை 20 நாள்களுக்குள் கொடுக்கவில்லை என்றால் அது தானாகவே சட்டமாகிவிடும். சட்டங்கள் யாவும் துரைத்தன அமைப்புப் பத்திரத்துக்கு ஏற்றவையாயிருக்க வேண்டும். பாராளுமன்றத் தின் கூட்டம் நடைபெறாத வேளையில் காப்பாளரும் கவுன்ஸிலும் சேர்ந்து அவசரச் சட்டங்களை இயற்றலாம். அடுத்து வரும் பாராளுமன்றத்தால் ஒப்புக்கொள்ளப்படும் வரையில் அவை அமலிலிருக்கும்.

நிர்வாகத் துறையில் சான்சலரும், இராஜமுத்திரைக் காப் பாளரும் (Keeper of the Great Seal), நிதிக்காப்பாளரும் (Treasurer), கடற்படைத் தலைவரும், அயர்லாந்து-ஸ்காட்லாந்துகளின் கவர்னர்களும் தலைமை நீதிபதிகளும் பாராளுமன்றத்தின் ஒப்பம் பெற்று நியமிக்கப்படவேண்டும். மற்ற அதிகாரிகளை யெல்லாம் காப்பாளரே நியமிக்கலாம். நாட்டின் முக்கியமான அலுவல்களை யெல்லாம் காப்பாளர் இராஜீயக் கவுன்ஸிலைக் கலந்தாலோசித்த பின்னரே செய்ய முற்படவேண்டும். காப்பாளர் இறந்தபின் அவரது வாரிசைக் கவுன்ஸிலே தேர்ந்தெடுக்கவேண்டும்.

கத்தோலிக்கர்களுக்கும், குருமார்களின் ஆட்சியை ஆதரித் தவர்களுக்கும் தவிர, மற்றைய மதப்பிரிவினர் யாவருக்கும் சமயப் பொறை வழங்கப்பட்டது.

இந்த அரசியல் அமைப்பை நிலைபெறச் செய்தல் வேண்டி, தேர்தல் அதிகாரிகள், தேர்வாளர்களிடமிருந்து (Electors) ஓர் உறுதிப் பத்திரத்தை வாங்கவேண்டும் எனச் சொல்லப்பட்டது.

ஒவ்வொரு தொகுதியிலிருந்தும் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒவ்வோர் உறுப்பினரும் அவ்வரசியலமைப்பை மாற்றும் அதிகாரம் தமக்கில்லை என உறுதி கூறும்படி அவ்வுறுதிப் பத்திரம் கட்டாயப் படுத்தியது. பிற்காலத்து மாற்றப்படக்கூடாத பெருங்குறை இத்துரைத்தனப் பத்திரத்துக்கு இருந்தது. மக்களிடமிருந்து எவ்வளவு பணம் வேண்டுமானாலும் வசூலிக்க இவ்வரசியலமைப்பு வழி செய்தது. மேலும், இது தேசத்தின் ஒப்புதலைப் பெறாதது. பழைய சம்பிரதாயங்களுக்கு முற்றிலும் முரணானது. என்றாலும், இதை வகுத்தவர்களின் திறமையை நாம் மெச்சாமலிருக்க முடியாது. ஒரு தனிப்பட்ட வல்லரசனின் ஆட்சிக்கும் தனிப்பட்ட சட்டசபையின் கொடுங்கோன்மைக்கும் இடைப்பட்ட ஓர் ஆட்சி முறையை இது வகுக்கிறது. சட்டங்களைச் செய்யும் தனி உரிமை பாராளுமன்றத்துக்குத் தரப்படுகிறது. பாதுகாப்பாளரும் சட்டத்தை அமல் நடத்துவதாகச் சபதம் எடுத்துக்கொள்ளுமாறு வற்புறுத்தப் படுகிறார். அவர் சட்டத்தை மீறிக் காரியங்களைச் செய்யின், அவற்றைக் கண்டிக்கும் உரிமை நீதிமன்றங்களுக்குத் தரப்படுகிறது. முக்கியமான பெரிய பதவிகளுக்கு ஆள்கள் நியமிப்பதில் பாராளுமன்றமானது பாதுகாப்பாளரைக் கட்டுப்படுத்தும் அதிகாரத்தைப் பெறுகிறது. போர்க்காலத்துப் பொருள் சேகரித்து வழங்கும் அதிகாரமும் பாராளுமன்றத்துக்குத் தரப்படுகிறது. அமைதிக் காலத்து மட்டுமே அரசாங்கத்தின் செலவை மட்டுப் படுத்த அதற்குத் தற்காலத்தைப் போன்று அதிகாரம் அப்போது தரப்படவில்லை.

கவுன்ஸிலின் எதிர்கால அமைப்பானது உண்மையில் பாராளுமன்ற ஆட்சிக்கே (Parliamentary Government) வழி செய்கிறது. எதிர்காலத்தில் பாராளுமன்றத்தின் ஒப்பமும் பெற்றவர்களே அதில் நியமிக்கப்படுவராதலாலும், அவர்கள் தவறு செய்தால் பாராளுமன்றம் அவர்களைக் கண்டித்துப் பதவியிலிருந்து நீக்க உரிமை பெற்றிருப்பதாலும், கவுன்ஸிலர்கள் பொறுப்போடு நடந்துகொள்ள இவ்வரசியலமைப்புத் துணைசெய்கிறது. காப்பாளர் ஏறக்குறைய தற்காலப் பிரதம மந்திரியின் நிலையிலிருக்கிறார். ஆயுள்வரை அவரும் அவரது சகாக்களும் பதவி வகிப்பதொன்றே தற்கால அமைச்சுக் குழுவுக்கும் கவுன்ஸிலுக்குமுள்ள முக்கிய வேறுபாடாகும். தற்காலப் பிரதமர் வேண்டும்போது ஓர் அமைச்சரைப் பதவியினின்று நீக்கலாம். ஆனால், பாதுகாப்பாளர் அப்படிச் செய்யமுடியாது. ஒரு வகையில் பார்க்கும்போது கவுன்ஸிலர்களுக்கும் காப்பாளருக்கும் கட்டுப்படாமல் பாராளுமன்றம் பணி புரிய இவ்வமைப்பு வாய்ப்பைத் தருகிறது. அமெரிக்க செனட்டாவது ஜனாதிபதிக்கு விரோதமாகக் காரியங்கள் செய்ய முடியும். ஆனால், கவுன்ஸிலானது காப்பாளருக்கு விரோதமாகப் போக

முடியாது. தினந்தோறும் பல அரசாங்க அலுவல்களையும் அவர்கள் ஒன்று சேர்ந்தே கவனிக்க வேண்டியிருந்தது.

இங்கிலாந்தின் முதன் முதல் எழுதப்பட்ட அரசியலமைப்பு என்ற முறையிலும், முதன் முதல் சமயப் பொறையை மக்களுக்கு வழங்கியது என்ற முறையிலும், தேர்தல் தொகுதிகளைச் சீர்திருத்தி அமைந்த இவ்வரசியலமைப்புப் பெரிதும் சிறப்பைப் பெறுகிறது.

# 11. காப்பாளரின் ஆட்சி (1653-1660)
## (Protectorate)

காப்பாளரும் சமயமும், 1653—1654.
காப்பாளரும் பாராளுமன்றமும், 1654—1655.
மேஜர் ஜெனரல்களின் ஆட்சி, 1655.
கிராம்வெல்லின் இரண்டாவது பாராளுமன்றம், 1656.
வெளிநாட்டுக் கொள்கை, 1654—1655.
கிராம்வெல்லின் மதிப்பீடு : *கிராம்வெல்லின் வீரம்—கிராம்வெல்லின் அரசியல் நுண்ணறிவு—நற்பண்புகள்.*
பியூரிட்டன் ஆட்சியின் வீழ்ச்சி : *ரிச்சர்டு கிராம்வெல்—ஜார்ஜ் மான்க்—முடியரசின் மீட்சி—பிரெடா அறிக்கை, 1660—பின்னுரைக்கு.*

### காப்பாளர் ஆட்சி (Protectorate)

அரசாங்க அமைப்புப் பத்திரத்தின்படி கிராம்வெல் 1654ஆம் ஆண்டு இங்கிலாந்தின் காப்பாளர் பிரபுவாக (Lord Protector) ஏற்றுக்கொள்ளப்பட்டார். அப் பதவியிலேயே அவர் இறுதிவரை இருந்து நாட்டிற்குத் தன்னாலான தொண்டினைச் செய்து விட்டு மாண்டார். எஞ்சிய பாராளுமன்றம் கலைக்கப்பட்டதி லிருந்து அவரே உண்மையில் நாட்டையாளும் தலைவராக விளங் கினார். மேற்படி பத்திரமானது அவரது நிலையைச் சட்டரீதியாக உறுதிப்படுத்தியதேயன்றி வேறன்று.

### காப்பாளரும் சமயமும் (1653-1654)

பதவியேற்றவுடனேயே கிராம்வெல் நாட்டின் மதப்பிரச்சினை களைத் தீர்ப்பதில் முனைந்தார். அரசாங்க அமைப்புப் பத்திரத் தின்படி தொழுகைச் சுதந்திரம் அளிக்கப்படாத பிரிலேடிஸ்டுகள் அல்லது குருமாராட்சி வாதிகள் (Prelatists) ஆங்கிலத் திருச் சபையில் ஏராளமாக இருந்தனர். பொது வழிபாட்டு நூலை (Book

of Common Prayer) அவர்கள் பயன்படுத்தக்கூடாதென்று தடுக்கப்பட்டனர். அந் நிபந்தனைக்கிணங்கியவர்கள் தவிர ஏனையோர் பதவிகளினின்றும் நீக்கப்பட்டனர். ஆயிரக்கணக்கான குருமார்கள் அங்ஙனம் பதவியினின்றும் தள்ளப்பட்டனர். அதன்பின் பியூரிட்டன்களும் அவர்களை யொட்டிய பிரஸ்பிடீரியர்கள், சுயேச்சையாளர்கள், ஞானஸ்நானவாதிகள் (Anababtists) முதலியோர்களுமே காலியான பதவிகளில் அமர்த்தப்பட்டனர். ஆனால், உண்மையில் ஒழுக்கமும் தகுதியும் உள்ளவர்களே குருமார்களாக நியமிக்கப்பட்டனர். அவர்கள் அப் பதவிகளுக்குத் தகுதியானவர்களா என்பதை நிர்ணயிக்கச் 'சோதகர்கள்' (Triers) என்ற அதிகாரிகள் நியமிக்கப்பட்டார்கள். பெரும்பான்மையான மக்களுக்குப் பியூரிட்டன் கொள்கைகளில் அவ்வளவு பிடித்தமில்லை. எனவே, பொது வழிபாட்டு நூலை அவர்கள் இரகசியமாகப் பயன்படுத்திவந்தனர். கிராம்வெல் பியூரிட்டன் கொள்கைகளில் ஆழ்ந்த நம்பிக்கையுடையவர். எனவே, அதிகாரம் கையில் கிடைத்தவுடன் அவர் தமது கொள்கைகளைச் செயலாக்க முயன்றார். கிறிஸ்துமஸ் விழாக்கள் நிறுத்தப்பட்டன. நாடகக் கொட்டகைகள் 'பிசாசின் கோயில்கள்' என்று அழைக்கப்பட்டு மூடப்பட்டன. குதிரைப் பந்தயங்கள், கோழிச்சண்டைகள் போன்ற உல்லாசப் பொழுதுபோக்குகள் தடைசெய்யப்பட்டன. இராகம் போட்டுக் கிறிஸ்தவப் பாடல்களைப் பாடுவதுகூடத் தடுக்கப்பட்டது. இங்ஙனம் பல தடைகளை விதிப்பதன் மூலம் எல்லா மக்களையும் தூய்மைப்படுத்திவிடலாம் எனக் கிராம்வெல் கனவு கண்டார். அறிவின்வழிப் பிறந்த சமயக் கொள்கைகள் ஒருசிலருக்கே பொருந்தும் என்பதையும், உணர்ச்சிவழிப் பிறந்த எளிய சடங்குகளும் விழாக்களும் கோட்பாடுகளுமே பெரும்பான்மையான மக்களுக்குப் பிடிக்கும் என்பதையும் அவர் அறிந்தாரில்லை. எனினும், மதவெறி தாண்டவமாடிய அக்காலத்தில் கிராம்வெல் மிகத் தாராளக் கொள்கை யுடையவராகக் காணப்பட்டார். குருமாராட்சிவாதிகளையும் கத்தோலிக்கர்களையும் தவிர மற்றைய அனைவருக்கும் தொழுகைச் சுதந்திரம் வழங்கப்பட்டது. யூதர்களுக்கும் குவேக்கர்களுக்கும்கூடச் சமயப் பொறை வழங்கப்பட்டது.

## காப்பாளரும் பாராளுமன்றமும் (1654–1655)

கிராம்வெல் தமது முதல் பாராளுமன்றத்தை 1654ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் மூன்றாம் தேதியன்று கூட்டினார். அதில் பிரஸ்பிடீரியர்களே பெரும்பான்மையான இடங்களைப் பெற்றிருந்தனர். கூட்ட ஆரம்பத்திலேயே அவர்கள் துரைத்தன

அரசியல் அமைப்பை முழுமையாக ஒப்புக்கொள்வதாக வாக்குறுதி எடுத்துக்கொள்ள மறுத்தார்கள். அங்ஙனம் துரைத்தன அரசியல் அமைப்பை அவமதித்த நூற்றுவர் உடனே பாராளுமன்றத்தினின்றும்பலவந்தமாக அப்புறப்படுத்தப்பட்டனர். முதலாம் சார்லஸ் கூட இவ்விதக் காரியத்தைச் செய்யத் துணிந்திருக்கமாட்டார். இதனால் அவர் தாம் ஓர் இராணுவ சர்வாதிகாரி என்பதை நன்கு காட்டிக்கொண்டார். பாராளுமன்றமானது அவருக்குப் பலவகையிலும் இடைஞ்சல்கள் கொடுக்க ஆரம்பித்தது. போர் வீரர்களின் எண்ணிக்கையைக் குறைக்கும்படியும் செலவை மட்டுப்படுத்தும் படியும் அது கிராம்வெல்லை வற்புறுத்தியது. அவரது சமயப் பொறைக் கொள்கையை அது கண்டித்தது. மேலும், காப்பாளரின் அதிகாரங்களையும் அது குறைக்க விரும்பியது. இதையெல்லாம் கண்ட கிராம்வெல், ஐந்து மாதங்கள் எப்போது முடியுமெனக் காத்துக்கொண்டிருந்து, அது முடிந்த அன்றே பாராளுமன்றத்தைக் கலைத்தார் (1655ஆம் ஆண்டு ஜனவரி மாதம்).

## மேஜர் ஜெனரல்களின் ஆட்சி (1655)

முதல் பாராளுமன்றத்தைக் கலைத்தபின், 1655ஆம் ஆண்டு அவர் தல ஆட்சித் துறையில் ஒரு புதிய பரிசோதனையை நிகழ்த்தினார். இங்கிலாந்தை அவர் பதினொரு (11) மாவட்டங்களாகப் பிரித்து, ஒவ்வொரு மாவட்டத்திற்கும் ஒரு மேஜர் ஜெனரல் என்னும் இராணுவ அதிகாரியை நியமித்தார். ஒவ்வொரு மேஜர் ஜெனரலும் அந்தந்த மாவட்டத்து நாட்டுப் படைகளின் தளபதியாகவும் நியமிக்கப்பட்டார். அங்கங்கே ஏற்படக்கூடிய கலகங்களை அடக்குவதே மேஜர் ஜெனரல்களின் முக்கிய கடமையாயிருந்தது. அதோடுகூட அவர்கள் தனிப்பட்ட மனிதர்களின் நடத்தைகளையும் ஒழுக்கத்தையும் கண்காணிக்க வேண்டும். இங்ஙனம் நியமிக்கப்பட்ட மேஜர் ஜெனரல்கள் கொடுங்கோன்மை புரிந்தனர். இவ்வாட்சிமுறை நடைபெறுவதற்காகும் செலவைச் சமாளிக்க இராஜவிசுவாசிகளிடமிருந்து அவர்களது வருமானத்தில் 10 சதவிகிதம் வரி வசூலிக்கப்பட்டது. அரசரை ஆதரித்தவர்களை அவர்கள் ஈவு இரக்கமின்றித் துன்புறுத்தினர். அவர்கள் படைக்கலன்களை வைத்துக்கொள்ளக்கூடாதெனவும், ஆங்கிலிக்க குருமார்களைக் குடும்பப் பாதிரிகளாக (Chaplins) வைத்துக் கொள்ளக்கூடாதெனவும் ஒரு தனியாணை பிறப்பிக்கப்பட்டது. தனிப்பட்டவர்களின் வாழ்க்கைகளில் அவர்கள் பெரிதும் குறுக்கிட்டனர். சாராயக் கிடங்குகள் மூடப்பட்டன. பந்தயங்கள் தடுக்கப்பட்டன. கிறிஸ்துமஸ் விழாக் கொண்டாட்டம், காளைப் போர் முதலியன நிறுத்தப்பட்டன. பிச்சைக்காரர்களும் இராஜ

விசுவாசிகளெனச் சந்தேகிக்கப்பட்டவர்களும் பிடிக்கப்பட்டுச் சிறையிலடைக்கப்பட்டனர்.

## கிராம்வெல்லின் இரண்டாம் பாராளுமன்றம் (1656)

மேஜர் ஜெனரல்களின் கொடுமை காரணமாகப் பல சதிகள் கிராம்வெல்லுக்கு எதிராகச் செய்யப்பட்டன. பலர் அவரது உயிரை வாங்கவும் முயன்றனர். இந் நிலையில் மக்களைத் திருப்தி படுத்த வேண்டியும், ஸ்பெயினோடு போர் செய்வதற்குப் பணம் திரட்டுவதற்காகவும் அவர் ஒரு பாராளுமன்றத்தை மறுபடியும் கூட்டினார். அதிலும் அவருக்கு எதிரிகளெனக் கருதப்பட்ட நூறு பேர் அப்புறப்படுத்தப்பட்டனர். மீதி இருந்தவர்கள் முதல் வேலை யாக மேஜர் ஜெனரல்களின் ஆட்சியை ஒழித்தனர். பின் நாய்லர் (Naylor) எனும் ஒரு மதவெறியர் தம்மை ஏசு கிறிஸ்து என்று சொல்லிக்கொண்டதற்காகத் தண்டிக்கப்பட்டார். நீதிமன்றங் களின் வேலையைப் பாராளுமன்றமானது இங்ஙனம் தானே செய்ய முன்வந்தது சட்டவிரோதமேயாகும். இதன்பின் அம் மன்ற மானது கிராம்வெல்லிடம் 'தாழ்மையான விண்ணப்பமும் ஆலோசனையும்' (Humble Petition and Advice) என்ற ஒரு பத்திரத்தைச் சமர்ப்பித்தது. அதிலே கிராம்வெல்லை இங்கிலாந் தின் மன்னராகும்படி அம் மன்றம் கேட்டுக்கொண்டது. சட்டப் படி தேர்ந்தெடுக்கப்பட்ட பாராளுமன்ற உறுப்பினர்களை விலக்கக் கூடாது என்றும், விலக்கப்பட்டவர்களைத் திரும்ப அழைத்துக் கொள்ளவேண்டும் என்றும் கிராம்வெல்லை அது வேண்டிக் கொண்டது. மேலும், இரண்டாவது சட்டசபை ஒன்று ஏற்படுத் தப்பட வேண்டுமெனவும், அது நாற்பதிலிருந்து எழுபது உறுப் பினர்கள் கொண்டதாய் இருக்கவேண்டுமெனவும், அவ்வுறுப் பினர்களைக் கிராம்வெல்லே நியமிக்கவேண்டுமெனவும், கிராம் வெல்லும் பாராளுமன்றமும் சேர்ந்து நாட்டுக்குகந்த சமயக் கொள்கையை வகுக்கவேண்டுமெனவும் அது வேண்டிக்கொண் டது. கிராம்வெல் மன்னரென அறிவித்துக்கொண்டால் அவருக்குச் சட்டப் பாதுகாப்பு ஏற்படுமெனப் பாராளுமன்றம் நினைத்தது. ஆனால், கிராம்வெல்லின் மனச்சாட்சி மன்னர்ப் பட்டத்தை ஏற்க மறுத்துவிட்டது. மேலும், அவரது நெருங்கிய நண்பர்களுக்கு அது பிடிக்கவில்லை. மன்னர்ப் பட்டத்தை மறுத்துவிட்டு, இரண் டாவது சபையை ஏற்படுத்த மட்டும் அவர் ஒப்புக்கொண்டார். அவர் 'காப்பாளர்' என்றே அழைக்கப்பட்டார். அதே சமயம் தமது வாரிசு யார் என்பதைத் தீர்மானிக்கும் அதிகாரம் அவருக்கு அளிக்கப்பட்டது. அவருக்கு 1,300,000 பவுன் மானியம் வழங் கப்பட்டது. அவர் இரண்டு பிரபுக்களை மேல்சபையில் நியமித்

தார். மற்றவர்கள் அவரது நியமனத்தை ஒப்புக்கொள்ளவில்லை. விலக்கப்பட்ட பல உறுப்பினர்கள் மறுபடியும் பாராளுமன்றத்துக்கு வரவே, கிராம்வெல்லின் செல்வாக்கு அங்குக் குறைந்தது. எனவே, அவர்கள் புதிதாகத் தோற்றுவிக்கப்பட்ட பிரபுக்கள் சபையைக் கண்டிக்கத் தொடங்கினர். இதைக் கண்ட கிராம்வெல் பாராளுமன்றத்தை மீண்டும் கலைத்தார்.

## வெளிநாட்டுக் கொள்கை (1454-1655)

வெளிநாட்டுக் கொள்கையைப் பொறுத்தவரையில் கிராம்வெல் முதலில் மற்ற நாடுகளோடு சமாதானமாக இருக்கவே விரும்பினர். எனவே, டச்சுக்காரர்ளோடு ஒரு சமாதான உடன்படிக்கையைச் செய்துகொண்டார். இரண்டு நோக்கங்கள் அவரை இவ்வாறு செய்யுமாறு தூண்டின. முதலாவதாக, அவர், இங்கிலாந்தின் படை வலிமையைப் பெருக்கிக்கொள்வதற்குச் சிறிது அவகாசம் பெற விரும்பினர். அதன்பின், அவர், கத்தோலிக்க நாடுகளுக்கு எதிராக ஐரோப்பியப் பிராடெஸ்டன்டு நாடுகளிடையே கூட்டுறவு ஒன்றை ஏற்படுத்த விரும்பினர். மற்றும், அவர், ஸ்டூவர்ட்டு அரசர்கள் வெளிநாடுகளின் உதவியைப் பெற்று மீண்டும் இங்கிலாந்தில் மன்னர்களாவதைத் தடுக்கவேண்டுமெனவும், பிரிட்டனின் கடற்படையைப் பெருக்கவேண்டுமெனவும், குடியேற்ற நாடுகளை வளர்க்கவேண்டுமெனவும், ஆங்கிலேய வியாபாரத்தை வெளிநாடுகளில் செழிக்கச் செய்யவேண்டுமெனவும் விரும்பினர்.

ஸ்டூவர்ட்டுகள் மீண்டும் பிரிட்டனின் மன்னர்கள் ஆவதைத் தடுப்பதில் அவர் வெற்றி கண்டார். ஃபிரான்ஸும் ஸ்பெயினும் இப்போது ஒன்றுக்கொன்று போரிட்டுக்கொண்டிருந்ததால், இரண்டு நாடுகளுமே இங்கிலாந்தின் உதவியைப் பெற முயன்றன. எனவே, அவைகள் ஸ்டூவர்ட்டுகளை ஆதரிக்க முன்வரவில்லை. இங்கிலாந்தின் வியாபாரத்தை வளர்ப்பதில் அவர் பெரிதும் வெற்றி கண்டார்.

அடுத்து, அவர், பிராடெஸ்டன்டு நாடுகளின் கூட்டுறவை அமைக்க முயன்றார். 1654-ல் டச்சுக்காரர்களோடு அவர் சமாதான உடன்படிக்கை செய்துகொண்டார். ஸ்வீடன், டென்மார்க், போர்ச்சுகல் ஆகிய நாடுகளோடும் அவர் சமாதான உடன்படிக்கைகள் செய்துகொண்டார். இங்ஙனம் அவர் ஐரோப்பிய பிராடெஸ்டன்டு நாடுகளை ஒன்றுசேர்க்க முயன்றார். ஆனால், கத்தோலிக்க நாடுகள் அவ்வளவு ஒற்றுமையாக இல்லாத

தால் அவ்விதக் கூட்டுறவு ஏற்படவேண்டிய அவசியம் இல்லாது போயிற்று. அவர் நினைத்தபடி கூட்டுறவு அமைக்கவும் அவரால் முடியவில்லை. அதனால் பிராடெஸ்டன்டு மதத்திற்கும் எந்தத் தீங்கும் ஏற்பட்டுவிடவில்லை.

கிராம்வெல் பின்னர் ஸ்பெயின் நாட்டின்மீது தம் கவனத்தைச் செலுத்தினர். மேற்சொன்னபடி ஸ்பெயினும் ஃபிரான்ஸும் போரிட்டுக்கொண்டிருந்ததால், ஸ்பெயின் கிராம்வெல்லின் நட்பை விரும்பியது. கிராம்வெல், தருணத்தைப் பயன்படுத்திக்கொண்டு, சில நிபந்தனைகளை ஒப்புக்கொண்டால் தாம் ஸ்பெயினை ஆதரிப்பதாகக் கூறினர். கலே (Calai's) பட்டினத்தை ஆங்கிலேயருக்குக் கொடுக்க வேண்டுமெனவும், போரினல் ஏற்படக்கூடிய செலவுக்கு ஸ்பெயினே பொருள் தரவேண்டுமெனவும், ஸ்பானியக் குடியேற்ற நாடுகளோடு நேரடியாக வர்த்தகம் செய்ய ஆங்கிலேயர் அனுமதிக்கப்பட வேண்டுமெனவும், ஸ்பெயினில் வாழ்ந்துவந்த ஆங்கிலேயருக்குத் தொழுகைச் சுதந்திரம் வழங்கப்படவேண்டுமெனவும் கிராம்வெல் கோரினர். இதை ஸ்பெயின் மன்னர் நான்காம் ஃபிலிப் ஒப்புக்கொள்ள மறுத்தார். 'அவைகளை ஒப்புக்கொள்வதென்பது எனது இரு கண்களையும் கொடுத்துவிட ஒப்புக்கொள்வது போன்றது' என அவர் கூறிவிட்டார்.

உடனே கிராம்வெல் ஃபிரான்ஸின் பக்கம் திரும்பினர். சில நிபந்தனைகளுக்கு உட்பட்டால் தாம் ஃபிரான்ஸை ஆதரிப்பதாகக் கிராம்வெல் கூறினர். அதாவது, போரில் ஏற்படும் செலவுகளைப் ஃபிரான்ஸ் ஏற்றுக்கொள்ளவேண்டுமெனவும், டன்கர்க் துறைமுகமும் மார்டைக் துறைமுகமும் ஆங்கிலேயருக்குக் கொடுக்கப்படவேண்டுமெனவும், செவாய் கோமகன் தமது நாட்டில் வசித்த பிராடெஸ்டன்டுகளைத் துன்புறுத்துவதை ஃபிரஞ்சு மன்னர் தமது செல்வாக்கைப் பயன்படுத்தி நிறுத்த வேண்டுமெனவும் கிராம்வெல் கோரினர். இக் கோரிக்கைகளை ஃபிரெஞ்சுக்காரர்கள் ஒப்புக்கொண்டனர். எனவே, கிராம்வெல் ஸ்பெயின்மீது 1655ஆம் ஆண்டு போர் தொடங்கினர். நேரடியாக ஸ்பெயினைத் தாக்குவதற்குப் பதிலாக அவர் தமது படைகளை மேற்கிந்தியத் தீவுகளைக் கைப்பற்றுமாறு அனுப்பினர். ஹிஸ்பானியாலோ தீவுகளைக் கைப்பற்ற அப் படை முயன்று தோல்வியுற்றது. ஆனல், ஜமைய்க்கா என்ற தீவானது 1655-ல் பிரிட்டிஷ் படைகளால் கைப்பற்றப்பட்டது. பிளேக் எனும் ஆங்கிலக் கப்பற்படைத் தலைவர் சான்டா குரூஸ் (Santa Cruz) என்னும் இடத்தில் தங்கியிருந்த ஸ்பானியக் கப்பல்களைத் தோற்கடித்தார். அக் கப்பல்கள் தென் அமெரிக்காவிலிருந்து ஏராளமான தங்கத்தையும் வெள்ளியையும் கொண்டுவந்திருந்தன. அவற்றையெல்லாம் பிளேக்

கைப்பற்றினுர். பின்னர், அவர் தம் படைகளை மத்தியதரைக் கடலுக்குள் செலுத்தி, அங்கு ஆட்சிபுரிந்துவந்த துருக்கிய கவர்னரைத் தோற்கடித்தார். இதனுல் அவர் ஆங்கிலேயரின் ஆதிக்கத்தை மத்தியதரைக்கடலில் நன்கு நிலைநாட்டினுர். 1658ஆம் ஆண்டு கிராம்வெல்லின் புதுமாதிரிப் படையானது ஸ்பெயினுக்குச் சொந்தமான ஃபிளாண்டர்ஸ் பிரதேசத்தைத் தாக்கியது. ஸ்பானியப் படைகள் டன்ஸ் (Dunes) எனும் போர்க்களத்தில் ஆங்கிலேயப் படைகளால் தோற்கடிக்கப்பட்டன. டன்கர்க் நகரும் ஆங்கிலேயர் வசமானது. ஐரோப்பாவில் எளிதாகப் புகுவதற்குத் தக்கதொரு துறைமுகம் ஆங்கிலேயருக்கு இத்தகைய முறையில் கிடைத்தது. இச்சமயத்தில் கிராம்வெல் இறந்து விடவே, மேற்கொண்டு ஆங்கிலேயர் எந்த இடத்தையும் பிடிக்கவில்லை. கிராம்வெல் தாம் இறப்பதற்குள் இங்கிலாந்தின் பெருமையை ஐரோப்பாவில் நன்கு நிலைநாட்டிவிட்டார்.

## கிராம்வெல்லின் மதிப்பீடு

கிராம்வெல் இங்கிலாந்தின் செல்வாக்கு மிக்கதொரு சிறு நிலக்கிழார் வகுப்பில் தோன்றியவர். அவருடைய தாயார், எட்டாம் ஹென்றியின் காலத்து, அவரது பிரதம மந்திரியாய் இருந்த தாமஸ் கிராம்வெல்லின் சந்ததியில் வந்தவர். எனவே, அவரிடம் அரசகுடும்பத்துக்குரிய உயரிய பண்புகள் இயல்பாகவே மிளிர்ந்தன. இளவயதில் அவர் சிட்னி, சஸ்ஸெக்ஸ் கல்லூரியில் கல்வி பயின்ருர். பின்னர், அவர் ஓர் வணிகரின் மகளான எலிஸபெத் எனும் மாதினை மணந்துகொண்டு, செயின்ட் ஈவ்ஸ் (St.Eves) எனுமிடத்தில் ஓர் நிலக்கிழாராக வாழ்ந்துவந்தார். அவரது நாற்பதாவது வயதுவரை அவர் இங்ஙனம் சாதாரண மனிதராகவே வாழ்ந்துவந்தார். ஆனுல், அவருள் வியக்கத்தக்க பண்புகள் பல நீறுபூத்த நெருப்புப்போல் மறைந்து கிடந்தன. தக்க தருணம் வாய்த்தபோது அவை வெளிவர ஆரம்பித்தன.

### கிராம்வெல்லின் வீரம்

சார்லஸை எதிர்க்க அவர் படை திரட்ட முற்பட்டபோது தான் அவரது திறமை நன்கு வெளிப்போந்தது. போர்வீரர்களிடையே அவர் ஓர் ஆவேசத்தையே கிளப்பிவிட்டார். வீரர்களின் உடல் உரத்தைவிட உள்ளத்தில் பொங்கியெழும் உற்சாகமே ஒரு போர்க்களத்தில் வெற்றியையளிக்க வல்லது எனும் உண்மையை அவர் நன்கு ஓர்ந்து, அதற்கேற்ப மதப்பற்றும் நாட்டுப் பற்றும் கொண்ட வீரர்களையே தம் படையில் சேர்த்தார். அவரது புதுமாதிரிப் படையானது கொள்கைகளுக்காக வீராவேசத்துடன்

போரிட்டது. படையினர் சோர்வுறும்போது அவர்களை ஊக்கு விக்கும் கலையில் கிராம்வெல் கைதேர்ந்தவராயிருந்தார். போர் வீரர்கள் அவரைத் தந்தைபோல் நேசித்தனர். ஏனெனில், அவர் வீரர்கள் நலனைத் தம் சொந்த நலன்போல் கருதிக் காப்பாற்றினார். அதே சமயத்தில் குற்றம் செய்பவர்களிடம் அவர் மிகவும் கடுமை யாகவும் நடந்துகொண்டார். அதனால் அவரது படைவீரர்களிடம் ஒழுங்கும் கட்டுப்பாடும் நிலவின. அவர்களிடம் காணப்பட்ட மனவுறுதியைக் கண்ட ரூபர்ட் இளவரசர், ' இரும்புப் படையினர் ' என்ற சிறப்புப் பெயரை அவர்கட்கு வழங்கினார். மார்ஸ்டன் மூர், நேஸ்பி போன்ற போர்க்களங்களில் அவர்கள் பெற்ற வெற்றிகட் கெல்லாம் தலையாய காரணம், கிராம்வெல்லின் தலைமையும் படை யினரை அவர் நடத்திய திறமையுமேயாகும். கிராம்வெல் நல்ல குதிரை வீரர். வெடிப்படைகளைக் கையாள்வதிலும் நிபுணர். நிலச்சண்டைகளையேயன்றிக் கடற்சண்டைகளையும் நிர்வகிப்பதில் கிராம்வெல் வல்லவர் என்பதை அவரது டச்சுப் போர்கள் நன்கு விளக்குகின்றன.

**கிராம்வெல்லின் அரசியல் நுண்ணறிவு**

கிராம்வெல்லை நாம் ஓர் அரசியல் வித்தகர் (Statesman) எனக் கருத இடமில்லை. ஏனெனில், அவர் பெரும்பான்மையான மக்களின் உணர்ச்சிகளைப் புரிந்துகொண்டு அதற்கேற்ப நடந்துகொள்ளும் சக்தியற்றவராயிருந்தார். உணர்ச்சிவசப்படும் பாமர மக்களிடை, அறிவின் வழிப்பட்ட உன்னதக் குறிக்கோள்களைத் திணிக்க முயன்றது அவரது பேதமையையே காட்டுகிறது. பலாத்காரத் தால் அவர் மக்களைத் தூய்மைப்படுத்திவிடலாமென நினைத்தது சாதாரண மக்களின் உள்ளப்பான்மையைச் சரிவரப் புரிந்து கொள்ளாத ஒரு நிலையையே விளக்குகிறது. அவரது அரசியற் பரிசோதனைகளெல்லாம் மிக விசித்திரமானவை. அவை யாவும் தோல்வியுற்றதில் வியப்பொன்றுமில்லை. மதவாதிகளைக் கொண்டு நாட்டின் அரசியல் திட்டத்தை வகுக்க முயன்று அவர் தோற்றார். இராணுவ அதிகாரிகளைக் கொண்டு பியூரிட்டன் கொள்கைகளை மக்கள்மீது சுமத்த முயன்று அவர் மீண்டும் தோற்றார். முடியரசை ஒழித்துக் குடியரசை நிறுவினார். இரு சட்டசபைகளுக்குப் பதிலாக ஒரு சட்டசபையை ஏற்படுத்திப் பரிசோதனை செய்து பார்த்தார். கடைசியில், ஈரங்க சட்டசபை (Bicameral Legislature) முறையை அவர் ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று. பழமை விரும்பி களான ஆங்கிலேயர் அவர் இறந்த சின்னாட்களுள் முடியரசை மீண்டும் ஏற்படுத்தினர். அமைதி விருப்பமும் பழைய நிறுவனங் களில் ஒரு பக்தியும் கொண்ட ஆங்கில மக்களிடை, அவர் சிவ பூசையில் கரடி நுழைவதுபோல் நுழைந்து, ஆங்கிலேயருக்குப்

பிடிக்காத குடியரசு கொள்கை, ஓரங்க சட்டசபை முறை இவற்றை நிறுவ முயன்றார்; முடியவில்லை. வாள் முனையில் அவர் சாதித்த அனைத்தும் அவர் இறந்ததும் அப்படியே அட்டை வீடு போல் குலைந்துவிட்டன. கிராம்வெல் சர்வாதிகார மனப் பான்மை கொண்டவர். எதிர்ப்புகளை அவரால் சகிக்க முடியாது. அதனால்தான் அவர் தமது பாராளுமன்றங்களோடு ஒத்துப் போக முடியவில்லை. அவைகளில்லாத வேளையில் அவர் அடக்கு முறை ஆட்சியே புரிந்தார். தமது எதிரிகளை அவர் விசாரணை யின்றிச் சிறையில் தள்ளினார். பாராளுமன்றத்தின் அனுமதியின்றி மக்கள்மீது வரி விதித்தார்; அவசரச் சட்டங்களை இயற்றினார். தனிப்பட்டோர் வாழ்க்கையில் அளவுக்கு மீறித் தலையிட்டார். முடியாட்சி இருந்தபோது நிலவிய கொடுங்கோன்மைக்கு அவரது அடக்குமுறை ஆட்சி எள்ளளவும் குறைந்ததாயில்லை.

**நற்பண்புகள்**

பல குறைகளிடையேயும் கிராம்வெல்பால் போற்றத்தக்க பண்புகள் பல மிளிர்ந்தன. பேராசை என்னும் நோய் அவரை என்றுமே பிடித்ததில்லை. ஃபேர்ஃபாக்ஸ் என்ற அவரது தளகர்த் தருக்கு அவர் கடைசிவரை விசுவாசமாகவே இருந்தார். அவர் தாமே தம் பதவியை ராஜிநாமாச் செய்த பின்னரே அவர் படைத் தலைமைப் பதவியை ஏற்றார். அதிகாரத்தின் உச்சநிலையை அடைந்தபோதும் அவர் தலை கிறுகிறுக்கவில்லை. நெப்போலியன் அவரது நிலையை அடைந்தபோது பேரரசராகத் தன்னை அறிவித் துக் கொண்டான். ஆனால், கிராம்வெல்லோவெனின் குடிமக்களே அரச மகுடத்தை ஏற்றுக்கொள்ளும்படி அவரை வற்புறுத்திய போதும் அதை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார். அதனால் தாம் ஓர் கொள்கை வீரர் என்பதை அவர் நிரூபித்துக் காட்டினார். பழிக் குப்பழி வாங்கும் புன்மையும் அவரிடத்தில் எள்ளளவும் காணப்பட வில்லை. அவரைக் கொல்வதற்காக எவ்வளவோ பேர் சதி செய்தும்கூட ஒரு நான்கு பேரை மட்டுமே அவர் கொல்வித்தார். எதிரிகளையும் மன்னிக்கும் பெருந்தன்மை அவர்பால் இயல்பாகவே குடிகொண்டிருந்தது.

கிராம்வெல் அவுரங்கசீப் எனும் முகலாயப் பேரரசரைப் போன்று ஆழ்ந்த மத நம்பிக்கையுடையவர். தனி வாழ்க்கையில் அவரைப் போலவே தூயர். இசை, நாட்டியம் போன்ற கேளிக்கை களை நிறுத்தல், ஒழுக்கத்தை வற்புறுத்தல் போன்ற தூய்மைக் கொள்கைகளை இருவருமே மக்கள்மீது திணிக்க முயன்று தோற்ற னர். இருவரும் மதத்தின் பேரால் பல கொடுமைகளைச் செய்தனர். கிராம்வெல் அயர்லாந்தில் கத்தோலிக்கர்களைக் கொன்று குவித்த

போதுகூட அதை இறைவனின் கட்டளையாகவே கருதினர். போர்க்களத்தில் பெற்ற வெற்றியெல்லாம் இறைவனளித்தது என நம்பினர். அவரது மத நம்பிக்கை ஆச்சரியமானது. ஆனால், அவுரங்கசீபைப் போல் அவர் ஒரு மதவெறியரல்லர். யூதர்களுக்கும் அவர் சமயப் பொறை வழங்கினர். கத்தோலிக்கருக்கும் பிரிலேடிஸ்டுகளுக்கும் தவிர மற்ற யாவருக்கும் அவர் தொழுகைச் சுதந்திரம் வழங்கினர். குறுகிய நோக்கமுள்ள பிரஸ்பிடீரியக் கும்பலை அவர் வெறுத்தார். தமது சேனையில் எல்லா மதப் பிரிவினருக்கும் திறமைக்கேற்ப நல்ல பதவிகளைத் தந்தார்.

கிராம்வெல் உண்மையிலேயே உயர்ந்த குறிக்கோள்களைக் கொண்ட பெரியவர். அவரது அரசியற் பரிசோதனைகள் தோற்று விட்டாலும், பிற்காலத்து வரப்புக்குட்பட்ட முடியாட்சி இங்கிலாந்தில் மலர அவை மறைமுகமாகத் துணை செய்தன. வாள் முனையில் அவர் நிறுவிய அயர்லாந்து, இங்கிலாந்து, ஸ்காட்லாந்து ஐக்கியம் அவர் இறந்தபின் குலைந்தாலும், பிற்காலத்தே அவை நிறைவேறின. பிரிட்டனின் பிற்கால வரலாறு அவரது குறிக்கோள்களின் பெருமையை விளக்குகின்றன. அவர் கடைப்பிடித்த சமயப் பொறைக் கொள்கை நாளடைவில் நன்கு பண்படுத்தப்பட்டு இங்கிலாந்தில் வேரூன்றியது. அவர் வளர்த்த கடற்படைதான் பிற்காலத்து இங்கிலாந்து டச்சுக்காரர்களையும், ஸ்பானியர்களையும் வென்று பல குடியேற்ற நாடுகளை ஏற்படுத்த வழிசெய்தது. கிராம்வெல் தமது காலத்தில் இங்கிலாந்தின் பெருமையை வெளிநாடுகளில் நன்கு நிலைநாட்டினர். கைம்மாறு சிறிதும் கருதாது நாட்டின் நன்மையைக் கருதி அல்லும் பகலும் உழைத்த, நாட்டுப்பற்று நிறைந்த ஓர் கர்மவீரர் என்ற முறையில் அவர் பெரிதும் போற்றப் படற்குரியவரேயாவர்.

## பியூரிட்டன் ஆட்சியின் வீழ்ச்சி

### ரிச்சர்டு கிராம்வெல்

கிராம்வெல் தாம் இறக்கும் தறுவாயில் தமது மூத்த மகனை ரிச்சர்டு கிராம்வெல் என்பவரைத் தமது வாரிசாக நியமித்தார். எனவே, அவர் இறந்தவுடன் ரிச்சர்டு இங்கிலாந்தின் காப்பாளரானர். அவர் தமது தந்தையைப் போன்ற ஒரு பெரிய போர் வீரரல்லர். பியூரிட்டன் மதத்திலும் அவருக்கு அதிக ஈடுபாடு இல்லை. எனவே, பொதுமக்கள் அவரை விரும்பினர். ஆனால், சேனை வீரர்களின் மதிப்பையும் மரியாதையையும் அவர் பெற முடியவில்லை. 1659ஆம் ஆண்டு ஜனவரி மாதம் முதலாம் தேதி, சார்லஸ் காலத்திய சீர்திருத்தப்படாத தேர்தல் தொகுதிகளி

னின்றும் தேர்ந்தெடுக்கப்பட்ட, ஓர் பாராளுமன்றம் கூட்டப்பட்டது. அதில் பெரும்பான்மையோர் ரிச்சர்டை ஆதரித்தனர். சேனையின் கைப்பாவையாக அவர் இருக்கமாட்டார் என அவர்கள் நினைத்தனர். எனவே, அவர்கள் ரிச்சர்டைச் சேனதிபதியாக்க முன்வந்தனர். சேனவீரர் அதை எதிர்த்தது மட்டுமன்றி ரிச்சர்டின் மருமகனை ஃபிலீட்வுட் (Fleatwood) என்பவரே நிரந்தரமான சேனதிபதியாக நியமிக்கப்பட வேண்டுமெனவும், அவரது அதிகாரங்களும் காப்பாளரின் அதிகாரங்களும் தனித்தனியே இருக்கவேண்டுமெனவும், இராணுவ அதிகாரிகளை நியமிக்கும் அதிகாரம் சேனதிபதியிடமும், நீக்கும் அதிகாரம் இராணுவ நீதிமன்றத்திடமும் இருக்கவேண்டுமெனவும் அவர்கள் வற்புறுத்தினர். அதற்குப் பதிலாக இராணுவத்தினர் பாராளுமன்றத்தின் அலுவல்களில் தலையிடுவதில்லை என வாக்குறுதி எடுத்துக்கொள்ளும்படி பொதுமக்கட் சபை தீர்மானம் நிறைவேற்றியது. ரிச்சர்டு ஓரளவு அதற்கிணங்கி ஃபிலீட்வுட் என்பவரைச் சேனதிபதியாக்க ஒப்புக் கொண்டார். ஆனல், அவர் பாதுகாப்பாப்பாளரின் அதிகாரத்துக்குக் கட்டுப்பட்டே நடக்கவேண்டுமென வற்புறுத்தினர். பாராளுமன்றம் அவரது கொள்கையை ஆதரித்தது. இதனல் வெகுண்ட சேனையானது பாராளுமன்றத்தைக் கலைக்கும்படி ரிச்சர்டைப் பலவந்தப்படுத்தியது (ஏப்ரல் 1659).

அதன்பின் 1659 ஆம் ஆண்டு மே மாதத்தில், நீடித்த பாராளுமன்றத்தின் ஒரு பகுதியான எஞ்சிய பாராளுமன்றம், சேனவீரர்களின் அழைப்புக்கிணங்க வெஸ்ட்மின்ஸ்டரில் கூடியது. ஆனல், அது பாராளுமன்றத்தின் உரிமைகளைப் பெரிதும் வற்புறுத்தியது. மேஜர் ஜெனரல்கள் போன்ற கிராம்வெல் காலத்திய அதிகாரிகள் பாராளுமன்றத்துக்குக் கீழ்ப்படியவேண்டுமெனவும், அதன் அனுமதியின்றி வசூலிக்கப்பட்ட வரிகளை அவர்கள் மக்களுக்கே திருப்பித் தந்துவிட வேண்டுமெனவும் அது கூறிற்று. மற்றும் கிராம்வெல் காலத்திய சட்டங்களெல்லாம் செல்லாதவை என அது அறிவித்தது. இதைக் கண்ட சேனவீரர் ஆத்திரமடைந்தனர். பொதுமக்கள் சபை ஒன்றுமட்டும் நாட்டுக்குப் போதாதென்றும், அறிவும் அநுபவமும் நிரம்பிய முதியோரடங்கிய இரண்டாவது சபை ஒன்று கூட்டப்பட வேண்டுமெனவும் அவர்கள் வற்புறுத்தினர். சேனவீரர் மட்டுமன்றி ஜேம்ஸ் ஹேரிங்டன் போன்ற குடியரசுவாதிகளும் இவ் வேண்டுகோளை ஆதரித்தனர். சேனையும் பாராளுமன்றமும் இங்ஙனம் சச்சரவிடுவதைக் கண்டு மனம் நொந்த ரிச்சர்ட் தம் பதவியைத் துறந்தார் (25 மே 1659). இச் சமயத்தில் இரண்டாம் சார்லஸுக்குச் சாதகமாகச் செஸ்ஷயர் (Cheshire) என்னும் இடத்தில் சர் ஜார்ஜ் பூத் (Sir Georeg Booth) என்பார் ஒரு கலகத்தைக் கிளப்பினர். லாம்பர்ட்

(Lambert) என்னும் பாராளுமன்றத் தளகர்த்தர் கலகக்காரர்களை வின்னிங்டன் பிரிட்ஜ் (Winnington Bridge) என்னுமிடத்தில் தோற்கடித்தார். அவர் திரும்பி வந்தபோது சேனையதிகாரிகள், துருப்புகளை அனுப்பிப் பாராளுமன்றத்தைக் கலைக்கும்படி ஆணையிட்டனர் (1659ஆம் ஆண்டு அக்டோபர் மாதம்). அங்ஙனமே பாராளுமன்றத்தை அவர்கள் கலைத்தனர். மீண்டும் இராணுவத்தினர் ஆட்சியை இங்கிலாந்தில் அவர்கள் ஏற்படுத்தினர். நாட்டை ஆள்வதற்கு ஒரு பாதுகாப்புக் குழுவை (Committee of Safety) அமைத்தனர். ஆனால், சேனையின் இவ்வரம்பற்ற செயல்களை மக்கள் வெறுத்தனர். சேனையிலேயும் ஒற்றுமை இல்லை. சேனாதிபதியாவதற்குத் தளகர்த்தர்கள் ஒருவரோடொருவர் போட்டியிட்டனர். நாட்டில் நிலையான அரசாங்கத்தை அவர்களால் ஏற்படுத்த முடியாதென்பது யாவருக்கும் தெற்றெனத் தெரியவந்தது. எனவே, எஞ்சிய பாராளுமன்றத்தை இராணுவத்தினர் மீண்டும் கூட்டினர்.

### ஜார்ஜ் மான்க் (George Monk)

இந்நிலையில் வடக்கே ஸ்காட்லாந்தில் கவர்னராயிருந்த ஜார்ஜ் மான்க் என்பார் இங்கிலாந்தில் ஒரு நிலையான ஏற்பாட்டைச் செய்ய விரும்பித் தமது படையோடு புறப்பட்டு இங்கிலாந்து வந்தார் (1660). லாம்பர்ட் என்பவர் அவரை எதிர்த்தார். ஆனால், லாம்பர்ட்டின் படை வீரர்களில் பலர் மான்கின் சேனையில் போய்ச் சேர்ந்துகொண்டனர். எனவே, மான்க் லாம்பர்டைத் தோற்கடித்துச் சிறை செய்தார். மான்க் வெற்றி வீரராக இங்கிலாந்துக்குள் நுழைந்தார். அவர் விரும்பியிருந்தால் கிராம்வெல்லின் பதவியைக் கைப்பற்றியிருக்கலாம். ஆனால், அவ்விதம் அவர் செய்யவில்லை. பிரைட் என்பவரால் வெளியேற்றப்பட்ட உறுப்பினர்களையும் சேர்த்துப் பழைய நீடித்த பாராளுமன்றத்தை அவர் கூட்டினார். அம் மன்றமானது வேறொரு புதிய பாராளுமன்றத்தைக் கூட்டுவதற்கான ஏற்பாடுகளைச் செய்துவிட்டுத் தானே 1660ஆம் ஆண்டு மார்ச் மாதம் 16ஆம் தேதி கலைந்தது. 1640ஆம் ஆண்டில் முதலாம் சார்லஸால் கூட்டப்பட்ட இப் பாராளுமன்றம், இருபது ஆண்டுகள் பணிபுரிந்தபின் கலைந்ததானது, பாராளுமன்ற வரலாற்றிலேயே என்றும் நடைபெறாத ஓர் நிகழ்ச்சி என்பதில் ஐயமில்லை.

### முடியரசின் மீட்சி

அதன்பின் புதிய பாராளுமன்றத்திற்கான தேர்தல் நடைபெற்றது. பழைய தேர்தல் தொகுதிகளில் பழைய முறைப்படியே தேர்தல் நடந்தது. எனவே, அரசராதரவாளர் பலர் பாராளுமன்றத்தில் இடம் பெற்றனர். அப் பாராளுமன்றத்திற்குப் பிரதி

யேகப் பாராளுமன்றம் (Convention Parliament) என்ற பெயர் வழங்கப்பட்டது. பிரத்தியேகப் பாராளுமன்றம் இரண்டாம் சார்லஸை இங்கிலாந்தின் மன்னராக்க விரும்பியது. மான்க், பாராளுமன்றத்தின் சார்பாகச் சார்லஸோடு பேச்சு வார்த்தை யைத் தொடங்கினர். அவரது தூண்டுதலின் பேரில் சார்லஸ் பிரெடா என்னுமிடத்திலிருந்து ஆங்கிலேயருக்கு ஓர் அறிவிப்பை வெளியிட்டார் (1660). அதற்கு பிரெடா அறிவிப்பு (Declaration of Breda) எனப் பெயர். அவ்வறிவிப்பில் அரசரை எதிர்த்த அனைவருக்கும் அவர் மன்னிப்பு வழங்குவதாகவும், பாராளுமன்றம் விரும்பினால் அவர்களில் சிலரைத் தண்டிப்பதாகவும், சேனைவீரர் களுக்குப் பாதுகாப்பு அளிப்பதாகவும், சேனையைவிட்டு விலக்கப் பட்டவர்களுக்குச் சம்பளம் தருவதாகவும், பாராளுமன்றத்தின் விரும்பப்படியே நிலப் பிரச்சினைகளைத் தீர்ப்பதாகவும், எல்லா மதப் பிரிவினருக்கும் சமயப்பொறை வழங்குவதாகவும் அவர் குறிப்பிட்டிருந்தார். இதைக் கண்ட ஆங்கிலேயர்கள் மகிழ்ச்சி யுற்று அவரை இங்கிலாந்தின் மன்னராக முடிசூட்டிக் கொள்ளும்படி வேண்டினர். அவ் வேண்டுகோளை ஏற்றுக் கொண்டு சார்லஸ் மன்னரும் டோவர் துறைமுகத்தில் வந்து இறங்கினர். தமது முப்பதாவது பிறந்த நாளில் அவர் லண்டனில் அடியெடுத்துவைத்தார். இங்ஙனம் இங்கிலாந்தில் முடியாட்சி மீண்டும் ஏற்பட்டது. பியூரிட்டன் புரட்சி தோல்வியுற்றது. பியூரிட்டன்களின் ஆட்சி பதினேர் ஆண்டுகள் இங்கிலாந்தில் நடைபெற்றது. எனினும், அவர்கள் மக்களின் ஆதரவையும் நம்பிக்கையையும் பெறவில்லை. அவர்களுடைய குறுகிய நோக்க மும் மதவெறியும் ஒருவருக்குமே பிடிக்கவில்லை. வாள் முனையில் பயமுறுத்தியே அவர்கள் மக்களை ஆண்டனர். பலவந்தமான வல்லரசு தங்கள்மீது சிறுபான்மையோரால் செலுத்தப்படுவதை ஆங்கிலேயர்கள் விரும்பவில்லை. மேலும் பியூரிட்டன் தலைவர்கள் சுயநலம் மிக்கவர்களாயும், பேராசை பிடித்தவர்களாயும், ஒரு குறிக்கோளுக்காக ஒற்றுமையுடன் பாடுபடும் திறமையற்றவர்களா யும் இருந்தனர். இக் குற்றங்களெல்லாம் சிறிதுமில்லாத அவர் களின் ஒரே தலைவரான கிராம்வெல்லும் அகால மரணமடைந்தார். மேய்ப்பானில்லாத ஆடுகள் போல் பியூரிட்டன்கள் தமக்குள் சச்சர விட்டுக்கொண்டனர். அவர்களது ஆட்சி அதிக நாள் நீடிக்க வில்லை. இருப்பினும், அவர்கள் தங்களது ஆட்சிக்காலத்தில் பிரிட்டிஷ் தீவுகளை ஒன்றுபடுத்தி எங்கும் அமைதியும் ஒழுங்கும் ஏற்படச் செய்ததோடு இங்கிலாந்தின் புகழையும் கௌரவத்தை யும் வெளிநாடுகளில் நிலைநாட்டினர். ஆங்கிலேய மக்கள் இயல் பாகவே இராஜபக்தியுள்ளவர்கள். முதலாம் சார்லஸ் கொல்லப் பட்டதைப் பெரும்பான்மையான ஆங்கிலேயர்கள் விரும்பவில்லை. மறுபடியும் கோனுட்சி என்று ஏற்படுமென அவர்கள் ஏங்கி எதிர்

பார்த்துக்கொண்டிருந்தனர். இரண்டாம் சார்லஸ் பட்டத்துக்கு வந்ததால் அவர்களது நெடுநாளைய விருப்பம் நிறைவேறிற்று.

பியூரிட்டன்களின் முற்போக்குக் கப்பலானது ஆங்கிலேய மக்களின் இயல்பான பழமை எனும் பாறையின்மீது மோதிச் சிதறுண்டது. ஆனல், அஃது அறவே அழிந்துவிடவில்லை. பியூரிட்டன்கள் வாள்முனையில் எந்தெந்தக் குறிக்கோள்களை அடைய விரும்பினரோ அந்தக் குறிக்கோள்களை எல்லாம் பிற்காலத்துப் பாராளுமன்றமானது சட்டரீதியாக அடைந்ததை நாம் காண்கிறோம். இரண்டாம் சார்லஸ் மன்னர் மீண்டும் அரசராக வந்தாரெனினும், பழைய அரசரது தனிச் சிறப்பதிகாரங்களை அவரால் செலுத்த முடியவில்லை. பியூரிட்டன்களால் ஏற்படுத்தப்பட்ட பிரிட்டிஷ் தீவுகளின் ஐக்கியமும் சமயப்பொறையும் பிற்காலத்தே ஏற்படுவதை நாம் பார்க்கிறோம். எனவே, பியூரிட்டன்களின் ஆட்சி உண்மையில் வீண்போகவில்லை எனத் துணிந்து கூறலாம்.

### பியூரிட்டன் புரட்சியின் விளைவுகள்

இரண்டாம் சார்லஸின் வருகையோடு முன்னைய ஸ்டூவர்ட்டுகளின் காலம் முடிவடைகிறது. பின்னைய ஸ்டூவர்ட்டுகளின் காலம் தொடங்குகிறது. முன்னைய ஸ்டூவர்ட்டுகளின் காலத்து உண்மையிலேயே அரசியல் கொள்கைகள் பல கொப்பளித்து வெளிவருவதைப் பார்க்கின்றோம். அக் கொள்கைகளை நடைமுறையில் நிறைவேற்றப் பல அரசியல் பரிசோதனைகள் நடைபெறுகின்றன. ஆனல், விக்டோரியாவின் காலத்தில்தான் அக் கொள்கை மலர்கள் நன்கு மலர்ந்து மணம் வீசத் தொடங்குகின்றன. ஸ்டூவர்ட்டுகள் காலத்து அவை படுதோல்வியையே அடைகின்றன. பழமை விரும்பிகளான ஆங்கில மக்கள் அவ்வுயரிய கொள்கைகளை ஏற்றுக்கொள்ளுமளவுக்கு மனப் பரிபக்குவம் அடையாததே அத் தோல்விக்குக் காரணமாகும். மற்றும் அக் கொள்கைகளைச் சிருட்டித்தவர்கள் நாட்டு மக்களின் நம்பிக்கையைப் பெருததும் அவை தோற்றதற்கொரு காரணமாகும்.

முன்னைய ஸ்டூவர்ட்டுகள் காலத்து மூன்று முக்கிய பரிசோதனைகள் நடைபெற்றதைப் பார்க்கிறோம். முதலில் சார்லஸ் பாராளுமன்றத்தின் உதவியின்றியே அரசாளப் பார்க்கிருர். அது முடியாமல்போகவே பின் பாராளுமன்றத்தை அவர் கூட்டுகிருர். நீடித்த பாராளுமன்றமானது மன்னனேடு ஒத்து ஆட்சிசெய்ய முயற்சிக்கிறது. இந்த இரண்டு பரிசோதனைகளுமே அரசரது பிடிவாத குணத்தால் தோல்வியடைகின்றன. அரசர் கொல்லப்படுகிருர். அதன் பின் அரசரைக் கொன்ற கட்சியானது அரசரும் பிரபுக்கள் சபையும் இல்லாத ஓர் அரசாங்கத்தை அமைத்து நடத்த முயல்கிறது. இஃது ஆங்கில மக்களால் வெறுக்கப்பட்டுத் தோல்வி

யடைகிறது. அத் தோல்விக்குக் காரணங்களை நாம் மேலே பார்த்தோம். இங்ஙனம் அது தோல்வியுற்றதேனும் அது மக்களின் பொது அபிப்பிராயத்தில் பெரியதொரு மாறுதலை ஏற்படுத்தி விட்டுச் சென்றது. பழைய நிறுவனங்கள் மீண்டும் வருகின்றன. அவைகளின் உருவம் மாறவில்லையெனினும், உயிர் மாறிவிடுவதை நாம் காணுகிறோம்.

பழையபடி கோனாட்சி நாட்டில் ஏற்பட்டதேனும், வரம்பிலா முடியரசு (Absolute monarchy) மீண்டும் உயிர்பெரு வகையில் மாய்ந்தது. மன்னன் தன் விருப்பம்போல் தனியாட்சி செலுத்தும் நிலை மாறி, பாராளுமன்றத்தின் துணைகொண்டே மன்னர் ஆட்சி புரிகின்ற நிலை நாட்டில் தோன்றியது. மன்னர்களும் பாராளுமன்ற உறுப்பினர்களும் ஒருவரை ஒருவர் சார்ந்து நின்று ஒற்றுமையோடு செயல்புரிவதால் மட்டுமே நாட்டு மக்களின் நலனை உண்மையில் வளர்க்க முடியும் என்பதை மன்னரது நண்பர்களும் பகைவர்களும் ஒருங்கே உணரத் தலைப்பட்டனர்.

பிரபுக்கள் சபை மீண்டும் கொண்டுவரப்பட்டதே எனினும், புரட்சிக்கு முன்பு அதற்கிருந்த மதிப்பும் மரியாதையும் குறைந்தன. அதற்குப் பதிலாகப் பொதுமக்கள் சபையின் சிறப்பும் செல்வாக்கும் வளர்ந்தன. இரண்டாம் சார்லஸ் காலத்தே பொதுமக்கள் சபையானது மன்னரை ஆதரித்து வந்ததே எனினும், தனது உரிமைகளையும் ஆதிக்கத்தையும் நன்கு நிலைநாட்டிக்கொள்ளத் தவறவில்லை. நீடித்த பாராளுமன்றத்தின் அடிச்சுவடுகளைப் பின்பற்றியே சார்லஸின் பொதுமக்கட் சபையும் அதற்குப் பின் வந்த சபைகளும் தொழிற்படலாயின.

ரோமன் கத்தோலிக்க மதத்தின் செல்வாக்கும் புரட்சிக்குப் பின் இங்கிலாந்தில் மாய்ந்தது. மீண்டும் எவ்வகையிலும் உயிர்ப்பிக்கப்படாவண்ணம் அம்மதப் பிரிவுக்குப் புரட்சி கர்த்தாக்கள் சாவுமணியடித்துவிட்டனர். ஆங்கிலிகப் பிராட்டஸ்டென்டு மதம் நாட்டின் தேசீய சமயமாக மாறிற்று. அரசாங்கத்தின் ஆதரவுபெற்ற, நன்கு நிலைநாட்டப்பட்ட மதமாக அது மாறியது. ஏனைய மதப் பிரிவுகள் நாளடைவில் ஓரளவு சுயேச்சையைப் பெற்றபோதிலும், ஆங்கிலிக மதத்தைப் போல் நாட்டின் தனிப் பெருஞ் சமயமாக எதுவும் திகழமுடியாமற் போயிற்று.

சிவில், இராணுவ அதிகாரங்களின் போட்டியின் விளைவாக சிவில் அதிகாரம் வெற்றி பெற்றது. நிலைப் படையின் மீது மக்களுக்கு ஒரு நீங்காத வெறுப்பு ஏற்பட்டுவிட்டது. எனவே, இராணுவம் நாளடைவில் பாராளுமன்றத்தின் பிடிக்குள் கொண்டுவரப்பட்டது. புரட்சியாளர்கள், தீவிரவாதிகள் ஆகியோரும் நாட்டில் செல்வாக்கிழந்தனர்.

# 12. முன்னிலை மீட்சி

இங்கிலாந்தில் முன்னிலை மீட்சி (Restoration in England, 1660)
அரசாங்க அமைப்பு (Government, 1660)—இரண்டு முன்னிலை மீட்சிகள் (Two Restorations)—பிரத்தியேகப் பாராளுமன்றம் (Convention Parliament) — சமுதாய முன்னிலை மீட்சி (Social Restoration) — அரசியல் முன்னிலை மீட்சி (Political Restoration) — பொது மன்னிப்பு மறப்புச் சட்டம் (Act of General Amnesty and Oblivion, 1660) — நிலச்சிக்கல் (Land question) — வருமான ஏற்பாடு (Revenue Settlement) சேனை — மதத் துறையில் முன்னிலை மீட்சி : சேவாய் மகாநாடு (Savoy Conference, 1661) கிளாரண்டன் சட்டத் தொகுதி (Clarenden Code) — நகராட்சிச் சட்டம் (Corporation Act, 1661) — ஒரே வழிபாட்டு முறைச் சட்டம் (Act of Uniformity, 1662)—இரகசியத் தொழுகைக் கூட்டச் சட்டம் (Conventicle Act, 1664) — ஐந்து மைல் சட்டம் (Five Mile Act, 1665)—சிவில் சட்டங்கள்.
ஸ்காட்லாந்தில் முன்னிலை மீட்சி (1660)
அயர்லாந்தில் முன்னிலை மீட்சி (1660)
புதிய அரசியலமைப்பு (New Constitution)

## இங்கிலாந்தில் முன்னிலை மீட்சி

1660ஆம் ஆண்டு, சார்லஸ் மன்னர் டோவர் துறைமுகத்தில் வந்திறங்கியபோது ஆங்கிலேய மக்கள் அவரைக் குதூகலத்தோடு வரவேற்றனர். தங்களது சொந்த அரசர் வந்துவிட்டார் என்ற மகிழ்ச்சியால் அவர்கள் ஆரவாரம் செய்தனர். ஆனால், சார்லஸோ ஆங்கிலப் பண்புகள் ஏதுவும் இல்லாதவராகக் காணப்பட்டார். வெளிநாட்டில் வெகு காலம் வாழ்ந்த காரணத்தால் நடையுடை பாவனைகளில் அவர் ஓர் அன்னியர் போன்றே தோற்றமளித்தார். அவரது அன்னை ஒரு ஃபிரெஞ்சு இளவரசி. எனினும் சார்லஸ், மீண்டும் தாம் ஃபிரான்ஸுக்கோ அன்றி வேறு நாடுகளுக்கோ போகவேண்டிய நிலைமை ஏற்படாவண்ணம் நடந்து கொள்ள வேண்டுமென உறுதியாகத் தீர்மானித்தார். இத் தீர்மானத்தை அவர் தமது வாழ்க்கை முழுவதுமே மாற்றவில்லை.

சார்லஸ் பார்வைக்கு அழகிய தோற்றமுடையவர். ஆனால், அவர் ஒரு சோம்பேறி. சுகபோகங்களிலும் கேளிக்கைகளிலும் கலந்து கொண்டு கடினமான உழைப்பேதுமின்றி அவர் காலங்கடத்த விரும்பினார். அவர் நல்ல அறிவாற்றலும், நகைச்சுவையும் நிரம் பியவர்; தமக்கெனச் சொந்தமான கொள்கைகள் இல்லாததால் அவரது நண்பர்கள் இழுத்த பக்கமெல்லாம் அவர் போகிற இயல் புடையராயிருந்தார். அவரும் அவரது நண்பர்களும் ஆடம் பர வாழ்க்கைகளை நடத்தினர். பிரபுக்கள் நீண்ட முடிகளை (wigs) வைத்துக்கொள்ளும் வழக்கம் சார்லஸின் காலத்தி லிருந்தே தொடங்குகிறது. அரண்மனைவாசிகள் ஒழுக்கமற்ற வாழ்க்கையினை நடத்திவந்தனர். எனினும், மக்கள் அவர்களை வெறுக்கவில்லை. இங்ஙனம் கேலியும் விளையாட்டும் நிறைந்த சூழ்நிலையைச் சார்லஸ் விரும்பினாரெனினும், அவரது அந்தரங்கத் தில் பல ஆழ்ந்த திட்டங்கள் மறைந்து கிடந்தன. வெளிப் பார்வைக்கு அவர் தம் கடமைகளைத் தட்டிக் கழிக்கும் சோம்பேறி போல் காணப்படினும், உள்ளூர அவருக்குத் தம் திட்டங்களை நிறைவேற்றவல்ல சூழ்ச்சியும் ஆற்றலும் பொதிந்து கிடந்தன. பிறரைப் பொய் சொல்லி ஏமாற்றுவதிலும் அவர் வல்லவர். எனினும், அவர் மக்களின் உணர்ச்சிகளைப் புறக்கணிக்கக் கூடா தென்ற உண்மையை உணர்ந்து அதற்கேற்ப நடந்துகொண்டார். அவரது நண்பர் ஒருவர் ஒரு சமயம் அவருக்கு ஒரு கல்லறை வாசகத்தை (Epitaph) எழுதித் தந்தார். அதில் அவர்,

'இதோ இங்குதான் எங்கள் தலைமைப் பிரபு, மன்னர் கிடக்கிறார். அவரது வார்த்தைகளை நம்புவார் யாருமில்லை; அறிவற்ற சொற்களெதையும் அவர் என்றும் சொன்னதுமில்லை; அறிவுள்ள செயல் எதையும் அவர் என்றும் செய்ததுமில்லை.'[1] எனக் குறிப்பிட்டிருந்தார். இதைக் கேட்ட அரசர் உடனே சமயோசிதமாக, 'ஆம், அது உண்மைதான். ஏனெனில், நான் பேசுகிற வார்த்தைகள் என்னுடையன. ஆனால், நான் செய்யும் செய்கைகள் எனது மந்திரிகளுடையவை'[2] எனக் கூறினார்.

### அரசாங்க அமைப்பு

சார்லஸ் இங்கிலாந்துக்கு வந்ததும் முதல் வேலையாக அவர் தம் அரசாங்கத்தை அமைப்பதில் முனைந்தார். மான்க் என்பவர் அவரிடம் ஒரு பெரிய பட்டியலை நீட்டி, அதனின்றும் பிரிவி கவுன்

[1] Here lies our sovereign Lord the King
Whose word no man relies on
Who never said a foolish thing
Nor ever did a wise one

[2] 'True' said Charles, with a ready wit 'for my words are my own, but my acts are my ministers.'

ஸிலர்களைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளும்படி கூறினார். அதில் காணப்பட்ட பெரும்பான்மையான பெயர்கள் பிரஸ்பிடீரியப் பெயர்களாயிருக்கக் கண்ட சார்லஸ் சிறிது துணுக்குற்றார். ஆஷ்லி கூபர் (Ashley Cooper) போன்ற ஓரிருவரை மட்டுமே அவர் அந்தப் பட்டியலிலிருந்து பொறுக்கி எடுத்தார். மற்றக் கவுன்ஸிலர்களை அவர் தமது பிரியம்போல் பொறுக்கிக்கொண்டார். அவரோடு வெளிநாடுகளுக்கு வந்த கவலியர்கள் எனும் கூட்டத்தினரிலிருந்தே கவுன்ஸிலரைப் பெரும்பாலும் அவர் தேர்ந்தெடுத்துக் கொண்டார். அவர்களில் மிக முக்கியமானவர்கள் சான்ஸலராக நியமிக்கப்பட்ட ஹைட் என்பாரும் (பின்னர் கிளாரண்டன் பிரபு), செயலாளராக நியமிக்கப்பட்ட நிகோலஸும், ஆர்மாண்ட் பிரபுவும் ஆவர். கிளாரண்டன் பிரபுவே உண்மையில் நாட்டை ஆண்டார். ஏழு ஆண்டுகளுக்கு அவர் இங்கிலாந்திலேயே ஒப்பாரும் மிக்காருமில்லாத ஒரு தனிச் செல்வாக்குடன் விளங்கினார். பழைய பாராளுமன்றத்தோடு கூடிய முடியரசையும், பழைய மத ஏற்பாட்டையும் இங்கிலாந்தில் நிலைநாட்டிவிட வேண்டுமென்பது அவரது குறிக்கோள்களாகும். பாராளுமன்றத்தின் அதிகார வரம்பைப் பற்றியும், மத ஏற்பாட்டைப் பற்றியும் சார்லஸ் கிளாரண்டனின் கொள்கைகளுக்கு முற்றிலும் மாறான கொள்கைகளை உடையவர். எனினும், அவர் தமது விருப்பம் நிறைவேறத் தக்கதொரு தருணத்தை எதிர்பார்த்து வாளாவிருந்தார்.

### இரண்டு முன்னிலை மீட்சிகள் (1660—1661)

இங்கிலாந்தில் இரண்டு முன்னிலை மீட்சிகள் நடைபெற்றன என்று ட்ரெவெல்யான் (Trevelyan) என்னும் ஆசிரியர் குறிப்பிடுகிறார். முதலாவது முன்னிலை மீட்சி 1660ஆம் ஆண்டு நடைபெற்றது. அதன்படி மன்னரும், பாராளுமன்றமும், உயர்வகுப்பாரும் பழைய நிலைக்கு மீண்டனர். இரண்டாவது முன்னிலை மீட்சியானது 1661ஆம் ஆண்டு நடைபெற்றது. அதில் பழைய ஆங்கிலிக்க மத ஏற்பாடு மீண்டும் கொண்டுவரப்பட்டது. முன்னையது பிரஸ்பிடீரியர்களடங்கிய பிரத்தியேகப் பாராளுமன்றத்தாலும், பின்னையது அரசரை ஆதரிப்போர் அடங்கிய கவலியர் பாராளுமன்றத்தாலும் கொண்டுவரப்பட்டன.

### பிரத்தியேகப் பாராளுமன்றம் (Convention Parliament)

முதல் முன்னிலை மீட்சியை உருப்படுத்திய பாராளுமன்றமானது மான்க் என்ற தளகர்த்தரால் 1660ஆம் ஆண்டில் கூட்டப்பட்ட ஒரு பிரத்தியேகப் பாராளுமன்றமாகும். மன்னரால் கூட்டப்படுகின்ற சட்ட சபைக்கே பாராளுமன்றம் எனப் பெயர். ஆனால், இச் சபையோவெனின், மன்னரால் கூட்டப்படவில்லை.

அதற்குப் பதிலாக அதுதான் மன்னரைக் கூப்பிட்டனுப்பி அரியாசனத்தமர்த்தியது. இங்கிலாந்தின் எதிர்கால அமைப்பைத் தீர்மானிக்கவும் சார்லஸ் அரசரின் பிரெடா அறிவிப்பை நடைமுறையில் கொண்டு செலுத்தவும் பிரத்தியேகமாகக் கூட்டப்பட்டதால், இச் சபை பிரத்தியேகப் பாராளுமன்றம் என அழைக்கப்படுகிறது. ஒன்பது மாதங்கள் பணியாற்றிய இப் பாராளுமன்றமானது, பழைய முடியாட்சி முறையை மீண்டும் ஏற்படுத்தியதோடு மட்டுமின்றி உயர் வகுப்பார் சமுதாயத்தில் செலுத்திவந்த ஆதிக்கத்தை மீண்டும் நிலைநாட்டியது.

### சமுதாய முன்னிலை மீட்சி (Social Restoration, 1660)

பொதுநலத் துரைத்தன காலத்தில் சமுதாயத்தில் செல்வாக்குடன் விளங்கிய பிரபுக்களும், கனவான்களும், வழக்கறிஞர்களும், மத குருமார்களும் தம் நிலையிழந்து தலைமறைவாய் வாழ்ந்துவந்தனர். எங்குப் பார்த்தாலும் சாதாரண மக்களின் ஆதிக்கமே காணப்பட்டது. பட்டணங்களிலும் பட்டிதொட்டிகளிலும், பாமர மக்கள் ஜனநாயகவாதிகளாகவும் (Democrats), குடியரசுவாதிகளாகவும் (Republicans) இருந்தனர். அவர்கள் தமக்குத் தாமே வகுத்துக்கொண்ட உரிமைப் பத்திரங்களின்படி (Charters) நகரங்களையும் கிராமங்களையும் ஆண்டுவந்தனர். பரம்பரை பரம்பரையாக வழங்கிய சமுதாய உயர்வு தாழ்வுகள் ஒடுங்கி, சமத்துவக் கொள்கை எங்கும் பரவியிருந்தது. சார்லஸின் வருகையால் பழைய பிரிட்டிஷ் சமுதாயம் மீண்டும் தழைத்தது. உயர் வகுப்பாரெல்லாம் மீண்டும் உயர்வு பெற்றுச் சமுதாயத்தில் தலைதூக்கி உலவினர். இவ்வுயர் வகுப்பாரிடமிருந்தே அரசரை ஆதரிப்போர் பலமும் சக்தியும் பெற்றனர்.

### அரசியல் முன்னிலை மீட்சி (Political Restoration)

அரசரை ஆதரித்த யாவரும் அவரது ஆட்சியானது 1649ஆம் ஆண்டிலிருந்தே தொடங்கிவிட்டதாகக் கருதினர். எனவே, அவ்வாண்டுக்குப் பின் இயற்றப்பட்ட சட்டங்கள் யாவும் செல்லுபடியாகாதென அவர்கள் கூறினர். அரசரது அங்கீகாரம் பெறுத சட்டங்களனைத்தையும் ஒழித்துவிட அவர்கள் விரும்பினர். அதன்படி எஞ்சிய பாராளுமன்றமும், கிராம்வெல்லின் பாராளுமன்றங்களும் இயற்றிய சட்டங்கள் யாவும் ரத்து செய்யப்பட்டன. அதன்பின் நாவாய்ச் சட்டம் போன்ற ஒரு சில பழைய சட்டங்கள் மீண்டும் நிறைவேற்றப்பட்டன. ஆனால், இக் கொள்கை எல்லாத் துறைகளிலும் கடைப்பிடிக்கப்படவில்லை. சான்றாகப் பியூரிட்டன்கள் காலத்துப் பிடிக்கப்பட்ட ஜமாய்க்கா தீவும், டன்கர்க் துறைமுகமும் கைவிடப்படவில்லை. ஒரு சில

ஆண்டுகள் கழித்து டன்கர்க் பட்டினத்தை ஆங்கிலேயர் ஃபிரெஞ்சுக்காரர்களுக்கே விற்றுவிட்டனரெனினும், ஜமாய்க்கா தீவை அவர்கள் கைவிட்டாரில்லை. நீடித்த பாராளுமன்றத்தின் செயல்கள் அனைத்தும் ரத்து செய்யப்பட்டன. பிஷப்புகள் மீண்டும் பாராளுமன்றத்தில் தமக்குரிய இடங்களைப் பெற்றனர். இங்ஙனம் பழைய அரசியல் நிலைமை ஓரளவு மீண்டது.

## பொது மன்னிப்பு, மறப்புச் சட்டம் (Act of General Amnesty and Oblivion, 1660)

அரசியல் அமைப்பை ஓரளவு முன்னைய நிலைக்கு மீட்டபின் பிரத்தியேகப் பாராளுமன்றமானது அரசரது பிரடா வாக்குறுதிகளை நிறைவேற்றுவதில் முனைந்தது. 'பொது மன்னிப்பு, மறப்புச் சட்டம்' என்ற ஒரு சட்டத்தையியற்றி, அதன் மூலம் மன்னருக்கு விரோதமாகப் போரிட்ட அனைவருக்கும், பொதுநலத் துரைத்தனத்தில் பங்கெடுத்துக்கொண்ட யாவருக்கும் அது பூரணமான மன்னிப்பை வழங்கியது. ஆனால், அரசரைக் கொல்வதற்குக் காரணமாயிருந்த அனைவரும், பிறருக்கு ஒரு பாடமாயிருக்கும் வகையில் கடுமையாகத் தண்டிக்கப்பட்டனர். சார்லஸுக்கு உண்மையில் அவர்களைக் கொன்றுவிட அவ்வளவாகப் பிரியமில்லை. ஆனால், தம் தந்தையின்பால் அவர் கொண்டிருந்த அன்பின் அறிகுறியாகவேனும் ஒரு சிலர் கொல்லப்படுவதை அவர் ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று. அரசனை விசாரணை செய்தவர்களில் பலர் சிறையில் தள்ளப்பட்டனர். மீதியுள்ளவர்கள் அரசாங்கத்தினிடம் சரணடைய வேண்டுமென உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. இதையறிந்த பலர் வெளிநாடுகளுக்கு ஓடிவிட்டனர். எஞ்சியிருந்தவர்களில் இருபத்தைந்து பேர் ஆயுள் சிறைத்தண்டனை விதிக்கப்பட்டனர். பதின்மூன்று பேர் கொல்லப்பட்டனர். அரசர் கொல்லப்பட மூலகாரணமாயிருந்த கிராம்வெல் ஏற்கெனவே இறந்துவிட்டார். எனினும், அவரது சடலமும், அவரது சகாக்களான அயர்ட்டன், பிராட்ஷா, பிரைட் என்பவர்களது பிரேதங்களும் வெஸ்ட்மின்ஸ்டர் திருக்கோயிலின்கண் இருந்த சவக்குழிகளினின்றும் தோண்டியெடுக்கப்பட்டுப் பின் டைபர்ன் (Tyburn) என்னுமிடத்தில் தூக்கிலிடப்பட்டன. அதன்பின் அவைகளின் தலைகள் வெட்டப்பட்டு மக்களின் கண்களில் படும்படி வைக்கப்பட்டன. பிரேதங்கள் தூக்குமேடைக்கருகிலேயே புதைக்கப்பட்டன. கிராம்வெல் பிரேதத்தை மட்டும் சில இரும்புப் படை வீரர்கள் இரவில் வந்து தூக்குமேடையினின்றும் கவர்ந்துகொண்டு வடக்கு நோக்கி ஓடிவிட்டதாக ஒரு கதையுண்டு. ஒருவேளை அவரது வெற்றிப் போர்க்களமான மார்ஸ்டன்மூரில் அவரது சடலம் புதைக்கப்பட்டிருக்கலாமென சௌத்கேட் எனும் ஆசிரியர் அபிப்பிராயப்

படுகிருர். பிம், பிளேக் என்ற இருவரது பிரேதங்களும் வெஸ்ட் மின்ஸ்டர் திருக்கோயிலினின்றும் அப்புறப்படுத்தப்பட்டன. இங்ஙனம் அரசனைக் கொன்றவர்கள்மீது பழி தீர்த்துக்கொண்ட பிரத்தியேகப் பாராளுமன்றமானது அரசரை விசுவாசித்த சர் ஹென்றி வேன் என்பாரையும் கொன்றது. அரசரும் அதற்குச் சம்மதித்தார். சுதந்திரத்தைப் பற்றித் தீவிரமான கருத்துகளைக் கொண்டிருந்ததே அவர் செய்த பாவம். சுதந்திரக் கொள்கைகளை இறுதிவரை பிறருக்கு எடுத்து விளம்பிக்கொண்டே அவர் இறந்தார். கொல்லப்பட்டவர்களில் மிக முக்கியமானவர்கள் வழக்கறிஞர் குக் (Cook) என்பாரும், ஹாரிசன் (Harrison) என்பாரும் ஆவர். நாட்டைவிட்டு ஓடியவர்களில் மிக முக்கிய மானவர் சுவிட்சர்லாந்துக்கு ஓடிப்போன லட்லோ (Ludlow) எனும் பேரறிஞர் ஆவார்.

## நிலச் சிக்கல் (Land Question)

மன்னருக்கு விரோதமாகப் போரிட்டவர்களின் உயிருக்கும், சொத்துக்கும் எந்த இடைஞ்சலும் ஏற்படாமல் பாதுகாப்பதாகச் சார்லஸ் வாக்குறுதி அளித்திருந்தார். ஆனுல், உள்நாட்டுப் போர் நடைபெற்ற காலத்து மன்னரை ஆதரித்ததால் நிலமிழந்த பல பிரபுக்களும் தம் நிலங்களை மீண்டும் பெற விரும்பினர். அந்நிலங்கள் யாவும் அப்போது, பணக்காரப் பியூரிட்டன்கள், போர் வீரர்கள் ஆகியவர்களின் கைகளிலேயே இருந்தன. அவைகளை அவர்களிட மிருந்து பலவந்தமாகப் பறிக்கச் சார்லஸ் விரும்பவில்லை. எனவே, இந்த நிலச்சிக்கலைத் தீர்க்கும் பொறுப்பைப் பிரத்தியேகப் பாராளு மன்றமானது நீதிமன்றங்களுக்கு விட்டுவிட்டது. நீதிமன்றங் கள் நிலச் சிக்கலைத் தீர்க்க ஒரு சட்டத்தை இயற்றின. அதன் படி பாராளுமன்றத்தால் பலவந்தமாகப் பறிமுதல் செய்யப்பட்ட நிலங்கள் யாவும் திருப்பித் தரப்பட்டன. மடாலயங்கள், பெரும் பிரபுக்கள் முதலியோர் தாம் இழந்த நிலங்களை மீண்டும் பெற்றனர். ஆனுல், அரசரை ஆதரித்த பலர் தங்கள் மீது பாராளுமன்றத்தால் விதிக்கப்பட்ட வரிகளையும் அபராதத்தையும் செலுத்த இயலாது தங்கள் நிலங்களை விற்றுவிட்டவர்களாக இருந்தனர். அவர்களுக்கு மீண்டும் நிலம் கிடைக்க வழியில்லை. இதனுல் கோபமுற்ற சிலர் பொது மன்னிப்பு மறப்புச் சட்டமானது அரசரது எதிரிகளை மன்னித்து, நண்பர்களை மறந்துவிட்டது என்று குறை கூறினர். எனினும், பல சுயேச்சையாளர்கள் நிலமிழந்தனர். திடீர் பணக் காரர்களாக மாறிய எளிய போர் வீரர்களும் அதிகாரிகளும் மீண்டும் தங்களது பழைய நிலையை அடைந்தனர். சுயேச்சை யாளர் பிரபுத்துவம் (Independent Aristocracy) இங்கிலாந்தில் ஒழிந்தது. ஆனுல், அயர்லாந்தில் அது ஒரு பெரும் நிலப்பிரபுத் துவமாக (Landed Aristocracy) நிலைபெற்றது.

### வருமான ஏற்பாடு (Revenue Settlement)

பொருள் முட்டுப்பாட்டினுலேயே முதலாம் சார்லஸுக்குப் பல தொல்லைகளும் விளைந்தன என்பதை உணர்ந்த பிரத்தியேகப் பாராளுமன்றமானது இரண்டாம் சார்லஸுக்கும் ஒரு நிரந்தரமான வருமானம் வர ஏற்பாடு செய்தது. டன் எடை வரி, பவுண்டுக் கட்டணம் என்னும் வரிகளை வசூலிக்கும் உரிமையை அது அரசருக்குத் தந்தது. அரசரது நிலங்களிலிருந்து வருமானம் பெறவும் அவருக்கு உரிமையை யளித்தது. ஆனால், பொதுநலத் துரைத்தனக் காலத்தில் பீர் முதலிய போதைப் பொருள்கள் மீது விதிக்கப் பட்ட கலால் வரியை (Excise duty) அது நீக்கவில்லை. நிலமானிய முறைப்படி நிலப்பிரபுக்கள் அரசருக்குச் செலுத்தவேண்டிய பல நிலமானியக் கட்டணங்களுக்குப் (Feudal Incidents) பதிலாக அரசர் கலால் வரியை வசூலித்துக்கொள்ளவேண்டுமென அது திட்டம் செய்தது. இதனுல் நிலச் சொந்தக்காரர் அனைவரும் அரசருக்கு இறை செலுத்துவதினின்றும் தப்பித்துக்கொண்டனர். ஆனுல், ஏராளமான எளிய மக்களையே கலால் வரி பெரிதும் பாதித்தது. மூன்ரும் வில்லியம் காலம் வரை பாராளுமன்றம், நிலவரி எதையும் பிரபுக்கள் மீது விதிக்கவில்லை. இங்ஙனம் பலவகையிலும் அரசருக்கு ஆண்டு ஒன்றுக்கு 12,00,000 பவுன்கள் மொத்த வரும்படி வருவதற்கான ஏற்பாட்டைப் பாராளுமன்றம் செய்தது. ஆனுல், நடைமுறையில் மேற்சொன்ன வழிகளால் அரசருக்கு அவ்வளவு வருமானம் கிட்டவில்லை. எனவே, அவர் தம் செலவுகளை ஈடுகட்டக் கடன் வாங்கவேண்டிய நிலைமையே ஏற்பட்டது.

### சேனை

அரசருக்கு விரோதமாகப் போரிட்ட சேனையை அப்படியே வைத்துக்கொள்ள யாரும் விரும்பவில்லை. இரண்டாம் சார்லஸ் லண்டனில் நுழைந்தபோது அவரை வரவேற்காத கூட்டம் அச் சேனையொன்றே யாகும். எனவே, அதைக் கலைப்பதற்கான ஏற்பாடுகளைப் பாராளுமன்றம் செய்தது. போர்வீரர்களுக்குச் சேரவேண்டிய சம்பளப் பாக்கிகள் யாவையும் தந்த பின் சேனையின் பல பகுதிகளை அரசாங்கம் கலைத்துவிட்டது. கோல்ட் ஸ்ட்ரீம் காவற்படை (Cold Stream Guards) எனப்படும் இரண்டு காலாட்படைப் பகுதிகளையும் சில குதிரைப் படைப் பகுதிகளையும் மட்டுமே அரசர் கலைக்கவில்லை. 5,000 பேர்களடங்கிய இச் சேனையை மன்னர் தன்னைக் காப்பதற்கென வைத்துக்கொண்டார். தாளடைவில் அதிலிருந்த பியூரிட்டன் வீரர்களை எல்லாம் அரசர் அகற்றிவிட்டார். அரசரை முழுமையும் ஆதரிக்கும் இராணுவமாக அப் படை மாறியது. அதைக்கொண்டு அரசருக்கு விரோதமாகக் கிளம்பும் எந்தக் கலகத்தையும் அடக்க வசதி ஏற்பட்டது. அரசருக்கு விரோதமாகக் கலகங்கள் கிளம்பாமல் தடுப்பதற்காகப் பல

நகரங்களின் கோட்டை மதிற்சுவர்களை இடித்துவிடும்படி அரசாங்கம் ஆணையிட்டது. அரசரை ஆரம்பத்திலிருந்தே ஆதரித்த ஆக்ஃஸ்போர்டு நகரத்தின் மதில்சுவர் மட்டுமே இடிக்கப்படவில்லை. டன்கர்க், டான்ஜியர் என்ற பட்டினங்களிலும் இரு சேனைப் பகுதிகள் வைக்கப்பட்டன. இவைகள் மீதெல்லாம் சட்ட ரீதியாக எவ்வித ஆதிக்கமும் செலுத்த இயலாத நிலையில் மன்னர் இருந்தார். ஆனால், 'சேனா விதிகள்' (Articles of War) என்னும் விதிகளை மன்னர் அவ்வப்போது ஏற்படுத்திச் சேனாவீரர்களிடம் கட்டுப்பாட்டை வளர்த்தார்.

### மதத்துறையில் முன்னிலை மீட்சி (Religious Restoration)

நாட்டில் பற்பல சிக்கல்களையும் தீர்த்த பிரத்தியேகப் பாராளுமன்றமானது மதத்துறையில் மாற்றம் எதுவும் செய்யவில்லை. அவ் வேலையை அது தனக்குப் பின் முறைப்படி கூடப்போகும் பாராளுமன்றத்துக்கு விட்டுவிட்டு, 1660ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் அது கலைந்தது. இப் பாராளுமன்றத்தைச் சார்லஸ் மன்னர், 'குணப்படுத்திய ஆசீர்வதிக்கப்பட்ட பாராளுமன்றம்' (Healing and Blessed Parliament) என்று புகழ்ந்துரைத்தார். இதற்குப்பின் 1661ஆம் ஆண்டு கூடிய பாராளுமன்றத்தில் பெரும்பான்மையோர் அரசனை முழுக்க முழுக்க ஆதரித்த இளைஞர்களாயிருந்தனர். அவர்களுக்குத் தாடி வளரும்வரை, தாம் அவர்களை வைத்திருக்கப்போவதாகச் சார்லஸ் கூறினார். இராஜபக்தி நிறைந்த இப்பாராளுமன்றம் **கவலியர் பாராளுமன்றம்** எனப் பெயர் பெற்றது (1661-1679).

### சேவாய் மகாநாடு

கவலியர் பாராளுமன்றத்தின் உறுப்பினர்கள் பலரும் ஆங்கிலிக்க மதத்தைச் சேர்ந்தவர்கள். அவர்கள் ஆங்கிலிக்க மதத்தை மீண்டும் இங்கிலாந்தில் நிலைநாட்ட விரும்பினர். மதப்பிரச்சினையைத் தீர்க்கும்படி அவர்கள் அரசருக்கு ஒரு விண்ணப்பம் செய்து கொண்டனர். அதன்படி அரசர் சேவாய் மகாநாடு (Savoy Conference) என்ற ஒரு சமய மகாநாட்டைக் கூட்டினார். எபிஸ்கோபலியர்களுக்கும் பிரஸ்பிடீரியர்களுக்கும் பிடித்தமான ஒரு மத ஏற்பாட்டை அவர்களால் வகுக்க முடியவில்லை. ஜெபப் புத்தகத்தைச் சிறிது மாற்றி அதை எல்லா மதப் பிரிவினருக்கும் ஏற்றதாகச் செய்யவேண்டுமென அம் மகாநாடு சிபாரிசு செய்தது. அதைப் பியூரிட்டன்கள் ஒப்புக்கொள்ளத் தயாராயில்லை. இதனால் அவர்களின் பலம் குறைந்தது. நாளடைவில் அவர்களின் கூட்டம் தேய்ந்து, சிறு மதப்பிரிவினராக அவர்கள் மாறினர். ஆங்கிலிக்க மதம் நாட்டின் தேசிய மதமாக மலர்ந்தது.

சேவாய் மகாநாடு தோல்வியுறவே நாட்டின் மத ஏற்பாட்டை நிர்ணயிக்கும் பொறுப்பைச் சார்லஸ் பாராளுமன்றத்தினிடம் ஒப்படைத்தார். பாராளுமன்றம் குதூகலத்துடன் நாட்டில் ஆங்கிலிக்க மதத்தை நிலைப்படுத்துவதில் முனைந்தது. பாராளுமன்றத் தலைவராயிருந்த கிளாரண்டன் பிரபுவின் பெயரால் நான்கு சட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. அவைகளுக்குக் கிளாரண்டன் சட்டத் தொகுதி (Clarendon Code) எனப் பெயர் வழங்கப் பட்டது.

**கிளாரண்டன் சட்டத் தொகுதி (1661-1665) : மாநகராட்சிச் சட்டம் (Corporation Act, 1661)**

1661ஆம் ஆண்டு பாராளுமன்றம் 'மாநகராட்சிச் சட்டம்' என்னுமொரு சட்டத்தைக் கொண்டுவந்தது. அதன்படி மாநகராட்சி மன்றங்களில் (Corporations) பதவி வகிப்போரெல்லாம் ஆங்கிலிக்கத் திருச்சபையின் சடங்குகளின்படியே புனிதத் திருவிருந்தை (Holy Communion) ஏற்றுக்கொள்ள வேண்டுமென அச் சட்டம் வற்புறுத்தியது. மேலும் அவர்கள் ஸ்காட்லாந்திய ஒப்பந்தத்தை மறுப்பதாயும், அரசரை எதிர்ப்பதில்லை (Non-resistance) என்று வாக்குறுதி எடுத்துக்கொள்ளும்படியும் அது அவர்களைப் பலவந்தப்படுத்தியது. இதனால் பிரஸ்பிடீரியர்கள் நகராட்சி மன்றங்களில் நுழைய வழியில்லாமல் போய்விட்டது. அக்காலத்தில் பிரஸ்பிடீரியர்கள்தான் நகராட்சி மன்றங்களில் மிகச் செல்வாக்கும் பலமும் பெற்றிருந்தனர். பாராளுமன்ற உறுப்பினர்களைத் தேர்ந்தெடுப்பதிலும் அவர்கள் விருப்பப்படியே எல்லாம் நடந்து வந்தது. எனவே, நகராட்சி மன்றங்களில் அவர்கள் நுழைய முடியவில்லை. பாராளுமன்றத்தில் அவர்களது கட்சியினர் இடம் பெறுவதும் முடியாமற் போயிற்று.

**ஒரே வழிபாட்டு முறைச் சட்டம் (1662)**

1662ஆம் ஆண்டு பாராளுமன்றம் ஒரே வழிபாட்டு முறைச் சட்டத்தை (Act of Uniformity) இயற்றியது. இச் சட்டம் ஒரே வழிபாட்டு முறையை நாடெங்கும் புகுத்தியது. குருமார்கள் அனைவரும், பள்ளியாசிரியர்களும், கல்லூரி உறுப்பினர்களும் பொது வழிபாட்டின்போது (Public Worship) ஒரே பொது ஜெபப் புத்தகத்தை (Books of Common Prayer) பயன்படுத்த வேண்டுமென அது வற்புறுத்தியது. அதோடு மன்னரை எதிர்ப்பதில்லை என்றும், 'புனிதக் கூட்டும் ஒப்பந்தமும்' என்ற ஒப்பந்தத்தை மறுப்பதாகவும் அவர்கள் வாக்குறுதி எடுத்துக்கொள்ள வேண்டும். குருமார் அனைவரும் பிஷப்புகளால் நியமிக்கப்பட வேண்டுமெனவும் இச் சட்டம் கூறியது. இச் சட்டம் பியூரிட்டன் குருமார்களுக்கு

எதிராகக் கொண்டுவரப்பட்டது. அவர்களில் சுமார் இரண்டாயிரம் பேர் தூய பார்த்தலோமியூ தினத்தன்று (St. Bartholomews day) பதவியிழந்தனர் (1662ஆம் ஆண்டு, ஆகஸ்டு மாதம், 24ஆம் தேதி). நாட்டின் அறிவுச் செல்வர்களில் ஐந்தில் ஒரு பகுதியினர் ஆங்கிலிக்கத் திருச்சபையினின்றும் வெளியேறினர். பலர் நாட்டையும் விட்டு வெளியே சென்றனர். அதனால் அவர்களுடைய மேலான அறிவுப் பணியை ஆங்கில நாடு இழந்தது. ரிச்சர்டு பாக்ஸ்டர், வில்லியம்பேடிஸ், எட்மண்ட் கலமி, ஜான் வெஸ்லியின் இரு பெருந் தாத்தாக்கள் ஆகியவர்கள் இங்ஙனம் வெளியேறியவர்களுள் முக்கியமானவராவர். இங்ஙனம் ஒதுக்கப்பட்ட நிலையிலும் கூட மில்டன் என்ற பியூரிட்டன் கவிஞர், 'இழந்த சொர்க்கம்' (Paradise Lost), 'மீண்ட சொர்க்கம்' (Paradise Regained) என்ற இரு பெருங்காவியங்களை இயற்றினார். ஜான் பன்யன்(John Bunyan) என்ற பியூரிட்டன் பிரசாரகர் 'புனித யாத்திரிகனின் முன்னேற்றம்' (The Pilgrim's Progress) என்ற சாகா இலக்கியத்தை எழுதினார். பிரஸ்பிடீரியர்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து, தங்கள் உரிமைகளுக்காகப் போராட ஆரம்பித்தனர். கடைசியில் அவர்கள் பல்லாண்டுகளுக்குப் பின் சமயப் பொறையைப் பெற்றனர்.

### இரகசியத் தொழுகைக் கூட்டத் தடைச் சட்டம் (1664)

1664 ஆம் ஆண்டு இரகசியத் தொழுகைக் கூட்டத் தடைச் சட்டத்தைப் பாராளுமன்றம் (Conventicle Act) இயற்றியது. பொது ஜெபப் புத்தகத்தின்படி வழிபாடு நிகழ்த்தாத ஐந்து பேருக்கு மேற்பட்டவர்கள் தொழுகைக்காக ஒன்று கூடுதலை அச்சட்டம் தடுத்தது. அப்படி அவர்கள் ஒன்றுகூடினால் முதல் தடவை அவர்களுக்கு அபராதம் விதிக்கப்படும். இரண்டாம் முறையும் குற்றம் செய்தால் அரசாங்கம் அவர்களுக்குச் சிறைத் தண்டனை விதிக்கும். மூன்றும் முறையும் அவர்கள் குற்றம் செய்தால் நாடு கடத்தப்படுவர். இச் சட்டமானது ஆங்கிலிக்கத் திருச்சபையினின்றும் விலக்கப்பட்ட குருமார்கள் இரகசியமாகத் தொழுகை நடத்துவதைத் தடுத்தது. ஜூரி முறைப்படி அவர்கள் விசாரிக்கப்படுவதை இச் சட்டம் தடை செய்தது. இதனால் ஆங்கிலிக்கத் திருச்சபைக்கு இணங்காதவர்கள் (Non conformists) பலர் சிறைப்பட்டனர். அவர்களில் ஒருவரான ஜான் பன்யன் எனும் பெரும்புலவர் எல்லோராலும் பாராட்டப்பட்டவர். லண்டன் சிறையில் மட்டும் 500 குவேக்கர்கள் தள்ளப்பட்டனர்.

### ஐந்து மைல் சட்டம் (1665)

1665ஆம் ஆண்டில் பாராளுமன்றம் 'ஐந்து மைல் சட்டம்' (Five Mile Act) என்னுமொரு சட்டமியற்றியது. திருச்சபையி

னின்றும் நீக்கப்பட்ட குருமார்கள் எந்த நகருக்கும் ஐந்து மைல் எல்லைக்குள் வந்து பிரசாரம் செய்வதை இச் சட்டம் தடுத்தது. அவர்கள் 5 மைலுக்குள் குடியேறுவதையும் கோயில் கட்டுவதையும் அது தடுத்தது. நகர்களில் வாழ்ந்த பல குருமார் களுக்கு இதனால் வருமபடி குறைந்தது. அவர்கள் கிராமப் புறங் களுக்குச் சென்றுவிட்டனர். நகரவாசிகளாயிருந்த இணங்கா தாருக்குச் சமயச் சொற்பொழிவுகளைக் கேட்கும் வாய்ப்புக் கிட்டா தொழிந்தது.

### சிவில் சட்டங்கள்

மேற்சொன்ன பல சமயச் சார்பான சட்டங்களை இயற்றிய கவலியர் பாராளுமன்றமானது சிவில் துறையிலும் சில முக்கியமான சட்டங்களை இயற்றியது. மன்னருக்கு அது சகல அதிகாரங் களையும் வழங்கியது. மன்னரில்லாமல் பாராளுமன்றத்துக்குச் சட்டம் செய்யும் அதிகாரம் இல்லை எனவும், மன்னருக்கே நாட்டுப் படை, கடற்படை இவற்றின் மீது பூரண அதிகாரமுண்டெனவும் அது அறிவித்தது. அதன் பின்னர் அது தன் அதிகாரத்தையும் ஓரளவு குறைத்துக் கொண்டது. 1661 ஆம் ஆண்டில் ' ஆரவார விண்ணப்பத் தடைச் சட்டம் ' (Act Against Tumultuous Petition-ing) ஒன்றை அது இயற்றியது. அதன்படி அரசியலமைப்பின் மாற்றங்களை வேண்டி ஏராளமாக மக்கள் சேர்ந்து கையெழுத் திட்ட விண்ணப்பங்கள் பாராளுமன்றத்திடம் சமர்ப்பிப்பது தடுக்கப் பட்டது. 1662-ல் ஏற்பட்ட அனுமதிச் சீட்டுச் சட்டமானது (Licensing Act) பிரசுர உரிமையைப் பெரிதும் தடை செய்தது. பிரசுர முதலாளிகளின் எண்ணிக்கையும் பிரசுரப் பொறிகளின் எண்ணிக்கையும் இச் சட்டத்தால் கட்டுப்படுத்தப்பட்டன. அரசாங்க அதிகாரிகளின் அனுமதியின்றி எதுவும் வெளியிடக் கூடாதென்றும் அச் சட்டம் கூறியது. 1364 ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பட்ட மூவாண்டுச் சட்டம் (Triennial Act) பாராளு மன்றம் மூன்றாண்டுகட்கு ஒருமுறை கூடவேண்டுமென வற்புறுத்தியது.

## ஸ்காட்லாந்தில் முன்னிலை மீட்சி (1660)

தமது தந்தையின் காலத்து ஸ்காட்லாந்தில் நிலவிய நிலை மையை மீண்டும் அப்படியே கொண்டுவருவது முடியாத காரியம் என்பதை இரண்டாம் சார்லஸ் நன்கு உணர்ந்தார். ஆங்கில ஜெபப் புத்தகத்தை ஸ்காட்லாந்தில் திணிக்க முயன்று அதனால் அவரது தந்தை பட்டபாட்டை அவர் நன்கு அறிந்திருந்தாராதலின் அவர் மீண்டும் அந்தத் தவற்றைச் செய்யத் துணியவில்லை. ஒரே வழிபாட்டு முறையை அவர் ஸ்காட்லாந்தில் வற்புறுத்தவில்லை.

ஆனால், திருச்சபையில் குருமார்களின் ஆட்சியை அவர் அங்கு ஏற்படுத்த விரும்பினர். அதற்காக 1661ஆம் ஆண்டில் 'தள்ளுபடிச் சட்டம்' (Recissory Act) என்ற ஒரு சட்டத்தை ஸ்காட்லாந்துப் பாராளுமன்றம் கொண்டுவந்தது. அதன்படி 1625ஆம் ஆண்டுக்குப் பின் (முதலாம் சார்லஸ் ஸ்காட்லாந்து அரசராக முடிசூட்டிக்கொண்ட ஆண்டு முதல்) ஸ்காட்லாந்தில் இயற்றப்பட்ட சட்டங்கள் யாவும் தள்ளுபடி செய்யப்பட்டன. ஸ்காட்லாந்து, இங்கிலாந்து இரண்டும் ஐக்கியமடைந்த சட்டமும் இதனால் ரத்து செய்யப்பட்ட காரணத்தால் ஒன்பது ஆண்டுகள் ஒன்ருக இருந்த இவ்விரு நாடுகளும் பிரிந்தன. எபிஸ்கோபல் திருச்சபை ஸ்காட்லாந்தில் ஏற்படுத்தப்பட்டது. பல பிஷப்புகள் ஆங்காங்கே நியமிக்கப்பட்டனர். ஷார்ப் (Sharp) என்பார் தூய ஆண்ட்ரூஸ் நகர் ஆர்ச் பிஷப்பாக நியமிக்கப்பட்டார். லாடர்டேல் எர்ல் பிரபு (Earl of Lauderdale) ஸ்காட்லாந்தின் அமைச்சராகவும் (Secretary of State), மிடில்டனின் எர்ல் பிரபு (Earl of Middleton) ஸ்காட்லாந்தின் உயர் ஆணைப் பிரபுவாகவும் (Lord Commissioner) நியமிக்கப்பட்டனர். இம் மூவரும் சேர்ந்துகொண்டு பிரஸ்பிடீரிய மத ஏற்பாட்டை ஸ்காட்லாந்தில் ஒழித்துக்கட்டக் கங்கணம் கட்டிக்கொண்டு உழைத்தனர். அவர்கள் எபிஸ்கோபல் திருச்சபையை மீண்டும் ஸ்காட்லாந்தில் ஏற்படுத்தினர். புனிதக் கூட்டும் ஒப்பந்தமும் என்ற உடன்பாட்டைக் கொளுத்துமாறு ஆணையிட்டனர். அவ்வொப்பந்தத்தை எல்லா அதிகாரிகளும் மறுக்கவேண்டுமென்று கட்டாயப்படுத்தினர். குருமார்களனை வரும் பிஷப்புகளாலேயே நியமிக்கப்பட வேண்டுமென உத்தரவிட்டனர். இந் நிபந்தனைக்கு மறுத்த 350 குருமார்களைப் பதவிகளிலிருந்து நீக்கினர். பிஷப்புகளின் அதிகாரத்தை நிலைநாட்ட உயர் ஆணை நீதிமன்றமொன்றை ஏற்படுத்தினர். ஒப்பந்தக்காரர்களின் (Convenanters) தலைவராக விளங்கிய ஆர்கைல் பிரபுவின்மீது(Argyle) இராஜத் துரோகக் குற்றம் சாட்டிக் கொன்றனர்.

மிடில்டன் எர்ல் பிரபுவைப் பதவியினின்றும் அவர்கள் நீக்கினர். லாடர்டேல் எர்ல் பிரபுவும் ஆர்ச் பிஷப்ஷார்ப்பும் ஸ்காட்லாந்தில் கொடுங்கோன்மை புரிந்தனர். அடக்குமுறை எங்கும் தாண்டவமாடியது. இதை எதிர்த்துப் பியூரிட்டன்கள் கலகம் செய்தனர். ஆர்ச் பிஷப் ஷார்ப் என்பவர் 1679-ல் கலகக்காரர்களால் கொலை செய்யப்பட்டார். கலகக்காரர்கள் ஜான் கிரஹாம் (John Graham) என்ற அரசர் கட்சியினரை ட்ரம்க்ளாக் (Drumclog) என்னுமிடத்தில் தோற்கடித்துக் கிளாஸ்கோவைப் பிடித்தனர். ஆனால், மான்மவுத் கோமகன் (Duke of Manmouth) அவர்களை இறுதியாகப் பாத்வெல் பிரிக் (Bothwell Brig) என்னுமிடத்தில் தோற்கடித்தார்.

மான்மவுத் கோமகன் எதிரிகளுக்குக் கருணை காட்டினார். அதனால் அவரை அரசர் ஸ்காட்லாந்திலிருந்தும் திருப்பி அழைத்துக் கொண்டார். யார்க் கோமகனை ஜேம்ஸை ஸ்காட்லாந்தின் ராயல் கமிஷனராக நியமித்தார். அவர் கலகக்காரர்களை மிகவும் கடுமையாகத் துன்புறுத்தியதால் அவரது ஆட்சிக்காலத்தை 'கொலைக்காலம்' (Killing Time) என ஸ்காட்லாந்தியர் அழைத்தனர்.

## அயர்லாந்தில் முன்னிலை மீட்சி (1660)

அயர்லாந்தில் பழைய நிலைமையை மீண்டும் கொணர்வது சார்லஸுக்கு அவ்வளவு எளிதாயில்லை. உண்மையில் தமது தந்தைக்காகப் போராடி அதனால் நிலங்களை இழந்த பல கத்தோலிக்கர்களுக்கும் அவற்றை மீட்டுக் கொடுக்கவே சார்லஸ் விழைந்தார். ஆனால், அந் நிலங்களை எல்லாம் வைத்துக் கொண்டிருந்தவர்கள் கிராம்வெல்லின் பழைய படைவீரர்களாவர். அவர்களிடமிருந்து நிலங்களைப் பிடுங்கினால் அவர்கள் ஒருவேளை கலகத்திலீடுபடக்கூடுமெனச் சார்லஸ் பயந்தார். எனவே, அவர், இரு சாராருக்கும் பொதுவில் நிலவுரிமை நிர்ணயச் சட்டம் (Act of Settlement) எனுமொரு சட்டத்தை அயர்லாந்து ஆர்மாண்ட் பிரபு மூலம் கொண்டுவந்தார் (1662ஆம் ஆண்டில்). பியூரிட்டன்கள் தம் நிலபுலன்களை அப்படியே வைத்துக்கொள்ள வேண்டுமெனவும் அதற்குச் சமமான நிலங்களைக் கத்தோலிக்கர்கள் பெறவேண்டுமெனவும் அச் சட்டம் கூறியது. ஆனால், நடைமுறையில் இச் சட்டத்தைக் கொண்டு செலுத்துவது அரியதாயிருந்தது. ஏனெனில், அயர்லாந்தில் இருசாராருக்கும் கொடுக்கக்கூடிய அளவு அவ்வளவு நிலபுலன்களில்லை. எனவே, 1665-ல் மீண்டும் ஒரு சட்டம் கொண்டுவரப்பட்டது. நில நிர்ணய விளக்கச் சட்டம் (Act of Explanation) என்ற அச் சட்டத்தின்படி பியூரிட்டன் படைவீரர்கள் தங்கள் நிலத்தில் மூன்றில் ஒரு பகுதியைக் கத்தோலிக்கர்களுக்காக விட்டுக்கொடுக்க வேண்டுமென ஏற்பட்டது. இதனால் பியூரிட்டன்கள் பலரும் அதிருப்தியடைந்தனர். கத்தோலிக்கர்களும் தம் நிலமனைத்தும் தங்கட்குக் கிடைக்காததால் மனவருத்தமடைந்தனர். இந் நிலையில் அயர்லாந்தியரின் வருத்தத்தை வளர்க்கக்கூடிய இன்னொரு சட்டமும் பாராளுமன்றத்தால் இயற்றப்பட்டது. 'ஆங்கிலச் சட்டம்' (English Act) என்ற அச்சட்டமானது ஆங்கிலேய விவசாயிகளை அயர்லாந்தின் போட்டியினின்றும் காப்பாற்றியது. அயர்லாந்திலிருந்து ஆடுமாடுகள், இறைச்சி, வெண்ணெய் முதலியன இங்கிலாந்துக்கு ஏற்றுமதி செய்யப்படுவது தடுக்கப்பெற்றது. ஸ்காட்லாந்தைப் போலவே அயர்லாந்தும் முன்னிலை மீட்சியின்பின் இங்கிலாந்தினின்றும் பிரிந்தது.

இரு நாடுகளுக்கும் வெவ்வேறு பாராளுமன்றங்கள் ஏற்பட்டன. இதனால் அயர்லாந்தின் வியாபாரம் பெரிதும் பாதிக்கப்பட்டது.

புதிய ஆட்சிமுறை அமைப்பு (New polity)

இங்ஙனம் இங்கிலாந்தில் பழைய நிலைமை மீண்டதுபோல் வெளிக்குத் தோன்றினாலும், உண்மையில் புதிய நிலைமைக்கும் பழைய நிலைமைக்கும் பல வேறுபாடுகள் இருந்தன. அரசரை ஆதரித்த கவலியர் பாராளுமன்றமானது தனது ஆதிக்கத்தை நன்கு நிலைநாட்டிக் கொள்ளவும் தவறவில்லை. மன்னர் நிலைப்படை வைத்துக் கொள்வதை (Standing Army) அப் பாராளுமன்றம் தடுத்தது. வெளிநாட்டுப் படையெடுப்புக்காக மட்டுமே அரசன் படைதிரட்ட வேண்டுமெனக் கூறும் நாட்டுப் படைச் சட்டத்தை (Militia Act) மீண்டும் அது கொணர்ந்தது. மன்னர் பொருளாதாரத் துறையில் பாராளுமன்றத்தையே நம்பி வாழ அது திட்டம் வகுத்தது. அம் மன்றத்தின் உதவியின்றி அரசர் வரி தண்டுதலை அது சட்ட விரோதமாக்கியது. ஆங்கிலத் திருச்சபையின் மீது அரசர் செலுத்திவந்த ஆதிக்கத்தையும் பாராளுமன்றம் கைப்பற்றிக் கொண்டது. மதத்துறையில் மன்னர் கொடுங்கோன்மை செலுத்துவதற்குக் காரணமாயிருந்த உயர் ஆணை நீதிமன்றத்தை அது மீட்டும் உயிர்ப்பிக்கவில்லை. அதேபோன்று அரசன் தன்னிச்சைப்படி நீதி வழங்கிக் கொடுங்கோல் புரியச் சாதகமாயிருந்த நட்சத்திர நீதிமன்றங்கள் முதலிய நிர்வாக நீதிமன்றங்களையும் அது உயிர்ப்பிக்கவில்லை. பிரிவி கவுன்ஸில்களின் ஆதிக்கத்தையும் அது குறைத்தது. அவைகளின் மூலம் அரசர் தனியாணைச் சட்டங்களை ஆக்குவதையும் அது தடுத்தது. பேச்சுரிமை வளர்ந்தது. அரசாங்கத்தின் கொள்கைகளைப் பாராளுமன்றத்தில் கண்டிக்க மக்கள் பயப்படவில்லை. அரசாங்கத்தின் அதிகாரிகட்கும் சாமானிய மக்கட்கும் பாரபட்சமற்ற ஒரே நீதிவழங்கப்பட்டது. கிளாரண்டன் சட்டத் தொகுதி வெளியிடப்பட்ட பின் நாட்டில் கருத்துச் சுதந்திரம் பெரிதும் வளர்ந்தது. அரசியலைப் பற்றியும் மதத்தைப் பற்றியும் மக்கள் தாராளமாகப் பேசிக்கொண்டனர். முன்னிலை மீட்சியால் பழைய முறையாகிய உடலில் புதிய உயிர் ஊட்டப்பெற்றுத் திகழ்ந்தது எனக் கூறலாம்.

# 13. இரண்டாம் சார்லஸ்

கிளாரண்டன் பிரபுவின் ஆட்சி (1660-1667). கிளாரண்டன் பிரபுவின் வெளி நாட்டுக் கொள்கை 1660-1664-இரண்டாம் டச்சுப் போர் 1664-1667 (நியூ ஆம்ஸ்டர்டாம், லோவஸ்டாப்ட்)—கிளாரண்டன் பிரபுவின் உள்நாட்டுக் கொள்கையும் வீழ்ச்சியும் 1667.

'கேபால்' மந்திரிசபை : பொறுத்தலறிக்கை (Declaration of Indulgence, 1672) சார்லஸும் ஃபிரான்ஸும்—முக்கூட்டு ஒப்பந்தம் (Triple Alliance, 1668)--மூன்ரும் டச்சுப்போர் (1672-1674).

டான்பி மந்திரி சபை (1663-1678): கட்சிகளின் தோற்றம்-டான்பியின் வெளி நாட்டுக் கொள்கை—டைடஸ் ஓட்ஸ் கத்தோலிக்கச் சதி (Titus Oates Popist Plot) 1678—டான்பி பிரபுவின் வீழ்ச்சி (1677-1679).

விலக்கு மசோதா (Exclusion Bill, 1679).

ஹெபியஸ் கார்ப்பஸ் சட்டம் (Habeaus Corpus Act, 1679).

விக்கு, டோரிக் கட்சிகள் தோற்றம் (1680).

மீண்டும் விலக்கு மசோதா—சார்லஸின் நான்காம் பாராளுமன்றம் (1680).

சார்லஸின் ஐந்தாம் பாராளுமன்றம்.

இரண்டாவது ஸ்டுவர்ட்டு வல்லரசு.

## கிளாரண்டன் பிரபுவின் ஆட்சி

இரண்டாம் சார்லஸின் ஆட்சியில் முதல் ஏழு ஆண்டுகள் வரை கிளாரண்டன் பிரபுவே அவரது முக்கிய ஆலோசகராக விளங்கினுர். அவர் ஒரு வைதிகர். பழமையில் பெரிதும் பாசம் கொண்டவர். மீண்டும் மாற்ற முடியாதபடி, முடியரசாட்சியையும் ஆங்கிலிக்க மத ஏற்பாட்டையும் இங்கிலாந்தில் நிலைநாட்டிவிட வேண்டுமென்பது அவரது ஆசை. சார்லஸின் வெளிநாட்டுக் கொள்கையும் பெரிதும் அவராலேயே தீர்மானிக்கப்பட்டது.

### கிளாரண்டன் பிரபுவின் வெளிநாட்டுக் கொள்கை (1660—1664)

வெளிநாட்டுக் கொள்கையில் கிளாரண்டனும் சார்லஸும், கிராம்வெல்லின் வழியையே பின்பற்றினர். ஃபிரான்ஸோடு அவர்

கள் நட்புரிமை கொண்டாடினர். பதினான்காம் லூயி என்ற ஃபிரெஞ்சு அரசரின் விருப்பத்துக்கு இசைந்து, சார்லஸ் போர்ச்சுகல் நாட்டு இளவரசியான காத்தரைன் என்பவளை மணந்துகொண்டார். ஃபிரான்ஸும், ஸ்பெயினும் அப்போது போரிட்டுக்கொண்டிருந்தன. போர்ச்சுகல் தேசமும் அப்போது ஸ்பெயினுக்கு விரோதமாகக் கலகம் செய்துவந்தது. எனவே, போர்ச்சுகல் நாட்டோடு உறவு கொண்டாடுவதன் மூலம் சார்லஸ் தம்மை ஃபிரான்ஸின் நண்பரென்று காட்டிக்கொண்டார். சார்லஸுக்குப் பம்பாய், டாஞ்சியர் என்ற இரண்டு நகரங்களும் தம் மனைவியின் சீதனமாகக் கிடைத்தன. பம்பாய் நகரைச் சார்லஸ் கிழக்கிந்தியக் கம்பெனிக்குப் பின்னர் கொடுத்துவிட்டார். டாஞ்சியர் நகரை 1684ஆம் ஆண்டுவரை ஆங்கிலத் துருப்புகள் பாதுகாத்து வந்தன. பின்னர் அதைக் கைவிட்டனர். கிராம்வெல் கைப்பற்றிய டன்கர்க் நகரைக் கிளாரண்டன் 14ஆம் லூயிக்கு விற்றுவிட்டார். அதனால் சார்லஸுக்கு 2 லட்சம் பவுன்கள் கிடைத்தன. இதனால் இங்கிலாந்துக்கு இலாபமேயன்றி நஷ்டமில்லை. எனினும், மக்கள் கிளாரண்டனைக் குறை கூறினர். லஞ்சம் வாங்கிக்கொண்டு அவர் டன்கர்க்கை விற்றுவிட்டதாக வதந்தி பரவியது. அவருடைய வீட்டை 'டன்கர்க் வீடு' என்று லண்டன் நகர மக்கள் அழைத்தனர். கிளாரண்டன் பிரபு பொதுநல ஆட்சிமுறைக் காலத்தில் வளர்க்கப்பட்ட குடியேற்ற நாட்டுக் கொள்கைகளைக் கடைப் பிடித்தார். அமெரிக்காவில் குடியேற்ற நாடுகளை ஏற்படுத்தினார். குடியேற்ற நாடுகளைக் கண்காணிப்பதற்காக நிலையான கமிட்டி யொன்றை அவர் ஏற்படுத்தினார். அக் கமிட்டி வியாபார வளர்ச்சி யிலும் அக்கறை காட்டிற்று. இரண்டாம் சார்லஸ் வெளிநாட்டு வியாபாரத்தில் பெரிதும் ஊக்கம் காட்டினார். வியாபாரத்தை வளர்க்க அவர் ஆங்கில நாட்டின் கடற்படையைப் பெருக்கினார். வியாபார வளர்ச்சியை முன்னிட்டு அவர் டச்சுக்காரர்களுடன் போரிட்டார்.

### இரண்டாம் டச்சுப்போர் (1664—1667)

பொதுநல ஆட்சிமுறைக் காலத்தில் இங்கிலாந்துக்கும் ஹாலந்துக்கும் இருந்த பகைமை முன்னிலை மீட்சியின் காலத்திலும் நீடித்தது. அதற்கு முக்கியமான காரணம் இரு நாடுகளிடையே இருந்த வியாபாரப் போட்டியே ஆகும். அதோடு அதற்கோர் அரசியல் காரணமும் இருந்தது. இரண்டாம் சார்லஸின் மைத்துனரான வில்லியம் என்பவர் ஹாலந்து நாட்டின் அரசராவதற்கு உரிமையுடையவர். ஆனால், அவர் அங்ஙனம் அரசராவதற்கு முடியாதபடி ஜான் டி விட் (John Di Witt) என்ற கலகக்காரர் அங்கு ஒரு குடியரசை நிறுவி, அதற்குத் தலைவராகத் திகழ்ந்தார்.

எனவே, வில்லியத்தை மீண்டும் ஹாலந்து அரசராக்குவதற்காகச் சார்லஸ் டச்சுப்போரில் இறங்கினர். டச்சுப் போருக்கு உடனடியான காரணம் 1660 ஆம் ஆண்டு ஆங்கிலேயப் பாராளுமன்றத்தால் இயற்றப்பட்ட நாவாய்ச் சட்டமேயாகும் (Navigation Act). இச்சட்டமானது டச்சுக்காரர்கள் தங்கள் கப்பல்களின் மூலம் சரக்குகளைக் கொணர்ந்து இங்கிலாந்தின் துறைமுகங்களில் இறக்குமதி செய்வதைத் தடுத்தது. டச்சுக்காரர்களின் வருமானம் இதனல் பெரிதும் குறைந்தது. எனவே, அவர்கள் ஆங்கிலேயருடன் பல இடங்களிலும் போர் செய்ய ஆரம்பித்தனர். ஆங்கிலேயர்கள் வட அமெரிக்காவில் டச்சுக்காரர்களுக்குச் சொந்தமாயிருந்த நியூ ஆம்ஸ்டர்டாம் (New Amsterdam) என்ற இடத்தைப் பிடித்து அதற்கு நியூயார்க் என்ற புதுப் பெயரையும் இட்டனர்.

இப் போரானது பெரும்பாலும் கடலிலேயே நடைபெற்றது. மான்க் என்ற கடல் தளகர்த்தரும், ருபர்ட் இளவரசரும் டச்சுக்காரர்களை லோவஸ்டாஃப்ட் (Lowestoft) எனுமிடத்திற்கு அருகில் தோற்கடித்தனர். டச்சுக்காரர்களின் கடற்கரையையும் அவர்கள் தாக்கினர். ஆனல், பாராளுமன்றமானது அரசருக்குப் பணமானியம் அளிப்பதில் காலம் தாழ்த்தியது. எனவே, ஆங்கிலக் கப்பல் படையைச் சேர்ந்த பல கப்பல்கள் துறைமுகங்களிலேயே முடங்கிக் கிடந்தன. இச்சமயத்தில் டச்சுக்காரர்கள் ஒரு கப்பல் படையுடன் வந்து தேம்ஸ், மெட்வே (Thames, Medway) நதிகளுக்குள் புகுந்து, சாத்தாம் நகர் (Chatham) வரைச் சூறையாடினர். பல கப்பல்களை அவர்கள் கொளுத்திவிட்டனர். இதனல் ஆங்கிலேயருக்குப் பெரிய பீதி ஏற்பட்டது. இறுதியில் பிரடா சமாதானத்தின் (1667) மூலம் (Peace of Breda) போர் நிறுத்தப்பட்டது. அவரவர் பிடித்த இடங்களை அவரவரே வைத்துக்கொள்ள வேண்டுமென அவ்வுடன்பாடு தீர்மானித்தது. அதன்படி நியூ ஆம்ஸ்டர்டாம், நியூஜெர்ஸி என்ற இரு இடங்களும் ஆங்கிலேயருக்குக் கிடைத்தன. நியூ ஆம்ஸ்டர்டாம் அரசரின் சகோதரரான யார்க் கோமகனுக்கு அளிக்கப்பட்டதால் நியூயார்க் என்ற பெயரும் பெற்றது.

### கிளாரண்டன் பிரபுவின் உள்நாட்டுக் கொள்கையும் விழ்ச்சியும் (1667)

நாம் ஏற்கெனவே பார்த்தபடி முன்னிலை மீட்சியை இங்கிலாந்தில் ஏற்படுத்தியவர் கிளாரண்டனேயாவர். இங்கிலாந்தின் மத ஏற்பாட்டை நிர்ணயித்த 'கிளாரண்டன் சட்டத் தொகுதி'க்கும் அவருக்கும் யாதொரு தொடர்புமில்லை. அவருடைய பெயரால் அச் சட்டங்களைக் கவலியர் பாராளுமன்றத்தார் இயற்றினர்.

உண்மையில் கிளாரண்டன் சமய ஒறுப்புக் கொள்கையை ஆதரித்தவரல்லர். வட அமெரிக்கக் குடியேற்ற நாடுகளில் அவர் சமயப் பொறைக் கொள்கையையே கடைப்பிடித்தார். எனினும், ஆங்கிலேயர் அவரையே சமய ஒறுப்பின் மூலகாரணராகக் கருதினர். கொஞ்சம் கொஞ்சமாக அவரது செல்வாக்குக் குறைய ஆரம்பித்தது. 1665 ஆம் ஆண்டு லண்டன் நகரில் ஒரு பயங்கர மான கருங்கொள்ளை நோய் தோன்றி ஆயிரக்கணக்கான மக்களை மாய்த்தது. அதைத் தொடர்ந்து 1666-ல் ஒரு பெருந் தீவிபத்து (Great Fire) லண்டனில் ஏற்பட்டது. லண்டன் நகரின் பெரும் பகுதி தீக்கிரையாகியது. இவ்விரண்டு விபத்துகளும், நாட்டை யாள்பவர்கள்மீது கடவுளுக்கு ஏற்பட்ட ?காபத்தால் விளைந்த தெனப் பலர் கருதினர். இங்கிலாந்து மக்கள் அப்போது மூட நம்பிக்கைகளில் ஆழ்ந்து கிடந்தனர். கிளாரண்டனது சட்டங்களே அவ்விபத்துகளுக்குக் காரணமெனப் பாமர மக்கள் கருதினர். வேறு சிலர் அவற்றைக் கத்தோலிக்கரது சூழ்ச்சியின் விளைவென நினைத் தனர். எனவே, கத்தோலிக்க ஃபிரான்ஸோடு உறவு கொண்டாடிய கிளாரண்டனை அவர்கள் வெறுத்தனர். மேலும், மன்னருக்கும் அவரது கொள்கைகளில் வரவர வெறுப்பு ஏற்பட்டது. கிளாரண்டன் தனிப்பட்ட வாழ்க்கையில் கடவுள் பக்தியும் ஒழுக்க சீலமும் நிரம்பி யவர். அவர் சார்லஸைத் தனியே சந்திக்கும்போது அவருடைய ஒழுக்கமில்லா வாழ்க்கையைக் கண்டித்தார். அவருடைய காதற் கிழத்திகள் பலரும், அவர்களுக்குத் தலைமை தாங்கிய காஸில்மேன் (Lady Castlemaine) சீமாட்டியும் அவரது அறநெறிப் பிரசாரத்தை அறவே வெறுத்தனர். அவர் ஒழியவேண்டுமென அவர்கள் விரும்பினர். பாராளுமன்றம் அரசரது வரவு செலவுகளைத் தணிக்கை செய்ய முயன்றபோதெல்லாம் கிளாரண்டன் அதைக் கண்டித்து, அரசரின் தனிச் சிறப்பதிகாரத்துக்கு ஆதரவளித்து வந்தார். அதனால் அவர் பாராளுமன்றத்தின் வெறுப்புக்காளானார். அதே சமயம் மதக்கொள்கைகளில் அவர் மன்னருக்கு விரோத மாகப் பாராளுமன்றத்தை ஆதரித்து, சார்லஸின் கோபத்துக்கும் ஆளானார். எனவே, டச்சுக்காரர் சாத்தாம் வரை இங்கிலாந் துக்குள் நுழைந்ததற்குக் கிளாரண்டனே காரணமெனவும், அவர் அரச துரோகக் குற்றம் சாட்டப்பட்டு விசாரிக்கப்பட வேண்டு மெனவும் மக்கள் கூக்குரலிட்டபோது சார்லஸ் அவர்களை மறுக்க வில்லை. அதற்குப் பதிலாக அவர் கிளாரண்டனை நாட்டைவிட்டுப் போய்விடும்படி கேட்டுக்கொண்டார். போகாவிட்டால் ஸ்டிரா ஃபோர்டின் கதியே தமக்கும் நேரும் எனப் பயந்த கிளாரண்டன் ஃபிரான்ஸுக்கு ஓடிப்போய்விட்டார். அங்கிருந்தும் அவர் மீண்டும் இங்கிலாந்துக்கு வந்துவிடாதபடி மரண தண்டனைச் சட்ட மொன்றை அவருக்கு எதிராகப் பாராளுமன்றம் இயற்றியது.

கிளாரண்டன் ஃபிரான்ஸில் அமைதியாக வாழ்ந்து, 'பெருங் கலகத்தின் வரலாறு' (The History of the Great Rebellion) என்ற தமது ஒப்பரிய வரலாற்று நூலை எழுதி முடித்தார். அங்கேயே அவர் 1674ஆம் ஆண்டு மாண்டார்.

## கெபால் மந்திரி சபை
(Cabal Ministry)

கிளாரண்டனின் வீழ்ச்சிக்குப்பின் சார்லஸ் தாம் இனியும் ஒரு முக்கிய மந்திரியை நியமிக்கக் கூடாதென்ற முடிவுக்கு வந்தார். ஒருவருக்குப் பதிலாக ஐவரின் ஆலோசனைகளைப் பெற்று அவர் அரசாள ஆரம்பித்தார். கிளிஃபோர்டு, ஆர்லிங்டன், பக்கிங்ஹாம், ஆஷ்லி கூபர், லாடர்டேல் (Clifford, Arling-ton, Buckingham, Ashley Cooper, Lauderdale) என்ற அந்த ஐவரது ஆங்கிலப் பெயர்களின் முதலெழுத்துகளைச் சேர்த்தால் வருகின்ற கெபால் என்ற பெயர் அம் மந்திரி சபைக்கு வரலாற்றில் வழங்குகின்றது. இந்தக் கெபால் சபையானது தற்காலக் காபினெட் அமைச்சுக் குழு போன்று அரசனுக்குப் பதிலாக நாட்டை ஆண்டது எனச் சிலர் தப்பாகக் கருதுகின்றனர். ஆனால், உண்மை அதுவன்று. கெபால் மந்திரி சபை உறுப்பினர்களுக்குள் எவ்வித ஒற்றுமையும் இருக்கவில்லை. ஒவ்வொருவரும் மாறுபட்ட கொள்கையுடையவர்களாயிருந்தனர். அதில் லாடர்டேலும் பக்கிங்ஹாமும், ஒழுக்கமும் கொள்கையுமற்ற சந்தர்ப்பவாதிகள். கிளிஃபோர்டும் ஆர்லிங்டனும் மன்னரது வல்லரசும் கத்தோலிக்க மதமும் நாட்டில் நிலைபெற வேண்டுமென விரும்பினர். ஆஷ்லி கூபர் ஒருவரே அச் சபையில் கொஞ்சம் நல்லவர்; தேச பக்தர். இங்ஙனம் ஐவரும் ஐவேறு திசைகளில் போய்க்கொண்டிருந்ததால், சார்லஸ் தம் பிரியம்போல் நடக்க ஏதுவாயிற்று.

### பொறுத்தலறிக்கை (1672)

சார்ஸின் மனத்தில் கத்தோலிக்கர்களுக்கு ஏதாவது உதவி செய்யவேண்டுமென்ற ஆசை உள்ளூர இருந்துவந்தது. ஆனால், நேரடியாக அவர்களை ஆதரிக்கவும் அவருக்குத் துணிவு பிறக்கவில்லை. எனவே, பியூரிட்டன்களுக்குச் சலுகை காட்டுவதுபோல் காட்டி, அதன் மூலம் மறைமுகமாகக் கத்தோலிக்கர்களுக்கும் நன்மை ஏற்படுத்த அவர் விரும்பினார். அதன்படியே அவர் பொறுத்தலறிக்கை (Declaration of Indulgence) என்னுமோர் அறிவிப்பை வெளியிட்டார். அதன்மூலம் இங்கிலாந்தின் தேசியத் திருச்சபைக்கு இணங்காதார் (dissentors) பலருக்கும் சமயப் பொறையை வழங்கினர். அவர்கள்மீது விதிக்கப்பட்டிருந்த பல

தண்டனைச் சட்டங்களையும் தற்காலிகமாக நிறுத்திவைத்தார். ஜான் பன்யன் போன்ற சிறைக் கைதிகளைச் சிறையினின்றும் விடுவித்தார். இங்ஙனம் சட்டங்களை நிறுத்திவைக்கும் அதிகாரம் (Suspending power) மன்னருக்கு உண்மையில் கிடையாது. எனினும், சார்லஸ் தம் சிறப்பதிகாரத்தின் மூலம் பாராளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டத்தை நிறுத்திவைத்தார். இதே சமயம் சார்லஸ் இன்னொரு முக்கியமான தவற்றையும் செய்தார். நாட்டில் வாழ்ந்த செல்வந்தர்களான பொற்கொல்லர்களிடம் அவர் வாங்கியிருந்த கடனை வாய்தா முடிவதற்குள் கட்டவேண்டுவதில்லையெனவும், வட்டி கட்டுவதும் நிறுத்தப்படவேண்டுமெனவும் அவர் அறிவித்தார். எனினும், கடனை அடுத்த ஆண்டு தருவதாக அவர் வாக்களித்தார். இதனால் பல பொற்கொல்லர்கள் பெரும் அவதிக்குள்ளாயினர்.

1673 ஆம் ஆண்டு பாராளுமன்றம் கூடிற்று. கூட்ட ஆரம்பத்திலேயே சார்லஸின் பொறுத்தல் அறிக்கையை அது பெரிதும் கண்டித்தது. தாம் செய்தது முறையற்றதன்று என்றும், தமது முன்னோரான அரசர்கள் கையாண்டதொரு முறையையே தாம் எடுத்தாண்டிருப்பதாகவும் சார்லஸ் வாதாடிப் பார்த்தார். எனினும், பாராளுமன்றமானது ஏகமனதாகப் பொறுத்தலறிக்கையை ரத்து செய்யும்படி வேண்டியது. ஃபிரெஞ்சு அரசரும் பாராளுமன்றத்துக்குப் பணிந்து போகும்படி சார்லஸுக்கு ஆலோசனை கூறினார். அதன் பேரில் சார்லஸ் தமது பொறுத்தலறிக்கையைத் திரும்பப் பெற்றுக்கொண்டார். பாராளுமன்றம் அதோடு திருப்தி அடையவில்லை. அதற்குமேல் ஒருபடி சென்று அது தனது நிலையைப் பலப்படுத்திக் கொண்டது. சோதனைச் சட்டம் (Test Act) என்னுமொரு சட்டத்தை அஃது ஏற்படுத்தியது. ஆங்கில முடியாட்சியின் கீழ் பதவி வகிக்கும் அதிகாரிகள் அனைவரும் புனிதப் பொருள் மாறுபாட்டுக் கொள்கையை (Transubstantiation) நம்புவதில்லை என வாக்குறுதி எடுத்துக்கொள்ளும்படி அது வற்புறுத்தியது. ரோமன் கத்தோலிக்கர்களுக்கு அவ்வித வாக்குறுதி எடுப்பது மனச்சாட்சிக்கு விரோதமாயிருந்தது. எனவே, பலர் தம் பதவிகளைவிட்டு நீங்கிக்கொண்டனர். கிளிஃபோர்டு, ஆர்லிங்டன், யார்க் கோமகன் போன்ற பிரபல அதிகாரிகள் வேலை இழந்தனர். கெபால் மந்திரிசபை இங்ஙனம் கலைந்தது.

### சார்லஸும் ஃபிரான்ஸும்—முக்கூட்டு ஒப்பந்தம் (1668)

கெபால் மந்திரி சபைக் காலத்தில் சார்லஸ், ஃபிரான்ஸோடு நெருங்கிய உறவு கொண்டாடினார். ஆனால், முதலில் அவர்

வேண்டுமென்றே பதினான்காம் லூயிக்கு எதிராக ஹாலந்து, சுவீடன் என்ற நாடுகளோடு ஒரு முக்கூட்டு ஒப்பந்தத்தைச் (Triple Alliance) செய்துகொண்டார். இதன் மூலம் லூயியினிடமிருந்து அதிகமான சலுகைகளைப் பெறலாமென்ற எண்ணத்திலேயே சார்லஸ் இக் கூட்டுறவில் சேர்ந்தாரேயன்றி, அந்தரங்கத்தில் ஹாலந்து நாட்டை அவர் வெறுத்து வந்தார். அவர் நினைத்தது சரியாயிற்று. நெதர்லாந்தின்மேல் படையெடுக்க எண்ணிய லூயி முக்கூட்டு ஒப்பந்தம் ஏற்பட்டதைக் கேட்டவுடன் தம் எண்ணத்தைக் கைவிட்டார். ஆனால், அதே சமயம் ஹாலந்துக்கு ஒரு பாடம் கற்பிக்க அவர் எண்ணினார். முக்கூட்டு ஒப்பந்தத்தினின்றும் அதைப் பிரிக்கத் திட்டமிட்டார். சுவீடனோடு ஒரு நட்புடன்பாடு செய்துகொண்டபின், அவர் சார்லஸின் சகோதரியும் ஆர்லியன்ஸ் கோமகனின் மனைவியுமான ஹென்றி யெட்டா மேரியை இங்கிலாந்துக்குத் தூதாக அனுப்பினார். தூது வெற்றி பெற்றது. 1670ஆம் ஆண்டு சார்லஸ் ஃபிரெஞ்சுக்காரரோடு டோவர் இரகசிய உடன்பாட்டைச் (Secret Treaty of Dover) செய்துகொண்டார். தக்க தருணம் வாய்க்கிறபொழுது தாம் கத்தோலிக்க மதத்தைத் தழுவுவதாகவும், டச்சுக்காரர்களுக்கு எதிராக லூயிக்கு உதவி புரிவதாகவும், அதற்கு ஈடாக லூயி தமக்கு 20 லட்சம் லிவரே நாணயங்களை (Livers) வழங்கவேண்டுமெனவும், அவசியமேற்படின் தமக்கு 6,000 போர் வீரர்கள் அடங்கிய படை ஒன்றைத் தந்து உதவவேண்டுமெனவும் சார்லஸ் அவ் வுடன்படிக்கையில் தெரிவித்திருந்தார். இவ் வுடன்படிக்கையின் ஷரத்துகள் மந்திரிகள் அனைவருக்கும் தெரியாது. கிளிஃபோர்டு, ஆர்லிங்டன் என்ற இருவரும் அதுபற்றி எல்லாம் அறிந்திருந்தனர். ஆனால், சார்லஸ் கத்தோலிக்கராவதற்கு ஒப்புக்கொண்ட ஷரத்தைப்பற்றிப் பக்கிங்ஹாமும் ஆஷ்லியும்கூட ஒன்றும் அறியார்கள்.

மூன்றும் டச்சுப்போர் (1672 - 1674)

டோவர் இரகசிய உடன்படிக்கையின்படி சார்லஸ் தம் கடற்படையை ஹாலந்துக்கு எதிராக அனுப்பினார். இதைக் கண்ட டச்சுக்காரர் திடுக்கிட்டனர். ஹாலந்தைப் பதினான்காம் லூயி படை எடுத்து ஜான் டி விட் என்ற கலகக்காரத் தலைவரை வென்று, கொன்றார். அதன்பின் ஆரஞ்சு நாட்டு வில்லியம் என்பார் ஹாலந்தின் ஸ்டாத் ஹோல்டராக (Stadtholder) நியமிக்கப்பட்டார், அவர் லூயிக்கு விரோதமாக வெகு தீரத்துடன் போரிட்டார். சில சமயங்களில் கடற் காப்பு அரண்களை (Dykes) அவர் உடைத்து, அதன் மூலம் கடல் நீரை நகர்களுக்குள் புகச் செய்து, எதிரிகளின் கைகளில் அவைகள் சிக்காமலிருக்க வழி

செய்தார். வில்லியம் முதலாம் சார்லஸின் பேரர். எனவே, ஆங்கிலேய மக்கள் டச்சுக்காரர்களோடு போர் புரிவதில் ஊக்க மிழந்தனர். எனினும், கடலில் யார்க் கோமகன் தம் கடற்படையைக்கொண்டு ரூய்டர் (Ruyter) எனும் டச்சுக் கடற் படைத் தலைவரோடு கடும்போர் புரிந்துவந்தார். பாராளுமன்றமானது டச்சுப் போரை நிறுத்தும்படி சார்லஸைக் கேட்டுக்கொண்டது. ஷாஃப்ட்ஸ்பரி எர்லாக நியமிக்கப்பட்ட ஆஷ்லி எனும் மந்திரி அரசருக்கு எதிர்க்கட்சியில் சேர்ந்துகொண்டு அவரைக் கண்டித்தார். அரசரை ஹாலந்திலிருந்து இங்கிலாந்துக்கு அழைத்து வரச் செய்தவர் அவரே. கெபால் மந்திரி சபையில் அவர் ஓர் உறுப்பினர். இருப்பினும், அவர் அரசரை எதிர்த்தார். டோவர் இரகசிய உடன்பாட்டைப் பற்றிச் சார்லஸ் தம்மிடம் ஒரு வார்த்தைகூடச் சொல்லாததே அவரது எதிர்ப்புக்கு முக்கிய காரணமாகும். அரசர் இச் சமயத்தில்தான் தமது பொறுத்தல் அறிவிப்பையும் வெளியிட்டார். பாராளுமன்றம் அதையும் சேர்த்துப் பலமாகக் கண்டித்ததால், சார்லஸ் தமது உள்நாட்டு, வெளி நாட்டுக் கொள்கைகள் இரண்டையும் கொஞ்ச காலத்துக்குக் கைவிட்டார். கவலியர் பாராளுமன்றத்தின் தலைவரான டான்பி எர்ல் பிரபுவைத் தமது முக்கிய ஆலோசகராகச் சார்லஸ் அமர்த்திக் கொண்டார்.

## டான்பி மந்திரி சபை
(The Ministry of Danby, 1673 - 1678)

### கட்சிகளின் தோற்றம் (Rise of Parties)

தாமஸ் ஆஸ்பார்ன் (Thomas Osborn) என்பார் 1631ஆம் ஆண்டு ஒரு பெரிய பிரபுவின் குடும்பத்தில் பிறந்தவர். அவரது குடும்பமே அரசரை ஆதரித்த குடும்பமாதலால், அவர் இயற்கையிலேயே இராஜபக்தி நிறைந்து காணப்பட்டார். கவலியர் கட்சியில் சேர்ந்த அவர் விரைவிலே அரசரின் அபிமானத்தைப் பெற்று அவரது அந்தரங்க ஆலோசகரானார். அதன்பின் அவருக்கு 'டான்பி எர்ல்' என்ற பட்டம் வழங்கப்பட்டது. டான்பி பொது மக்கள் சபையின் ஆதரவைப் பெற்றவர். அங்கு அவர் தமக்கென்று ஒரு கட்சியை உருவாக்கினார். அஃது 'அரண்மனைக் கட்சி' (Court party) என அழைக்கப்பட்டது. தம் கட்சியினருக்கு அவர் பணம், பதவி, பட்டம் இவைகளைத் தாராளமாக வழங்கினார். இக் கட்சிதான் மன்னரை என்றுமே ஆதரிக்கும் டோரிக் கட்சியாகப் பின்னர் மலர்ந்தது. இதே சமயத்தில் பாராளுமன்றத்தில் டான்பிக்கு எதிராக 'நாட்டின் கட்சி' (Country party)

என்ற ஒரு கட்சியை ஷாஃப்ட்ஸ்பரி பிரபு தோற்றுவித்தார். பாராளுமன்றத்துக்கு வெளியிலும் அவருக்குப் பலத்த ஆதர விருந்தது. மன்னரை எதிர்த்துப் பாராளுமன்றத்தின் உரிமை களுக்காகப் போராடிய விக்குக் கட்சிக்கு வித்திட்டவர் ஷாஃப்ட்ஸ் பரி பிரபுவே யாவர்.

டான்பியின் வெளிநாட்டுக் கொள்கை

டான்பி பிரபு ஃபிரெஞ்சுக்காரரின் உறவை அறவே வெறுத் தார். டச்சுக்காரர்களோடு நட்புடன்படிக்கை செய்துகொள்ள அவர் விரும்பினர். பாராளுமன்றமும் அங்ஙனமே விழைந்தது. சார்லஸ் மன்னரும் தமது உடன் பிறந்தார் மகனுன வில்லியத் தோடு போரிடுவதை அதிகம் விரும்பவில்லை. எனவே, 1674-ல் டான்பி பிரபு டச்சுக்காரரோடு வெஸ்ட் மின்ஸ்டர் உடன்பாட் டைச் செய்துகொண்டார். இங்கிலாந்து, ஹாலந்து போரிடுவது அதனுல் நின்றது. ஆனுல், ஹாலந்து லூயி மன்னரோடு தொடர்ந்து போராடி வந்தது. எங்கு இங்கிலாந்து டச்சுக் காரர்களோடு மறுபடியும் சேர்ந்துவிடுமோ என்ற அச்சம் லூயியை வாட்டிற்று. ஒருவேளை பாராளுமன்றம் வற்புறுத்தி டச்சுக்காரர்களோடு சேரும்படி கூறினுலும் அதை ஒப்புக் கொள்ளாமல் தட்டிக் கழிக்கும்படி லூயி சார்லஸுக்குக் கூறினர். அப்படிப் பாராளுமன்றத்தின் விருப்பத்துக்கிணங்காமல் அதைக் கலைத்துவிடுவதற்காகச் சார்லஸுக்கு ஆண்டு ஒன்றுக்கு ஒரு லட்சம் பவுன்கள் இனமாகத் தருவதாக 1675ஆம் ஆண்டு லூயி சார்லஸுக்கு வாக்களித்தார். சார்லஸ் பாராளுமன்றத் தைக் கூட்டாமலேயே ஓராண்டுக் காலம் கடத்தினர். 1677-ல் மறுபடியும் பாராளுமன்றம் கூடியது. அவ்வளவு நாள் கழித் துக் கூடியதால் பாராளுமன்றம் தன் அந்தஸ்தை இழந்துவிட்ட தாகவும், சட்டப்படி அது பாராளுமன்றமாகக் கருதப்படக் கூடா தெனவும் ஷாஃப்ட்ஸ்பரி குறை கூறினர். அங்ஙனம் கூறியதை வெறுத்த பாராளுமன்றத்தின் இரு சபையாரும் அவரைச் சிறைச் சாலைக்கனுப்பினர். லூயி சார்லஸுக்கு 20 லட்சம் லிவரி நாண யங்களை லஞ்சமாகக் கொடுத்துப் பாராளுமன்றத்தைக் கலைக்கு மாறு செய்தார். டான்பி தமது வெளிநாட்டுக் கொள்கையில் உறுதியாக நின்ருர். தமது எஜமானர் ஃபிரெஞ்சுக்காரரோடு இரகசியமாக உறவு கொண்டாடி வந்தபோது அவர் டச்சுக் காரரோடு மேலும் நட்பை வளர்த்தார். 1677ஆம் ஆண்டு நவம்பர் மாதம் யார்க் கோமகனுன ஜேம்ஸின் (சார்லஸின் தம்பி யார்) மகளான மேரிக்கும், ஹாலந்து அரசரான வில்லியத்துக்கும் திருமணத்தை அவர் முடித்து வைத்தார். இத் திருமணம் பிற் காலத்தில் மிகவும் முக்கியத்துவம் பெற்றதை நாம் பார்க்கப் போகி

றேம். இச் சம்பந்தத்தால் ஆங்கிலேயர் டச்சுக்காரர்களுக்கு நண்பர்களென்பதையும், சமயத்தில் தமக்கு எதிராக இருவரும் ஒன்று சேர்ந்துகொள்ளலாம் எனவும் ஃபிரெஞ்சு நாட்டு மன்னர் லூயி அறிந்து பெரிதும் அஞ்சினர். எந்த இக்கட்டான நிலைமையிலும் நடுநிலைமை வகிக்கவேண்டுமென அவர் சார்லஸை வேண்டிக்கொண்டதோடு அதற்குச் சன்மானமாக 60 லட்சம் லிவரிகளையும் அவர் கொடுத்தார். இந்த உடன்பாடு இரகசியமாகவே நடைபெற்றது. டான்பிக்கு இவ்வுடன்பாடு கொஞ்சம் கூடப் பிடிக்கவில்லை. எனினும், தமது எஜமானனுக்குக் கீழ்ப்படிய வேண்டி அவர் அரசரது ஆணைப்படியே பேச்சு வார்த்தைகளை நடத்தினர்.

டைடஸ்-ஓட்ஸ் கத்தோலிக்க சதி (Titus-Oates Popish Plot, 1678)

1678 ஆம் ஆண்டில் டைடஸ் ஓட்ஸ் என்ற ஒருவன், இங்கிலாந்தில் சார்லஸைக் கொன்றுவிட்டு யார்க் கோமகனை அரசராக்குவதற்காக ஒரு கத்தோலிக்க சதித்திட்டம் உருவாகியுள்ளதாக, ஒரு புரளியைக் கிளப்பிவிட்டான். டைடஸ் ஸ்பெயினில் ஒரு ஜெசூட் கல்லூரியில் படித்து, அங்கிருந்து வெளியே விரட்டப்பட்டவன். பொய் சொல்லுவதில் நிபுணன். ஜெசூட்டுகளிடமிருந்து மேற்சொன்ன கத்தோலிக்கச் சதியைப்பற்றித் தான் அறியவந்ததாகவும், அதை வெளிப்படுத்துவது இராஜவிசுவாசியான தனது கடமை எனவும் அவன் கூறிக்கொண்டு திரிந்தான். அவனது புரட்டையும் மக்கள் நம்பினர். ஏராளமான கத்தோலிக்கர்கள் சந்தேகிக்கப்பட்டு விசாரிக்கப்பட்டனர். நிரபராதியான இம் மக்கள் சாவதைச் சார்லஸ் தடுக்க முன்வராதது ஒரு பெருங் குற்றமாகும். டைடஸ் ஒரு தலைவனைப் போல் திகழ்ந்தான். அரசாங்கம் அவனுக்கு மெய்க்காப்புப் படை தந்தது. இராணியாரே அச் சதியில் சம்பந்தப்பட்டிருப்பதாக டைடஸ் கூறினன். அரசருக்கு இதில் கொஞ்சமும் நம்பிக்கையில்லை. டைடஸை அவர் வன்மையாகக் கண்டித்தார். அதைக் கண்ட டைடஸ் தான் சொன்னது தவறு என ஒப்புக்கொண்டான். லண்டன் மக்கள் டைடஸின் பேச்சை அப்படியே நம்பினர். ஷாஃப்ட்ஸ்பரி, மக்களின் அதிருப்தியைப் பயன்படுத்திக்கொள்ள முன்வந்தார். யார்க் கோமகன் சார்லஸுக்குப்பின் பட்டத்துக்கு வராமல் தடுக்க அவர் விரும்பினர். அதற்கு முன்னேற்பாடாக முதலில் அவர் சோதனைச் சட்டமொன்றைப் பாராளுமன்றத்தின் மூலம் கொணர்ந்தார். கத்தோலிக்கர் எவரும் பாராளுமன்றத்தின் இரு சபைகளிலுமே அங்கம் வகிக்கத் தகுதியில்லையென அச் சட்டம் கூறியது. அச் சட்டத்தின்மூலம் டான்பி பிரபுவைப் பிரபுக்கள் சபையினின்றும் நீக்கிவிட வேண்டுமென்பது ஷாஃப்ட்ஸ்பரியின் திட்டமாகும். அதே

சமயம் மன்னரைத் திருப்திப்படுத்துதற்காக யார்க் கோமகனுக்கு மட்டும் விதிவிலக்கு அளிக்கப்பட்டது. இச்சமயம் பார்த்து லூயி மன்னர், சார்லஸின் சார்பாக டான்பி பிரபு தமக்கு இரகசியமாய் எழுதிய கடிதங்களைப் பாராளுமன்றத்துக்கு அனுப்பி வைத்தார். டான்பி பிரபு டச்சுக்காரர்களோடு உறவு கொண்டாடி வந்ததை லூயி மன்னர் பெரிதும் வெறுத்து வந்தார். எனவே, அவர்மேல் வஞ்சம் தீர்க்கத் தக்க தருணம் கிடைத்ததெனக் கருதி, அவர் மேற் கண்ட உபாயத்தைக் கையாண்டார். அவர் எண்ணம் பலித்தது. தங்களை ஆதரித்தவர்போல் காணப்பட்ட டான்பி ஃபிரான்ஸோடு பேரம் பேசினுர் என்பதை அறிந்த பாராளுமன்றத்தார் துணுக் குற்றனர். உடனே டான்பி பிரபு மீது அரசியல் துரோகக் குற்றச் சாட்டைப் பொதுமக்கள் சபையார் கொண்டுவந்தனர். ஃபிரான் ஸோடு தாம் மனதாரக் கடிதப் போக்குவரத்து நடத்தவில்லையென வும், சார்லஸின் ஆணையின்படியே தாம் அவ்விதம் செய்ததாகவும் டான்பி சொல்லிப் பார்த்தும் பயனில்லை. பிரபுக்கள் சபையார் டான்பி மீது சுமத்தப்பட்ட குற்றங்களை நன்கு ஆற அமர ஆராயா மல் அவரைச் சிறையில் தள்ள மறுத்தனர். இந்நிலையில் தம் நண் பரது மானத்தைக் காக்கவேண்டியும், அவரைப்பற்றி மேலும் பல புகார்கள் வெளிப்படுவதைத் தடுக்கவும், சார்லஸ் பாராளு மன்றத்தை 1679 ஆம் ஆண்டில் கலைத்தார்.

### டான்பி பிரபுவின் வீழ்ச்சி (1678—1679)

அரசரின் மூன்ருவது பாராளுமன்றமானது 1679 ஆம் ஆண்டு மார்ச் மாதத்தில் கூடியது. கத்தோலிக்க சதியைப் பற்றிய பயம் மக்களின் மனத்தைவிட்டு இன்னும் மறையவில்லை. இப் பயத்தைப் பயன்படுத்தி ஷாப்ட்ஸ்பரி ஒரு பெரும்பான்மையான கட்சியைப் பாராளுமன்றத்தில் உருவாக்கினுர். அக் கட்சியினர் யாவரும் பிராடெஸ்டன்டு மதப் பிரிவைச் சார்ந்தவர்களாய் இருந்தனர். டான்பியின் மீது அரசியல் துரோகக் குற்றச்சாட்டு மீண்டும் பாராளுமன்றத்தில் கொண்டுவரப்பட்டது. சார்லஸ் அவரது இறுதி மன்னிப்பு வழங்கும் அதிகாரத்தைப் பிரயோகித்துத் தம் நண்பரைக் காக்க விரும்பினுர். அப்போதும்கூடப் பாராளுமன்றம் பிடிவாதமாக டான்பியைச் சிறைப்படுத்தியது. சிறிது காலம் கழித்து, அவர் சிறையிலிருந்து விடுவிக்கப்பட்டார். டான்பியின் மீது நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டதன் மூலம் பாராளுமன்ற மானது ஒரு முக்கிய உண்மையை ஆங்கிலேய அரசியலில் நிலை நாட்டியது. மன்னர்கள் செய்கிற குற்றங்களுக்குக்கூட அவரது மந்திரிகளே பொறுப்பாளிகளென்பதையும், பாராளுமன்றத்தின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக மந்திரிகள் நடக்கவில்லையெனில், பதவி யினின்றும் நீக்கப்படுவர் என்பதையும் இந் நிகழ்ச்சி உறுதிப்படுத்

தியது. மந்திரிகள் பாராளுமன்றத்துக்குப் பொறுப்பு வாய்ந்தவர்கள் என்ற தற்கால அரசியல் அமைப்புக் கொள்கை அக்காலத்திலேயே வற்புறுத்தப்பட்டமை வியப்புக்குரியதேயாகும்.

## விலக்கு மசோதா
(Exclusion Bill, 1679)

சார்லஸின் மூன்றும் பாராளுமன்றத்தில் ஷாப்ட்ஸ்பரி பெரிதும் செல்வாக்குடன் விளங்கினர். அவர் தமது பிராடெஸ்டண்டு நண்பர்களின் உதவியைக் கொண்டு விலக்கு மசோதா ஒன்றைப் பாராளுமன்றத்தில் கொணர்ந்தார். சோதனைச் சட்டத்தின் நிபந்தனைகளுக்கு அரச குலத்தினரும் கட்டுப்பட வேண்டுமென அம் மசோதா கூறியது. அம் மசோதா நிறைவேறினல் யார்க் கோமகனுக ஜேம்ஸ் பட்டத்திற்கு வரவியலாமல் போய்விடும் என்பதைச் சார்லஸ் நன்கு உணர்ந்தார். மசோதாவைக் கைவிடும்படி சார்லஸ் பாராளுமன்றத்தை எவ்வளவோ வேண்டிக் கொண்டும் பயனில்லை. பாராளுமன்றத்தை மகிழ்விப்பதற்காக இக் காலத்து அதனல் கொண்டுவரப்பட்ட ஹெபியாஸ் கார்ப்பஸ் சட்டத்தைச் சார்லஸ் அங்கீகரித்தார்.

## ஹெபியாஸ் கார்ப்பஸ் சட்டம்
(Habeaus Corpus Act, 1679)

இச்சட்டம் ஆங்கிலேயரின் பொது உரிமைகளில் இன்றியமையாததோர் உரிமையை வற்புறுத்தியது. அதாவது குற்றவாளியொருவன் விசாரணை இன்றிப் பல நாட்களுக்குக் காவலில் வைக்கப்படுவது இதனல் தடுக்கப்பட்டது. அரசாங்கத்தால் குற்றம் சுமத்தப்பட்ட ஒருவனை விசாரணையின்றியே சிறையில் தள்ளி நெடுநாளைக்கு அவனை அங்கு வைத்திருக்கும் வழக்கம் ஸ்டூவர்ட்டு மன்னர்கள்பால் காணப்பட்டது. அத்தகைய குற்றவாளி தான் அநியாயமாகச் சிறை செய்யப்பட்டதாக நீதிபதிகளிடம் மனுச்செய்துகொண்டு அவர்கள் மூலம் ஹெபியாஸ் கார்ப்பஸ் கட்டளையைப் பிறப்பிக்கலாம். இக்கட்டளையின் மூலம், சிறைப்பட்டவரை விசாரணைக்காக உடனே நீதிமன்றத்தின்கண் கொண்டுவரும்படியும், அவரைச் சிறைப்படுத்தியதற்குக் காரணம் காட்டும்படியும் 'ஜெயிலர்களை' நீதிபதிகள் கேட்க உரிமை உண்டு. பிரிவி கவுன்ஸிலால் கைது செய்யப்பட்டவர்களுக்கெல்லாம் நீடித்த பாராளுமன்றம் மேற்கண்டபடி கட்டளைகளைப் பிறப்பிக்கும் உரிமையை வழங்கியிருந்தது. ஆனல், அத்தகைய கட்டளைகளைப் பிறப்பிக்காமல் தப்பித்துக்கொள்ள அரசாங்கத்துக்கும் பல வழிகள் இருந்தன. இங்கிலாந்திலிருப்பவர்களுக்கு மட்டுமே அவ்வுரிமை

இருந்ததால், கைதிகள் கடல் கடந்த நாடுகளுக்கு அனுப்பப்பட்டு விடுவதுண்டு. கிளாரண்டன் பிரபு இங்ஙனம் பல கைதிகளைச் சேனல் தீவுகட்கு (Channel Islands) அனுப்பிவிடுவது வழக்கம். மேலும், நீதிமன்றத்துக்கு விடுமுறைக் காலங்களில் இம்மாதிரி மனுச் செய்துகொள்ள வழியில்லாமலிருந்தது. மற்றும் ஜெயிலர்கள் முதல் கட்டளைக்குப் பணியவேண்டுமென்பது கட்டாயமில்லை. இரண்டாவது மூன்றாவது கட்டளைகட்காக அவர்கள் காத்திருக்கலாம். இதனாலெல்லாம் இவ்வுரிமையானது இருந்தும் இல்லாததுபோன்ற பயனே விளைந்தது. இக்குறைகளை எல்லாம் சார்லஸ் காலத்திய ஹெபியாஸ் கார்ப்பஸ் சட்டம் நீக்கியது. எல்லா உயர்நீதி மன்றங்களும் எல்லாக் காலங்களிலும் (விடுமுறைக் காலத்தும் கூட) அக் கட்டளையை வழங்கலாமென இச்சட்டம் கூறியது. கட்டளை பிறப்பித்தவுடனேயே ஜெயிலர்கள் அதற்குப் பணிவதற்கும் இச் சட்டம் வழி செய்தது. இச்சட்டத்தில் சில குறைபாடுகளுமிருந்தன. கிரிமினல் வழக்குகளுக்கு மட்டுமே இது பொருந்தியது. மற்றும் நீதிபதிகள் பெருந்தொகைகளை ஜாமீனாகக் கேட்கக்கூடிய அபாயத்தை இது நீக்கவில்லை, பின்னால் உரிமைகள் மசோதாவால் (Bill of Rights) இக்குறை நீக்கப்பட்டது. சிறைப்பட்டவர்கள் கூடிய விரைவிலேயே விசாரிக்கப்படவும் அப்படி விசாரிக்கப் படுவது தவறினால் விடுதலை செய்யப்படவும் இச்சட்டம் வழி செய்தது.

ஷாப்ட்ஸ்பரிக்கு ஹெபியாஸ் கார்ப்பஸ் சட்டம் நிறைவேற்றப் படுவதில் அவ்வளவு அக்கறையில்லை. விலக்கு மசோதாவை நிறைவேற்றுவதிலேயே அவர் கண்ணுங்கருத்துமாயிருந்தார். விலக்கு மசோதா இரண்டாம் முறை பொதுமக்கள் சபையில் படிக்கப்பட்டபோது தம் சகோதரனின் பட்ட உரிமையைக் காக்கவேண்டிச் சார்லஸ் பாராளுமன்றத்தைக் கலைத்தார் (ஜூலை, 1679).

## விக்கு, டோரிக் கட்சிகள் தோற்றம் (1680)

அடுத்த பாராளுமன்றம் கூட்டப்பட்டாலும் அதிலும் ஷாப்ட்ஸ் பரியின் கட்சியினரே பெரும்பான்மையினராக வருவாரென்பதைச் சார்லஸ் நன்கு உணர்ந்தார். எனவே, பாராளுமன்றத்தைக் கூட்டாமலேயே கொஞ்சம் நாள் கடத்தினால் அதற்குள் விலக்கு மசோதாவைப்பற்றி அனைவரும் மறந்து போகக்கூடும் என அவர் நினைத்தார். அதன்படி 1679ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் புதிய பாராளுமன்றத்தின் தேர்தல் நடைபெற்ற பின்னும், சார்லஸ் அதைக் கூட்டாமலேயே ஒத்திவைத்துக்கொண்டு சென்றார். ஏனெனில், அதில் ஷாப்ட்ஸ்பரியின் கட்சியே பெரும்பான்மையான

இடங்களைப் பெற்றிருந்தது. சார்லஸின் இக்காலங்கடத்தும் கொள்கையைக் கண்டித்துப் பலர் அவருக்கு விண்ணப்பங்களைக் கொடுத்தனர். பலர் பாராளுமன்றம் கூட்டப்படக் கூடாது என விண்ணப்பங்களை அரசருக்கு அனுப்பினர். பாராளு மன்றம் கூடவேண்டுமென்று விரும்பி விண்ணப்பித்தவர்கள், விண்ணப்பதாரர்கள் (Petitioners) என அழைக்கப்பட்டனர். பாராளுமன்றம் கூடவேண்டாமென அதை வெறுத்து விண்ணப் பித்தவர்களெல்லாம் 'வெறுப்பவர்கள்' (Abhorrers) என்று அழைக் கப்பட்டனர். பாராளுமன்றத்தில் அரசரை எதிர்க்கும் கட்சியின ரின் சூழ்ச்சிகளை அன்னுர் பெரிதும் வெறுத்த காரணத்தாலேயே 'வெறுப்பவர்கள்' என அழைக்கப்பட்டனர். இங்ஙனம் அரசரை ஆதரித்துப் பாராளுமன்றத்தை வெறுத்தவர்களை அவர்களது எதிரி கள் 'டோரிகள்' என அழைத்தனர். அயர்லாந்தில் கலகம் விளைத் துக் கொலை கொள்ளைகளில் ஈடுபட்ட கத்தோலிக்கரே 'டோரிகள்' என அழைக்கப்பட்டவர்கள். அந்தப் பெயரை அரசரை ஆதரித் தோருக்கு இட்டதன் மூலம் பாராளுமன்றக் கட்சியினர் தம் எதிரி களின் மீது தமக்கிருந்த வெறுப்பைக் காட்டிக்கொண்டனர். அதே போன்று அரசரை ஆதரிக்காதவர்களை எல்லாம் அவர்களின் எதிரி கள் 'விக்குகள்' என அழைத்தனர். ஸ்காட்லாந்தில் கலகம் விளைத்த பிரஸ்பிடீரியர்களே விக்குகள் எனப் பொதுவாக அழைக் கப்பட்டனர். இங்ஙனம் ஒருவர் மீது ஒருவருக்கிருந்த வெறுப்பி ஞல் இடப்பட்ட இப்பெயர்கள் நாளடைவில் இருவேறு கட்சிகளின் நிரந்தரப் பெயர்களாக மாறின.

## மீண்டும் விலக்கு மசோதா: சார்லஸின் நான்காம் பாராளுமன்றம் (1680)

சார்லஸ் ஓராண்டுக் காலம் கடத்தியபின் 1680ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் பாராளுமன்றத்தைக் கூட்டினுர். கூட்டப் பட்ட உடனேயே பொதுமக்கள் சபையானது விலக்கு மசோதா வைக் கொணர்ந்து நிறைவேற்றியது. ஆனுல், பிரபுக்கள் சபையில் அது நிறைவேறவில்லை. ஹாலிபாக்ஸ் பிரபு வேண்டுமென்றே ஒரு பருமனுன உடல் பெற்ற பிரபுவைப் பார்த்துப் பத்துப் பிரபுக்கள் என எண்ணினுர். சபையில் ஒரே சிரிப்புக் கிளம்பியது. இதைப் பயன்படுத்திக்கொண்டு ஹாலிபாக்ஸ், விலக்கு மசோதா பிரபுக்கள் சபையில் தோற்றுவிட்டதாக அறிவித்தார். பொதுமக்கள் சபையி லிருந்த விக்குகள் இது கேட்டுப் பெரிதும் ஆத்திரம் அடைந்தனர். மன்னருக்கு மானியம் வழங்க முடியாதென அவர்கள் கூறினர். எனவே, சார்லஸ் 1681ஆம் ஆண்டு ஜனவரி மாதத்தில் பாராளு மன்றத்தைக் கலைத்தார்.

## சார்லஸின் ஐந்தாம் பாராளுமன்றம் (1681)

1681ஆம் ஆண்டு மார்ச் மாதம் சார்லஸ் தமது புதிய பாராளுமன்றத்தை ஆக்ஸ்ஃபோர்டு நகரில் கூட்டினார். லண்டனில் கருங்கொள்ளை நோய் பரவியிருப்பதே அதற்குக் காரணமெனச் சார்லஸ் அறிவித்தார். ஆனால், உண்மையில் சார்லஸ், பாராளுமன்றத்தை லண்டன் நகர மக்கட் கூடத்தினின்றும் பிரிக்க விரும்பியே அங்ஙனம் செய்தார். லண்டன் மக்கள் பாராளுமன்றத்துக்குப் பெரியதொரு பக்கபலமாக இருந்தனர். அதே போன்று ஆக்ஸ்ஃபோர்டு மக்கள் மன்னரை எப்போதுமே ஒருமுகமாக ஆதரித்து வந்தனர். எனவே, தமக்குச் சாதகமான சூழ்நிலையில் சார்லஸ் பாராளுமன்றத்தைக் கூட்டினார். அப்போதும் கூட விக்குகள் யார்க் கோமகனது பட்டவுரிமையை மறுத்தனர். அதைக் கண்ட சார்லஸ் ஒருபடி இறங்கிவந்து பாராளுமன்றத்தைச் சமாதானம் செய்ய முயன்றார். அரசர் என்ற பட்டத்தோடு ஜேம்ஸ் நாடு கடத்தப்படுவதையும், வில்லியம் காப்பாளராக ஆட்சி புரிவதையும் ஒப்புக்கொள்ளும்படி சார்லஸ் பாராளுமன்றத்தை வேண்டினார். ஆனால், அம்மன்றத்தின் விக்குக் கட்சியினர் அரசரது வேண்டுகோளுக்குச் செவி சாய்க்கவில்லை. பிடிவாதமாயிருந்தால் மன்னர் தன்னிடம் சரணடைந்துவிடுவாரெனப் பாராளுமன்றம் நினைத்தது. அரசர் இரு சபைகளையும் ஒன்றாகக் கூடும்படி பணித்தார். அவர் தமது விருப்பத்துக்கு இணங்குவதற்கே இரு சபைகளையும் கூட்டுகிறார் என்ற எண்ணத்தில் பாராளுமன்றம் கூடியது. ஆனால், சார்லஸ் கோபத்துடனே சபைக்குள் நுழைந்து அதைக் கலைந்து போகும்படி உத்தரவிட்டார். விக்குகள் தங்களது உயிர்களுக்குப் பயந்து ஆக்ஸ்ஃபோர்டினின்றும் ஓட்டமெடுத்தனர். சார்லஸ் பாராளுமன்றத்தைக் கலைத்ததற்குக் காரணம், அதற்குள் அவருக்கு ஃபிரெஞ்சு மன்னரிடமிருந்து நிறையப் பணம் கிடைத்தமையேயாகும். பாராளுமன்றத்துக்குச் சார்லஸ் பணிந்துவிடுவாரேயானால், பின்னர் கத்தோலிக்கரான ஜேம்ஸ் இங்கிலாந்தின் மன்னராக வருவதற்கு முடியாமற்போய்விடுமே என்றும், தனது ஜென்ம விரோதியான வில்லியம் அதன் மன்னராகிவிடுவாரே என்றும் பயந்த லூயி மன்னர் சார்லசுக்கு இரண்டு மில்லியன் லிவரிகளை இனமாக அளித்தார். இரகசிய உடன்பாடு எதுவுமின்றி ஆண்டு ஒன்றுக்கு ஒன்றரை மில்லியன் லிவரிகளைத் தருவதாகவும் லூயி, சார்லஸுக்கு வாக்களித்தார். சார்லஸ் சதா பணம், பணம் என்று பித்துப் பிடித்து அலைந்தார். பணம் கிடைத்தால் அவர் எதையும் செய்யத் தயாராயிருந்தார். எனவே, அவர் லூயியின் விருப்பப்படியே பாராளுமன்றத்தைக் கூட்டாமலேயே ஆட்சி புரியலானார்.

## இரண்டாவது ஸ்டூவர்ட்டு வல்லரசு
(Second Stuart Despotism)

சார்லஸ் தமது ஆட்சிக் காலத்தின் இறுதிப் பகுதியில் பாராளு மன்றத்தின் உதவியின்றியே ஆட்சி புரிந்தார். விக்குகளை அவர் பல வழிகளிலும் ஒடுக்கினர். நகராட்சி மன்றங்களில் அவர்கள் செலுத்திவந்த அதிகாரத்தை ஒழிக்கவேண்டி அவர் எல்லா நக ரங்களின் உரிமைச் சாசனங்களையும் ரத்து செய்தார். நகராட்சி மன்றங்களைச் சீர்திருத்தி அமைப்பதே தமது நோக்கம் என அவர் கூறிக்கொண்டு எல்லா நகரங்களுக்கும் அவர் புதிய உரிமைப் பட் டயங்களை வழங்கினர். அவற்றின்படி டோரிகளே நகராட்சி மன் றங்களில் இடம் பெற்றனர். தல ஆட்சியின் சிறப்புரிமைகள் யாவும் அரசரை ஆதரித்த டோரிகளுக்கே சொந்தமாக்கப்பட்டன. டோரிகள் அரசரது செல்லப்பிள்ளைகளாயினர், அவர்கள் தங்க ளது எதிரிகளின் மீது பிரியம்போல் வஞ்சம் தீர்த்துக் கொண் டனர். விக்குக் கட்சித் தலைவரான ஷாப்ட்ஸ்பரி பிரபு சிறையில் தள்ளப்பட்டார். சில நாள் கழித்து அவர் விடுதலை செய்யப்பட் டார். எனினும், மனக் கசப்புற்ற அவர் மான்மவுத் என்ற அரச ரின் புதல்வனோடு சேர்ந்துகொண்டு கலகம் செய்து, அதில் தோல்வி யுற்றுப் பின் ஹாலந்து தேசத்துக்கு ஓடிவிட்டார். அங்கே அவர் 1683ஆம் ஆண்டு இறந்தார். தளகர்த்தரில்லாத சேனை யென விக்குகள் தவித்தனர். மனமொடிந்த பல விக்குகள் அரச ரைக் கொல்வதற்காக ஒரு சதி செய்தனர். ரை மாளிகைச் சதி (Rye House Plot) என அழைக்கப்படும் இச் சதியானது நன்கு உருவாவதற்குள் கண்டுபிடிக்கப்பட்டுவிட்டது. பல சதிகாரர் சிறையிடப்பட்டனர். அதைச் சாக்காக வைத்துக்கொண்டு பல பிரபல விக்குகளும் சிறையில் தள்ளப்பட்டனர். ரஸ்ஸெல் பிரபு அல்ஜெர்னன், ஸிட்னி போன்ற விக் தலைவர்கள் தண்டனையடைந் தது இச்சமயத்தில்தான் ஆகும்.

சார்லஸின் அந்திய கால வல்லரசுக்குச் சூழ்நிலை இங்ஙனம் சாதகமாயமைந்தது. ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக் கழகத்தார், அர சரை எவரும் எந்தச் சூழ்நிலையிலும் எதிர்ப்பது சட்டவிரோத மானது என்ற ஓர் அறிவிப்பை வெளியிட்டனர். சாத்விகப் பணிவு (Passive obedience) என்ற இக் கொள்கையைத் திருச் சபையானது எங்குப் பார்த்தாலும் பிரசாரம் செய்துவந்தது. எனவே, மக்கள் யாவரும் சார்லஸின் தனி ஆட்சியை மனமுவந்து ஆதரித்தனர். பதினான்காம் லூயியைப்போல் கட்டற்ற வல்லரசு செலுத்தவேண்டு மெனப் பல நாட்களாகவே அவர் கண்டுவந்த கனவு நனவாயிற்று, தம்மை ஆதரித்த ஆங்கிலிக்கத் திருச்சபையைச் சார்லஸும்

போற்றி ஆதரித்தார். ஆனால், உண்மையில் அவர் எச்சமயத்தைச் சார்ந்தவர் என்பது ஒருவருக்கும் புரியாத புதிராகவே இருந்தது. 1685ஆம் ஆண்டு அவர் வலிப்பு நோயால் தாக்குண்டு நைந்தார். மரணப்படுக்கையில் அவரது உண்மையான சமயக் கொள்கை வெளிப்பட்டது. கத்தோலிக்கப் பாதிரியை அவர் பார்க்க விழைந்தார். அங்ஙனமே ஆங்கிலிக்க மத குருமார்கள் அவரது அறையினின்றும் வெளியேற்றப்பட்டனர். கத்தோலிக்கப் பாதிரி ஒருவர் அறைக்குள் அனுப்பப்பட்டார். அவரிடம் தமது பாவங்களையெல்லாம் ஒப்புக்கொண்டு அவர் ஆறுதலடைந்த பின்னரே அவரது ஆவி பிரிந்தது.

# 14. இரண்டாம் ஜேம்ஸ் (1685-1689)

இரண்டாம் ஜேம்ஸ் அரசு எய்தல் (1685)

ஜேம்ஸின் நோக்கங்கள்—குறைநிசயங்கள்

ஜேம்ஸின் முதலாம் பாராளுமன்றம் (1685)

ஜேம்ஸை எதிர்த்து நடைபெற்ற கலகங்கள் — ஆர்கைல் கலகம், 1685 —மான்மவுத் கலகம், 1685 — இரத்த வெறி பிடித்த வழக்கு மன்றங்கள் (Bloody Assizer, 1685).

ஜேம்ஸும் பாராளுமன்றமும் (1685)

ஜேம்ஸும் நீதி பரிபாலன முறையும்—சட்ட விலக்கதிகாரம் (Dispensing Power).

ஜேம்ஸின் சமயக் கொள்கை — சமய உயர் ஆணை நீதிமன்றம் — இங்கிலாந்தைக் கத்தோலிக்க மயமாக்க முயற்சி — பாராளு மன்றத்தில் கத்தோலிக்கர்களை நிரப்ப முயற்சி — பொறுத்த லறிக்கை, 1687 (Declaration of Indulgence) — சட்ட நிறுத்த அதிகாரம் (Suspending power) — இரண்டாவது பொறுத்த லறிக்கை, 1688 — ஏழு பிஷப்புகள் வழக்கு (Seven Bishops' Case, 1688).

வில்லியத்துக்கு அழைப்பு அனுப்பப்படல்

ஜேம்ஸின் ஓட்டம், 1688

பிரத்தியேகப் பாராளுமன்றம் (Convention Parliament, 1688)

## இரண்டாம் ஜேம்ஸ் அரசு எய்தல்

பாராளுமன்றத்துக்கும் மன்னருக்கும் இங்கிலாந்தில் ஏற்பட்ட 17ஆம் நூற்றுண்டுப் போராட்டத்தின் இறுதிக் கட்டத்தில் இரண்டாம் ஜேம்ஸ் தோன்றுகிருர். அவர் பட்டத்துக்கு வந்த பொழுது (1685ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம்) தனியாட்சி செலுத்துவதற்கு ஒ ற்றதொரு சூழ்நிலை இங்கிலாந்தில் நன்கு அமைந்திருந்தது. அதை அவரது சகோதரரான சார்லஸ் மன்னர் உருவாக்கி வைத்திருந்தார். ஆங்கில மத ஏற்பாட்டிற்கு இணங்

காதவர்களும் அரசரை எதிர்த்தவர்களும் ஒடுக்கப்பட்டு வலிமை இழந்துபோய்விட்டனர். நகராட்சி மன்றங்களில் விக்குக் கட்சியினருக்குப் பதிலாக அரசரை முழுமூச்சோடு ஆதரித்த டோரிகளே செல்வாக்குடன் விளங்கினர். பாராளுமன்றத்திலும் அவர்களே பெரும்பான்மையினராகத் திகழ்ந்தனர். அரசர்களின் தெய்விக உரிமைக் கொள்கையில் ஆழ்ந்த நம்பிக்கை கொண்ட அவர்கள், ஜேம்ஸை சார்லஸின் சரியான வாரிசு எனக் கூறி அவரை வரவேற்றனர். சார்லஸ் இறந்தவுடனேயே கூடிய பிரிவி கவுன்ஸிலில், நாட்டில் சட்ட ரீதியாக ஏற்படுத்தப்பட்ட அரசாங்கத்தையும், மத ஏற்பாட்டையும் தாம் பாதுகாப்பதாயும், தம்முடைய தனிப்பட்ட மதக் கொள்கைகளைத் தமது சொந்த வாழ்க்கையில் மட்டுமே கடைப்பிடிப்பதன்றிப் பொது மக்கள்மீது அவற்றைத் திணிப்பதில்லை என்றும், ஜேம்ஸ் ஓர் உறுதிமொழி யளித்தார். இதனால் ஆங்கிலிக்கத் திருச்சபையினர், ஜேம்ஸை முழு மனத்துடன் ஆதரிக்க முன் வந்தனர். மேலும், ஜேம்ஸ் ஏனைய ஆங்கிலேய மன்னர்களைப் போன்றே, வெஸ்ட் மின்ஸ்டர் திருக்கோயிலில் கான்டர்பரி ஆர்ச்பிஷப்பால் முடிசூட்டப்படுவதற்கு இசைந்தார். இதைக் கண்ட ஆங்கிலேய மக்களின் உள்ளங்கள் குளிர்ந்தன. ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக் கழகத்தினர் அரசருக்கு அமோகமான வரவேற்பளித்தனர். இதை எல்லாம் கண்ட ஜேம்ஸ் தாம் எண்ணியதை யெல்லாம் எண்ணியாங்கு முடித்து விடலாம் என்ற முடிவுக்கு வந்தார்.

## ஜேம்ஸின் நோக்கங்கள் – குணநிசயங்கள்

தமது சகோதரரின் குணங்களைவிடத் தந்தையின் குணங்களே ஜேம்ஸின்பால் அதிகமாகக் காணப்பட்டன. முதலாம் சார்லஸைப்போலவே இவரும் தெய்விக உரிமைக் கொள்கையை அப்படியே நம்பினார். நம்பி, அதைச் செயலில் கொண்டு வரவும் முயன்றார். மக்களாதரவு ஒருபுறமிருக்க, 14,000 படை வீரர்களடங்கிய சேனையின் பலமும் ஜேம்ஸுக்கு இருந்தது. அப்படையை மேலும் பெருக்கித் தமது தனியாட்சியை நிலைநாட்ட முடியும் என அவர் கனவு கண்டார். அவரது சகோதரரான இரண்டாம் சார்லஸ், தனி ஆட்சி செலுத்துவதில் ஆர்வமுடையவரேனும், அதை அவர் வெளிக்குக் காட்டிக்கொள்ளாது தக்க தருணம் நோக்கிக் காத்திருந்து, காரியத்தைச் சாதித்தார். அவர் நியாயம் அநியாயம், மதத்துக்கு ஒத்தது ஒவ்வாதது என்றெல்லாம் ஒன்றுக்கும் கவலைப்படாதவர். இன்றியமையாத அதிகாரம் மட்டும் தம் கையிலிருந்தால் போதுமென்று கருதி, அன்றாட நிர்வாகத்தைத் தமது மந்திரிகள் கையிலேயே விட்டுவிட்டு அவர்

கேளிக்கைகளில் காலம் கடத்திவந்தார். ஆனால், ஜேம்ஸ் உண்மையுணர்வு நிரம்பியவர். தமது சகோதரரைப்போல் உள்ளொன்று வைத்துப் புறம்பு ஒன்று பேச அவருக்குத் தெரியாது. வெட்டொன்று துண்டு இரண்டாகப் பேசி அவர் பலரைப் பகைத்துக் கொள்வார். மேலும், கத்தோலிக்க மதத்தில் ஆழ்ந்த நம்பிக்கையுள்ளவர். கொஞ்சம் கொஞ்சமாக அதை இங்கிலாந்தின் தேசிய மதமாக்கிவிட வேண்டுமென்பது அவரது அவா. ஆங்கிலேய மக்களின் மனப்பான்மையை அவர் நன்கு புரிந்துகொள்ளவில்லை. அவர் வெளிப்படையாக மாஸ் ஜெபத்துக்குப் போய்வந்ததை அனைவரும் வெறுத்தனர். ஆங்கிலிக்கர்கள் அரசரை ஆதரித்தனரேனும், கத்தோலிக்க மதத்தை அவர்கள் நஞ்செனவெறுத்தனர். அவர்களையும் அசட்டை செய்துவிட்டு ஜேம்ஸ் தம் எண்ணத்தை நிறைவேற்ற முயன்றது அவரது அறியாமையையே குறிக்கிறது.

வெளிநாட்டுக் கொள்கையைப் பொறுத்தவரையில் ஜேம்ஸ் தமது முன்னோர்களையே பின்பற்றினர். ஃபிரான்ஸோடும் ஸ்பெயினோடும் நட்புறவை அவர் வளர்த்தார். வில்லியத்தால் கூட்டப்பட்ட ஆக்ஸ்பர்க் கூட்டுறவில் சேர மறுத்தார். பாராளுமன்றம் அவரது கொள்கையை வெறுத்தது.

## ஜேம்ஸின் முதலாம் பாராளுமன்றம் (1685)

ஜேம்ஸ் தமது முதல் பாராளுமன்றத்தை 1685ஆம் ஆண்டு மே மாதம் கூட்டினர். அது சார்லஸ் காலத்துக் கவலியர் பாராளுமன்றத்தைவிட அதிக இராஜ விசுவாசமுடையதாக இருந்தது. ஏறக்குறைய இரண்டு மிலியன் பவுன்களை அது ஜேம்ஸுக்கு ஆயுள் மானியமாக அளித்தது. அதன்பின் அது சமய ஏற்பாட்டைப்பற்றி ஒரு தீர்மானத்துக்கு வர முயன்றது. ஜேம்ஸ் கத்தோலிக்கர் மீது விதிக்கப்பட்ட தண்டனைச் சட்டங்களை ரத்து செய்ய விரும்பினர். அரசரது இவ்விருப்பத்தை நிறைவேற்றப் பாராளுமன்றம் சற்றுத் தயங்கியது. இதற்குள் அரசரை எதிர்த்து இரு கலகங்கள் கிளம்பியதால் சமயப் பிரச்சினை ஒத்திப்போடப்பட்டது.

## ஜேம்ஸை எதிர்த்து நடைபெற்ற கலகங்கள் : ஆர்கைல் பிரபுவின் கலகம் (1685)

ஆர்கைல் பிரபு ஸ்காட்லாந்தியர்களின் ஒப்பற்ற தலைவர். இரண்டாம் சார்லஸின் காலத்தில் ஸ்காட்லாந்தியர் தங்கள் உரிமைகளைப் பெற அவரையே நம்பி இருந்தனர். அவர்மீது

1682ஆம் ஆண்டில் இராஜத் துரோகக் குற்றம் சாட்டப்பட்டது. அவர் உடனே தம் நாட்டைவிட்டு ஹாலந்துக்குத் தப்பியோடி அங்கே அவர் அமைதியாக வாழ்ந்துவந்தார். ஜேம்ஸ் பட்டத்துக்கு வந்தவுடன் அவர் ஒரு படையுடன் புறப்பட்டு ஸ்காட்லாந்தில் வந்து இறங்கினர். ஆனல், அவருடைய கேம்பல் (Campbell Class) வமிசத்தார் அவரது தலைமையை ஏற்றுக்கொள்ள மறுத்தனர். அவரது சகாக்களிடையே பிளவு ஏற்பட்டது. போர் ஏற்படு முன்பேயே அவரது படை கலைந்தது. ஆர்கைல் சிறையிடப்பட்டார். ஏற்கெனவே அவர் மீதிருந்த இராஜத்துரோகக் குற்றச்சாட்டுப்படி அவர் தூக்கிலிடப்பட்டார்.

மான்மவுத் கலகம் (Monmouth Rebellion, 1685)

இரண்டாம் சார்லஸின் காலத்துக் கலகம்செய்து தோற்று ஹாலந்துக்கு ஓடிப்போன மான்மவுத் பிரபு, ஜேம்ஸ் பட்டத்துக்கு வந்துவிட்டதால் தாம் இனி முறைப்படி இங்கிலாந்தின் மகுடத்தைப் பெற முடியாது என அறிந்தார். பலவந்தமாக இங்கிலாந்தின் மகுடத்தைக் கைப்பற்ற அவர் மீண்டும் ஒரு படையுடன் புறப்பட்டார். அவர் பிராடெஸ்டண்டுகளின் தலைவர். எனவே, பிராடெஸ்டண்டுகள் நிறைந்த இங்கிலாந்தின் மேற்குப் பகுதியில் அவர் வந்து இறங்கினர். அங்கே அவருக்கு நிறைய ஆதரவு கிடைத்தது. குடியானவர்களும் நகரவாசிகளும் அவரது படையில் வந்து ஏராளமாகச் சேர்ந்தனர். டான்டன் (Taunton) நகரை அவர் அடைந்தபோது அவரது படையில் 5,000 பேர் இருந்தனர். பாராளுமன்றம் அவருக்கு எதிராக ஓர் அரசியல் துரோக மரண தண்டனைச் சட்டத்தை இயற்றியது. அதன்படி விசாரணையின்றி அவர்மீது மரண தண்டனை விதிக்கப்பட்டது. அரசர் தமது படையுடன் மான்மவுத்தை அடக்கப் புறப்பட்டார். இச் சமயத்தில் மான்மவுத் தம்மை இங்கிலாந்தின் அரசரென அறிவித்தார். இதனல் நாட்டுப்புறக் கனவான்கள் பலரும் அவருக்கு ஆதரவளிப்பதை நிறுத்திக்கொண்டார்கள். நன்கு பயிற்சி பெற்ற 4,000 போர் வீரர்களுடன் புறப்பட்ட அரசர், செட்ஜ் மூர் (Sedg Moor) என்னுமிடத்தில் பாடிவீடமைத்துக்கொண்டு தங்கியிருந்தார். அவரைத் திடீரெனத் தாக்குவதன் மூலம் வெற்றி பெற்றுவிடலாமென எண்ணிய மான்மவுத் 1685ஆம் ஆண்டு ஜூலை மாதம் 6ஆம் தேதி காலை நேரத்தில் அரசரது படைகளைத் தாக்கினர். ஆனல், மூடுபனி அவரது போர் வீரர்களின் கண்களை மறைத்தது. ஆழமான அகழிகள் அவர்களைக் குறுக்கிட்டன. தளவாடப் பற்றுக் குறையால் அவரது சேன வீரர் தொடர்ந்து நெடுநேரம் போரிட முடியவில்லை. மான்மவுத் தோற்றுப் புதுக்காட்டுக்குள் (New Forest) ஓடி ஒளிந்துகொண்டார். அவரைப்

பிடித்துத் தருபவருக்கு 5,000£ பரிசு தருவதாக அறிவிக்கப் பட்டது. அங்கே அவர் பிடிபட்டு அரசர் முன் கொண்டுவரப் பெற்றார். அரசர் அவரை மன்னிக்க மறுத்துவிடவே ஜூலை 15ஆம் தேதி மான்மவுத் கொல்லப்பட்டார்.

**இரத்த வெறிபிடித்த வழக்கு மன்றங்கள் (Bloody Assizes, 1685)**

இங்ஙனம் ஜேம்ஸை எதிர்த்த இரு கலகக்காரர்களும் எளிதில் அடக்கப்பட்டனர். பாராளுமன்றமும் மக்களும் அரசருக்குத் தந்த ஆதரவே அதற்குக் காரணம். ஆனால், அந்த ஆதரவை நன்கு பயன்படுத்திக்கொள்ள ஜேம்ஸுக்குத் தெரியவில்லை. கலகம் அடக்கப்பட்டபின் அவர் மான்மவுத்தின் ஆதரவாளர்கள் என்று கருதப்பட்டவர்களை எல்லாம் மிகக் கடுமையாகத் தண்டிக்க முற்பட்டார். ஜெஃப்ரீஸ் (Jeffreys) என்ற கல்நெஞ்சர், மேற்குக் கவுண்டிகளுக்கு வழக்குகளை விசாரிப்பதற்காக அனுப்பப்பட்டார். அவர் தலைமையில் நடைபெற்ற வழக்கு மன்றங்கள் 'இரத்த வெறி பிடித்த வழக்கு மன்றங்கள்' என அழைக்கப்படுகின்றன. ஏனெனில், மிகக் கடூரமான முறையில் அவர் குற்றவாளிகளைத் தண்டித்தார். 300 பேர் கொல்லப்பட்டனர். 900 பேர் மேற்கிந்தியத் தீவுகளுக்கு அனுப்பப்பட்டனர். இன்னும் அநேகர் சிறையிடப்பட்டனர். பாவம் பெண்டிரும்கூட அவரது பழிவாங்கலுக்குத் தப்பமுடியவில்லை. இரண்டு கலகக்காரப் போர் வீரர்களுக்குத் தன் வீட்டில் தஞ்சமளித்ததற்காக ஆலீஸ் லிஸ்லி (Alice Lisle) எனும் விதவைக் கிழவிக்கு மரண தண்டனை விதிக்கப் பட்டது. இங்ஙனம் பல கொடுமைகளை நிகழ்த்திய ஜெஃப்ரீஸை ஜேம்ஸ் லண்டன் நகருக்கு வரவழைத்து, லார்டு சான்ஸலர் பதவியை யளித்தார். இதைக் கேட்ட, அரசரை ஆதரித்து வந்த மிதவாதிகள் கூடத் திடுக்கிட்டனர்.

## ஜேம்ஸும் பாராளுமன்றமும் (1685)

மேற்சொன்ன நிகழ்ச்சிகளால் விக்குகள் மேலும் அரசர் மீது கோபமுற்றனர். தாங்கள் அதுவரை ஆதரித்துவந்த மான்மவுத் இறந்ததால் அவர்கள் ஆரஞ்சு நாட்டு வில்லியத்தை ஆதரிக்க ஆரம்பித்தனர். ஜேம்ஸுக்கும் தமது ஆரம்ப வெற்றிகளைக் கண்டு தமது பலத்தில் அளவுக்கு மீறிய நம்பிக்கை ஏற்பட்டது. தாம் எதையும் சாதித்துவிட முடியும் என அவர் எண்ண ஆரம்பித்தார். எனவே, 1685ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 9ஆம் தேதி மறுபடியும் பாராளுமன்றம் கூடியபோது, அவர் அதனிடம் சில எதிர்பாராத சலுகைகளைக் கேட்டார். பாராளுமன்றம் கூடாத வேளையில் அவர் ஒரு பெரிய நிலைப்படையை உண்டாக்கி வைத்திருந்

தார். 13,000 வீரர்கள் கொண்ட படையை ஹவுன்ஸ்லோ ஹீத் (Hounslow Heath) என்னுமிடத்தில் லண்டனைப் பயமுறுத்தற்காக அவர் திரட்டி வைத்திருந்தார். நிலப்படையின் எண்ணிக்கையை ஆறுயிரத்திலிருந்து 30,000 மாக அவர் உயர்த்தினர். சேனையில் கத்தோலிக்க அதிகாரிகளே பெரிதும் நியமிக்கப்பட்டனர். சோதனைச் சட்டப்படி (Test Act) அவர்கள் அதிகாரிகளாயிருப்பதற்குத் தகுதியற்றவர்கள். சோதனைச் சட்டத்தை ரத்து செய்துவிட்டுத் தாம் நியமித்த கத்தோலிக்க சேனையதிகாரிகளை ஏற்றுக்கொள்ளும்படி ஜேம்ஸ் பாராளுமன்றத்திடம் கேட்டுக்கொண்டார். எவ்வளவோ இராஜவிசுவாசமுடையதாயிருந்தும்கூட அரசரின் இவ் வேண்டுகோள்களை ஏற்க அம்மன்றம் சித்தமாயில்லை. மேலும் ஹெபியாஸ் கார்ப்பஸ் சட்டத்தையும் ரத்துசெய்ய ஜேம்ஸ் விரும்பினர். பாராளுமன்றத்தாரின் பயம் அதிகரித்தது. கத்தோலிக்க மதத்தை வலுவில் இங்கிலாந்துள் புகுத்த ஜேம்ஸ் முயற்சிக்கிறர் என்பதை அவர்கள் உணர்ந்தனர். இச்சமயத்தில் ஃபிரெஞ்சு நாட்டு மன்னரான பதினன்காம் லூயி 'நாண்டிஸ் பட்டணக் கட்டளை' (Edict of Nantes) என்ற சட்டத்தை ரத்து செய்ததன் மூலம் பிராடெஸ்டண்டுகளுக்கு வழங்கப்பட்டு வந்த உரிமைகளைப் பறித்துக் கொண்டார். அதோடு ஹியூக்நோக்கள் (Huguenots) என்ற ஃபிரெஞ்சு பிராடெஸ்டண்டுகளை அவர் பலவகையிலும் துன்புறுத்தினர். ஆயிரக்கணக்கான ஹியூக்நோக்கள் இங்கிலாந்தில் வந்து தஞ்சம் புகுந்தனர். இதைக் கண்ட ஆங்கிலேயர் ஜேம்ஸும் ஃபிரெஞ்சு மன்னரைப் பின்பற்றித் தங்களைத் துன்புறுத்தக்கூடும் என அஞ்சினர். எனவே, பாராளுமன்றத்தின் இரு சபைகளும் அரசரது கொள்கைகளை வெளிப்படையாகக் கண்டிக்க முற்பட்டன. இதைக் கண்ட ஜேம்ஸ் பாராளுமன்றத்தைக் கலைத்தார். மறுபடியும் அவர் அதைக் கூட்டவே இல்லை.

## ஜேம்ஸும் நீதிபரிபாலன முறையும் — சட்டவிலக்கதிகாரம்

(Dispensing Power, 1686)

சட்டசபையைக் கொண்டு தமது நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ள முடியாதெனத் தெரிந்துகொண்ட ஜேம்ஸ் நீதிபதிகள் மூலம் தம் காரியத்தைச் சாதித்துக் கொள்ள முயன்றர். மன்னர் சட்டங்களுக்குக் கட்டுப்படாதவர் என்ற கொள்கையில் தமது தந்தையைப்போன்றே ஜேம்ஸும் முழு நம்பிக்கை கொண்டிருந்தார். எனவே, தமது முன்னோர்கள் சில சமயங்களில் பயன்படுத்தி வந்த சட்டவிலக்கதிகாரத்தைத் (Dispensing Power) தாமும் கைக்கொள்ள நினைத்தார். அதன்படி அரசராகப் பார்த்துக் குறிப்

பிட்ட சிலரைப் பொறுத்த வரையில் ஒரு சட்டமானது செல்லுபடி யாகாமல் செய்துவிடலாம். ஒரு சட்டம் அமல் நடத்தப்படுவதை இங்ஙனம் அரசர் சில தனிப்பட்ட நபர்கள் விஷயத்தில் விலக்கி வைக்கும் அதிகாரமே சட்டவிலக்கதிகார மெனப்படும். இவ்வதி காரத்தை மன்னர்கள் செலுத்தக்கூடாதென்று திட்டவட்டமாகச் சொல்லக்கூடிய சட்டம் எதுவும் அப்போது இங்கிலாந்தில் இல்லை. நீதிபதிகள் மூலம் அவ்வதிகாரத்தைச் சட்டரீதியாக உறுதிப் படுத்திக்கொள்ள ஜேம்ஸ் விரும்பினர். அதற்காக வழக்கொன்று ஜோடிக்கப்பட்டது. சர் எட்வர்ட் ஹேல்ஸ் (Sir Edward Hales) என்பார் சேனையில் ஓர் அதிகாரியாக நியமிக்கப்பட்டார். அவர் ஒரு கத்தோலிக்கர். எனவே, அவர் சோதனைச் சட்டப்படி வாக் குறுதி எடுத்துக்கொள்ள மறுத்தார். எனினும், அவர் அதிகாரி யாக நியமிக்கப்பட்டார். இவ்விஷயம் ஹேல்ஸின் வேலையாளான காட்டன் (Godden) என்பவரால், நீதிமன்றத்துக்கு அறிவிக்கப் பட்டது. நீதிமன்றம் ஹேல்ஸை அழைத்து விசாரித்தது. அப்போது அவர் அவசரச் சட்ட விலக்கதிகாரத்தின்படி சோதனைச் சட்டத்தினின்றும் தமக்கு ஜேம்ஸால் விலக்களிக்கப்பட்டுள்ளதாகக் கூறினர். சட்ட விலக்கதிகாரம் மன்னருக்கு உரியதா, இல்லையா என்பது பற்றி ஒரு விவாதம் ஏற்பட்டது. கடைசியில் நீதிபதிகள் விலக்கதிகாரம் செலுத்த மன்னருக்கு உரிமையுண்டு எனத் தீர்ப்புக் கூறினர். நீதிமன்றத்தில் தமது கருத்துக்கு எதிராக இருந்த நால்வரை நீக்கிவிட்டுத் தமக்குச் சாதகமான நீதிபதிகளை ஏற்கெனவேயே ஜேம்ஸ் நியமித்திருந்தார். எனவே, அரசருக்குச் சாதகமாக நீதிபதிகள் தீர்ப்பளித்ததில் ஒன்றும் ஆச்சரியமில்லை.

## ஜேம்ஸின் சமயக் கொள்கை

**சமய உயர் ஆணை நீதிமன்றம் (Ecclesiastical High Commission Court, 1686)**

நீதிபதிகளின் சாதகமான தீர்ப்பால் ஜேம்ஸுக்குத் துணிவு அதிகமாயிற்று. ரோமன் கத்தோலிக்கர்களாக மதம் மாறிய அனை வருக்கும் பதவிகளை அவர் நீட்டித்தார். ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக் கழகக் கல்லூரியில் பணிபுரிந்துவந்த வால்க்கர் (Walker) எனும் ஆசிரியர் கத்தோலிக்கராக மதம் மாறிய பின்னும் அப்பதவியி லேயே தொடர்ந்து பணியாற்ற அனுமதிக்கப்பட்டார். பார்க்கர் (Parker) எனும் கத்தோலிக்கர் ஆக்ஸ்ஃபோர்டுக்குப் பிஷப்பாக நியமிக்கப்பட்டார். இதை எல்லாம் கண்ட ஆங்கிலிக்க மத குரு மார்கள் கத்தோலிக்க மதத்தை எதிர்த்துப் பிரசாரம் செய்தனர். ஜேம்ஸ் அவர்களது பிரசாரத்தைத் தடை செய்தார். அங்ஙனம் பிரசாரம் செய்த ஷார்ப் (Sharp) என்ற மத குருவை வேலையி

னின்றும் விலக்கி வைக்கும்படி லண்டன் நகர் பிஷப்பான காம்ப்டன் (Compton) என்பவருக்கு ஜேம்ஸ் ஒரு கட்டளையிட்டார். காம்ப்டன் அக்கட்டளைக்குப் பணிய மறுத்தார். அவரைச் சட்ட ரீதியாகத் தண்டிக்க ஜேம்ஸால் முடியவில்லை. எனவே, அவர் சமயச்சார்பான உயர் ஆணை நீதிமன்றம் ஒன்றைப் புதிதாகத் தோற்றுவித்தார். அம்மாதிரி நீதிமன்றங்களை அரசர் ஏற்படுத்துவது கூடாது என நீடித்த பாராளுமன்றம் ஏற்கெனவேயே ஒரு சட்டமியற்றியிருந்தது. ஆனால், மத குருமார்களையும் சாமானிய மக்களையும் ஒருங்கே விசாரிக்க ஏற்படுத்தப்படும் உயர் ஆணை நீதிமன்றங்களையே அச் சட்டம் தடை செய்தது என்றும், தப்பு செய்யும் மத குருமார்களை மட்டுமே விசாரிப்பதற்காகத் தம் பிரியம் போல் நீதிமன்றம் ஒன்றை ஏற்படுத்தத் தமக்கு உரிமை உண்டென்றும் ஜேம்ஸ் கூறினர். அந் நீதிமன்றம் முதல் வேலையாகக் காம்ப்டனை பிஷப் வேலையினின்றும் விலக்கி வைத்தது. இந் நீதிமன்றத்தைக் கொண்டு ஜேம்ஸ் கத்தோலிக்க குருமார்களைத் தவிர மற்றக் குருமாரனைவருக்கும் வாய்ப்பூட்டுப் போடும் அதிகாரத்தைப் பெற்ருர்.

### இங்கிலாந்தைக் கத்தோலிக்க மயமாக்க முயற்சி

ஜேம்ஸ் கொஞ்சம் கொஞ்சமாகக் கத்தோலிக்க மதத்தை நாட்டின் பல துறைகளிலும் புகுத்திவிட எண்ணினர். ஆங்கிலிக்க மதத்தினரை அவர் சரியாகப் புரிந்துகொள்ளாததே அவரது இந்த எண்ணத்துக்குக் காரணம். ஆங்கிலிக்க மத நிலைய மேலோர் (High Church Men) ஏறக்குறைய கத்தோலிக்கர்களைப் போன்றவரேயென்றும், கொஞ்சம் வற்புறுத்தினல் அவர்கள் முழுக்கக் கத்தோலிக்கராய் மாறிவிடுவரென்றும் ஜேம்ஸ் நினைத்தார். பியூரிட்டன்களைப் போன்றே அவர்களும் கத்தோலிக்க சமயத்தை அடியோடு வெறுப்பவர்களென்பது அவருக்குத் தெரியாமற் போயிற்று.

நாட்டின் இராணுவ சிவில் இலாக்காக்களில் ஜேம்ஸ் கத்தோலிக்கர்களை நிரப்பினர். பிராடெஸ்டண்டுப் போர் வீரர்கள் பலரை அவர் படையினின்றும் நீக்கி, அதற்குப் பதிலாகக் கத்தோலிக்க வீரர்களை நியமித்தார். பிரிவி கவுன்ஸிலில் நான்கு கத்தோலிக்கர்களை அவர் புகுத்தினர். அரசரை ஆதரிக்கும் ஆங்கிலிக்கரின் கோட்டையெனத் திகழ்ந்த ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக் கழகத்தைக் கத்தோலிக்க மயமாக்க ஜேம்ஸ் முயன்ருர். அப் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த மேக்டலன் கல்லூரியில் (Magdalan College) தலைவர் பதவி ஒன்று காலியாயிற்று. அப் பதவிக்கு ஃபார்மர் (Farmer) என்ற ஒழுக்கங் கெட்ட ஒரு கத்தோலிக்கரைத் தேர்ந்தெடுக்கும்

படி ஜேம்ஸ் கல்லூரி உறுப்பினர்களுக்குக் கட்டளையிட்டார். ஆனால், அவர்களோவெனின் ஹஃப் (Hough) என்ற ஒருவரைத் தலைவராகத் தேர்ந்துகொண்டனர். அங்ஙனம் செய்ததற்காக அவர்கள் உயர் ஆணை நீதிமன்றத்தின்முன் வரவழைக்கப்பட்டுக் கண்டிக்கப்பட்டனர். பின் பார்க்கர் (Parker) என்னும் போலிப் பிராடெஸ்டண்டைத் (உள்ளூரக் கத்தோலிக்கர்) தங்கள் தலைவ ராக ஒப்புக்கொள்ளும்படி அப் பல்கலைக் கழகத்தினர் பலவந்தப் படுத்தப்பட்டனர். கல்லூரித் தலைவரின் அறைக் கதவுகளைப் பலவந்தமாக உடைத்துப் பார்க்கரைத் தலைமையாசனத்தில் ஜேம்ஸ் அமர்த்தினர். அவரை எதிர்த்த கல்லூரி உறுப்பினர்கள் கல்லூரியினின்று வெளியேற்றப்பட்டனர். அரசரின் பிரிவி கவுன்ஸிலில் பெரும்பாலும் கத்தோலிக்கர்களே இடம் பெற்றனர். பல கத்தோலிக்கத் திருக்கோயில்களும், பள்ளிகளும் லண்டனில் கட்டப்பட்டன. ஹாலிபாக்ஸ் பிரபுவைக் கவுன்சிலிலிருந்து நீக்கினர் (சோதனைச் சட்டத்தை எதிர்த்ததால்).

### ஸ்காட்லாந்து அயர்லாந்துகளில் கத்தோலிக்க மதத்தைப் புகுத்த முயற்சி (1686-1687)

இங்கிலாந்தில் மட்டுமன்றி ஸ்காட்லாந்திலும், அயர்லாந்திலும் கூடக் கத்தோலிக்க மதத்தைப் புகுத்த ஜேம்ஸ் முயன்றார். கத்தோலிக்க தண்டனைச் சட்டங்களை எல்லாம் ரத்து செய்யும்படி அவர் ஸ்காட்லாந்தியப் பாராளுமன்றத்துக்கு உத்தரவிட்டார். ஸ்காட்லாந்துப் பாராளுமன்றம் அவ்வுத்தரவை நிறைவேற்ற வில்லை. இதைக் கண்ட ஜேம்ஸ் தமது சட்ட விலக்கதிகாரத்தைப் பிரயோகித்து அச்சட்டங்கள் கத்தோலிக்கர்மீது அமல் செலுத்தப் படுவதைத் தடுத்தார். கத்தோலிக்கரான கார்டன் கோமகன் (Duke of Gorden) என்பார் எடின்பர்க் கோட்டையை வைத்துக் கொள்ள அனுமதிக்கப்பட்டார். பெர்த் (Perth), மேல்ஃபர்ட் (Malfort) எனும் கத்தோலிக்கர்கள் ஸ்காட்லாந்தின் மந்திரி சபையில் நியமிக்கப்பட்டனர். அயர்லாந்தில் வசித்த கெல்ட்டுகள் யாவரும் கத்தோலிக்கர்கள். அவர்களைத் துன்புறுத்தி வந்த ஆங்கிலப் பியூரிட்டன் குடியேறிகளிடமிருந்து தங்களைக் காப்பாற்றும்படி அவர்கள் ஜேம்ஸுக்கு ஒரு வேண்டுகோள் விடுத்தனர். உடனே ஜேம்ஸ் அங்கு லெப்டெனண்ட் பிரபுவாக இருந்த கிளாரண்டன் பிரபுவைப் பதவியினின்றும் நீக்கிவிட்டு, டிர்க்-கோனல் (Tyrconnel) என்ற ஒரு கத்தோலிக்கக் கீழ்மகனை லார்டு டெபுடியாக (Lord Deputy) நியமித்தார்.

மதக்கொள்கையைப் பொறுத்தவரையில் ஜேம்ஸ், சொந்தக் காரர், அயலார் என்று பாராமல் ஒரே மாதிரியாகவே நடந்து

**கொண்டார். ராச்செஸ்டர் (Rochester) என்ற அவரது உறவினர் கத்தோலிக்க மதத்தினரல்லாதவர் என்பதற்காக மந்திரி பதவியி னின்றும் நீக்கப்பட்டார். கிளாரண்டனும் அவரது உறவினரே யாவர்.**

### பாராளுமன்றத்தில் கத்தோலிக்கர்களை நிரப்ப முயற்சி

சிவில், இராணுவ இலாக்காக்களில் கூடியவரை கத்தோலிக்கரை நிரப்ப முயன்ற ஜேம்ஸ் பாராளுமன்றத்திலும் அவர்களையே நிரப்ப நினைத்தார். பாராளுமன்றத்தைக் கொண்டே சோதனைச் சட்டத்தை ரத்து செய்ய வேண்டுமென்பது அவரது விருப்பம். அவ்விருப்பத்தை நிறைவேற்ற அவர் எல்லா இடங்களிலிருந்தும் டோரிகளை விரட்ட ஆரம்பித்தார். டோரி நகராட்சி மன்றங்கள் சீர்திருத்தி அமைக்கப்பட்டன. கத்தோலிக்கரும், ஆங்கிலிக்க மதத்திற்கு இணங்காதாரும் அவற்றில் இடம் பெற்றனர். சோதனைச் சட்டத்தை ரத்து செய்ய வாக்களிப்பதாக ஒப்புக் கொள்ளாத அமைதிகாண் நீதிபதிகள் யாவரும் வேலையினின்றும் நீக்கப்பட்டனர். அங்ஙனமே லெப்டெனண்ட் பிரபுக்கள் பலர் பதவியினின்றும் நீக்கப்பட்டனர். ஆக்ஸ்ஃபோர்டு பிரபு, டெர்பி, சோமர்செட் பிரபு ஆகியோர் அங்ஙனம் நீக்கப்பட்டவர்களாவர். இங்ஙனம் பல எச்சரிக்கைகள் எடுக்கப்பட்டபின் கூடிய பாராளுமன்றத்திலும் கூட அரசரை ஆதரிப்போர் குறைவாகவே இருந்தனர். எனவே, அரசர் பாராளுமன்றத்தைக் கூட்டுவதை ஒத்திப் போட்டுக்கொண்டே வந்தார்.

### பொறுத்தலறிக்கை (Declaration of Indulgence)—சட்ட நிறுத்த அதிகாரம் (Suspending Power, 1687)

ஜேம்ஸ் ஆங்கிலிக்கர்களின் ஆதரவைப் பெற முயன்றும் முடியாமற் போகவே, மற்றைய இணங்காதாரின் (Dissenters) ஒத்துழைப்பைப் பெற எண்ணினர். அவர்களுக்கு நன்மை செய்வதுபோல் காட்டி அவர்களின் உதவியைப் பெற்றுக்கொண்டு, அதே சமயம் கத்தோலிக்கர்களுக்கும் நன்மை உண்டாக்க அவர் எண்ணினர். அவ்வெண்ணத்தை ஈடேற்ற அவர் சட்ட நிறுத்த அதிகாரம் என்னும் மன்னரது பழைய சிறப்பதிகாரத்தைக் கையாண்டார். அவ்வதிகாரப்படி ஒரு சட்டத்தை முழுவதுமாக அமலாக்காமல் அரசர் தடுத்துவிடலாம். அதைப் பயன்படுத்தி ரோமன் கத்தோலிக்கர்மீதும், இணங்காதார்மீதும் அதுவரை விதிக்கப்பட்டிருந்த தண்டனைச் சட்டங்கள் யாவற்றையும் ஜேம்ஸ் தடை செய்தார். இத் தடையுத்தரவிற்குப் பொறுத்தலறிக்கை எனப் பெயர். 1687-ல் இவ்வறிக்கை வெளியிடப்பட்டது. இதனால், ரோமன் கத்தோலிக்கர் மகிழ்ச்சியுற்றனர். ஆனால்,

இணங்காதார் அதை நன்கு வரவேற்கவில்லை. கத்தோலிக்கர் நாட்டில் மேன்மையடையவே ஜேம்ஸின் அறிக்கை உதவி செய்யும் என அவர்கள் எண்ணினர். ஆகவே, அவர்களில் பலர் இவ்வறிக்கையைப் பயன்படுத்திக்கொள்ளவில்லை. அப்படித் தமக்கு நன்மை ஏற்படுவதானாலும் அந் நன்மை பாராளுமன்றத்தின்மூலமே கிடைக்கவேண்டுமென அவர்கள் விரும்பினர். பாராளுமன்ற உறுப்பினர்களும் சமயப் பொறையை அவர்களுக்கு வழங்குவதாக வாக்களித்தனர். எனவே, பாராளுமன்றம் மீண்டும் கூடும்வரை ஜேம்ஸின் பொறுத்தலறிக்கையை ஆதரிப்பதில்லை எனப் பல ஆங்கிலிக்கர்களும் முடிவு செய்தனர்.

## இரண்டாவது பொறுத்தலறிக்கை (1688)

பாராளுமன்றம் தம்மை ஆதரிக்குமென்ற நிச்சயம் ஜேம்ஸுக்கு ஏற்படாததால் அவர் அதைக் கூட்டாமல் 1688ஆம் ஆண்டில் இரண்டாவது பொறுத்தலறிக்கையை (Second Declaration of Indulgence) வெளியிட்டார். இச் சமயம் அவ்வறிக்கையானது எல்லாக் கிறிஸ்தவக் கோயில்களிலும் படிக்கப்பட வேண்டுமென ஜேம்ஸ் கட்டாயப்படுத்தினார். பல குருமார்கள் அங்ஙனம் அதைப் படிக்க மறுத்தனர். காண்டர்பரி ஆர்ச் பிஷப்பான சேன்கிராஃப்டும் (Sancroft) மற்றும் அறுவரும் சேர்ந்து ஜேம்ஸிடம் ஒரு விண்ணப்பத்தைக் கொடுத்தனர். நடுநிசியில் வந்து அவர்கள் தந்த அந்த விண்ணப்பம் அநேகமாகத் தமது அறிக்கையை ஆதரிப்பதாகத் தானிருக்குமென ஜேம்ஸ் எண்ணினார். ஆனால், அது தன் அறிக்கைக்கு விரோதமாயிருப்பதை அறிந்து அவர் வெகுண்டார். அரசருக்கு விரோதமாகக் கலகம் செய்யப் பார்ப்பதாக அவ்வெழுவரும் குற்றம் சாட்டப்பட்டனர். நீதிமன்றத்தில் அவர்களை விசாரிப்பதாகக் கூறி ஜேம்ஸ் அவர்களைக் கோபத்துடன் திருப்பி அனுப்பிவிட்டார்.

## ஏழு பிஷப்புகள் வழக்கு (Seven Bishops' Case, 1688)

தன்னிடம் விண்ணப்பத்தைச் சமர்ப்பித்த ஏழு பிஷப்புகளையும் நீதிமன்றத்தில் விசாரிக்குமாறு ஜேம்ஸ் உத்தரவிட்டார். வெஸ்ட்மின்ஸ்டரில் அவர்கள் விசாரிக்கப்பட்டனர். அரசாங்கத்தை அவதூறு (Seditions Libel) செய்ததாக அவர்கள் குற்றம் சாட்டப்பட்டனர். வழக்கு, ஜூரிகளின் தீர்ப்புக்கு விடப்பட்டது. ஓர் இரவு முழுவதும் ஜூரிகள் ஓர் அறையில் அடைக்கப்பட்டனர். அவர்களில் பெரும்பாலோர் பிஷப்புகளை ஆதரித்தனர். அரசனை ஆதரித்த ஒரு சிலரின் மனத்தை அவர்கள் இரவெல்லாம் விவாதித்து மாற்றிவிட்டனர். விடிந்தபோது, பிஷப்புகள் குற்றமற்றவர்கள் என்ற தீர்ப்பை ஜூரிகள் வழங்கினர். எனவே, பிஷப்புகள்

விடுதலை செய்யப்பட்டனர். அவர்கள் விடுதலையடைந்ததைக் கேட்ட லண்டன் மக்கள் கூட்டம் கூட்டமாக வந்து ஆரவாரத்துடன் மண்டியிட்டு அவர்களைத் தொழுது வரவேற்றனர். ஹவுன்ஸ்லோ ஹீத்தில் தங்கியிருந்த படைவீரர்கள் இச் செய்தி கேட்டு மகிழ்ச்சியாரவாரம் புரிந்தனர். ஜேம்ஸ் இதைக் கேட்டு உண்மையிலேயே நெஞ்சம் துணுக்குற்றார்.

## வில்லியத்துக்கு அழைப்பு அனுப்பப்படல் (1688)

அரசரை வெறுத்தவர்கள் ஏராளமாக இருந்தபோதிலும் அவர்கள் அரசரை எதிர்த்துப் போர்புரிய விருப்பமில்லாமலிருந்தனர். அவர் இறக்கும்வரை காத்திருந்து பின்னர் அவரது மகள் மேரி எனும் பிராடெஸ்டண்டு இளவரசியை இங்கிலாந்தின் இராணியாக்கிவிடலாமென அவர்கள் எண்ணியிருந்தனர். ஆனல், அவர்கள் எதிர்பாராதவகையில் 1688ஆம் ஆண்டு ஜூன் மாதம் 10ஆம் தேதியன்று, ஜேம்ஸின் மனைவி ஓர் ஆண் மகவை ஈன்றெடுத்தாள். இதை அறிந்த யாவரும் திடுக்கிட்டனர். இங்கிலாந்தின் மகுடம் வழி வழியாகக் கத்தோலிக்கருக்கே சொந்தமாகி விடுமே என ஆங்கிலேய பிராடெஸ்டண்டுகள் அஞ்சினர். அவர்கள் உடனே ஒரு பெருஞ் சதித்திட்டத்தில் இறங்கலாயினர். ஏற்கெனவே அவர்கள் ஆரஞ்சு நாட்டு வில்லியத்துக்கும் மேரிக்கும் இங்கிலாந்துக்கு வந்து தங்களைக் காக்கும்படி ஒரு வேண்டுகோள் விடுத்திருந்தனர். வில்லியம் அப்போது ஐரோப்பிய நாட்டினரின் பொது எதிரியாகத் திகழ்ந்த பதினன்காம் லூயிக்கு எதிராகப் போரிட்டுக்கொண்டிருந்தார். பதினன்காம் லூயிக்கு விரோதமாக அவர் ஆஸ்திரியா, பவேரியா போன்ற பல ஐரோப்பிய நாடுகளின் பெருங்கூட்டுறவு (Grand Alliance) ஒன்றை ஏற்படுத்தினர். அக் கூட்டுறவில் இங்கிலாந்தும் சேர்ந்தால் நலமாயிருக்கும் என அவர் விரும்பினர். எங்கு, டச்சுக்காரரும் ஆங்கிலேயரும் ஒன்று சேர்ந்துவிடுவரோ என்ற பயத்தால் பதினன்காம் லூயி ஜேம்ஸுக்கு அவ்வப்போது பணவுதவி செய்துவந்தார். லூயியின் உதவியின்றித் தாம் ஒன்றும் செய்ய இயலாதென, ஜேம்ஸ் ஒரு சமயம் ஃபிரெஞ்சுத் தூதுவரிடம் கூறினர். எனினும் ஜேம்ஸ் லூயியின் கைப்பாவையாக இருக்க விரும்பவில்லை. தம் சொந்த விருப்பப்படியேதான் நடக்கமுடியும் என்று கூறி, அவர் தமது மதிப்பைக் காத்துக்கொண்டார். டச்சுக்காரர்களுக்கு விரோதமாகத் தாம் ஒரு கப்பற் படையை உதவுவதாக லூயி, ஜேம்ஸுக்கு வாக்களித்தார். நெதர்லாந்துக்கு அருகே தயாராக அவர் தம் கப்பற்படையையும் வைத்திருந்தார். ஆனல், ஜேம்ஸ் லூயியின் உதவியைப் பெறுதல் தம் மானத்துக்கிழுக்கென நினைத்து அதை மறுத்துவிட்

டார். இதனல் கோபமுற்ற லூயி கப்பற்படையைத் திருப்பி அழைத்துக்கொண்டார். நெதர்லாந்தைத் தாக்க அமைக்கப்பட்டிருந்த சேனையை, அவர் பாலடைன் (Palatine) நாட்டின்மேல் படையெடுக்கும்படி கட்டளையிட்டார். வேண்டுமென்றே லூயி அங்ஙனம் செய்தார். வில்லியம் அப்போது இங்கிலாந்தின்மேல் படை எடுப்பாரென்றும். அச்சமயம் ஜேம்ஸ் வலியவந்து தம்மை உதவி கேட்பாரென்றும் லூயி நினைத்தார். வில்லியமும் ஃபிரெஞ்சுத் தொல்லையினின்றும் சிறிது விடுதலை கிடைத்ததால் இங்கிலாந்துக்குப் புறப்படத் தயாரானர். நாட்டின் முக்கியத் தலைவர்களும் பிரமுகர்களும் சேர்ந்து தம்மை வரவேற்றால் தாம் இங்கிலாந்துக்கு வருவதாக ஆங்கிலச் சதிகாரர்களுக்கு அவர் சொல்லி அனுப்பினர். அதன்படியே ஏழு பிஷப்புகள் விடுதலை பெற்ற அன்றிரவு, டான்பி பிரபு, பிஷப் காம்ப்டன், லம்லி, கடவன்ஷயர் பிரபு, ஷ்ரூஸ்பரி, ஹென்றி சிட்னி, எட்வர்ட் ரஸ்ஸெல் என்ற ஏழு பிரமுகர்கள் சேர்ந்து வில்லியத்துக்கு ஓர் அழைப்பு விடுத்தனர். நாட்டின் பெரும் பிரபுக்களான சர்ச்சில், கிர்க்கி, ஆர்மாண்ட், கிராப்டன் முதலியோரும் கடற்படைத் தலைவர்களும் சதிகாரர்க்குத் தங்கள் ஆதரவைத் தெரிவித்தனர். ஆரஞ்சு வில்லியம் ஆங்கிலப் பிரபுக்களின் அழைப்பை ஏற்றார். அவர் நாட்டிலில்லாதபோது ஹாலந்தைப் பாதுகாக்க பிரஷ்யா, ஹெஸ்ஸே, ஹனேவர் நாடுகள் உறுதியளித்ததன்பேரில் அவர் ஒரு சிறு படையுடன் இங்கிலாந்தை நோக்கிப் புறப்பட்டார்.

## ஜேம்ஸின் ஓட்டம்
(Flight of James, 1688)

தம்முடைய விரோதிகள் வில்லியத்தோடு பேச்சுவார்த்தை நடத்துவதை ஜேம்ஸ் தமது ஒற்றர்கள் மூலம் அறிந்தார். உடனே மக்களின் ஆதரவைப் பெறுவதற்காகப் பல முயற்சிகளைச் செய்தார். லண்டன் நகர உரிமைச் சாசனத்தையும், மற்றைய பட்டணங்களின் பழைய உரிமைச் சாசனங்களையும் மீண்டும் அவர் அவைகளுக்களித்தார். சமய உயர் ஆணை நீதிமன்றத்தை ஒழித்தார். நீக்கப்பட்ட மாக்டலன் கல்லூரி உறுப்பினரை மீண்டும் அங்கு அமர்த்தினர். இவ்வளவும் செய்த ஜேம்ஸ் பாராளுமன்றத்தைக் கூப்பிட மறுத்தார். லூயியின் உதவியையும் மறுத்தார். தம் எதிரிகளோடு போரிடவும் அவருக்கு விருப்பமில்லை. அவருக்கு மனவுறுதி இன்மையால், படையினரும் ஊக்கமிழந்தனர். நாட்டுப்புறக் கனவான்கள் பலரும் அரசருக்கு எதிராக ஒன்று சேர்ந்தனர்.

இந்நிலையில் வில்லியம், ஆங்கிலேய மக்களின் சட்டங்களைக் காப்பதாகவும், சுயேச்சையான பாராளுமன்றத்தைக் கூட்டுவதாகவும், பிராடெஸ்டண்டு மதத்தைக் காப்பதாகவும் வாக்களித்தார்; பிராடெஸ்டண்டு மதம், சுயேச்சையான பாராளுமன்றம் என்ற இவ்விரண்டு சொற்றொடர்களும் ஆங்கிலேய மக்களை ஜேம்ஸுக்கு விரோதமாக ஒன்று திரட்டின. ஏனெனில், இவ்விரண்டுக்கும் எதிரியாக ஜேம்ஸ் விளங்கினார். டான்பி பிரபு இவ்விரு சொற்றொடர்களையும் சொல்லி, வடக்கே இருந்த மக்களைத் தட்டி எழுப்பினார். 24,000 படைவீரர்களுடன் வில்லியம் டோர்பே (Torbay) துறைமுகத்தில் 1688ஆம் ஆண்டு நவம்பர் மாதம் வந்து இறங்கினார். புயல் காற்று அவருக்குச் சாதகமாகவும் அரசரது கப்பற்படைக்குப் பாதகமாகவும் இருந்தது.

வில்லியத்தின் வருகையை அறிந்த ஜேம்ஸ் திகைப்புற்றுச் சாலிஸ்பரி சமவெளியை நோக்கி ஒரு படையுடன் புறப்பட்டார். ஆனால், நடுவில் நம்பிக்கை இழந்து திரும்பினார். டான்பி பிரபு வடக்கே யார்க், ஹல் துறைமுகங்களைக் கைப்பற்றினார். டிசம்பர் மாதத்தில் பிரபுக்களின் ஆலோசனைப்படி ஜேம்ஸ் பார்லிமெண்டைக் கூட்ட ஒப்புக்கொண்டார். ஆனால், திடீரென அவர் பொறுமையிழந்தார். தம் மனைவி மக்களை டிசம்பர் 9ஆம் தேதி ஃபிரான்ஸுக்கு அனுப்பிவிட்டு, பதினோராம் தேதி அவரும் அவர்களைப் பின்தொடர்ந்தார். ஆனால், வழியில் ஃபேவர்ஷாம் (Faversham) என்ற மீன் பிடிப்பவன் அவரைப் பிடித்து மீண்டும் லண்டனுக்குக் கொணர்ந்துவிட்டான். இதையறிந்த வில்லியம் ஜேம்ஸைக் கைது செய்யவில்லை. அவர் தப்பி ஓடுவதற்கான வசதிகளை அவரே செய்து தந்தார். தமது தந்தையின் கதி தமக்கும் நேர்ந்துவிடுமோ எனப் பயந்த ஜேம்ஸும் டிசம்பர் 23ஆம் தேதி ராக்செஸ்டரிலிருந்து ஃபிரான்ஸுக்குத் தப்பி ஓடிவிட்டார். தமது உதவியைக் கேட்க ஜேம்ஸின் தூதர் வருவாரென்று எதிர்பார்த்துக் கொண்டிருந்த லூயியின் முன்னால், ஜேம்ஸ் மன்னரே வந்து நின்றார். கிறிஸ்துமஸ் தினத்தன்று ஜேம்ஸ் ஃபிரான்ஸில் தம் மாஸ் ஜெபத்தை நிகழ்த்தினார்.

## பிரத்தியேகப் பாராளுமன்றம்
(Convention Parliament, 1688)

ஜேம்ஸ் நாட்டைவிட்டு ஓடியதைக் கேள்வியுற்ற பிரபுக்களும், நகராட்சி மன்ற உறுப்பினர்களும், இரண்டாம் சார்லஸ் காலத்திய பாராளுமன்றத்தின் உறுப்பினர்களும் சேர்ந்து, இங்கிலாந்தின் அரசாட்சியை ஏற்றுக்கொள்ளும்படி வில்லியத்தை வேண்டினர்.

அதோடு இன்னொரு புதிய பிரத்தியேகப் பாராளுமன்றத்தைக் கூட்டும்படியும் அவர்கள் வில்லியத்தைக் கேட்டுக்கொண்டனர்.

1689ஆம் ஆண்டு ஜனவரியன்று ஒரு பிரத்தியேகப் பார்லிமெண்டானது தேர்ந்தெடுக்கப்பட்டது. விக்குக் கட்சியினர் பெரும்பான்மையாகப் பொதுமக்கள் சபையில் தேர்ந்தெடுக்கப்பட்டனர். அவர்கள் அனைவரும் சேர்ந்து இரண்டாம் ஜேம்ஸ், நாட்டின் அடிப்படையான சட்டங்களை மீறியதனாலும் நாட்டைவிட்டுத் தாமே ஓடிவிட்டதனாலும், மகுடத்தை அவர் தாமாகத் துறந்துவிட்டதாயும், அரச பதவி அதனால் காலியாகிவிட்டதாயும் அறிவித்தனர். நாட்டின் சட்டங்களை அரசர் மீறினார் என்று அவ்வறிவிப்புக் கூறியதால் விக்குகள் திருப்தியடைந்தனர். அவர் தாமாகவே மகுடத்தைத் துறந்துவிட்டார் என்று அது கூறியதால் டோரிகளும் மன அமைதி அடைந்தனர். அரச பதவி காலியாகிவிட்டதென்ற தீர்மானம் பொதுமக்கள் சபையில் நிறைவேறியது. ஆனால், காலியாகிவிட்ட சிம்மாசனத்தில் யார் அமர்வது என்பதில் பல கருத்து வேறுபாடுகள் பிரபுக்கள் சபையினர்பால் காணப்பட்டன. டோரிக் கட்சியினர் ஜேம்ஸ் வெளிநாட்டில் பெயரளவில் அரசராயிருக்கலாமென்றும், வில்லியம் இடைக்காலப் பாதுகாப்பாளராக (Regent) ஆட்சி புரியலாமென்றும் ஒரு யோசனை கூறினர். அது பலருக்கும் பிடிக்கவில்லை. ஏனெனில், அந்நிய அரசரது அரண்மனையில் தஞ்சம் புகுந்துள்ள அரசரைத் தங்கள் நாட்டின் அரசராக ஒப்புக்கொள்வது, தங்கள் நாட்டின் பெருமைக்கே இழுக்காகுமென ஆங்கிலேயர் நினைத்தனர். டான்பி பிரபு வேறொரு விசித்திர திட்டத்தைச் சமர்ப்பித்தார். ஜேம்ஸின் ஓட்டத்தால் ஆங்கிலேயர் அவருக்குக் கீழ்ப்படிய வேண்டிய அவசியம் இல்லையென்றும், அவரது மகள் மேரி அரசியே, இங்கிலாந்தின் இராணியாக முடிசூட்டப்பட வேண்டுமென்றும் அவர் கூறினார். ஆனால், இத்திட்டத்தை வில்லியம், மேரி இருவரும் ஏற்றுக்கொள்ள மறுத்தனர். தமது மனைவி அரசியாக இருக்கத் தாம் அவளுக்கு வெறும் வாழ்க்கைத் துணைவராகக் (Consort) காலங் கழிக்கும் மானங்கெட்ட வாழ்க்கை வாழ்வதைவிட ஹாலந்தின் அரசராக மட்டும் இருப்பதே மேல் என வில்லியம் கூறிவிட்டார். தம் கணவருக்கும் மேலான நிலையில் தான் இருக்கவேண்டுமெனக் கூறிய டான்பியை மேரி அரசியும் கடிந்துகொண்டாள். எனவே ஆங்கில மகுடம் வில்லியம், மேரி இருவருக்குமாகச் சேர்த்து அளிக்கப்பட்டது. இருவரும் இங்கிலாந்தின் இணையரசர்களாக (Joint Sovereigns) அறிவிக்கப்பட்டனர். அவர்களது வாழ்நாட்களுக்குப் பின் ஆங்கில மகுடம் மேரியின் மக்களுக்கும், அதன்பின் ஆன் அரசியாருக்கும், கடைசியாக வில்லியத்தின் இரண்டாம் மனைவியின்

சந்ததியார்களுக்கும் (வில்லியம் இரண்டாம் முறை மணக்க நேர்ந்தால் மட்டும்) செல்லவேண்டுமெனத் தீர்மானிக்கப்பட்டது. உரிமைகள் அறிவிப்பு (Declaration of Rights) ஒன்றை வெளியிட்ட பின் வில்லியமும் மேரியும் 1689ஆம் ஆண்டு பிப்ரவரி 13ஆம் தேதி ஆங்கில மகுடத்தை ஏற்றுக்கொண்டனர்.

# 15. ஸ்பானிய வாரிசு உரிமைப் போர் (1702 - 1713)

## (The War of the Spanish Succession)

போரை விளைவித்த சூழ்நிலைகள் : ஸ்பெயினின் நிலைமை — வாரிசுரிமைச் சிக்கல்—முதல் பங்கீட்டு உடன்படிக்கை, 1698 — இரண்டாவது பங்கீட்டு உடன்படிக்கை, 1700.

போரில் இருதரப்பாரது வலிமையின் நிலை.

மார்ல்பரோ கோமகன்.

போரின் போக்கு : நெதர்லாந்து, மத்திய ஐரோப்பியப் போர் அரங்கங்கள் — லீஜ், பான் (1702) — பான், கொலோன் (1703) — பிளென்ஹீம் (1704) — ராமில்லீஸ் (1706) — ஊடனார்ட் (1708) — மால்பிலாகத் (1709) — டெனெய்ன் (1710) — இதாலிய அரங்கம்—டியூரின்—நேப்பில்ஸ்—மிலான் (1706) — ஸ்பானிய அரங்கம்—பார்ஸிலோனு (1705)—மாட்ரிட்(1706)—ஆல்மன்ஸா (1707) கடற்போர் — ஜிப்ரால்டர் (1704) — மினார்க்கா (1708).

யுட்ரெக்ட் சமாதான உடன்படிக்கை (1713).

உடன்படிக்கையின் விளைவுகள்.

### போரை விளைவித்த சூழ்நிலைகள்

' பெருமை மிக்க அரசர் ' (Grand Monarch) என்று வரலாற்றில் பேசப்படுகிற ஃபிரெஞ்சு மன்னர் பதினான்காம் லூயி, அவர் காலத்திய மன்னருள் ஒரு மாணிக்கமெனத் திகழ்ந்தார். அவர் தம்மைக் கதிரவனெனவும் மற்றைய ஐரோப்பிய மன்னர்கள் கதிரவனைச் சுற்றி வட்டமிடுகின்ற கோள்களெனவும் அடிக்கடி கூறுவது வழக்கம். தம்முடைய பெருமையையும் ஃபிரெஞ்சு நாட்டின் புகழையும் ஓங்கச்செய்ய அவர் பல போர்களில் ஈடுபட்டார். அவைகளுள் மிக முக்கியமானது ஸ்பானிய வாரிசுரிமைப் போராகும். அப்போரில் பல ஐரோப்பிய நாடுகளும் கலந்துகொண்டன.

1. பிளென்ஹீம்
2. மால்பிலாகத்
3. ராமில்லீஸ்
4. ஊடனூர்ட்
5. யுட்ரெக்ட்




சு = சுவிட்ஸர்லாந்து
பி = பியட்மாண்ட்
ஆ = ஆஸ்திரியா
ஹ = ஹங்கேரி
போ = போப்பாண்டவரது நாடுகள்
நே = நேபில்ஸ்
நெ = நெதர்லாந்து
பிர = பிரஷ்யா
ஹனே = ஹனோவர்

அவற்றுள் இங்கிலாந்தானது நடுநாயகமாகத் திகழ்ந்தது. அப்போரில் மற்றைய நாடுகள் அனைத்தையும் ஒன்று சேர்த்து, லூயியைத் தோற்கடித்த பெருமை இங்கிலாந்திற்கே உரியதாகும்.

ஸ்பெயினின் நிலை

பதினேழாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஸ்பெயின் தேசமானது நாளுக்கு நாள் பலஹீனமடைய ஆரம்பித்தது. புதிய உலகத்திலிருந்து பொன்னும் வெள்ளியும் ஏராளமாக வந்து குவிந்த போதுங்கூட, ஸ்பெயின் முன்னேற முடியவில்லை. ஏனெனில், 1669 முதல் 1700ஆம் ஆண்டுக்குள் அது ஃபிரான்ஸோடு மூன்று போர்களிலீடுபட நேர்ந்தது. புது உலகத்திலிருந்து வந்த பொருளெல்லாம் போர் புரிவதிலேயே விரயமாய்விட்டது. மேலும், ஒரு நாட்டின் செல்வம் அங்கு இருக்கின்ற நாணயங்களைப் பொறுத்ததுமட்டுமன்று. அங்கு மேலும் உற்பத்தியாகிற பொருள்களே அந்நாட்டின் செல்வமாகுமென்பது ஒரு சாதாரண பொருளாதார உண்மை. உற்பத்திப் பெருக்க வகையில் ஸ்பெயின் பெரிதும் பின்தங்கி நின்றது. 17ஆம் நூற்றாண்டில் அஃது இடைக்கால நிலமானிய ஏற்பாடுகளையே தன்னகத்துக் கொண்டிருந்தது. பிரபுக்களும் மத குருமார்களும் பல சிறப்புரிமைகளைப் பெற்று, சுகபோகங்களில் திளைத்தனர். ஆனால்,குடியானவர்கள் பலவகையாலும் துன்புறுத்தப்பட்டனர். ஸ்பெயினில் அப்போது அரசராயிருந்த இரண்டாம் சார்லஸ் திறமையற்றவரா யிருந்தார். உடலில் வலிமையும், உள்ளத்தில் உரமுமின்றி வாழ்ந்த அவர் எல்லா வகையிலும் ஒரு குழந்தைபோலவே நடந்துகொண்டார். அவர் இருந்தும் இறந்தவர்போலவே நடமாடினார். திருமணமாகி யிருந்தும், அவருக்குக் குழந்தைகள் ஏதும் இல்லை. அவருக்குக் கூடப் பிறந்த சகோதரர்களும் ஒருவருமில்லை.

அரசாள்வதற்குத் திறமை மிக்க அரசர் இல்லாத காரணத்தால் ஸ்பெயின் வாட்டமுற்றதேயன்றி உண்மையில் ஸ்பெயின் இராஜ்யமே ஐரோப்பிய இராஜ்யங்களனைத்தையும் விடப் பரப்பளவிலும் செல்வத்திலும் மிக்கதாய் இருந்தது. மத்தியதரைக் கடலைச் சுற்றியும் அதற்குச் சொந்தமான நாடுகளிருந்தன. மேலும், ஸ்பெயினுக்குப் பல வளமிக்க குடியேற்ற நாடுகள் இருந்தன. எனவே, ஐரோப்பிய அரசர்கள் யாவருக்குமே ஸ்பெயின் மீது ஒரு கண் இருந்துகொண்டிருந்தது. சார்லஸ் எப்பொழுது இறப்பார் என்று அவர்கள் எதிர்பார்த்துக்கொண்டிருந்தனர். சார்லஸ் இறப்பதற்கு முன்னமே ஐரோப்பிய வல்லரசர்கள் ஸ்பெயின் பேரரசை எங்ஙனம் தங்களிடையே பகிர்ந்துகொள்வதென்பதைப் பற்றி யோசித்துவந்தார்கள். அதற்காக அவர்களிடையே பல பயனற்ற திட்டங்களும் தீட்டப்பட்டன.

**வாரிசுரிமைச் சிக்கல்**

இரண்டாம் சார்லஸுக்குக் குழந்தைகளில்லை எனப் பார்த்தோம். ஆனால், அவருக்கு இரண்டு சகோதரிகளிருந்தனர். மூத்த சகோதரி மாரியா தெரீசா (Maria Theresa) ஃபிரெஞ்சு மன்னர் பதினான்காம் லூயிக்கு வாழ்க்கைப்பட்டிருந்தார். இளைய சகோதரி மார்கிரெட் தெரீஸா (Margret Theresa) ஆஸ்திரியப் பேரரசர் முதலாம் லியோபோல்டை (Leopold I) மணந்திருந்தார். எனவே, லியோபோல்டு, லூயி இருவருமே ஸ்பானிய மகுடத்துக்கு உரிமை கொண்டாடினார்கள். ஐந்தாம் சார்லஸ் காலத்தில்தான் ஆஸ்திரியப் பேரரசு நாடுகளும், ஸ்பெயினும் வெவ்வேறாகப் பிரிந்தன. நாடுகள் பிரிந்தாலும் அவை ஹாப்ஸ் பர்க் வமிசத்தாராலேயே ஆளப்படவேண்டுமென நினைத்துச் சார்லஸ் ஒரு திட்டம் வகுத்தார். அதன்படி ஸ்பானிய இளவரசியொருத்தி ஆஸ்திரிய இளவரசனொருவனையே மணவாளராகத் தேர்ந்தெடுத்துக்கொள்ளவேண்டும். அங்ஙனம் தேர்ந்துகொள்ளத் தவறி வேறு ராஜ குடும்பங்களோடு திருமணத் தொடர்பு கொள்வதாயிருந்தால், ஸ்பானிய மகுடத்துக்குத் தான் உரிமை கொண்டாடுவதில்லை என அவர் தம் திருமணத்துக்குமுன் ஒரு வாக்குறுதி எடுத்துக்கொள்ளவேண்டும். இவ் வழக்கப்படியே மாரியா தெரீஸா பதினான்காம் லூயியை மணக்குமுன், தான் ஸ்பானிய மகுடத்துக்கு உரிமை கொண்டாடுவதில்லை என்று வாக்குறுதி எடுத்துக்கொண்டார். ஆனால், அவ்வுரிமை மறுப்புக்கு ஈடாகத் தனக்குச் சீதனம் (Dowry) வழங்கப்படவேண்டுமென அவர் ஒரு நிபந்தனை விதித்திருந்தார். இந் நிபந்தனை நிறைவேற்றப்படவில்லை. எனவே ஸ்பானிய மகுடம் தம் மனைவியின் மூலமாகத் தமக்கே சேரவேண்டுமெனவும், தமது மகன் டாபின் (Dauphin) என்பார் ஸ்பானிய மகுடத்துக்கு உரியவரெனவும் அறிவித்து, லூயி வாதாடினர். ஃபிரெஞ்சு சட்ட நிபுணர்கள் இன்னும் ஒருபடி மேலே சென்று, மாற்றமுடியாத பரம்பரை உரிமைப்படி மாரியா தெரீசாவுக்கே ஸ்பானிய மகுடம் சேரவேண்டுமென்றும், அதை வேண்டாமெனக் கூறும் எந்த வாக்குறுதியும் செல்லுபடியாகாதெனவும் வாதித்தனர். அவர்கள் வாதத்தை ஏற்றுக்கொள்வதானல் இரண்டாம் சார்லஸுக்குப் பின் பதினான்காம் லூயியின் மூத்த மகனை டாபின் (Dauphin) என்பார் ஃபிரான்ஸ், ஸ்பெயின் இரண்டு நாடுகளுக்கும் அரசராகவேண்டிவரும். அப்படியானல் அஃது ஐரோப்பிய சக்திச் சமநிலைக்கும் (Balance of power) பெரியதொரு பங்கம் விளைப்பதாக அமையும். எனவே, அத்தகைய யோசனையை ஹாலந்து, இங்கிலாந்தின் மன்னரான வில்லியம் போன்றோர் முழு மூச்சோடு எதிர்த்தார்கள். இதைக் கண்ட லூயி

தமக்குப் பின் தமது மூத்த மகன் ஃபிரான்சுக்கும், தமது பேரனை பிலிப் எனும் ஆஞ்சோ கோமன் (Philip Duke of Anjou) ஸ்பெயினுக்கும் அரசர்களாகவேண்டும் என்ற கருத்தைத் தெரிவித்தார். அப்போது ஸ்பெயினும் ஃபிரான்ஸும் தனித்தனியே இயங்குமாகையால், அது மற்ற நாட்டினரின் பெருமையைக் கிளறாது என அவர் நினைத்தார். பரம்பரை உரிமைப்படி பார்க்கும் போது லூயியின் உரிமை வாதம் சரியானதாகவே இருந்தது. டாபினுக்கு அடுத்தபடியாக ஸ்பானிய மகுடத்துக்கு உரிமையுடையவர் இரண்டாம் சார்லஸின் இளைய சகோதரியின் கணவரான லியோபோல்டு பேரரசராவர். அவருடைய தாயார் மாரியா என்பவர் நான்காம் பிலிப் என்ற ஸ்பானியப் பேரரசரின் சகோதரி. அவர் ஆஸ்திரியப் பேரரசரான மூன்றும் பெர்டினண்டை மணந்த போது தமது ஸ்பானியப் பட்டவுரிமையை மறுத்து வாக்குறுதி எடுத்துக்கொள்ளவில்லை. பிலிப்பின் இன்னொரு சகோதரியான ஆன் இளவரசி (Princess Anne) ஃபிரெஞ்சு அரசரான பதின்மூன்றும் லூயிக்கு வாழ்க்கைப்பட்டிருந்தாள். ஆனால், திருமணத்தின்போது ஸ்பானிய மகுடம் தமக்கு வேண்டாமென்று அவர் வாக்குறுதி எடுத்துக்கொண்டிருந்தார். எனவே, அவரது புதல்வரான பதினான்காம் லூயிக்கு ஸ்பானிய அரசராவதற்குரிய தகுதி லியோபோல்டை விடச் சற்றுக் குறைவானதாகவே இருந்தது. ஸ்பானியப் பட்ட உரிமையை மறுத்த வாக்குறுதிகளால் பாதிக்கப்படாதவர் லியோபோல்டு ஒருவரேயாவர். சட்டப்படி பார்க்கும் போது அவரது உரிமையே சரியானதாக இருந்தது. ஆனால், அவர் ஸ்பானிய மகுடத்தைப் பெற்றால் ஐரோப்பியச் சமநிலைக்குப் பங்கம் ஏற்படுகின்ற அபாயம் இருந்தது. மற்றைய ஐரோப்பிய நாடுகளுக்கு அபாயம் விளைவிக்கின்ற அளவு எந்த ஒரு நாடும் பலம்பெறக் கூடாதென்பதே சக்திச் சமநிலைக் கொள்கையின் உட்கிடக்கையாகும். எனவே, லியோபோல்டுவின் உரிமை வாதத்தை மற்றைய ஐரோப்பிய நாட்டினர் எதிர்த்தனர். லியோபோல்டு அவ்வெதிர்ப்பாளர்களைச் சமாதானம் செய்யவேண்டி ஸ்பானியப் பட்ட உரிமை தமக்கு வேண்டாமெனக் கூறி, அதைத் தம் இரண்டாம் மகனை ஆர்ச்ட்யூக் சார்லஸுக்கே (Archduke Charles) விட்டுவிட்டார். அதற்கும் கூடப் பலத்த எதிர்ப்பிருந்தது.

லியோபோல்டுக்கு அடுத்தபடியாக ஸ்பானிய மகுடத்துக்கு உரிமை உடையவர் பவேரிய இளவரசர் ஜோஸப் பெர்டினண்டு (Joseph Ferdinand Electioral Prince of Bavaria) என்பவராவர். பெர்டினண்டின் தாயாரான மாரியா அன்டோனியா (Maria Antonia) என்பவர் மார்கிரெட் தெரீஸாவின் (லியோபோல்டின்

மனைவி) புதல்வியாவார். அவர் பவேரியா அரசர் மாக்ஸிமிலியன் எமானுவேல் (Maximillian Emmanuel) என்பவரை மணந்து கொண்டிருந்தார். எனவே, தமது தாயார் மூலம் ஜோஸப் ஸ்பானிய மகுடத்துக்கு உரிமை கொண்டாடினர். ஆனால், அவரது தாயாரும் தமது திருமணத்தின்போது ஸ்பானிய மகுடத்தை மறுத்து ஒரு வாக்குறுதி எடுத்துக்கொண்டிருந்தார். எனவே, சட்டப்படி அவரது உரிமை வாதமும் சரியானதாக இல்லை. தம்முடைய வாக்குறுதி தமது தந்தையின் வற்புறுத்தலினால் எடுத்துக் கொள்ளப்பட்டதாகையால் அது செல்லாது என மாரியா அன்டோனியா வாதாடினர். மேலும், பவேரிய இளவரசருக்கு ஸ்பானிய மகுடம் அளிக்கப்படுவதால் ஐரோப்பிய சக்திச் சமநிலை அதிகம் பாதிக்கப்படாது என அனைவரும் உணர்ந்தனர். எனவே, அரசியல் கொள்கைப்படி ஜோஸப் பெர்டினண்டும், சட்டப்படி முதலாம் லியோபோல்டும், பரம்பரை வாரிசுரிமைக் கொள்கைப்படி டாபினும் ஸ்பானியப் பட்ட வாரிசுரிமைக்குத் தகுதியானவர்களாகக் காணப்பட்டனர்.

## முதல் பங்கீட்டு உடன்படிக்கை (First Partition Treaty, 1698)

ரிஸ்விக் சமாதானத்துக்குப் பின், வில்லியமும் லூயியும் ஸ்பானியப் பட்ட வுரிமையைப்பற்றித் தம்முள் ஓர் உடன்படிக்கை செய்துகொண்டனர். அதற்கு முதல் பங்கீட்டு உடன்படிக்கை எனப் பெயர். அதன்படி இரண்டாம் சார்லஸுக்குப் பின், ஜோஸப் பெர்டினண்டு ஸ்பெயினுக்கு அரசராகவேண்டும். ஆஸ்திரிய இளவரசரான ஆர்ச்ட்யூக் சார்லஸுக்கு மிலான் நாடும், ஃபிரெஞ்சு இளவரசரான ஆஞ்சு கோமகன் பிலிப்புக்கு நேபில்ஸ் நாடும் அளிக்கப்படவேண்டும். ஸ்பானிய நெதர்லாந்துக்கும் ஜோஸப்பே அரசராகவேண்டும். ஃபிரான்ஸுக்கும் ஹாலந்துக்கும் நடுவே ஸ்பானிய நெதர்லாந்து ஓர் இடை நாடாக (Buffer State) இருக்கவேண்டும். இவ்வுடன்படிக்கையில் ஆஸ்திரியாவோ, ஸ்பெயினோ எவ்வாற்றேனும் கலந்துகொள்ளவில்லை. அந்நிய நாடுகள் சேர்ந்து கொண்டு ஸ்பெயின் பேரரசைப் பங்கு போட்டுக்கொள்ளச் சதி செய்வதை அறிந்த ஸ்பெயின் மக்களும் மன்னரும் ஒருங்கே கொதித்தெழுந்தனர். தமக்குப் பின் தமது பேரரசு நாடுகள் அனைத்தும் ஜோஸப் பெர்டினண்டுக்கே உரிமையாகவேண்டுமென்று இரண்டாம் சார்லஸ் மன்னர் ஓர் உயிலைத் தயாரித்தார். அவரது உயிலும், பங்கீட்டு உடன்படிக்கையும் ஒன்றும் பயனில்லாமல் போய்விட்டன. ஏனெனில், 1699ஆம் ஆண்டு ஜோஸப் பெர்டினண்டு அம்மை கண்டு இறந்துவிட்டார்.

### இரண்டாவது பங்கீட்டு உடன்படிக்கை (Second Partition Treaty, 1700)

வில்லியமும் லூயியும் 1700ஆம் ஆண்டு மீண்டும் ஸ்பானியப் பட்ட உரிமைபற்றித் தமக்குள் ஓர் உடன்பாடு செய்துகொண்டனர். அதன்படி இரண்டாம் சார்லஸுக்குப் பின் ஆஸ்திரிய இளவரசரான ஆர்ச்ட்யூக் சார்லஸ், ஸ்பெயினுக்கு மன்னராகவேண்டும். லொர்ரேன் (Lorraine) பிரதேசமும் நேபில்ஸும் ஃபிரெஞ்சு இளவரசர் பிலிப்புக்குத் தரப்படவேண்டும். லொர்ரேன் கோமகனுக்கு மிலான் பிரதேசம் தரப்படவேண்டும். இந்தப் பங்கீட்டு உடன்படிக்கையைப்பற்றிக் கேள்வியுற்ற இரண்டாம் சார்லஸ் பெரிதும் கோபமுற்ருர். அவர் அப்போது மரணப்படுக்கையில் கிடந்தார். அவரது இராணியார் மேரி என்பவர் ஸ்பானிய மகுடத்தை ஆஸ்திரிய இளவரசருக்கே உரிமையாக்கும்படி அரசருக்குச் சதா தூபம் போட்டுவந்தாள். அநேகமாக அரசரும் அதற்கு இணங்கிவிட்டார். ஆனல், கடைசி நேரத்தில் டாலிடோவின் ஆர்ச் பிஷப்பும் (Archbishop of Tolao) போர்ட்டோகார்ரிரோ எனும் கார்டினலும் (Cardinal) இராணியைச் சார்லஸின் படுக்கையறையினின்றும் அப்புறப்படுத்திவிட்டனர். சார்லஸ் அவர்களால் தூண்டப்பட்டுத் தமக்குப் பின் தமது நாடுகளனைத்தையும் ஆஞ்சு கோமகன் பிலிப்புக்கே உயில் எழுதி வைத்துவிட்டு இறந்தார். ஆஞ்சு கோமகன் ஸ்பானிய மகுடத்தை மறுத்தால் அஃது ஆர்ச் ட்யூக் சார்லஸுக்குத் தரப்படவேண்டுமெனவும் அவ்வுயில் கூறியது.

சார்லஸின் மரண உயிலைப்பற்றிக் கேள்விப்பட்ட லூயிக்கு மகிழ்ச்சி தாங்க முடியவில்லை. வில்லியத்தோடு அவர் செய்துகொண்ட உடன்படிக்கையைப்பற்றி அவர் ஒன்றும் கவலைப்படவில்லை. இரண்டாம் பங்கீட்டு உடன்படிக்கையின் ஷரத்துகளைக் காற்றில் பறக்கவிட்டுவிட்டுத் தமது பேரன் பிலிப்பை ஸ்பெயினின் மன்னரென அவர் அறிவித்து, ஐந்தாம் பிலிப் என்ற பட்டத்தையும் அளித்தார். அங்ஙனம் செய்யாவிடில் ஸ்பானிய மகுடம் ஆஸ்திரிய இளவரசருக்குப் போய்விடுமென்று பயந்தே அவர் முந்திக்கொண்டார். இங்கிலாந்தின் மன்னர் வில்லியம், லூயியின் செயலைக் கேட்டு மிகவும் வருந்தினர். சொன்ன வார்த்தையைக் காப்பாற்றும் கண்ணியமில்லாதவர்கள் பேரரசர்களாக இருப்பதை நினைத்து, அவர் மனம் புழுங்கினர். உடனே ஃபிரான்ஸ் மீது போர் தொடுக்க நினைத்தார். ஆனல், தனியே ஃபிரான்ஸோடு போரிடுவதைவிட இங்கிலாந்தையும் சேர்த்துக்கொண்டு போரிட்டால் நலமாயிருக்குமென எண்ணினர். ஆங்கிலப் பாராளுமன்றம் வெளிநாட்டுப் போர்களை அடியோடு வெறுத்து வந்ததை அவர் அறிவா

ராதலால் என்ன செய்வதென்று தெரியாமல் திகைத்தார். இச்சமயத்தில் அவருக்குச் சாதகமாக லூயி ஒரு காரியம் செய்தார். 1701ஆம் ஆண்டில் ஃபிரெஞ்சு அரண்மனையில் தஞ்சம் புகுந்திருந்த இங்கிலாந்தின் மாஜி மன்னர் இரண்டாம் ஜேம்ஸ் இறந்தார். உடனே பதின்மூன்று வயதே நிரம்பியிருந்த அவரது புதல்வனைக் கிரேட் பிரிட்டனின் மன்னரென லூயி அறிவித்தார். ரிஸ்விக் உடன்படிக்கைக்கு முரணான இவ் வறிவிப்பு ஆங்கில மக்களை லூயிக்கு விரோதமாக ஒன்று திரட்டியது. அவர்கள் ஃபிரான்ஸுக்கு எதிராக வில்லியத்துக்கு உதவி செய்ய மனமுவந்து முன்வந்தனர். இச்சமயம் பார்த்து வில்லியம் தமது பாராளுமன்றத்தைக் கலைத்துவிட்டு வேறு ஒன்றைக் கூட்டினார். புதிதாகக் கூடிய பாராளுமன்றத்தில் விக்குகள் ஏராளமாய் இடம் பெற்றனர். உடனே வில்லியம் தமது மந்திரி சபையிலிருந்த டோரிகள் சிலரை நீக்கிவிட்டு விக்குகளை அமர்த்தினார். ஐரோப்பியப் போர்களை நடத்த மார்ல்பரோவுக்கு முழு அதிகாரத்தையும் தந்தார். போர் ஆரம்பிக்கின்ற நிலையில் வில்லியம் திடீரென மாண்டார். தமது ஜென்ம விரோதியான லூயி ஒழிக்கப்படுவதைக் கண்டுகளிக்க வில்லியத்துக்குக் கொடுத்து வைக்கவில்லை. ஆனால் லூயியின் கொட்டம் அடங்குவதற்கான சகல ஏற்பாடுகளையும் செய்து வைத்துவிட்டே அவர் இறந்தார்.

இங்ஙனம் லூயிக்கும் வில்லியத்துக்கும் இடையே இருந்த பகைமையாலும், ஸ்பானிய வாரிசுரிமைப் போட்டியாலும் இங்கிலாந்துக்கும் ஃபிரான்ஸுக்கும் போர் ஏற்பட்டது உண்மையேயானாலும், இப்போருக்கு அடிப்படையான காரணம் வியாபாரப் போட்டியே யாகும். ஸ்பெயினுக்குப் பல குடியேற்ற நாடுகள் இருந்தன. லூயியின் பேரர் ஸ்பெயின் அரசரானதால் அக்குடியேற்ற நாடுகளோடு வியாபாரம் செய்யும் உரிமைகள் ஃபிரான்ஸுக்குத் தாராளமாய் வழங்கப்பட்டன. இங்கிலாந்துக்கு ஒன்றும் கிடைக்கவில்லை. மேலும், லிவாண்ட் பிரதேசத்தோடு இங்கிலாந்து செய்துவந்த வியாபாரத்தைப் பாதுகாக்க வேண்டுமாயின், மத்தியதரைக்கடலில் ஒரு தளம் இங்கிலாந்தின் கையில் இருக்கவேண்டியது இன்றியமையாததா யிருந்தது. ஆனால், பிலிப் அரசரானால் ஸ்பெயினும் ஃபிரான்ஸுமே மத்தியதரைக் கடலில் தனியாதிக்கம் பெற்றுவிடும் என்ற பயம் ஆங்கிலேயரைப் பிடித்தது. இப்பயமே ஃபிரான்ஸோடு இங்கிலாந்து போரிடுவதற்கான முக்கியக் காரணமாகும்.

## போரில் இருதரப்பாரது வலிமையின் நிலை

இப்போரில் வெற்றி பெறுவோம் என்ற திடநம்பிக்கை லூயியின்பால் காணப்பட்டது. ஏனெனில், அவருக்கு ஸ்பெயின்

உதவியும் அதன் குடியேற்ற நாடுகளின் உதவியும் காத்திருந்தன. கொலோன் (Cologne), பவேரியா போன்ற சிறு நாடுகளும் அவரை ஆதரித்தன. மேலும், இராணுவ ரீதியில் முக்கியத்துவம் வாய்ந்த இடங்களெல்லாம் லூயியின் கைகளிலேயே இருந்தன. எந்தப் போர் நிலையத்துக்கும் உடனே வேகமாக இராணுவ வீரர்களைக் கொண்டு செல்வதற்கான வசதி அவருக்கிருந்தது. நல்ல திறமை மிக்க தளபதிகளின் சேவையும் அவருக்குக் கிட்டியிருந்தது. அவரது இராணுவமும் நன்கு பயிற்சி பெற்றிருந்தது. அதில் சேவை புரிந்த போர் வீரர்கள் தோல்வியே இன்னதென்று அறியாதவர்கள். அவர்களை ஒரே மாதிரியான முறையில் வழி நடத்தும் ஒரே தனித் தலைவராய் லூயி விளங்கினார். ஃபிரெஞ்சு மக்களின் பூரண ஆதரவையும் அவர் பெற்றிருந்தார்.

லூயிக்கு விரோதமாக ஐரோப்பிய நாடுகளின் பெருங் கூட்டுறவு ஒன்று உருவாயிற்று. ஹாலந்தும் இங்கிலாந்துமே அக்கூட்டுறவின் உயிர் நாடியெனத் திகழ்ந்தன. பிராண்டன் பர்க் (Brandenberg), ஹனோவர் (Hanover) என்ற நாடுகளின் அரசர்கள் நல்ல போர் வீரர்கள். அவர்களும் லூயிக்கு விரோதமாகக் கூட்டுறவில் சேர்ந்தனர். பேரரசரும், செவாய் (Savoy) நாட்டு மன்னரும், போர்ச்சுகல் தேசத்தரசரும் கூட்டுறவில் கலந்து கொண்டனர். இத்தனை பேர்களது படைகளை ஒற்றுமையாக வழி நடத்த லூயியைப்போன்ற தனித்தலைவர் ஒருவருமில்லை. ஆனால், இங்கிலாந்தின் மாபெரும் வீரரான மார்ல்பரோ பிரபு ஹாலந்து, இங்கிலாந்துப் படைகளிரண்டிற்கும் கேப்டன் ஜெனரலாக நியமிக்கப்பட்டிருந்தார். பேரரசரின் படைகளுக்கு யூஜின் இளவரசர் (Prince Eugene) என்ற சிறந்த தளகர்த்தர் தலைமை தாங்கி நடத்தினார். மற்றபடி ஒரு கூட்டுறவில் சாதாரணமாய் இருக்கக் கூடிய பொருமை, போட்டி மனப்பான்மை, ஊக்கமின்மை முதலிய குறைகள் இத்தரப்பினருக்கும் இருந்தன. ஆனால், அக்குறைகளை எல்லாம் நிறைவு செய்ய ஆங்கில டச்சுக் கப்பற் படைகளின் வலிமையும், மார்ல்பரோவின் இராணுவ நுண்ணறிவும், யூஜினின் திறமையும் காத்திருந்தன.

## மார்ல்பரோ கோமகன்

ஜான் சர்ச்சில் என்பது மார்ல்பரோ கோமகனது இயற்பெயராகும். அவர் 1650ஆம் ஆண்டு இங்கிலாந்தின் பெருநிலக் கிழார் ஒருவரது புதல்வராகத் தோன்றினார். அவர் இயற்கையிலேயே போர்த்திறமை மிக்கவர். மூன்றும் டச்சுப் போரில் அவர் கலந்துகொண்டபோது அவரது திறமை நன்கு வெளியாயிற்று

செட்ஜ்மூர் சண்டையில் இரண்டாம் ஜேம்ஸ் வெற்றிபெற இவரே உதவி செய்தார். அதனால் உளமகிழ்ந்த ஜேம்ஸ் அவருக்குப் பாரன் (Baron) பட்டத்தையும் வழங்கினார். ஆனால், அவர் தமது எஜமானருக்கு 1688ஆம் ஆண்டுப் புரட்சியின்போது துரோகம் செய்து அவரது எதிரியான மூன்றாம் வில்லியத்தின் கட்சியில் சேர்ந்துகொண்டார். வில்லியம் அவருக்கு எர்ல் பட்டத்தை வழங்கினார். வில்லியம் அவரது உதவியைக் கொண்டே அயர்லாந்தியர் கலகத்தை அடக்கினார். இடையில் இரண்டாம் ஜேம்ஸோடு அவர் இரகசியப் பேச்சுவார்த்தை நடத்துவதாக அறிந்து, வில்லியம் அவரைச் சிறையிலிட்டார். ஆனால், அவரது போர்த்திறமையின் காரணமாக அவரை வில்லியம் விரைவில் விடுதலை செய்ததோடு ஐரோப்பாக் கண்டத்தில் போரை நடத்தும் பொறுப்பை அவரிடம் ஒப்படைத்தார். மார்ல்பரோவின் மனைவி சாரா ஜென்னிங்ஸ் (Sara Jennings) என்பவர் ஆன் இராணியாரின் அருமைத் தோழியாவார். எனவே, வில்லியம் இறந்து ஆன் இராணியார் பட்டத்துக்கு வந்தபோது மார்ல்பரோவுக்குச் சுக்கிர தசை அடிக்க ஆரம்பித்தது. 1702ஆம் ஆண்டில் இராணியார் அவருக்கு மார்ல்பரோ கோமகன் (Duke of Marlborough) என்ற பட்டத்தை வழங்கினார். இராணுவ தந்திரத்தில் அவர் புதிய முறைகளைக் கையாண்டார். பெருத்த அளவில் திட்டமிட்டுப் போரை நடத்துவதில் அவருக்கு ஒப்பாரும் மிக்காரும் அவர் காலத்து ஒருவருமில்லை. கடலிலும் தரையிலும் போர்களை ஒரே சமயத்தில் தொடங்கி, அவைகளின் கூட்டு முயற்சியால் எப்படி வெற்றி பெறுவது என்னும் முறையை அவர் நன்கு அறிந்திருந்தார். நிலச் சண்டையில் அவர் ஒரு புரட்சியான மாறுதலை உண்டாக்கினார். கோட்டைகளை முற்றுகையிடுதலும் அவைகளைச் சுற்றியுள்ள பிரதேசங்களை அழிப்பதுமே அக்காலப் போர் முறைகளாக இருந்தன. ஆனால், மார்ல்பரோ தமது படைகளைத் துரிதமாக நடத்திச் சென்று எதிரியின் படைகளோடு நேருக்குநேர் மோதிப் போரிட்டார். இவ்விதம் எதிர்பாரா வகையில் எதிரிகளைக் குறிப்பிட்ட இடங்களில் நிறுத்திப் போரிடும் முறையால் மார்ல்பரோ எப்போதும் வெற்றிகளையே பெற்றார். நன்கு திட்டமிட்ட பின்பே அவர் போரிலிறங்குவார். போரிலிறங்கிய பின்னர் பின் வாங்கும் வழக்கம் அவரிடமில்லை. அவரது சிறந்த தீரச் செயல்களால் இங்கிலாந்து தோற்றுவித்த வீரர்களுள் எல்லாம் தலைசிறந்தவர் எனப் புகழப்பட்டார். அவர் தமது நன்மையை மட்டுமன்றித் தமது வீரர்களின் உடை, உணவு பற்றியும் பெரிதும் அக்கறை எடுத்துக்கொண்டு அவர்களின் நன்மதிப்பைப் பெற்றிருந்தார். இவ்வளவு சிறந்த குணங்களைப் பெற்றிருந்த அவரிடம் சில குறைகளும் காணப்பட்டன. உண்ட வீட்டுக்கு இரண்டகம் நினைக்கும்

உலுத்த குணம் அவரிடம் பெரிதும் காணப்பட்டது. இரண்டாம் ஜேம்ஸின் உப்பைத் தின்று வளர்ந்த அவர் அவருக்கே துரோகம் செய்தார். அதனால் செய்ந்நன்றி கொன்ற (கீழான) குற்றத்துக்கு அவர் ஆளானார். பின்னர் வில்லியத்திடம் அவர் சேர்ந்தார். வில்லியத்தின் ஊழியராக இருக்கும்போதே அவருக்கு எதிராக ஜேம்ஸோடு பேச்சு வார்த்தை நடத்திவந்தார். இதனால் அவர் ஒரு சந்தர்ப்பவாதி (Time Server) எனத் தம்மைக் காட்டிக் கொண்டார். வசீகரமான உடற்கட்டுக் கொண்டவராதலால் அவர்பால் உயர் குலத்து மங்கையரும் கவர்ச்சியுற்றனர். இரண்டாம் சார்லஸ் மன்னரின் காமக் கிழத்தியான காஸில்மேன் (Castleman) சீமாட்டி, அர்பெல்லா சீமாட்டி போன்ற நடத்தை கெட்டவர்களின் தொடர்பு அவருக்கு அதிகமிருந்தது. மேலும் லஞ்சம் வாங்கும் பழக்கமும் அவரிடம் பெரிதும் காணப்பட்டது. கையில் ஒரு காசுமின்றி ஸ்டுவர்ட் மன்னர்களின் வேலைக்காரனாய் அரண்மனையில் புகுந்த மார்ல்பரோ பின்னால் பெரிய லட்சாதிபதியானார். மெக்காலே பிரபு அவரை ஓர் ஒழுக்கமற்ற மேதை என வர்ணிக்கிறார். ஆனால், ட்ரெவெல்யான் என்ற ஆசிரியர், குறைகள் சில உடையவரேனும் அவர் உயர்ந்த தேசபக்தியும் தாராள மனப்பான்மையுமுடையவர் எனக் கூறுகிறார். வின்ஸ்டன் சர்ச்சில், 'மார்ல்பரோ—அவரது வாழ்வும் காலமும்' என்ற நூலில் தமது முன்னோரான மார்ல்பரோ பிரபுவை ஒரேயடியாக வானளாவப் புகழ்கிறார். உண்மையில் அவர் சுயநலமிக்க ஒரு சிறந்த போர்த்தளபதியாவார். பிறப்பில் டோரிக் கட்சியினரேனும், பின்னால் விக்குக் கட்சியில் சேர்ந்தார். கட்சிகளில் அவருக்கு என்றும் நம்பிக்கை கிடையாது. எனவே, கடைசியில் அவர் இரு கட்சிகளாலும் வெறுக்கப்பட்டார். அவரது புகழைக் கண்டு பலர் பொறுமைப்பட்டனர். போர் நீண்டு கொண்டே சென்றது இராணிக்கும் பிடிக்கவில்லை. டோரிக் கட்சித் தலைவர் ஹார்லி (Harley) பிரபு மிஸஸ் மாஷாம் சீமாட்டி (Mrs. Masham) என்ற தமது உறவினர் ஒருத்தியை அரண்மனையில் புகுத்தி அரசியின் மனத்தைச் சாராஜென்னிங்ஸிடமிருந்து பிரித்தார். அரசிக்கும் சாராவுக்கும் மனஸ்தாபம் ஏற்பட்டது. மார்ல்பரோவும் தமது பதவியினின்றும் நீக்கப்பட்டார். அதன்பின் அவர் ஃபிரான்ஸுக்குச் சென்றுவிட்டார். அரசி இறக்கும்வரை அவர் அங்கேயே இருந்தார். 1722ஆம் ஆண்டு அவர் இறந்தார்.

## போரின் போக்கு
(Course of the War)

ஸ்பானிய வாரிசுரிமைப் போரானது நிலத்திலும் நீரிலும் ஐரோப்பாக் கண்டத்திலும், அமெரிக்காக் கண்டத்திலுமாக

உலகின் பல பாகங்களில் நடைபெற்றது. நெதர்லாந்து, மத்திய ஐரோப்பா, இதாலி, ஸ்பெயின் கடல் இவைகள் இப்போரின் முக்கிய அரங்கங்களாக விளங்கின.

நெதர்லாந்து, மத்திய ஐரோப்பியப் போர் அரங்கங்கள்

முதன் முதல் போரானது நெதர்லாந்தில்தான் 1702ஆம் ஆண்டு தொடங்கியது. டச்சுப் படைகளுக்கும் ஆங்கிலப் படைகளுக்கும் மார்ல்பரோ தனித் தளபதியாக நியமிக்கப்பட்டார். அவர் ஃபிரெஞ்சுக்காரரின் வசமிருந்த ஸ்பானிய நெதர்லாந்தைக் கைப்பற்றி, அதன்பின் எல்லைப்புறக் கோட்டைகளை (Frontier fortresses) பிடிக்கவேண்டுமென்று திட்டமிட்டார். இங்ஙனம் ஃபிரான்ஸின் எல்லையைக் கைப்பற்றியபின் ஃபிரான்ஸுக்குள் வடக்கேயிருந்து நுழைந்து சென்று, பாரிஸை முற்றுகையிட வேண்டுமென அவர் விரும்பினர். மேலும், கடல் மூலமாக ஃபிரான்ஸின் தெற்கிலிருந்தும் ஒரு படை ஃபிரான்ஸுக்குள் நுழையவேண்டுமென்பது அவர் திட்டம். ஆனால், அவர் இத் திட்டங்களைத் தாம் தீட்டியவாறே நடத்த முடியாதவாறு டச்சுக் காரர்கள் குறுக்கே நின்றனர். குறுகிய நாட்டுப் பற்றால் உந்தப் பட்டு டச்சுக்காரர்கள் தங்களது தாய்நாட்டைக் காப்பாற்றுவதி லேயே கண்ணுங் கருத்துமாய் இருந்தனரேயன்றி அதைவிட்டு ஓரடி வெளியெடுத்து வைக்கவும் அவர்கள் தயாராயில்லை. மேலும், டச்சுத் தளபதிகள் கோழைகளாயிருந்தனர். மார்ல்பரோ வின் பெருந்திட்டங்களைக் கண்டு அவர்கள் அப்படியே மலைத் தனர். அவரோடு ஒத்துழைக்க மறுத்தனர். எனவே, பழைய பாணியிலேயே மார்ல்பரோ ஆரம்பத்தில் போரிட வேண்டிய தாயிற்று. வழக்கமான முறைப்படி லீஜ் (Liege), பான் (Bonn) போன்ற கோட்டைகள் முற்றுகையிடப்பட்டன. ஹாலந்தின் எல்லையைக் கடந்து மேலே போக டச்சுக்காரர் அஞ்சினர். ஏனெனில், எந்த நேரத்திலும் தங்கள் நாட்டுக்குள் ஸ்பானிய நெதர்லாந்தின் வழியாக ஃபிரெஞ்சுத் துருப்புகள் நுழையக்கூடு மென்ற பயம் அவர்களை வாட்டிற்று. 1703ஆம் ஆண்டில் எல்லையைத் தாண்டிச் செல்ல மார்ல்பரோ அனுமதிக்கப்பட்டார். ரைன் (Rhine) நதி தீரத்தில் அவரது படைகள் முன்னேறிப் பான் (Bonn) நகரைக் கைப்பற்றின. அதன்பின் கொலோன் (Cologne) நாட்டு அதிபதி மார்ல்பரோவோடு ஒரு சமாதான உடன்பாட்டைச் செய்துகொண்டார்.

1704ஆம் ஆண்டில் லூயி ஆஸ்திரியாவின் தலைநகரான வியன்னாவைக் கைப்பற்ற ஒரு திட்டம் வகுத்தார். வியன்னா வீழ்ச்சியுற்றால் பேரரசர் சமாதானத்துக்குத் தாமே இறங்கிவந்து

விடுவார் என லூயி கருதினர். அதற்காக ஃபிரெஞ்சுப் படைகளும், பவேரியாவின் சேனையும் ஒன்று சேர்ந்து வியன்னாமேல் படை எடுக்க வேண்டுமெனத் தீர்மானித்தார். மார்ஷல் டேலார்டு (Marshall Tallard) என்பவர் வசம் ஒரு படை அனுப்பப்பட வேண்டுமென்றும், அப்படை ரைன் நதி தீரத்திலிருந்து டான்யூப் நதி தீரத்துக்குப் போகும் வழியில் பவேரியாவின் படைகளையும் அழைத்துக்கொள்ள வேண்டுமென்றும் திட்டம் தீட்டப்பட்டது. இப் பெருந்திட்டத்தைக் கேள்வியுற்ற மார்ல்பரோ, ஆஸ்திரியப் படைத் தலைவரான யூஜின் இளவரசர் தனியே நின்று ஃபிரெஞ்சுப் படைகளைச் சமாளிக்க இயலாதென்பதை நன்கு உணர்ந்து அவருக்கு உதவி செய்யப் புறப்படத் தயாரானர். ஆனல், டச்சுத் தளபதிகள் மார்ல்பரோ தங்கள் நாட்டைவிட்டுப் போகக்கூடாதென்று கட்டாயமாகக் கூறிவிட்டனர். ஆங்கிலப் பாராளுமன்றமும் தாம் ஐரோப்பாக் கண்டத்துள் செல்வதை அனுமதிக்காதென்பது மார்ல்பரோவுக்குத் தெரியும். எனவே, ஆங்கிலப் பாராளுமன்றத்துக்கும், டச்சுக்காரருக்கும் தெரியாமல் தம் காரியத்தைச் சாதிக்க அவர் எண்ணினர். ரைன் நதியின் உபநதியான மோசெல் (Moselle) என்ற ஆற்றின் மருங்கில் போர் செய்யப் போவதாக டச்சுக்காரர்களிடம் கூறிவிட்டு, மார்ல்பரோ தம் படையுடன் காற்றினும் கடுகிச் சென்று, ஜெர்மனியின் தென்பகுதியிலிருந்த யூஜின் இளவரசரோடு சேர்ந்தார். இருவரது படைகளும் சேர்ந்து ஃபிரெஞ்சு, பவேரிய கூட்டுப் படையைப் பிளென்ஹிம் (Blenheim) எனுமிடத்தில் முற்றிலும் முறியடித்தன (1704). மார்ஷல் டேலார்டு படுதோல்வியடைந்து சிறைப்பட்டார். பவேரிய அதிபர் ஆஸ்திரியாவோடு சமாதானம் செய்து கொண்டார். இங்ஙனம் பேரரசர் ஃபிரெஞ்சுக்காரர்களிடமிருந்து காப்பாற்றப்பட்டார். பிளென்ஹிமில்தான் லூயியின் படைகள், முதன் முதலாகத் தோல்வியை ருசி பார்த்தன. மார்ல்பரோவின் புகழ் ஐரோப்பாவெங்கணும் காட்டுத் தீப்போல் பரவியது. அதேசமயம் லூயியின் புகழ் மங்க ஆரம்பித்தது.

1705ஆம் ஆண்டில் மார்ல்பரோ மீண்டும் நெதர்லாந்துக்குத் திரும்பி வந்தார். அவ்வாண்டில் அவர் சிறப்பான வெற்றிகளெதுவும் பெறவில்லை. 1706ஆம் ஆண்டு மார்ல்பரோ, ஃபிரெஞ்சுப் படைகளை ஸ்பானிய நெதர்லாந்தினின்றும் துரத்தும் வேலையில் இறங்கினர். மார்ஷல் வில்லிராய் (Marshall Villeroy) என்ற ஃபிரெஞ்சுத் தளகர்த்தரை அவர் ராமில்லீஸ் (Ramilles) என்னுமிடத்தில் தோற்கடித்தார். ஸ்பானிய நெதர்லாந்தின் பெரும்பகுதி அவரது கைகளுக்குக் கிட்டியது. பிரஸ்ஸெல்ஸ் (Brussles) நகரத்தையும் அவர் கைப்பற்றினர். 1708ஆம் ஆண்டு ஃபிரெஞ்சுக்

காரர் தாம் இழந்த பட்டணங்களைத் திருப்பிக் கைப்பற்ற மார்ஷல் வெண்டோம் (Marshall Vendome) தலைமையில் முயன்றனர். ஆனால், அவர்களை மார்ல்பரோ மறுபடியும் ஊடனார்ட் (Oudenarde) எனுமிடத்தில் படுதோல்வி அடையச் செய்தார். அதன்பின் மார்ல்பரோ ஃபிரான்ஸுக்குள் நுழையத் திட்டமிட்டார். ஃபிரான்ஸிலிருந்த அத்தனை சமூகப் பிரிவினர்களும் ஒருமுகமாக லூயியை ஆதரித்துப் போர்வீரர்களை அனுப்பினர். வில்லர்ஸ் (Villers) என்ற ஃபிரெஞ்சு தளகர்த்தரின் தலைமையில் ஃபிரெஞ்சுப் படைகள் மார்ல்பரோவின் படைகளை 1709ஆம் ஆண்டு மால்பிளாக்கத் (Malplaquet) எனுமிடத்தில் எதிர்த்துத் தோல்வி யுற்றன. இப்போரில் மார்ல்பரோவின் படையிலும் பெருத்த நஷ்ட மேற்பட்டது. எனினும், பாரிஸ் நகரத்துக்கு நேரே செல்லும் வாய்ப்பு மார்ல்பரோவுக்குக் கிடைத்தது. ஆனால், அவர் அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கொள்ள டச்சுக்காரர்கள் அவரை விட வில்லை. மேலும், ஐரோப்பியப் போரை ஆதரித்துவந்த விக்குக் கட்சியினர் இங்கிலாந்தில் பலமிழந்தனர். 1710ஆம் ஆண்டு அங்கு விக் மந்திரிசபை வீழ்ச்சியுற்று டோரி மந்திரி சபை ஆட்சி யைக் கைப்பற்றியது. டோரிகளின் தூண்டுதல் காரணமாக ஆன் இராணி மார்ல்பரோவைப் பதவியினின்றும் நீக்கிவிட்டு, அவ ருடைய இடத்தில் ஆர்மாண்டு பிரபுவை நியமித்தார். அவர் ஐரோப்பியப் போர்களில் அக்கறையற்றவராகக் காணப்பட்டார். சரிவரத் துருப்புகளையும் உணவு உடையையும் அவர் போர்க்களங் களுக்கு அனுப்பவில்லை. எனவே, நேசநாடுகள் (Allies) டெனெய்ன் (Denain) போன்ற இடங்களில் தோற்கடிக்கப்பட்டன. எல்லைக் கோட்டைகள் பலவற்றை அவைகள் கைப்பற்றின. எனவே, நெதர்லாந்தில் போரானது இருவர் தரப்பிலும் வெற்றி தோல்வியின்றியே நடைபெற்றுவந்தது.

### இதாலிய அரங்கம்

இதாலியில் ஆஸ்திரியாவுக்குச் சொந்தமான பல சிறு நாடுகள் இருந்தன. அவற்றைக் கைப்பற்ற எண்ணி ஃபிரெஞ்சுப் படை கள் இதாலிக்குள் நுழைந்தன. ஆனால், அவற்றை யூஜின் இள வரசரது படைகள் டியூரின் (Turin) எனுமிடத்தில் தோற்கடித்தன (1706). நேபில்ஸும் மிலானும் ஆஸ்திரியப் படைகளால் கைப்பற்றப்பட்டன (1706). இதாலியப் போர்களில் நேசநாடு களுக்கு (Allies) மிகவும் உதவியாயிருந்தது செவாய் (Savoy) நாட்டுக் கோமகனின் கூட்டுறவாகும். செவாய் கோமகன் ஃபிரான்ஸுக்கும் இதாலிக்குமிடையிலிருந்த கணவாய்களைத் தம் ஆதிக்கத்தில் வைத்துக்கொண்டிருந்தார். அவர் 1706ஆம் ஆண்டில் நேச நாடுகளோடு சேர்ந்தார். எனவே, ஃபிரெஞ்சுப்

படைகள் இதாலியினின்றும் வெகு விரைவிலேயே துரத்தப்பட்டு விட்டன.

ஸ்பானிய அரங்கம்

நேச நாடுகள் ஸ்பெயினைக் கைப்பற்றி அதை ஆஸ்திரிய இளவரசரான ஆர்ச்டியூக் சார்லஸுக்குச் சொந்தமாக்கிவிட விரும்பின. அவருக்கு மூன்றும் சார்லஸ் என்ற பட்டத்தையும் நேச நாடுகள் அளித்தன சார்லஸ், பீட்டர் பரோ எர்ல் என்ற இங்கிலாந்தின் தளகர்த்தரது உதவியைப் பெரிதும் பயன்படுத்திக் கொண்டு ஸ்பெயினில் பார்ஸிலோனு (Barcelona) நகரத்தைக் கைப்பற்றினுர் (1705). அதுதான் கடைசிவரை அவரது தலைநகராக விளங்கியது. கேடலோனியா (Catalonia) மாகாணத்தவர்கள் சார்லஸை ஆதரித்தனர். ஆனுல், ஸ்பெயினின் மற்றப் பகுதிகள் ஐந்தாம் பிலிப்பையே ஆதரித்தன. 1703 ஆம் ஆண்டில் மெதுவன் உடன்படிக்கையின்படி (Mathuen Treaty) போர்ச்சுகல் நேச நாடுகளோடு சேர்ந்தது. எனவே, போர்ச்சுகலின் உதவியும் சார்லஸுக்குக் கிடைத்தது. அவர் கால்வே எர்ல் எனும் ஆங்கிலேய தளகர்த்தரின் ஒரு பெரும் படையுடன் சென்று 1706 ஆம் ஆண்டில் மாட்ரிட் நகரை முற்றுகையிட்டுப் பிடித்தார். இங்ஙனம் ஸ்பெயின் நாட்டின் நான்கு தலைநகர்களும் சில காலத்துக்கு நேச நாடுகளின் கைகளில் இருந்தன. ஆனுல், சார்லஸ் ஸ்பானியரின் தேசபக்தியின் முன் வெகு நாள் போராட முடியவில்லை. விரைவிலேயே அவர் மாட்ரீட் நகரினின்றும் ஸ்பானியப் படைகளால் துரத்தப்பட்டார். 1707 ஆம் ஆண்டில் நேச நாடுகளின் படைகளை ஸ்பானியர்களின் படை ஆல்மன்ஸா (Almanza) போர்க்களத்தில் தோற்கடித்தன. 1711 ஆம் ஆண்டில் ஸ்பெயின் நாடு அனைத்தும் ஃபிரெஞ்சுக்காரர் வசமாயிற்று. நேச நாடுகளின் படை ஸ்பெயினை விட்டகன்றன.

கடற்போர்

நேச நாடுகளின் கடற்படை உண்மையிலேயே ஃபிரெஞ்சுக்காரரின் கடற்படையைவிட மிகவும் வலிமை வாய்ந்திருந்தது. ஆனுல், அவைகளிடம் ஓர் ஒற்றுமையில்லை. கப்பற்படைகளை ஒன்று சேர்த்து நடத்தக்கூடிய தலைவர் ஒருவர் நேச நாடுகளின் தரப்பில் இல்லாதது அவர்களின் துரதிர்ஷ்டமேயாகும். எனினும் நேசநாடுகள் பல சிறந்த வெற்றிகளைப் பெற்றன. தென் அமெரிக்காவிலிருந்து பொன் சுமந்துவரும் நிதிக்கப்பல்களை வழி மறிக்க வேண்டுமென்பது நேச நாடுகளின் திட்டம். ஆனுல், அந்நோக்கம் நடைமுறையில் நிறைவேறவில்லை. ஃபிரெஞ்சுக் கப்பல்கள் ஆங்கிலேயரின் வியாபாரக் கப்பல்களுக்குப் பெரிதும் தீங்கு செய்தன.

மத்தியதரைக் கடலில் ஃபிரெஞ்சு, ஸ்பெயின் கப்பற்படைகளை நேசநாடுகளின் படைகள் தாக்கிச் சில சிறந்த வெற்றிகளையும் பெற்றன. கடற்படைத் தளகர்த்தர் ரூக் (Rooke) என்பார் ஜிப்ரால்டர் துறைமுகத்தை 1704ஆம் ஆண்டில் கைப்பற்றினார். மத்தியதரைக் கடலின் வாயில் இங்ஙனம் நேசநாடுகளின் வசமாகி விடவே, அக்கடலுள் எதிரிகள் புகுவது தடுக்கப்பட்டது. 1708ஆம் ஆண்டில் ஒரு கப்பற்படையும் ஸ்டாக் ஹோப் தளபதியின் தலைமையில் சென்ற ஒரு நிலப்படையும் சேர்ந்து மினார்க்காவைக் (Minorca) கைப்பற்றின. இதன் பின் மத்தியதரைக் கடலில் நேசநாடுகளின் தலைமை நன்கு நிலைநாட்டப்பட்டது.

அமெரிக்காக் கண்டத்துக்கும் இப்போர் பரவியது. அங்கு ஆன் இராணியாரின் போர் (Queen Anne's War) என இது பெயர் பெற்றது. ஸ்பானிய நிதிக்கப்பல்கள் நேசநாடுகளால் கொள்ளையடிக்கப்பட்டன. அக்கேடியா என்ற மாகாணத்தையும் அவர்கள் கைப்பற்றினர்.

1711ஆம் ஆண்டுக்குள் எல்லா நாடுகளும் போரில் சலிப்படைந்தன. இங்கிலாந்தில் டோரிக் கட்சி ஆட்சியைக் கைப்பற்றியது. அவர்கள் ஐரோப்பியப் போரை அடியோடு வெறுத்தவர்கள். எனவே, அவர்கள் ஆன் இராணியை ஃபிரான்ஸோடு சமாதானம் செய்துகொள்ளும்படி தூண்டினர். பதினான்காம் லூயியை ஒரு பெரும் எதிரியாக இங்கிலாந்தின் குடிமக்கள் அனைவரும் ஆரம்பத்தில் கருதினர். ஆனால், நாள் செல்லச் செல்ல, அவ்வரசர் படும் அவதிகளையும் தோல்விகளையும் கண்டு ஆங்கிலேயர் அவர்மேல் பரிதாபம் கொண்டனர். லூயியும் மூன்றுமுறை சமாதான முயற்சிகளைச் செய்தார். ஆனால், விக் மந்திரிசபையானது சமாதானத்துக்கு முட்டுக்கட்டை போட்டுக்கொண்டே வந்தது. ஆனால், 1710ஆம் ஆண்டில் டோரிக் கட்சித் தலைவர் ஹார்லியின் தூண்டுதலின் பேரில் ஆன் அரசி விக்குகளைத் துரத்திவிட்டு டோரி மந்திரிசபையை அமைத்தார். அடுத்தாற்போல் நடந்த தேர்தலிலும் டோரிக் கட்சியினர் பெரும்பான்மையினராகப் பாராளுமன்றத்தில் இடம் பெற்றனர். இச்சமயத்தில் ஆங்கிலேயரின் சமாதான விருப்பத்தைத் தூண்டும் இன்னொரு நிகழ்ச்சியும் நடைபெற்றது. 1705ஆம் ஆண்டு முதலாம் லியோபோல்டு இறந்தார். அவருக்குப் பின் பட்டத்துக்கு வந்த முதலாம் ஜோஸப் (முதலாம் லியோபோல்டின் புதல்வர்) எனும் ஆஸ்திரியப் பேரரசரும் 1711ஆம் ஆண்டில் இறந்துவிட்டார். அவருக்குப் பின் ஆர்ச்டியூக் சார்லஸ் ஆறும் சார்லஸ் என்ற பட்டத்துடன் ஆஸ்திரியப் பேரரசரானார். அவர் ஸ்பெயினுக்கும் அரசராகிவிட்

டால் ஐரோப்பிய சக்திச் சமநிலை பெரிதும் பாதிக்கப்பட்டுவிடும் என ஆங்கிலேயர் பயந்தனர். புதிய டோரி அரசாங்கமானது ஃபிரான்ஸோடு இரகசியச் சமாதானப் பேச்சு வார்த்தைகளைத் தொடங்கியது. அவற்றின் பலனாக யுட்ரெக்ட் சமாதானமானது (Treaty of Utrecht) 1713 ஆம் ஆண்டு இரு தரப்பினரிடையும் ஏற்பட்டது.

## யுட்ரெக்ட் சமாதான உடன்படிக்கை
(Treaty of Utrecht, 1713)

இவ்வுடன்படிக்கையின்படி ஐந்தாம் பிலிப் ஸ்பெயின் மன்னராக ஒப்புக்கொள்ளப்பட்டார். ஃபிரான்ஸும் ஸ்பெயினும் எக்காலத்தும் இணையக் கூடாதென்பதும் ஒப்புக்கொள்ளப்பட்டது. இதனால் ஐரோப்பாவின் சக்திச்சமநிலை நன்கு காப்பாற்றப்பட்டது. சார்லஸை ஸ்பெயினின் மன்னராக்க நேசநாடுகள் பல போர்களை நிகழ்த்தியது உண்மைதான். ஆனால், அதே சார்லஸ் ஸ்பெயினின் மன்னராகக் கூடாதென இப்போது நேசநாடுகள் நினைத்தன. காரணம் மாறிவிட்ட சூழ்நிலைதான். சார்லஸ் 1711 ஆம் ஆண்டில் ஆஸ்திரியப் பேரரசரானது நிலைமை முற்றிலும் மாற்றி விட்டது. சார்லஸ் ஸ்பெயினின் மன்னரானால், எந்தச் சக்திச் சமநிலைக் கொள்கைக்காக நேசநாடுகள் போரிட்டனவோ, அக்கொள்கைக்கு மீண்டும் ஆபத்து ஏற்படுமென்று அவைகள் பயந்தன. எனவேதான் லூயியின் பேரரான பிலிப், ஸ்பெயினின் மன்னராக அங்கீகரிக்கப்பட்டார். ஃபிரான்ஸும் ஒன்று சேர்வது ஐரோப்பியச் சக்திச் சமநிலைக் கொள்கைக்குப் பங்கம் விளைக்குமாதலால் அவ்விரண்டு நாடுகளும் ஐக்கியமடைதல் கூடாது என்ற ஷரத்தும் உடன்படிக்கையில் சேர்க்கப்பட்டது.

ஆஸ்திரியப் பேரரசர், ஸ்பெயினைப் பெறுவதற்கு ஈடாக அவருக்கு இதாலியில் சில நாடுகள் அளிக்கப்பட்டன. நேபில்ஸ் நாடு, மிலான் நாடு, சார்டீனிய இராஜ்ஜியம், டஸ்கன் துறைமுகங்கள் முதலியவைகளை ஆஸ்திரியா பெற்றது. இதாலியர் இவ் வேற்பாட்டை விரும்பவில்லை. அந்நிய ஆஸ்திரியரின் ஆதிக்கம் இதாலியில் ஏற்பட்டதை எதிர்த்து, அவர்கள் ஓயாமல் புரட்சி செய்துவந்தனர். 19 ஆம் நூற்றாண்டில் ஆஸ்திரியர்கள் இதாலியினின்று விரட்டியடிக்கப்பட்டனர். ஸ்பானிய நெதர்லாந்தும் ஆஸ்திரியாவுக்களிக்கப்பட்டது. அதன் பெயர் ஆஸ்திரிய நெதர்லாந்து என மாற்றியமைக்கப்பட்டது. டச்சுக் குடியரசுக்கு ஒரு பக்கபலமாகவும், ஃபிரான்ஸ் ஹாலந்தைப் படை எடுக்கா வண்ணம் தடுக்கக்கூடிய ஓர் இடைநாடாகவும் அஃது ஆக்கப்

பட்டது. ஆஸ்திரிய நெதர்லாந்தின் பல கோட்டைகளில் டச்சுத் துருப்புகள் வைக்கப்பட்டன. மற்றும் டச்சுக்காரருக்கு ஏதாவது ஆபத்து ஏற்படின் தான் உதவி செய்வதாகப் பிரிட்டன் ஒரு வாக்குறுதி அளித்தது.

செவாய் கோமகனுக்குச் சிசிலித் தீவு கொடுக்கப்பட்டது. அதோடு அவருக்கு 'அரசர்' என்ற பட்டமும் வழங்கப்பட்டது. பிராண்டன்பர்க் தேர்வாளர் (Elector of Brandenburg) பிரஷ்யாவின் அரசர் என அங்கீகரிக்கப்பட்டது. இங்ஙனம் இரு புதிய நாடுகளை யுட்ரெக்ட் சமாதானமானது தோற்றுவித்தது.

கிரேட்பிரிட்டன், தான் கைப்பற்றிய ஜிப்ரால்டர், மினார்க்கா என்ற இரு இடங்களையும் தனக்கே வைத்துக்கொண்டது. இங்ஙனம் மத்தியதரைக் கடலில் இங்கிலாந்து இரண்டு நல்ல கடற்படைத் தளங்களைப் பெற்று, அங்குத் தன் ஆதிக்கத்தை நிலை நாட்டியது. நியூபவுண்ட்லாந்து, நோவாஸ்கோஷியா, ஹட்ஸன் குடாவைச் சுற்றியுள்ள பிரதேசம் முதலிய இடங்களில் ஆங்கிலேயரின் உரிமைகளையும் ஃபிரெஞ்சுக்காரர் அங்கீகரித்தனர்.

ஆன் இராணியை இங்கிலாந்தின் அரசியாகப் பதினான்காம் லூயி ஒப்புக்கொண்டார். அதோடு வாரிசு நிர்ணயச் சட்டத்தின் படி இங்கிலாந்தில் யார் பட்டத்துக்கு வந்தாலும் அவரை அங்கீகரிப்பதாகவும் லூயி வாக்களித்தார். ஜயாஜ் என்ற போலியை (Pretender) ஃபிரான்ஸினின்றும் லூயி வெளியேற்றினார். இதனுலெல்லாம் இங்கிலாந்தின் உள்நாட்டு விவகாரங்களில் தாம் தலையிடுவதில்லை என்பதையே லூயி மறைமுகமாக ஒப்புக்கொண்டார் எனலாம். டன்கர்க் துறைமுகத்தில் கட்டப்பட்ட கோட்டைகளை இடிக்குமாறு லூயி உத்தரவிட்டார். இங்கிலாந்தின்மீது படை எடுப்பதற்கு டன்கர்க் ஒரு தளமாகப் பயன்படுத்தலாமென்ற பயம் ஆங்கிலேயர்பால் காணப்பட்டதே லூயியின் மேற்படி செய்கைக்குக் காரணம். ஆனுல், லூயி தம் செய்கையில் உண்மையாயில்லை. டன்கர்க்குக்கு அருகிலிருந்த மார்டைக் (Mardyck) எனும் கிராமத்தில் அவர் கோட்டைகளைக் கட்ட ஆரம்பித்தார். ஆங்கிலேயர் லூயியின் இச்செய்கையைப் பலமாகக் கண்டித்தபின் அவர் அம்முயற்சியைக் கைவிட்டார்.

வியாபாரத் துறையில் ஸ்பெயினுக்கும் பிரிட்டனுக்கும் சில ஒப்பந்தங்கள் நிறைவேற்றப்பட்டன. தென் அமெரிக்க வியாபாரத்தைப் பொறுத்தவரையில் ஸ்பெயின் அதுவரை அநுபவித்து வந்த தனியுரிமை சிறிது தளர்த்தப்பட்டது. ஏசியண்டோ (Asianto) என்ற உடன்பாட்டின்படி அடுத்த முப்பதாண்டுகளுக்குத் தென்

அமெரிக்கக் குடியேற்ற நாடுகளுக்கு நீக்ரோ அடிமைகளை விற்கும் உரிமையைப் பிரிட்டன் பெற்றது. ஆண்டு ஒன்றுக்கு 4,800 அடிமைகளை அனுப்ப இங்கிலாந்து அனுமதிக்கப்பட்டது. மேலும், அறுநூறு டன் எடையுள்ள வியாபாரச் சாமான்களடங்கிய கப்பல் ஒன்றை போர்ட்டோ பெல்லோ (Porto Bello) என்ற தென் அமெரிக்கத் துறைமுகத்தில் இறக்கிக்கொள்ளவும் ஆங்கிலேயர் அனுமதிக்கப்பட்டனர். இங்ஙனம் பெற்ற வியாபார உரிமைகளைப் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் தென் கடல் கம்பெனி (South Sea Company) என்ற ஒரு வாணிபச் சங்கத்துக்கு அளித்தனர். இவ் வியாபார உரிமைகளைப் பிரிட்டிஷார், உடன்பாட்டு நிபந்தனைகளைச் சிறிதும் மதியாமல், தீய வழிகளில் பயன்படுத்தினர். அதனுல் ஸ்பெயினுக்கும் பிரிட்டனுக்கும் மனக்கசப்பு ஏற்பட்டது.

## உடன்படிக்கையின் விளைவுகள்

யுட்ரெக்ட் உடன்படிக்கையோடு ஐரோப்பிய வரலாற்றில் பதினேழாம் நூற்ருண்டின் வரலாறு முடிவுபெறுகிறது. பதினெட்டாம் நூற்ருண்டின் வரலாறு ஆரம்பிக்கிறது. சமயச் சண்டைகளின் காலம் ஓய்ந்து, குடியேற்ற நாட்டுச் சண்டைக் காலம் ஆரம்பிக்கிறது. ஃபிரான்ஸும் இங்கிலாந்தும் குடியேற்றநாட்டுப் போட்டியால் ஓயாது போரிடுகின்றன. கடைசியில் பிரிட்டன் வெற்றி பெறுகிறது. பிரிட்டிஷ் பேரரசு என்ற பெயர் இங்கிலாந்தின் வரலாற்றில் 18ஆம் நூற்ருண்டில் தோன்றினதேனும் யுட்ரெக்ட் சமாதானத் தேதியிலிருந்தே அப்பேரரசு முளைத்துவிட்டதாகக் கருதலாம். வியாபாரத்திலும் குடியேற்ற நாட்டு வளர்ச்சியிலும் இங்கிலாந்து தலைமை பெறுதற்கான சூழ்நிலைகளை இச்சமாதானம் ஏற்படுத்தியது. மத்தியதரைக் கடலிலும் அமெரிக்காவிலும் பல இலாபமான குடியேற்றப் பிரதேசங்களையும் வியாபார உரிமைகளையும் இங்கிலாந்து பெற்றது. ஐரோப்பிய நாடுகளின், சிறப்பாக இங்கிலாந்தின் பகைவனுக விளங்கிய பதினுன்காம் லூயியின் கொட்டம் இவ்வுடன்படிக்கையோடு அடங்கியது. இங்கிலாந்தில் பிராடெஸ்டண்டுகளே அரசர்களாக வேண்டும் என்ற கொள்கை வெற்றி பெற்றது. அக் கொள்கையை ஃபிரெஞ்சு மன்னரும் ஏற்றுக்கொண்டார்.

ஐரோப்பாவில் சக்திச் சமநிலைக் கொள்கை நன்கு நிலை நாட்டப்பட்டது. ஐந்தாம் பிலிப் ஃபிரெஞ்சு மகுடத்துக்கு உரிமை கொண்டாடுவதில்லை என ஒப்புக்கொண்டார். டச்சுக்காரரின் உரிமைகள் ஃபிரெஞ்சுப் படை எடுப்பின்மூலம் விளையக்கூடிய அபாயத்திினின்றும் பல வகையிலும் காப்பாற்றப்பட்டன. லூயி

யின் நாடு பிடிக்கும் பேராசைக்கு இவ்வுடன்படிக்கை முற்றுப் புள்ளி வைத்தது. இரண்டு புதிய நாடுகளை இவ்வுடன்படிக்கை தோற்றுவித்தது. ஸ்பெயினுக்கு அதன் மக்கள் விரும்பிய அரசரை இது தந்தது. இங்ஙனம், பலவகையிலும் சிறப்புற்று விளங்கும் இவ்வுடன்பாடு சில தவறுகளையும் செய்தது. இதாலியர்களின் தேசபக்தியை மதியாமல் அங்கு ஆஸ்திரியாவுக்குப் பல இடங்களை இஃது அளித்தது. கேடலோனியா என்ற ஸ்பானிய மாகாணம் நேச நாடுகளுக்குப் பெரிதும் உதவி செய்தது. அம் மாகாண மக்களின் உரிமைகள் காக்கப்படவில்லை. பிலிப் அரசருக்கு அப் பிரதேசம் நிபந்தனையின்றிக் கொடுக்கப்பட்டது. பிலிப் அரசர் பார்ஸிலோனு போன்ற நகரங்களைச் சூறையாடித் தம்மை எதிர்த்த கேடலோனிய மக்கள்மீது வஞ்சந் தீர்த்துக்கொண்டார். இத் தகைய ஒரு சில குறைகளைத்தவிர, மற்றப்படி இவ்வுடன்படிக்கை யானது குணங்களே பெரிதும் நிறைந்ததாய்க் காணப்படுகிறது.

# 16. புகழ்பெற்ற புரட்சி

புரட்சியை விளைவித்த சூழ்நிலைகள்

புரட்சியின் போக்கு

உரிமைகள் அறிவிப்பு (Declaration of Rights, 1689)

உரிமைகள் மசோதா (Bill of Rights, 1689)

புரட்சியின் தன்மை

புரட்சியின் பலன்கள் : மன்னர்—பாராளுமன்றச் சச்சரவின் முடிவு—அரசரின் வருமான, செலவு வரையறுப்பு—மூவாண்டுச் சட்டம் (Triennial Act) 1694—படைக் கலகச் சட்டம் (Mutiny Act) 1689—நீதிபதிகளின் சுதந்திரம்—அரசுரிமை நிர்ணயச் சட்டம் (Act of Settlement) 1701—தல ஆட்சி உரிமை—சமயப் பொறைச் சட்டம் (Toleration Act) 1689 - கருத்து வெளியீட்டுரிமை (Freedom of Press, 1695)—இராஜத் துரோக மசோதா (Treason Law, 1696).

புரட்சியும் ஸ்காட்லாந்தும்

புரட்சியும் அயர்லாந்தும்

புரட்சியும் வெளிநாடுகளும்

புரட்சியும் சமுதாயமும்

## புரட்சியை விளைவித்த சூழ்நிலைகள்

ஆங்கிலப் பிரமுகர்களின் அழைப்பை ஏற்று வில்லியம் இங்கிலாந்துக்குள் அடியெடுத்து வைத்ததிலிருந்து, அதன் வரலாற்றில் ஒரு புதிய திருப்பம் ஏற்படுகிறது. அரசியலிலும் அமைப்பிலும் (Constitution) குறிப்பிடத்தக்க மாற்றங்கள் பல ஏற்படுகின்றன. வில்லியத்தின் வருகையால் இங்கிலாந்தில் ஏற்பட்ட இவ்விளைவுகள் அனைத்தும் சேர்ந்து 'புகழ் பெற்ற புரட்சி' என்ற பெயர் பெறுகின்றன. இப்புரட்சிக்கு முக்கிய காரணம், இரண்டாம் ஜேம்ஸின் வரம்பு மீறிய செயல்களேயாகும். ஆரம்பத்திலிருந்தே அவர் மக்களின் விருப்பத்தை மதித்து நடந்தாரில்லை. தமது தனிச்

சிறப்பதிகாரங்களான (Prerogatives) சட்ட விலக்கதிகாரம் (Dispensing Power), சட்ட நிறுத்ததிகாரம் (Suspending Power) இரண்டையும் முறையற்ற வழிகளில் கையாண்டதன் மூலம் அவர் நாட்டின் அரசியலமைப்பையே அவமதித்தார். சமயத் தொடர்பான ஆணை நீதிமன்றத்தை (Ecclesiastical Commission Court) ஏற்படுத்தியதன் மூலம் அவர் நாட்டின் சட்டத்தையே மீறினார். கத்தோலிக்க மதத்தை எல்லாத் துறைகளிலும் பலவந்தமாகப் புகுத்த முயன்று அவர் நாட்டின் திருச்சபையையும் (Church), பல்கலைக் கழகங்களையும், டோரிகளையும் பகைத்துக்கொண்டார். நிலைப் படையை (Standing Army) வைத்துக்கொண்டதன் மூலம் அவர் பொதுமக்களின் நன்மதிப்பை இழந்தார். இங்ஙனம் இங்கிலாந்தின் பலதரப்பட்ட மக்களையும் பகைத்துக்கொண்டே ஜேம்ஸ் தமது வெளிநாட்டுக் கொள்கையிலும் உறுதியாக நிற்கவில்லை. வலிய வந்த சீதேவியைக் காலால் உதைத்ததுபோல் அவர் ஃபிரெஞ்சு நாட்டு மன்னர் லூயியின் உதவியை ஏற்க மறுத்தார். வில்லியத்தோடு சேரவும் அவருக்கு விருப்பமில்லை. தாம் லூயிக்கு விரோதமாக ஏற்படுத்திய ஆக்ஸ்பர்க் கூட்டுறவில் (League of Augsburg) சேர ஜேம்ஸ் மறுத்ததாலேயே வில்லியம் ஆங்கிலேயரின் அழைப்பை ஏற்றார். ஜேம்ஸின் வெளிநாட்டுக் கொள்கையே அவருடைய வீழ்ச்சிக்கு அடிப்படையான காரணமாகும். ஆதியிலிருந்து ஸ்டுவர்ட்டு மன்னர்கள் கடைப்பிடித்த சமயக் கொள்கையும், வெளிநாட்டுக் கொள்கையுமே மன்னர்களுக்கும் பாராளுமன்றத்திற்கும் சச்சரவை விளைத்துவந்தன. இச்சச்சரவுகள் முற்றிக் கடைசியில் 1688ஆம் ஆண்டிலே புரட்சியில்வந்து முடிந்தன. இத்தனை இருந்தும், ஜேம்ஸுக்கு ஒரு மகன் பிறக்காமலிருந்திருந்தால் புரட்சி ஏற்பட்டிருக்குமா வென்பது சந்தேகமேயாகும். ஜேம்ஸ் எவ்வளவு அக்கிரமங்களைச் செய்யினும் அவரோடு அவைகள் அழிந்துபோய்விடும் என நினைத்துக்கொண்டிருந்த ஆங்கிலேயர்கள், அவருக்கு மகன் பிறந்தான் என்ற செய்தி கேட்டதும், விமோசனம் ஏற்படவேண்டுமாயின், வில்லியத்தை அழைப்பதைத் தவிர வேறு வழியில்லை என நினைத்தனர். எனவே, ஜேம்ஸுக்கு மகன் பிறந்ததே புரட்சிக்கு உடனடியான காரணமாகும்.

## புரட்சியின் போக்கு
### (Course of the Revolution)

வில்லியம் 1688ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 18ஆம் தேதி லண்டனை அடைந்தார். ஆங்கில நாட்டின் அரசியல் ஏற்பாட்டைத் தீர்மானிக்கும் பொறுப்பை ஆங்கிலப் பாராளுமன்றத்

துக்கே விட்டுவிடுவதாக ஏற்கெனவே அவர் வாக்களித்திருந்ததால் அவர் தமது படைவலியைப் பயன்படுத்தி அதிகாரத்தைக் கைப் பற்றவில்லை. பிரபுக்களும், இரண்டாம் சார்லஸ் காலத்துப் பொது மக்கள் சபை உறுப்பினர்களும், நகராட்சி மன்றத் தலைவரான மேயரும் சேர்ந்து நாட்டின் நிர்வாகத்தை ஏற்றுக்கொள்ளும்படி வேண்டிய பின்னரே வில்லியம் இங்கிலாந்தின் அரசாட்சியை நடத்த ஆரம்பித்தார். அவர்கள் வேண்டிக்கொண்டபடி நாட்டின் எதிர்கால அரசியலமைப்பைத் தீர்மானிக்க ஒரு பாராளு மன்றத்தைக் கூட்டவும் ஏற்பாடு செய்தார். முதலில் அவர் லண்டனில் நடைபெற்ற கலகத்தை ஒடுக்கி அமைதியை நிலைநாட்டினுர். பின், மூன்று வாரங்களுக்குள் பாராளுமன்றம் தேர்ந்தெடுக்கப் பட்டது.

மன்னர் ஒருவரால் அழைக்கப்படாத காரணத்தால் மேற் சொன்ன பாராளுமன்றம் பிரத்தியேகப் பாராளுமன்றம் (Convention Parliament) எனப் பெயர் பெற்றது. நாட்டின் அரசியல் அமைப்பை எங்ஙனம் வகுப்பதென்பது பற்றி அப்பாராளுமன்றத் தில் கருத்து வேறுபாடுகள் காணப்பட்டன. பொதுமக்கள் சபை யில் விக்குக் கட்சியினரே பெரும்பான்மையினராக இருந்தனர். அவர்கள் மன்னரின் தெய்விக உரிமைக் கொள்கைக்குச் (Divine Right Theory)சாவு மணியடிக்க அதுவே தக்க தருணமெனக் கருதி னர். ஜேம்ஸ் தமது அடாத செயல்களால் தம் பதவியை இழந்து விட்டாரென்றும், அதனுல் அப்பதவி காலியாகிவிட்டதாயும், காலி யான இடத்தை நிரப்பப் பாராளுமன்றம் வில்லியத்தைத் தேர்ந் தெடுத்துக்கொள்ளலாமென்றும் அவர்கள் கூறினர். மன்னர் பதவி காலியானுலொழியப் பாராளுமன்றத்துக்கு மன்னரைத் தேர்ந்தெடுக்க அதிகாரமில்லை. தெய்விக உரிமைக் கொள்கைப் படி முன்னைய மன்னரின் சந்ததியாரே முறைப்படி பட்டமெய்துவர். எனவேதான் விக்குகள் மேற்சொன்ன யோசனையைத் தெரிவித் தனர். ஆனுல், அஃது பலருக்கும் மிகவும் புரட்சிகரமாகத் தோன் றியதால் ஏற்றுக்கொள்ளப்படவில்லை.

பிரபுக்கள் சபையில் டோரிகள் பெரும்பான்மையினராயிருந் தனர். அவர்கள் தெய்விக உரிமைக் கொள்கையில் ஆழ்ந்த நம் பிக்கை யுடையவர்கள். அதே சமயத்தில் ஜேம்ஸ் மீண்டும் மன்ன ராவதையும் அவர்கள் விரும்பவில்லை. எனவே, அவர்கள் தங்கள் கொள்கைக்கு முற்றும் மாறுபடாத வகையில் ஜேம்ஸை விலக்க முயன்றனர். ஒரு சிலர் ஜேம்ஸை நிரந்தரமாக நாடு கடத்தி விட்டு (exiled) பெயரளவிற்கு அவரை அரசராக ஏற்றுக்கொண்டு, அவர் வாழ்நாள் முடியும்வரை வில்லியத்தை இடைக்காலப் பாது

காப்பாளராக (Regent) நியமிக்கலாமெனக் கூறினர். ஆனால், இங்கிலாந்தின் எதிரியான ஃபிரெஞ்சு நாட்டில் தஞ்சம் புகுந்துள்ள ஒருவரைத் தங்கள் மன்னராக ஏற்பது இங்கிலாந்தின் மானத்துக்கே இழுக்கென்பதைப் பலரும் உணர்ந்ததால் அந்த யோசனை கைவிடப்பட்டது. ஜேம்ஸ் தமது முறையற்ற செயல்களால் பைத்தியம் பிடித்தவர் எனக் கருதப்படலாமெனவும், அதன்பின் வில்லியத்தை இடைக்காலப் பாதுகாப்பாளராகக் கருதலாமெனவும் இன்னும் சிலர் யோசனை கூறினர். ஆனால், அங்ஙனம் இருக்க வில்லியம் ஒருப்படாததால் அந்த யோசனையும் கைவிடப்பட்டது. கடைசியாக டான்பி பிரபு ஒரு நூதன யோசனையைத் தெரிவித்தார். ஜேம்ஸ் நாட்டை விட்டு ஓடிவிட்டதால் அவர் இருந்தும் இறந்தவராகக் கருதப்படலாமென்றும், அதனால் அவருக்குப் பின் தெய்வீக உரிமைக் கொள்கையின்படி அவரது மகன் பட்டத்துக்குரியவரேனும், அவர் ஜேம்ஸின் உண்மையான மகன் என்பது சந்தேகத்துக்கிடமாயிருந்ததால் அடுத்த வாரிசான மேரிக்கே ஆங்கில மகுடம் அளிக்கப்பட வேண்டுமெனவும் அவர் கூறினார். மேரி இங்கிலாந்தின் அரசியாக்கப்பட்டால் வில்லியம் அவருக்கு வெறும் வாழ்க்கைத் துணையாக (Consort) மட்டுமே இருக்க முடியும். அப்படிப்பட்ட இழிநிலையை ஏற்கத் தயாராயில்லை என வில்லியம் திட்டவட்டமாக அறிவித்துவிட்டார். தன் கணவருக்கும் மேலாகத் தன்னை ஆட்சி புரியச் சொன்ன டான்பியை மேரி ராணி பெரிதும் கடிந்துகொண்டார். எனவே, வேறு வழியின்றி விக்குகளும், டோரிகளும் ஒருவர்க்கொருவர் விட்டுக் கொடுத்து ஒரு முடிவுக்கு வந்தனர். 'அரசருக்கும் மக்களுக்கும் ஆதியில் ஏற்பட்ட ஒப்பந்தத்தை மீறியதனாலும், ஜெசூட்டுகள் போன்ற தீயோர்களின் ஆலோசனையைக் கேட்டு நாட்டின் அடிப்படைச் சட்டங்களை மீறியதாலும், நாட்டை விட்டு ஓடிவிட்டதாலும் ஜேம்ஸ் நாட்டின் அரசியலமைப்புக்கே கேடு சூழ்ந்துவிட்டாரென்றும், அதனால் அவர் முடி துறந்துவிட்டதாகவும், மன்னர் பதவி காலியாகிவிட்டதாகவும் கருதப்படும்' என்ற ஓர் தீர்மானம் பொதுமக்கள் சபையில் ஒருமுகமாக நிறைவேற்றப்பட்டது. இத்தீர்மானம் பல பிரிவினருக்கும் உடன்பாடாயிருந்தது. ஆதி ஒப்பந்தத்தைப் பற்றிக் (Original Contract) குறிப்பிட்டதானது ஸிட்னி (Sydney) போன்றவர்களின் ஆதரவாளர்களுக்கும், நாட்டின் சட்டத்தை அரசர் மீறினாரென்றும் அரசர் பதவி காலியாகிவிட்டதென்றும் குறிப்பிட்டதானது விக்குகளுக்கும், ஜெசூட்டுகளைப்பற்றிக் குறிப்பிட்டதானது பிராடெஸ்டண்டுகளுக்கும் திருப்தி அளித்தது. அரச பதவி காலியாகிவிட்டதென்பதை ஒப்புக்கொள்ள, பிரபுக்கள் சற்று மறுத்தனர். ஆனால், வில்லியம் இடைக்காலப் பாதுகாப்பாளராகவோ, அன்றித் தம் மனைவியின் 'வாயில் காக்கும் சீமானாகவோ'

(Gentelman Usher) இருக்கமுடியாதெனத் திட்டமாகக் கூறி விடவே பிரபுக்கள் பொதுமக்கள் சபைத் தீர்மானத்தை ஒப்புக் கொண்டனர். வில்லியம், மேரி இருவருக்குமாகச் சேர்ந்து ஆங் கில மகுடம் வழங்கப்பட வேண்டுமென்று பாராளுமன்றம் தீர் மானித்தது. மேரி அரசியாகக் கருதப்பட்டதால் டோரிகள் தங்கள் தெய்விக உரிமைக் கொள்கை வெற்றி பெற்றதாகக் கருதினர். வில்லியம் அரசராகக் கருதப்பட்டதால் பாராளுமன்றம் தனக்கு விருப்பமானவரைத் தானே தேர்ந்தெடுத்துக்கொண்டதாக விக்கு கள் கருதினர். இருசாராருக்கும் திருப்தி ஏற்பட்டது. உண்மை யில் மகுடம் அவர்களிருவருக்குமாக வழங்கப்படுமுன் பாராளு மன்றம், 'உரிமைகள் அறிவிப்பு' என்ற ஒரு பத்திரத்தைத் தயாரித்து, அரச தம்பதிகளிடம் சமர்ப்பித்தது. அவர்களும் அதை மனமுவந்து ஏற்றுக்கொண்டனர்.

## உரிமைகள் அறிவிப்பு

(Declaration of Rights, 1689)

இவ்வறிவிப்பு ஆங்கிலேய அரசியல் அமைப்பில் ஓர் சிறந்த இடத்தைப் பெறுகிறது. முதலில் அது இரண்டாம் ஜேம்ஸின் முறையற்ற செயல்களைக் கூறி, அவற்றையெல்லாம் சட்டவிரோத மென அறிவிக்கிறது. சட்டங்களை நிறுத்திவைத்தலும், சில சட்டங் களை விலக்கிவைத்தலும், சமய உயர் ஆணை நீதிமன்றங்களை ஏற்படுத்துவதும், நிலைப்படையை அமைதிக் காலத்தில் வைத்திருப் பதும் சட்ட விரோதமானவையென அறிவிக்கப்பட்டது. அதோடு குடிமக்களின் சில உரிமைகளும் அதில் வற்புறுத்தப்பட்டன. குடி மக்கள் தங்கள் குறைகளை மன்னருக்கு விண்ணப்பித்துக் கொள் ளவும், பாராளுமன்றத்துக்குத் தங்கள் பிரதிநிதிகளைத் தாங்களே பிரியம்போல் தேர்ந்தெடுத்துக் கொள்ளவும், அம்மன்றத்தில் கட்டுப்பாடின்றிக் கருத்துகளைத் தெரிவிக்கவும், உரிமைகள் வழங் கப்படவேண்டுமென அவ்வறிவிப்புக் கூறியது. கடுமையான தண்டனைகளினின்றும், அபராதங்களினின்றும் மக்கள் விடுவிக்கப் படவேண்டுமென்றும் அது கோரியது. வில்லியமும், மேரியும் இக் கோரிக்கைகளையெல்லாம் நிறைவேற்ற ஒப்புக்கொண்டனர். அதன் பின் ஆங்கில மகுடம் அவர்களுக்கு வழங்கப்பட்டது. பிரத்தியேகப் பாராளுமன்றமானது சட்டரீதியான பாராளுமன்றமென அறிவிக் கப்பட்டது. அப்பாராளுமன்றம் தனது முதல் வேலையாக உரிமை களின் விண்ணப்பத்தைச் சட்டமாக்கியது. அதன் பெயர் உரிமை கள் மசோதா (Bill of Rights) எனப்படும்.

## உரிமைகள் மசோதா
## (Bill of Rights, 1689)

1689ஆம் ஆண்டு அக்டோபர் 25ஆம் தேதி உரிமைகள் மசோதா பாராளுமன்றத்தில் நிறைவேறியது. ஆங்கிலேயர்களின் மூன்ருவது பெரிய உரிமைச் சாசனமாக இது மதிக்கப்படுகிறது. உரிமைகள் விண்ணப்பத்தில் காணப்பட்ட ஷரத்துகளே இதில் முறைப்படி சட்டமாக்கப்படுகின்றன. அதோடு வாரிசுரிமை தீர்ணயச் சட்டம் (Act of Succession) ஒன்றும் இதில் சேர்க்கப் பட்டது. அதன்படி கத்தோலிக்கரும் கத்தோலிக்கரை மணந்த வரும் இங்கிலாந்தின் அரசராவது தடுக்கப்பட்டது. வில்லியமும் மேரியும் அவர்கள் வாழ்நாள்வரை இங்கிலாந்தை ஆளவேண்டு மென்றும், அவர்களில் ஒருவர் முன்னதாக இறந்தால், மற்றவர் தொடர்ந்து ஆட்சி புரியவேண்டுமென்றும், இருவரும் இறந்த பின்பு மேரியினுடைய மக்களும், அவர்களுக்குப்பின் மேரியின் சகோதரியான ஆன் இராணியும் அவரது மக்களும், அவர்களுக்குப் பின் வில்லியத்தின் இரண்டாம் மனைவியின் மக்களும் (மேரி இறந்து வில்லியம் மறுமணம் செய்துகொண்டால்) ஆங்கில மகுடத்தைப் பெறவேண்டுமென்று அச்சட்டம் கூறியது. ஆனால், இச்சட்டம் எதிர்பார்த்தபடி பின்னர் நடக்கவில்லை. ஆன் இராணியாருக்குக் குழந்தைகள் பல இருந்தும் அவர்களில் ஒருவராவது எஞ்சவில்லை. எனவே, மீண்டும் வாரிசு நிர்ணயச் சட்டம் ஒன்று கொண்டுவர வேண்டிய அவசியம் பின்னர் ஏற்பட்டது.

இம் மசோதாவானது ஆங்கிலேய அரசியலமைப்புச் சட்டங் களில் மிக முக்கியமானவைகளில் ஒன்ருகும். மக்களுக்கும் மன்ன னுக்கும் ஏற்பட்ட ஓர் ஒப்பந்தம் என இதைக் கருதலாம். இதில் அரசியலமைப்புப் பற்றி உன்னதமான கொள்கைகள் எதுவும் வற்புறுத்தப்படவில்லை. ஏற்கெனவே ஆங்கிலேயருக்கு இருந்த உரிமைகளையே இம்மசோதா வற்புறுத்துகின்றது. அது ஏற்பட்ட காலத்தில் இங்கிலாந்தில் காணப்பட்ட குறைகளை நிவர்த்திக்கவே அது வழிகாண முயன்றது. மற்றபடி மன்னரின் ஆதிகாரத்தை அது வரையறுக்கவில்லை. அரசாங்கத்தைப் பாராளுமன்றத்தின் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவரவும் அது முயலவில்லை. பாராளுமன்றத்தைச் சீர்திருத்தவோ அதில் சமுதாயத்தின் பல பிரிவினரும் பிரதிநிதித்துவம் பெறவோ ஒரு முயற்சியும் எடுத்துக் கொள்ளப்படவில்லை. எனவே, இம்மசோதா பெரிதும் மிதவாதத் தன்மையுடையதாகக் கருதப்படுகிறது. சட்டவிலக்கு அதிகாரத் தைக்கூட அது முற்றிலும் கண்டிக்கவில்லை. அவ்வதிகாரத்தை ஜேம்ஸ் கையாண்ட முறை மட்டுமே கண்டிக்கப்படுகின்றது. அக்

காலத்தில் நிலவிய கொடுங்கோன்மையை மட்டும் கண்டிக்கும் நடைமுறைப் பத்திரமாக அஃது இருப்பினும், மறைமுகமாக மக்களின் உரிமைகளை நிலைநாட்டிய பெருமை அதற்கு உண்டு. மன்னரின் தெய்விக உரிமைக் கொள்கை இம் மசோதாவால் மீண்டும் உயிர்பெற முடியா வண்ணம் மாண்டது. மன்னர்கள் பாராளுமன்றத்தால் தேர்ந்தெடுக்கப்படவேண்டியவர்களேயன்றி தெய்வத்தால் நியமிக்கப்படவேண்டியவர்களல்லர் என்ற கொள்கை நிலைநாட்டப்பட்டது. கொஞ்சம் கொஞ்சமாக மன்னரது அதிகாரங்கள் பாராளுமன்றத்தின் கட்டுப்பாட்டிற்குள் அடங்குவதற்கும் மசோதா வழி வகுத்தது.

## புரட்சியின் தன்மை
## (Character of the Revolution)

உண்மையில் 'புரட்சி' என்ற பெயர் 1688ஆம் ஆண்டு நிகழ்ச்சிகளுக்குப் பொருந்துமா என்பதே ஐயப்பாட்டிற்கு உரியது. எனெனில், நாட்டின் அரசியல் அமைப்பில் அடிப்படையான மாறுதல் எதையும் அவை செய்துவிடவில்லை. புதுமையான சட்டங்கள் எதுவும் புகுத்தப்படவில்லை. மன்னர் பதவியிலும், பெரிய மாற்றம் எதுவும் செய்யப்படவில்லை. வில்லியமும் ஸ்டூவர்ட்டு வம்சத்தைச் சேர்ந்தவரே. ஜேம்ஸுக்குப் பின்னர் அவரது புதல்வர் புறக்கணிக்கப்பட்டதைத் தவிர, வேறு ஒரு மாற்றமும் நிகழவில்லை. எனவே, தான் 1688ஆம் ஆண்டுப் புரட்சி மாற்றம் அதிகம் எதையும் புகுத்தாத மிதவாதப் புரட்சியாகக் கருதப்படுகின்றது. பர்க் (Burke) எனும் அறிஞர் இதை இங்ஙனம் கருதுகின்றார். மெகாலே(Macaulay) எனும் ஆசிரியர் இதை ஓர் தீவிரப் புரட்சி என வர்ணிக்கின்றார். உண்மையில் இப்புரட்சி ஜனநாயகத்தன்மை வாய்ந்ததொன்றன்று. செல்வாக்குமிக்க ஒரு சில அறிஞர்களே புரட்சியை வகுத்தனர். எனவே, இதை ஒருசில அறிவாளர்களின் (Aristocratic) புரட்சி என்று சொல்லலாம். ஆனால், பொதுமக்கள் அச் சிலரது தலைமையை ஏற்றுக்கொண்டனர்.

'புகழ் பெற்ற புரட்சி' என்றும் இதற்கோர் பெயருண்டு. இங்கிலாந்தின் புகழை ஓங்கச் செய்யும் புகழ்பெற்ற செயல்கள் எதையும் இப் புரட்சி சாதிக்கவில்லை. புரட்சியை விளைவித்தவர்கள் எவரும் வீரர்கள் என்று கருதப்படத்தக்கவர் அல்லர். ஒருசில ஆங்கிலப் பிரமுகர்கள் சேர்ந்துகொண்டு தங்கள் உரிமைகளைக் காக்க ஓர் அன்னிய நாட்டுப் படையின் உதவியை நாடியதை ஒரு தீரச் செயலாகக் கருத இடமில்லை. அதற்கு மாறாக இங்கிலாந்தின் பெருமைக்கே அவர்கள் இழுக்குத் தேடினர் என்று கருதவே இடமேற்

படுகிறது. எனினும், ஒருவகையில் இப் புரட்சி புகழ் பெற்று விளங்குகிறது. கத்தியின்றி ரத்தமின்றிக் காரியம் சாதிக்கப்பட்டதே இப் புரட்சியின் புகழுக்குக் காரணம். 'இரத்தம் சிந்தாதப் புரட்சி' (Bloodless Revolution) என்றும் ஒரு பெயர் இதற்கு உண்டு. இந்தப் புகழும் அதற்குத் தற்செயலாக ஏற்பட்டதொன்றேயாம். ஜேம்ஸ் நாட்டைவிட்டு ஓடிவிட்டதாலேயே போர் எதுவும் இங்கிலாந்தில் நிகழவில்லை. ஆனால், ஸ்காட்லாந்திலும், அயர்லாந்திலும் இப்புரட்சியின் காரணமாக இரத்த ஆறுகள் ஓடின. பல்லாயிர மக்கள் கொன்று குவிக்கப்பட்டனர். எனினும், வன்மை மிகவும் குறைந்து நன்மை அதிகம் நிறைந்த ஒரு புரட்சியாகவே இது திகழ்கிறது.

## புரட்சியின் பலன்கள்
## (Results of Revolution)

ஸ்டுவர்ட்டுகள் காலத்தில் மன்னருக்கும் பாராளுமன்றத்துக்கும் இடைவிடாது நடைபெற்ற போராட்டத்துக்கு இப் புரட்சி ஓர் முற்றுப்புள்ளி வைத்தது மன்னரைவிடப் பார்லிமென்ட் அதிக அதிகாரம் வாய்ந்தது என்னும் கொள்கை நிலைநாட்டப்பட்டது. மன்னர்களை நீக்கவும் ஆக்கவும் பார்லிமென்டுக்கு அதிகாரம் உண்டென்பது நன்கு வலியுறுத்தப்பட்டது. நாட்டின் சட்டங்களுக்கு மன்னன் கட்டுப்படவேண்டும் என்று ஏற்பட்டதால், மன்னன் சட்டத்துக்கும் மேம்பட்டவன் என்ற தெய்விக உரிமைக் கொள்கை மாண்டது. இங்கிலாந்தில் சட்டத்தின் ஆட்சி (Reign of Law) ஸ்தாபிக்கப்பட்டது. அரசரிடம் மட்டுமே பொதிந்து கிடந்த இறைமை, பாராளுமன்றத்தோடு கூடிய மன்னருக்கு (King in Parliament) மாற்றப்பட்டது.

### மன்னர்—பாராளுமன்றச் சச்சரவின் முடிவு

மேலும், இப்புரட்சி இங்கிலாந்தில் நிலையான பலன்களை விளைவித்தது. 1649 ஆம் ஆண்டு நடைபெற்ற புரட்சியால் விளைந்த பலன்கள் அதிக நாள் நீடிக்கவில்லை. ஆனால், புகழ் பெற்ற புரட்சியால் ஏற்பட்ட மாறுதல்கள் நிலைத்தன. வில்லியத்துக்குப் பின் வந்த அரசர்களும் கூடத் தங்கள் சிறப்பதிகாரங்களையும், சிறப்பதிகார நீதிமன்றங்களையும் (Prerogative Courts) மீண்டும் உயிர்ப்பிக்க முயலவில்லை. பாராளுமன்றமும் மன்னரும் ஒப்புரவோடு ஆட்சி நடத்த ஆரம்பித்ததால், நாடு பல துறைகளிலும் முன்னேறியது. வெளிநாடுகளில் அதுவரை தோல்வியே பெற்றுவந்த இங்கிலாந்து 18 ஆம் நூற்றாண்டில் வெற்றிக்குமேல் வெற்றி பெறுகிறது. குடியேற்ற நாடுகள் வளர்ச்சியடைகின்றன. வியாபாரத்திலும், படை

வலிமையிலும், அரசியல் சமய சுதந்திரத்திலும், அறிவின் திறத்திலும், இங்கிலாந்து ஐரோப்பாவுக்கே ஒரு முன் மாதிரியாகத் திகழ்ந்தது.

**அரசரின் வருமான, செலவு வரையறுப்பு**

அரசரின் அதிகாரத்துக்குப் பல வகைகளிலும் வரம்பு கட்டப்பட்டது. அரசரின் வருமானம் இவ்வளவுதான் என்று வரையறுக்கப்பட்டது. இங்ஙனம் ஓர் குறிப்பிட்ட தொகையானது அரசரது ஆயுள் பூராவுக்குமாக அளிக்கப்பட்டது. அதற்கு அரசரின் செலவுப் பணம் (Civil list) என்று பெயர். மற்றைய அரசாங்க அலுவல்களுக்கு வேண்டிய செலவுத் தொகையைப் பாராளுமன்றமானது அவ்வப்போது அரசருக்கு அளித்துவந்தது. ஆண்டுக்கு ஒருமுறை அங்ஙனம் மானியம் வழங்கும் முறை நாளடைவில் ஏற்பட்டது. மேலும், இங்ஙனம் அளிக்கப்பட்ட தொகை எவ்வாறு செலவு செய்யப்படுகிறது என்பதைத் தணிக்கை செய்யவும் பாராளுமன்றம் உரிமைபெற்றது. வரவு செலவுக் கணக்குகள் பாராளுமன்றத்தின் சோதனைக்குட்படுத்தப்பட்டன (Auditing of Accounts). குறிப்பிட்ட ஒரு காரியத்துக்காக அளிக்கப்பட்ட மானியமானது அதே காரியத்திற்காகப் பயன்படுத்தப்பட்டதா என்பதைத் தணிக்கை செய்யும் அதிகாரத்தையும் அம் மன்றம் பெற்றது. இதற்கு மானியச் செலவு வரையறுப்பு (Appropriation of Supplies) என்று பெயர்.

**மூவாண்டுச் சட்டம் (1694)**

பாராளுமன்றமானது அடிக்கடி கூட்டப்படுவதற்கும் இப் புரட்சியானது வழி செய்தது. 1694ஆம் ஆண்டு மூவாண்டுச் சட்டம் (Triennial Act) இயற்றப்பட்டது. குறைந்தது மூன்று ஆண்டுகளுக்கு ஒரு முறையேனும் பாராளுமன்றம் கூட்டப்பட வேண்டும் என அச் சட்டம் கூறியது. எல்லையின்றிப் பல்லாண்டுகளுக்குப் பாராளுமன்றங்களைக் கூட்டாமலேயே அரசர்கள் அரசாட்சி புரிவது இதனால் தடுக்கப்பட்டது.

**படைக்கலகச் சட்டம் (1689)**

பாராளுமன்றத்தை அடிக்கடி கூட்டவேண்டிய அவசியத்தை வேறொரு வகையிலும் இப் புரட்சி ஏற்படுத்தியது. 1689 ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பட்ட படைக்கலகச் சட்டமானது (Mutiny Act) பாராளுமன்றத்தின் அனுமதியின்றி அரசர் நிலைப்படை வைத்துக்கொள்வதைத் தடை செய்தது. வில்லியம் ஐரோப்பியச் சண்டைகளில் ஈடுபட்டிருந்ததால், அவருக்குப் படை உதவி ஒவ்வோராண்டும் வேண்டியிருந்தது. எனவே, ஆண்டுக்கொரு

முறை அவர் பாராளுமன்றத்தைக் கூட்டுவது இன்றியமையாத தாகிவிட்டது. மேலும், இச் சட்டமானது படை வீரர்கள் ஒழுங்கின்றி நடந்துகொண்டால், அவர்களை இராணுவ நீதிமன்றங்கள் மூலம் (Court Martial) தண்டிப்பதற்கும் வழி செய்தது. இங்ஙனம் படைவீரர் மீதும், மன்னர் மீதும் கட்டுப்பாடுகளை விதிக்கப் பாராளுமன்றம் உரிமை பெற்றது.

**நீதிபதிகளின் சுதந்தரம்**

நீதிமன்றங்களின் உரிமைகளும் நன்கு நிலைநாட்டப்பட்டன. 1701 ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பட்ட அரசு உரிமை நிர்ணயச் சட்டமானது (Act of Settlement) வாரிசை நிர்ணயஞ் செய்ததோடன்றி நீதிபதிகளின் சுதந்திரத்தையும் காப்பாற்றியது. அரசர் தம் பிரியம்போல் நீதிபதிகளைப் பதவிகளினின்றும் நீக்கக் கூடாதென்றும், பாராளுமன்ற இரு சபைகளும் சேர்ந்து மனுச் செய்துகொண்டால் மட்டுமே அரசர் நீதிபதிகளை நீக்கலாமென்றும் அச் சட்டம் கூறியது. இதனால் இங்கிலாந்தில் நியாயமும் நீதியும் அரசரின் யதேச்சாதிகாரத்தினின்றும் காப்பாற்றப்பட்டன. விசாரணைகள் ஒழுங்காயும் பாரபட்சமற்றும் நடைபெற்றன. சவுக்கால் அடித்தல் போன்ற கடுமையான தண்டனை முறைகள் ஒழிந்தன. பெரும் அபராதம் விதிக்கும் வழக்கமும் மாய்ந்தது.

**தல ஆட்சி உரிமை**

தல ஆட்சியின் (Local Government) உரிமைகளும் தழைத்து ஓங்கின. மன்னர்கள் தல ஆட்சி விவகாரங்களில் தலையிடுவது நின்றது. அமைதிகாண் நீதிபதிகள் (Justice of Peace) சுயேச்சையாகத் தம் அதிகாரத்தைச் செலுத்தினர். நகர ஆட்சி மன்றங்கள் (Corporations) மன்னர்களின் தலையீடின்றி இயங்கின. அவைகளில் காணப்பட்ட ஊழல்களைக்கூடக் களைவதற்கு அரசர்கள் முன்வரவில்லை. ஒருவகையில் இப் புரட்சியால் ஏற்பட்ட தீமைகளில் இதுவும் ஒன்றாகும். இப் புரட்சியால் எல்லாப் பிரச்சினைகளுக்கும் இறுதியான தீர்வு ஏற்பட்டுவிட்டதாக அறிஞர் பலர் கருதினர். அதனால் ஆங்கிலேய அரசியல் அமைப்பைத் திருத்தவே கூடாது என்று பர்க் (Burke), எல்டன் (Eldon) போன்ற அறிஞர்கள் பிற்காலத்தே கூக்குரலிட்டனர்.

**சமயப் பொறை**

சமயத் துறையில் சில நிபந்தனைகளின் பேரில் முதன்முதலாக எல்லாப் பிரிவினரும் சுதந்திரம் பெற்ற காலம் இதுவே. கிளாரண்டன் சட்டத் தொகுதியால் (Claranden Code) துன்புறுத்தப்பட்டு வந்த அனைவருக்கும் விடுதலை அளித்த சமயப் பொறைச் சட்ட

மானது (Toleration Act) 1689ஆம் ஆண்டு நிறைவேறியது. எல்லா மதப்பிரிவினரும் தங்கள் பிரியம்போல் தொழுகைக் கூட்டங்களை நடத்த அனுமதிக்கப்பட்டனர். ஆனால், நகராட்சி மன்றங்களில் அவர்கள் உறுப்பினர் ஆவதற்குமட்டும் அனுமதிக்கப்படவில்லை. புதிய அரசருக்குப் பணிந்து நடப்பதாக விசுவாசப் பிரமாணம் எடுத்துக்கொண்டவர்களுக்கு மட்டுமே வழிபாட்டுரிமை இச் சட்டத்தால் கிடைத்தது. ஏனையோர் தண்டனைக் குள்ளாயினர். எனினும், சமயப்பொறை வரலாற்றில் இதுவே முதற்படியாகும். 1727ஆம் ஆண்டுக்குப் பின் ஆண்டுதோறும் நிறைவேற்றப்பட்ட உத்தரவாதமளிப்புச் சட்டங்களால் எல்லா பிராடெஸ்டன்டு இணங்காதார்க்கும் வழிபாட்டுரிமை ஏற்பட்டது.

## கருத்து வெளியீட்டுரிமை

கருத்து வெளியீட்டு உரிமையும் (Freedom of the Press) இப்புரட்சியினால் நன்கு நிலைநாட்டப்பட்டது. 1695 ஆம் ஆண்டு அனுமதிச் சீட்டுச் சட்டம் (Licensing Act) உயிர்ப்பிக்கப்படாமல் விடப்பட்டதன் மூலம் இச் சுதந்திரம் முதன் முதலாக ஆங்கிலேய மக்களுக்கு அளிக்கப்பட்டது. இதற்கு முன்பெல்லாம் அனுமதிச் சீட்டு அரசாங்கத்திடம் பெற்றவர்களே தங்கள் கருத்துகளைச் சுதந்திரமாகப் பிரசுரிக்க அனுமதிக்கப்பட்டனர். அத்தகைய அனுமதிச் சீட்டுகளைப் பெறவேண்டிய அவசியத்தை வற்புறுத்தும் சட்டமானது 1695ஆம் ஆண்டு கைவிடப்பட்டது. அதன்பின் அனுமதிச் சீட்டுச் சட்டம் உயிர்ப்பிக்கப்படவில்லை. இங்ஙனம் பிரசுர உரிமை மக்களுக்கு வழங்கப்பட்டது.

## இராஜத்துரோக மசோதா (1696)

1696ஆம் ஆண்டு ஏற்பட்ட இராஜத்துரோக மசோதாவானது (Treason Bill) அநியாயமாக மக்கள்மீது இராஜத்துரோகக் குற்றம் சாட்டப்படுவதையும், அங்ஙனம் குற்றம் சாட்டப்பட்டவர்கள் சரியான விசாரணையின்றித் தண்டிக்கப்படுவதையும் தடுத்தது. இங்ஙனம் பலவகையிலும் பொதுமக்களின் உரிமைகள் காப்பாற்றப்பட்டன.

## சமுதாயத்துறை

சமுதாயத்தில் இப்புரட்சிக்குப் பின் செல்வமிக்க ஒருசிலரின் ஆதிக்கம் (Oligarchy) வளர்ந்தது. பணம் படைத்த நிலப்பிரபுக்களுக்குப் பதிலாக வாணிபத்தால் பெரும் பொருளீட்டிய செல்வர்களின் ஆதிக்கம் வளர்ந்தது. இந்திய வியாபாரத்தில் பொருள் திரட்டிய 'நவாபுகள்' நசித்துப்போன பரோக்களை விலைக்கு

வாங்கி அவற்றின் மூலம் பொதுமக்கள் சபையில் நிலப்பிரபுக் களுக்குச் சமமான செல்வாக்கைப் பெற்றனர்.

## புரட்சியும் ஸ்காட்லாந்தும்

இப் புரட்சியால் ஸ்காட்லாந்திலும் அயர்லாந்திலும் பல விளைவுகள் ஏற்பட்டன. ஸ்காட்லாந்தியர் ஆங்கிலேயரைப் பின்பற்றி ஜேம்ஸ் தங்களது மன்னர் அல்லர் என்றறிவித்தனர். வில்லியத்துக்கும் மேரிக்கும் சேர்த்து ஸ்காட்லாந்தின் இறைமையைத் தந்தனர். ஆனால், ஸ்காட்லாந்தின் திருச்சபையானது பிரஸ்பிடீரிய மதச்சார்புடையதாகவே இருக்கவேண்டுமென அவர்கள் வில்லியத்தைக் கேட்டுக்கொண்டனர். வில்லியமும் அதற்கிணங்கினர். இந்த ஏற்பாட்டிற்கு இணங்க ஒருசில ஸ்காட்லாந்தியக் குடும்பங்கள் மறுத்தன. கிளேவர் ஹவுஸ் (Claver House) என்னும் தலைவரின் கீழ் அவர்கள் கலகம் செய்தனர். மேக்கே (Mackay) என்னும் அரசரது தளகர்த்தரை அவர்கள் கிள்ளி கிராங்கி (Killie Cranki) எனும் போர்க்களத்தில் தோற்கடித்தனர். ஆனால், கிளேவர் ஹவுஸ் போரில் மாண்டார். எனவே, கலகக்காரர்கள் கலைந்தனர். வில்லியத்தின் அதிகாரம் மீண்டும் ஸ்காட்லாந்தியத் தலைவர்களால் ஒப்புக்கொள்ளப்பட்டது (1691). ஆனால், மாக்டனால்டுகள் என்ற குலத்தினர் மட்டும் மன்னருக்குப் பணியவில்லை. ஸர் ஜான் டார்லிம்பிள் (Sir John Darlymple) என்ற அதிகாரி அரசரின் அனுமதி பெற்று மாக்டனால்டு குடும்பத்தினர் பலரை ஈவிரக்கமின்றிக் கொன்றனர். மாக்டனால்டுகளின் தலைவர் உண்மையில் வில்லியத்துக்குப் பணிந்துவிடவே விரும்பினர். ஆனால், அவர் சற்றுக் காலதாமதம் செய்தார். அதற்குள் அவரது குடும்பத்தினர் பழிவாங்கப் பட்டனர். இதை அறிந்த ஆங்கிலேய மக்கள் தங்கள் கண்டனத்தைத் தெரிவித்தனர். டார்லிம்பிள் பதவியினின்றும் நீக்கப்பட்டார்.

## புரட்சியும் அயர்லாந்தும்

அயர்லாந்து ரிச்சர்டு டால்பட் (Richard Talbot) என்ற கவர்னரால் ஆளப்பட்டு வந்தது. அவர் ஜேம்ஸால் நியமிக்கப் பட்டவர். அயர்லாந்தியர் கத்தோலிக்கர் ஆனதால் ஜேம்ஸின் செய்கைகளை வெறுக்கவில்லை. ஜேம்ஸும் ஃபிரான்ஸுக்கு ஓடிப் போனபின், தம் பதவியை மீண்டும் கைப்பற்ற அயர்லாந்தியர் களையே நம்பினர். சில ஃபிரெஞ்சுத் துருப்புகளுடன் அவர் அயர்லாந்தில் வந்திறங்கினர். அவர் நேரே டப்ளின் (Dublin)

நகருக்குச் சென்று அங்கிருந்த கத்தோலிக்கர்கள் அடங்கிய ஒரு பாராளுமன்றத்தைக் கூட்டினர். அதைக்கொண்டு 1661ஆம் ஆண்டு அங்கு ஏற்படுத்தப்பட்ட நிலவுரிமை நிர்ணயச் சட்டத்தை ரத்து செய்தார். அதனால் பல ஆங்கிலக் குடியேறிகள் நிலமிழந்தனர். 2,800 பிராடெஸ்டன்டுகள் மீது மரண தண்டனைச் சட்டம் (Act of Attainder) விதிக்கப்பட்டது. அப் பிராடஸ்டன்டுகள் எல்லாம் அல்ஸ்டர் மாகாணத்துக்கு ஓடிவிட்டார்கள். அங்கிருந்துகொண்டு அவர்கள் வில்லியத்தின் உதவியைக் கோரினர். வில்லியமும் ஒரு படையுடன் புறப்பட்டு வந்து அவர்களைக் காப்பாற்றினர். அவர் ஜேம்ஸின் படைகளை எதிர்த்துத் தோற்கடித்தார். ஜேம்ஸ் அதன்பின் ஃபிரான்ஸுக்கே மீண்டும் ஓடிவிட்டார். இரண்டாண்டுகளில் அயர்லாந்தில் அமைதி ஏற்படுத்தப்பட்டது. வில்லியத்துக்கு எதிராகப் போரிட்டவர்கள் ஒன்றுக அரசருக்குப் பணிய வேண்டுமெனவும் இல்லாவிடில் நாட்டைவிட்டு வெளியேற வேண்டுமெனவும் அறிவிக்கப்பட்டது. இதனால் பல கத்தோலிக்க வீரர்கள் ஃபிரான்ஸுக்குச் சென்று பதினான்காம் லூயியின் படையில் சேர்ந்தனர். ஐரிஸ் கத்தோலிக்கர்களுக்கு இரண்டாம் சார்லஸ் காலத்தில் வழங்கப்பட்டு வந்த அளவுக்குத் தொழுகைச் சுதந்திரம் அளிக்கப்பட்டது.

இங்ஙனம் 1688ஆம் ஆண்டுப் புரட்சியானது இங்கிலாந்து, ஸ்காட்லாந்து, அயர்லாந்து உறவுகளைப் பெரிதும் பாதித்தது. ஸ்காட்லாந்து ஓரளவு புரட்சியை ஆதரித்ததால் இரு நாடுகளுக்கும் இடையே உறவு வளர்ந்தது. 20 ஆண்டுகளுக்குள் இரு நாடுகளின் ஐக்கியமும் ஏற்பட்டது. ஆனல், அயர்லாந்தானது ஜேம்ஸை ஆதரித்த காரணத்தினுல் அடக்குமுறை ஆட்சிக்கு உட்படுத்தப்பட்டது. இரு நாடுகளுக்கும் பரஸ்பர உறவு ஏற்படவில்லை. இரு நாடுகளுக்கும் ஐக்கியம் ஏற்பட ஒரு நூற்றுண்டு கழிய வேண்டியிருந்தது. அந்த ஐக்கியமும்கூடப் பல அயர்லாந்தியர்களுக்குத் திருப்தி அளிக்கவில்லை.

## புரட்சியும் வெளிநாடுகளும்

புகழ்பெற்ற புரட்சியானது இங்கிலாந்தின் அயல்நாட்டுக் கொள்கையைப் பெரிதும் பாதித்தது. வில்லியம் இங்கிலாந்திற்கு மட்டுமின்றி ஹாலந்து நாட்டிற்கும் மன்னராயிருந்தார். ஹாலந்து நாடு ஃபிரான்ஸோடு மீளாத பகைமைபூண்டு போரிட்டு வந்தது. அப் போராட்டத்தில் இங்கிலாந்தும் கலந்துகொண்டது. ஆக்ஸ்பர்க் கூட்டுறவில் இங்கிலாந்தும் சேர்ந்துகொண்டு பதினான்காம் லூயியுடன் போராட ஆரம்பித்தது. ஃபிரான்ஸுக்கும் இங்கி

லாந்துக்கும் ஏற்பட்ட இப் போராட்டம் ஒரு நூற்றுண்டுக்கு மேல் தொடர்ந்து நடைபெற்றது. இரு நாடுகளுக்கும் இடையே ஏழு பெரும் போர்கள் நடைபெற்றன. வியாபாரப் போட்டியும் குடியேற்ற நாடுகளைப் பெருக்குவதில் இருந்த ஆர்வமும் சேர்ந்து இப் போர்களைத் தூண்டின எனலாம்.

மேற்படி போராட்டத்தினுல் இங்கிலாந்து வியாபாரத்துறையில் தலைமை பெற்றது. பல குடியேற்ற நாடுகளடங்கிய பேரரசு இங்கிலாந்துக்குக் கிட்டியது. போராட்டங்களை நடத்த மிகுதியான பணம் தேவையாய் இருந்ததனுல் புதிய பொருளாதார முறைகள் இங்கிலாந்தில் கடைப்பிடிக்கப்பட்டன. நாட்டுக் கடன்கள் (National debts) மூலமாகவும், இங்கிலாந்து பாங்கியின் (Bank of England) மூலமாகவும் பணம் திரட்டும் முறையை வில்லியம் கையாண்டார். இங்ஙனம் பொருளாதாரத் துறையிலும் பல மாற்றங்கள் விளைய இப் புரட்சி காரணமாயிருந்தது.

## புரட்சியும் சமுதாயமும்

ஆங்கிலேய சமுதாயத்தையும் இப் புரட்சி ஓரளவு மாற்றி அமைத்தது எனலாம். அரசரது மதமே சமுதாயத்தின் மதமாக இருக்கவேண்டும் என்ற நிலை மாறிவிட்டது. ஆங்கிலிக்கத் திருச்சபை நாட்டின் தேசிய மதமாக இருப்பினும், அதற்கு இணையாக மற்றைய மதத்தினரும் சுதந்திரமாக வாழ்ந்தனர். நாட்டுப்புறங்களில் நிலக்கிழார்களே பெரிதும் செல்வாக்குடன் விளங்கினரென்றுலும் வியாபார முன்னேற்றத்தினுலும், குடியேற்ற நாட்டு வளர்ச்சியினுலும், வணிகர்கள் சமுதாயத்தில் சிறந்ததோர் இடத்தையும் செல்வாக்கையும் பெற்றனர். மற்றும் இப்புரட்சியானது பல எழுத்தாளர்களைத் தோற்றுவித்தது. அவர்கள் புரட்சியை ஆதரித்துப் பல நூல்களை எழுத ஆரம்பித்தனர். அவர்களில் லாக் (Locke) என்பார் மிகவும் முக்கியமானவர். சமுதாய ஒப்பந்தக் கொள்கையை விவரிக்கும் அவரது நூல் உலகப் புகழ் பெற்றது.

# 17. மூன்றும் வில்லியத்தின் ஆட்சி

மூன்றும் வில்லியத்தின் வெளிநாட்டுக் கொள்கை: ஆங்கில வாரிசு உரிமைப் போர் ஆரம்பம் (1689) — அயர்லாந்தில் போர்: பாய்ண் (1690), ஆக்ரிம் (1691) — கடற் போர்: பீச்சிஹெட் (1690) — லாஹோக் (1692) — ஸ்மிர்ணு (1693) — டூலோங் (1694) — ஐரோப்பாக் கண்டத்தில் நடைபெற்ற போர்: ஃபிலியூரிஸ் (1691) — நாமூர் (1692) — ஸ்டீன்கிர்க் (1692) — நீர்விண்டன் (1693) — ரிஸ்விக் சமாதானம் (1697)

மூன்றும் வில்லியத்தின் உள்நாட்டுக் கொள்கை: சமயக் கொள்கை— வில்லியத்துக்கு விரோதமாக ஏற்பட்ட சதிகள்—நிலவரி (1692) —நாட்டுக் கடனும் இங்கிலாந்து பாங்கியும் (National Debt and Bank of England)—கட்சியாட்சியின் தோற்றம் — சீர்திருத்தச் சட்டங்கள் அரசுரிமை நிர்ணயச் சட்டம் (Act of Settlement, 1701)

மதிப்பீடு (Estimate).

## மூன்றும் வில்லியத்தின் வெளிநாட்டுக் கொள்கை

### ஆங்கில வாரிசு உரிமைப் போர் ஆரம்பம் (The War of English Succession)

ஃபிரெஞ்சு அரசர் பதினான்காம் லூயி பேராசையால் பீடிக்கப் பட்டுப் பல போர்களில் ஈடுபட்டார். அவரை எதிர்த்தவர்களில் மிகவும் தீரம் வாய்ந்தவர் வில்லியம் ஒருவரேயாவர். லூயிக்கு விரோதமாக அவர் ஐரோப்பிய நாடுகளின் கூட்டுறவு ஒன்றைச் சமைத்தார் (1689). அது ஆக்ஸ்பர்க் கூட்டுறவு (League of Augsburg) எனப்படும். அக் கூட்டுறவில் ஸ்பெயின், ஹாலந்து, பிராண்டன்பர்க் (Brandenburg), ஸ்வீடன், பேரரசு முதலிய நாடு கள் அடங்கியிருந்தன. லூயி ரைன் நதி தீரத்தைத் தாக்கியதால் பேரரசர் லியோபோல்டு அவரது எதிரியானர். அவர் ஸ்பானிய நெதர்லாந்தின்மேல் படையெடுத்ததால், ஸ்பெயினும் ஹாலந்தும் லூயிக்கு எதிராகச் சேர்ந்தன. லூயி இரண்டாம் ஜேம்ஸுக்குத்

தஞ்சமளித்ததோடு அவரே இங்கிலாந்தின் உண்மையான அரசரென்றும் அறிவித்தார். வில்லியத்தை இங்கிலாந்தினின்று ஓட்டிவிட்டு ஜேம்ஸை மீண்டும் ஆங்கில அரியாசனத்தில் அமர்த்த வேண்டுமென்று லூயி விரும்பினர். எனவே, பாலடைன் நாட்டை முற்றுகையிட்டுக்கொண்டிருந்த தமது துருப்புகளை லூயி திருப்பி அழைத்துக் கொண்டார். அத் துருப்புகளை ஜேம்ஸுக்கு உதவியாகக் கொடுத்து, லூயி அவரை அயர்லாந்துக்கு அனுப்பினர். அயர்லாந்தில் போர் முதலில் துவங்கியது. ஆங்கில மகுடம் யாருக்கு உரியது என்பதை நிர்ணயிக்கும் போராட்டமாக ஆரம்பித்ததால், இப் போர் ஆங்கில வாரிசு உரிமைப் போரென அழைக்கப்படுகின்றது.

## அயர்லாந்தில் போர்

ஃபிரெஞ்சுக் கப்பற் படையானது ஜேம்ஸ் அயர்லாந்தில் நலமே வந்திறங்க உதவி செய்தது. அவரைத் தடுக்க முயற்சித்த ஆங்கிலக் கப்பற்படையானது பான்ட்ரி குடாவில் (Bantry Bay) தோற்கடிக்கப்பட்டது. இங்கிலாந்திலிருந்து மேற்கொண்டு உதவி அயர்லாந்துக்கு வருவதையும் ஃபிரெஞ்சுக் கப்பற்படை தடை செய்தது. எனினும், வில்லியம் ஒரு படையுடன் அயர்லாந்துக்குள் நுழைந்து, பாயின் (Boyne—1690), ஆக்ரிம் (Aughrim—1691) முதலிய இடங்களில் ஜேம்ஸின் படைகளைத் தோற்கடித்தார். ஜேம்ஸும் அயர்லாந்தைவிட்டு ஃபிரான்ஸுக்குச் சென்றுவிட்டார். அதன்பின் வில்லியம் தமது படைகளுடன் ஐரோப்பாவை நோக்கிப் புறப்பட்டார்.

## கடற்போர்

ஃபிரெஞ்சுக் கப்பற்படையானது கால்பர்ட் (Colbert) என்ற லூயியின் மந்திரியால் நன்கு அமைக்கப்பட்டு வலிமையுடன் விளங்கியது. கால்பர்ட்டுக்குப்பின் அவரது புதல்வரும் கப்பற்படையை வளர்ப்பதில் கவனம் செலுத்தினர். இக் கப்பற்படையானது மத்தியதரைக் கடலில் தனியாதிக்கத்துடன் விளங்கியது. 1690ஆம் ஆண்டு ஆங்கில டச்சுக் கப்பற்படைகள் இரண்டும் ஒன்று சேர்ந்து ஃபிரெஞ்சுக் கப்பற்படையைப் பீச்சி ஹெட் (Beachy Head) என்னுமிடத்தில் எதிர்த்துத் தோல்வியுற்றன. ஆங்கிலக் கால்வாயில் ஃபிரெஞ்சுக்காரரின் ஆதிக்கம் நிலைநாட்டப்பட்டது. ஆங்கிலேயக் கப்பற்படையின் பெருமைக்கு இழுக்கு ஏற்பட்டது. ஆனால், 1692ஆம் ஆண்டில் ஆங்கிலக் கப்பற்படையானது ரஸ்ஸல் பிரபுவின் (Russell) தலைமையில் ஃபிரெஞ்சுக் கப்பற்படையை லாஹோக் (La Hogue) முனைக்கருகில் தோற்கடித்தது. அதன்பின் ஃபிரெஞ்சுக் கப்பற்படை பின்வாங்கியது.

ஆங்கிலேயர் மீண்டும் ஆங்கிலக் கால்வாயில் ஆதிக்கம் பெற்றனர். ஆனால், ஆங்கிலேய வியாபாரக் கப்பல்கள் ஃபிரெஞ்சுக் கடற் படைக் கப்பல்களினால் தாக்கப்பட்டன. இதனால் ஆங்கிலேயரின் வியாபாரம் பெரிதும் பாதிக்கப்பட்டது. 1693ஆம் ஆண்டு ஸ்மிர்னா (Smyrna) என்னுமிடத்தில் இருந்த ஆங்கிலக் கப்பற்படை யானது ஃபிரெஞ்சுக்காரர்களால் அழிக்கப்பட்டது. லெவான்ட் (Levant) பிரதேசத்திற்கு வியாபாரம் செய்யச் சென்ற கப்பல்களை ஆங்கிலேயக் கப்பற்படை காவல் புரிய நேர்ந்தது. காவலுக்குச் சென்ற கப்பல்களும் ஃபிரெஞ்சுக்காரர்களினால் தாக்கப்பட்டன. அநேகமாக எல்லா வியாபாரக் கப்பல்களும் எதிரிகள்வசம் சிக்கின. பல கப்பல்கள் கடலுள் மூழ்கடிக்கப்பட்டன; 1694ஆம் ஆண்டு ஆங்கிலேயர் டூலான் (Toulon) நகரத்தைக் கைப்பற்ற முயன்று தோல்வியுற்றனர். இங்ஙனம் கடற்போர்களில் ஃபிரெஞ்சுக் காரர்களே ஆரம்பத்தில் பல வெற்றிகளை எய்தினர். ஆனால், நாளடைவில் ஆங்கிலேயரின் கை வலுத்தது. ஆங்கிலக் கப்பற் படையானது ஆங்கிலக் கால்வாயில் தன் ஆதிக்கத்தை நிலை நாட்டியதோடு குடியேற்ற நாடுகளிலும் பல வெற்றிகளைப் பெற்றது. குடியேற்ற நாடான நோவாஸ்கோஷியா ஆங்கி லேயரின் கப்பற்படையால் கைப்பற்றப்பட்டது.

## ஐரோப்பாக் கண்டத்தில் நடைபெற்ற போர்கள்

ஐரோப்பாக் கண்டத்தில் முக்கியமாக ஸ்பானிய நெதர்லாந் தில்தான் பல போர்கள் நடைபெற்றன. ஃபிரெஞ்சுப் படைகள் லக்ஸம்பர்க் (Luxemburg) என்பவரால் வழி நடத்தப்பட்டன. லக்ஸம்பர்க் மிகுந்த போர்த் திறமை உள்ளவர். அவருக்கு உதவி யாக வாபான் (Vauban) என்ற இராணுவப் பொறியியல் வல்லுநர் ஆங்காங்கே பல உறுதியான கோட்டைகளைக் கட்டித் தந்தார். 'லக்ஸம்பர்க் தமது எதிரிகளின் படைகளை ஃப்லியூரிஸ் (Fleurus) போர்க்களத்தில் தோற்கடித்தார் (1691). 1692ஆம் ஆண்டு ஃபிரெஞ்சுக்காரர் நாமூர் (Namur) என்ற நகரைக் கைப்பற்றினர். வில்லியம், ஸ்டீன்கிரிக் (Steinkirk) எனும் போர்க்களத்தில் தோற் கடிக்கப்பட்டார். அடுத்த ஆண்டு அவர் மீண்டும் நீர்விண்டன் (Neerwinden) என்னுமிடத்தில் லக்ஸம்பர்க்கால் தோற்கடிக்கப் பட்டார். இங்ஙனம் வில்லியம் பலமுறை தோல்வி எய்திய போதிலும் மனம் தளரவில்லை. அயராத பிடிவாதம் அவரது சிறந்த குணங்களில் ஒன்று. அவர் மிகப் பொறுமையோடு தமது போராட்டங்களை நடத்திவந்தார். ஒவ்வொரு தடவை தோல்வி யுற்றபோதும், அவர் தமது படைகளை அழித்துவிடா வண்ணம் காப்பாற்றிப் பின்வாங்கினார். அதே சமயம் அதிக தூரம் பின் வாங்கிவிடாதபடியும் அவர் பார்த்துக்கொண்டார். கடைசியில்

அவர் விடாமுயற்சி வெற்றி பெற்றது. 1695ஆம் ஆண்டு அவர் நாமூர் நகரை மீண்டும் கைப்பற்றினார். அது அவரது வாழ்க்கையிலேயே பெரியதோர் இராணுவச் சாதனையாகும். இவ் வெற்றியால் ஆங்கிலேயப் படை வீரர்கள் புதிய தெம்பும் ஊக்கமும் பெற்றனர். ஆங்கிலேயருக்கு வில்லியத்தின் தலைமையில் நம்பிக்கை ஏற்பட்டது. விக்குக் கட்சியினர் வில்லியத்திற்குத் தங்கள் முழு ஆதரவையும் தந்தார்கள். எனவே, வில்லியம் விக்குகள் மட்டுமே இடம் பெற்ற விக் ஜன்டோ (Junto) என அழைக்கப்படும் மந்திரி சபையைக் கூட்டினார். இதையெல்லாம் கண்ட ஃபிரெஞ்சு அரசர் பதினான்காம் லூயி மனம் தளர்ந்து சமாதானத்தை நாடினார். 1697ஆம் ஆண்டு ஆங்கிலேயருக்கும் ஃபிரெஞ்சுக்காரர்களுக்கும் ரிஸ்விக் சமாதான உடன்பாடு (Treaty of Ryswick) ஏற்பட்டது.

**ரிஸ்விக் சமாதானம் (1697)**

இவ்வுடன்படிக்கையின்படி ஸ்ட்ராஸ்பர்க் (Strasburg) என்ற நகரைத் தவிர, 1678ஆம் ஆண்டுக்குப்பின் தாம் கைப்பற்றிய இடங்களையெல்லாம் திருப்பிக் கொடுத்துவிட லூயி சம்மதித்தார். அதோடு வில்லியத்தை இங்கிலாந்தின் அரசரென அவர் ஒப்புக் கொண்டார். வில்லியத்துக்குப் பின்னும் தாம் ஜேம்ஸை ஆதரிப்பதில்லையென்றும், ஆன் ராணி பட்டத்துக்கு வருவதையே ஆதரிப்பதாகவும் லூயி வாக்குறுதி அளித்தார். ஃபிரெஞ்சு எல்லைப் பிரதேசங்களில் கோட்டைகளைக் கட்டிக்கொண்டு அவற்றில் துருப்புகளை நிரப்ப டச்சுக்காரர்கள் அனுமதிக்கப் பட்டனர்.

இங்ஙனம் வில்லியம், லூயி அரசரின் பேராசையில் மண்ணைப் போடுவதில் வெற்றிபெற்றார். ஃபிரெஞ்சுக்காரர்களின் ஆதிக்கத்திலிருந்து இங்கிலாந்தைக் காப்பாற்றினார். ஆங்கிலேயக் கப்பற் படையின் திறமையை நன்கு வளர்த்து, அதன்மூலம் ஃபிரெஞ்சுக் கப்பற்படையை நசுக்கவும் குடியேற்ற நாடுகளைப் பெருக்கவும் வழி வகுத்தார். இங்கிலாந்தில் பிராடெஸ்டன்டுகளே தொடர்ந்து பட்டத்திற்கு வரவும் அவரது ஐரோப்பிய வெற்றிகள் வழி செய்தன.

## மூன்றும் வில்லியத்தின் உள்நாட்டுக் கொள்கை

ஆரம்பத்திலிருந்தே வில்லியம் ஆங்கிலேயர்களின் நன்மதிப்பைப் பெறவில்லை. அவருடைய நடை உடை பாவனைகள் ஒன்றுமே ஆங்கிலேயருக்குப் பிடிக்கவில்லை. அவர் யாரிடமும் சரியாகப் பேசமாட்டார். கலந்து பழகக் கூசுவார். அவர்

அன்னிய நாட்டினரென்பது மேலும் ஆங்கிலேயர்களின் வெறுப்பை அதிகரித்தது. அவருடன் பல டச்சுக்காரர்கள் இங்கிலாந்துக்குள் வந்தனர். அவர்களுக்கு வில்லியம் நிலங்களையும் பட்டங்களையும் தாராளமாக வழங்கினார். ஆங்கிலேயர்களை அவர் வெறுத்தார். அவ் வெறுப்பை அவ்வப்போது வெளிக்காட்டிக்கொள்ளவும் அவர் தயங்கவில்லை. மேரி அரசியின் உயரிய பண்பும் காட்சிக்கு எளிய தன்மையும் ஆங்கிலேயரை அவர்பால் ஈர்த்தன. மேரியின் சீரிய குணங்களுக்காக வேண்டி ஆங்கிலேயர் வில்லியத்துக்கும் மதிப்பு அளித்துவந்தனர். 1694 ஆம் ஆண்டு மேரி அரசியும் இறந்துவிட்டார். வில்லியத்துக்கு எதிராகப் பல சதிகள் உருவாயின. ஜேம்ஸை ஆதரித்தவர்கள் ஜேகோபைட்டுகள் (Jacobites) என அழைக்கப்பட்டனர். அவர்கள் மீண்டும் ஜேம்ஸை இங்கிலாந்தின் அரசராக்கிவிடத் தக்கதோர் தருணத்தை எதிர் நோக்கி இருந்தனர்.

### சமயக் கொள்கை

ஜேம்ஸ் இங்கிலாந்தின் மன்னராயிருந்தபோழ்து, மதகுருமார்கள் அவரைத் திருச்சபைத் தலைவராக ஏற்றுக்கொண்டு அவருக்கு விசுவாசப் பிரமாணமும் அளித்தனர். வில்லியம் இங்கிலாந்தின் மன்னரானவுடன் அவருக்குக் கீழ்ப்படிவதாக விசுவாசப் பிரமாணம் எடுத்துக்கொள்ளும்படி அதே குருமார்கள் வற்புறுத்தப் பட்டனர். அவ்வாறு செய்யப் பல குருமார்கள் ஒப்புக்கொள்ள வில்லை. ஜேம்ஸ் உயிரோடு இருக்கும்போது, வேறொருவர்க்கு விசுவாசப் பிரமாணம் எடுத்துக்கொள்ள அவர்களது மனச்சாட்சி இடம் தரவில்லை. இங்ஙனம் பிரமாணம் எடுத்துக்கொள்ள மறுத்தவர்கள் அனைவரும் அவர்தம் பதவிகளினின்றும் நீக்கப்பட்டனர். கான்டர்பரியின் ஆர்ச்பிஷப்பான சான்கிராஃப்ட் என்பவர் உட்படப் பல நூற்றுக்கணக்கான குருமார்கள் வேலையிழந்தனர். இங்ஙனம் விசுவாசப் பிரமாண மறுப்போர் (Non Jurors) கூட்டம் ஒன்று இங்கிலாந்தில் ஏற்பட்டது. அவர்களின் எண்ணிக்கை நாளுக்குநாள் வளர்ந்துகொண்டே சென்றது. செல்வந்தர்களான ஜேகோபைட்டுகள் அவர்களைக் குடும்பப் பாதிரிமார்களாயும், ஆசிரியர்களாயும் நியமித்து அவர்களுக்கு ஆதரவளித்தனர். வில்லியத்தின் போர்களால் வரிப்பளு நாட்டில் அதிகரித்தது; வியாபாரம் மந்தமடைந்தது. இதனால் வில்லியத்தின் ஆட்சியில் வெறுப்புற்றவர்கள் பலர். வில்லியம் தமது வெற்றியைக் கடைசி வரை காப்பாற்றுவார் என்ற நம்பிக்கை பலருக்குப் போய்விட்டது. கொடால்பின் (Godolphin), ரஸ்ஸெல் (Russell), மார்ல்பரோ போன்ற பெருந் தலைவர்கள் ஜேம்ஸை இரகசியமாக ஆதரித்து அவரோடு பேச்சு வார்த்தை நடத்த ஆரம்பித்தனர். வில்லியத்

தின் டச்சுத் துருப்புகளை நீக்கிவிட்டு எஞ்சியுள்ள ஆங்கிலத் துருப்புகளின் உதவிகொண்டு ஜேம்ஸை மீண்டும் இங்கிலாந்தின் மன்னராக்குவதாக மார்ல்பரோ பிரபு ஜேம்ஸுக்கு வாக்குறுதி அளித்தார்.

**வில்லியத்துக்கு விரோதமாக ஏற்பட்ட சதிகள்**

ஜேகோபைட்டுகள் வில்லியத்தைக் கவிழ்க்கச் சதா சூழ்ச்சியிலீடுபட்ட வண்ணமிருந்தனர். 1690ஆம் ஆண்டில் கிளாரண்டன், ப்ரெஸ்டன் (Preston) போன்றவர்களால் ஓர் சதி உருவாக்கப் பட்டது. ஆனால், அது ஆரம்பத்திலேயே பிசுபிசுத்துவிட்டது. 1692ஆம் ஆண்டில் மார்ல்பரோ பிரபுவின் சதித்திட்டம் வெளிப் பட்டது. நண்பர்போல் நடித்துவந்த மார்ல்பரோவின் அடுத்துக் கெடுக்கும் இழிகுணத்தை அறிந்த வில்லியத்துக்கு அளவிலாக் கோபம் ஏற்பட்டது. அவருடைய பட்டம் பதவிகள் யாவும் அவரிடமிருந்து பறிக்கப்பட்டு அவர் சிறையில் தள்ளப்பட்டார். மார்ல்பரோவின் மனைவியும் ஆன் இளவரசியும் நெருங்கிய நண்பர்கள். எனவே, மார்ல்பரோ சிறையிடப்பட்டதை ஆன் இளவரசி விரும்பவில்லை. அதனால் வில்லியம், மேரி இருவர் மீதும் ஆன் இளவரசிக்கு விரோதம் ஏற்பட்டது. 1696ஆம் ஆண்டு நாற்பது ஜேகோபைட்டுகள் சேர்ந்து வில்லியத்தின் உயிரை வாங்கத் திட்டமிட்டனர். இதற்குக் கொலைச்சதி (Assassination Plot) என்று பெயர். ஆனால், இச் சதியும் எப்படியோ வெளிப்பட்டு விட்டது. சர் ஜான் ஃபென்விக் (Sir John Fenwick) என்ற பேர் போன ஜேகோபைட் அச் சதியில் ஈடுபட்டவர்களில் ஒருவர். ஆனால், அவர் மீது கொலைக் குற்றம் சாட்ட இருசாட்சிகளைத் தயார் செய்யப் பாராளுமன்றத்தால் முடியவில்லை. எனவே, அட்டெயிண்டர் மசோதாவை நிறைவேற்றி, அது அட்டெயிண்டர் சட்டத்தால் அவரைக் கொன்றது. இச் சட்டத்தால் உயிர் வாங்கப் பட்டவர்களுள் அவரே கடைசியானவராவர். இங்ஙனம் அரசருக்கு விரோதமாய் உருவான சதித் திட்டங்கள் யாவும் தோல்வியுற்றன. வில்லியத்தின் உயிரைக் காக்க ஒரு சங்கம் அமைக்கப்பட்டது.

## பொருளாதார ஏற்பாடு
## (Financial Settlement)

**நிலவரி (1692)**

வில்லியத்தின் ஐரோப்பியப் போர்களால் ஏற்பட்ட பெருஞ் செலவைச் சமாளிக்க முடியாமல் அவர் திணறினார். மானியத் தொகையை அதிகரிக்கும்படி வில்லியம் பாராளுமன்றத்தைக் கேட்டுக்கொண்டார். வில்லியத்தின் நிதி மந்திரியான சார்லஸ்

மான்டேகு (Charles Montague) என்பார் 1692ஆம் ஆண்டில் ஓர் நிலவரிச் சட்டத்தை உருவாக்கி அதைப் பாராளுமன்றத்திடம் சமர்ப்பித்தார். ஒவ்வோர் ஆண்டு நில வரும்படியிலும் பவுனுக்கு நான்கு ஷில்லிங்கு வீதம் வரி விதிக்க அத்திட்டம் ஏற்பாடு செய்தது. நிலக்கிழார்களான டோரிகள் அவ் வரியை முதலில் வெகுவாக எதிர்த்தனர். பின்னர், இறுதியாக யாவரும் அதை ஒப்புக்கொண்டனர். இவ்விதம் நிலவரி மூலம் கிடைத்த பணமே வருங்காலத்து அரசனின் முக்கிய வருமானமாகத் திகழ்ந்தது.

நாட்டுக் கடனும் இங்கிலாந்து பாங்கியும் (National Debt and Bank of England)

நிலவரி போடப்பட்ட பின்னும் வில்லியத்தின் பணமுடை தீர்ந்தபாடில்லை. எனவே, அடுத்தாற்போல் மான்டேகு, குடிமக்களிடம் ஏராளமாகக் கடன் வாங்க ஆரம்பித்தார். ஏனைய மன்னர்கள் வாங்கிய கடனுக்கும், மான்டேகு வில்லியத்தின் சார்பில் வாங்கிய கடனுக்கும் பெருத்த வேறுபாடு உண்டு. குறிப்பிட்ட கெடுவுக்குள் திருப்பிக் கொடுத்துவிடுவதாகச் சொல்லி மற்ற மன்னர்கள் கடன் வாங்கினர்கள். ஆனல், அவ்விதக் காலவரையறையொன்றையும் குறிப்பிடாமல் மான்டேகு கடன் வாங்கினர். வாங்கிய கடனுக்கு வட்டி மட்டும் ஒழுங்காகச் செலுத்துவதாகப் பாராளுமன்றம் ஓர் உறுதியளித்தது. இதுவே நாட்டுக் கடனின் ஆரம்பமாகும். 1693ஆம் ஆண்டில் எட்டு சதவீத வட்டி கொடுப்பதாக வாக்களித்து மான்டேகு ஒரு மிலியன் பவுன்களைச் சேகரித்தார். 1694ஆம் ஆண்டில் அரசாங்கத்துக்குக் கடன் கொடுத்தவர்களெல்லாம் சேர்ந்து, இங்கிலாந்தின் பாங்கி ஒன்றைத் தோற்றுவிக்க அனுமதிக்கப்பட்டனர். அரசாங்கத்துக்குக் கடன் வழங்கும் அதிகாரம் அப் பாங்கிக்கே தனியுரிமையாக வழங்கப்பட்டது. இந்த முறை நாளடைவில் நல்ல வெற்றியைப் பெற்றது. வில்லியத்தின் ஆட்சிக் காலத்திலேயே கடன் தொகை பதினறு மிலியன் பவுன்களாக உயர்ந்தது. இங்கிலாந்து பாங்கியின் நிர்வாகம் பல ஆண்டுகளுக்குச் செல்வத்திற் சிறந்த விக்குகளின் கைகளிலேயே இருந்துவந்தது. போட்டியாக டோரி நிலச் சுவான்தார்கள் நில பாங்கி (Land Bank) ஒன்றை 1698ஆம் ஆண்டில் தோற்றுவித்தனர். ஆனல், அது விரைவிலேயே தோல்வியுற்று மூடப்பட்டது.

மேற்சொன்ன முறைகளால் வில்லியத்தின் நிலை மென்மேலும் இங்கிலாந்தில் வலுவடைந்தது. வில்லியம் அரசர் பதவியினின்றும் நீக்கப்பட்டு ஜேகோபைட்டுகள் ஆட்சியைக் கைப்பற்றினுல் தாங்கள் அளித்த கடன்களெல்லாம் திரும்பி வராமற்போக நேரிடு

மென. அரசருக்குக் கடன் கொடுத்தோர் எல்லாம் அஞ்சினர். எனவே, சுயநலங்காரணமாக அவர்கள் அரசரை ஆதரிக்க முற்பட் பட்டனர்.

### நாணயச் சீர்திருத்தம்

1695ஆம் ஆண்டில் இங்கிலாந்தில் ஓர் நாணயச் சீர்திருத்தம் (Reform of Coinage) கொண்டுவரப்பட்டது. அதன்படி பழைய தேய்ந்துபோன நாணயங்களெல்லாம் அரசாங்கத்தால் திருப்பி எடுத்துக்கொள்ளப்பட்டு, அதற்குப் பதிலாகப் புதிய நாணயங்கள் யாவருக்கும் வழங்கப்பட்டன. இதனுல் அரசாங்கத்துக்கு அதிகப் படியான செலவேற்பட்டாலும் சில ஆண்டுகளுக்குள் பொதுவாக இங்கிலாந்தின் வியாபாரம் பெரிதும் செழித்தோங்க ஆரம்பித்தது. ஓரங்கள் வெட்டப்பட்ட பழைய நாணயங்களை வாங்க மறுத்த வணிகர்கள் இப்போது அவற்றைத் தாராளமாக ஏற்றுக் கொண்டனர்.

### கட்சியாட்சியின் தோற்றம் (Beginning of Party Government)

வில்லியம் இங்கிலாந்தின் அரசராவதற்கு விக்குகளும், டோரி களும் சேர்ந்தே உதவி புரிந்தார்கள். எனவே, நன்றியுணர்ச்சி காரணமாக வில்லியம் தமது ஆட்சியின் தொடக்க காலத்தில் தமது மந்திரிகளை இரு கட்சியினின்றும் பொறுக்கிக்கொண்டார். அப்படிச் செய்வதன்மூலம் அவர் நாட்டு மக்கள் அனைவரது ஆதர வையும் பெறலாமென நினைத்தார். ஆனுல், நாளடைவில் அவர் தமது கொள்கையை மாற்றிக்கொண்டார். தமது ஐரோப்பியப் போர்களை ஆதரிக்காத டோரி மந்திரிகளால் ஒன்றும் பயனில்லை எனபதை அவர் உணர்ந்தார். மேலும், பண மானியம் பெற வேண்டி அவர் அடிக்கடி பாராளுமன்றத்தைக் கூட்டவேண்டி யிருந்தது. அம் மன்றத்தில் அப்போது செல்வாக்குடன் விளங்கிய விக் கட்சியினரின் ஆதரவைப் பெற்ருலன்றித் தமக்கு வேண்டிய அளவு பணம் கிடைக்காதென்பதை வில்லியம் உணர்ந்தார். எனவே, தமது ஐரோப்பியப் போர்களை முழுமனத்துடன் ஆதரித்த விக்குகளையே அவர் 1694ஆம் ஆண்டுக்குப் பின் மந்திரிகளாக நியமிக்க ஆரம்பித்தார். நிர்வாகம் திறம்பட நடைபெற வேண்டு மானுல் ஒரே கட்சியிலிருந்தே மந்திரிகள் நியமிக்கப்பட வேண்டு மென ஸண்டர்லாந்த எனும் அவரது விக் மந்திரி வில்லியத்துக்கு ஆலோசனை கூறினர். அதன்படியே இரண்டாண்டுகளுக்குள் எல்லா டோரிகளையும் வில்லியம் தமது மந்திரி சபையினின்றும் நீக்கிவிட்டு அவர்களுக்குப் பதிலாக விக்கு மந்திரிகளை நியமித்துக்கொண்டார்.

1696ஆம் ஆண்டு முதல் 1700ஆம் ஆண்டுவரை வில்லியத்தின் மந்திரிகள் அனைவரும் விக்குகளேயாவர். ஒரே கட்சியினின்று மந்திரிகள் பொறுக்கி யெடுக்கப்பட்டது இங்கிலாந்தின் வரலாற்றில் அதுவே முதல் தடவையாகும். அம் மந்திரி சபை ஒற்றுமையுடன் ஐரோப்பியப் போர்களை வெற்றியுடன் நடத்தியதால் அதற்கு 'விக் ஜன்டோ' (Whig Junto) என்ற புகழ்ப் பெயர் சூட்டப்பட்டது. அதில் முக்கிய உறுப்பினர்களாயிருந்தவர்கள் லாஹோக்கில் வெற்றிபெற்ற ரஸ்ஸெல் பிரபுவும், கருவூலத் தலைவரான மாண்டேகும் (1700ஆம் ஆண்டில் ஹாலிஃபாக்ஸ் எர்ல் பட்டம் பெற்றவர்), சோமர்ஸ் (Somers) என்பவரும், வார்டன் (Wharton) என்பவர்களுமாவர். ஆனால், நாள் செல்லச்செல்ல வில்லியம் தமது டச்சுக்கார நண்பர்களையே அதிகம் நம்பத் தலைப்பட்டார். 1697ஆம் ஆண்டுக்குப் பின் பொதுமக்கள் சபையில் டோரிகள் பெரும்பான்மையான இடங்களைக் கைப்பற்றினர். டோரி பாராளுமன்றமானது 1698ஆம் ஆண்டுப் படைக்கலச் சட்டமொன்றை நிறைவேற்றியதன் மூலம் வில்லியத்தின் படையினர் எண்ணிக்கை எண்பதினாயிரத்திலிருந்து பத்தாயிரமாகக் குறைந்தது. 1699ஆம் ஆண்டு ஏற்பட்ட இன்னொரு சட்டத்தின்படி அரசரின் டச்சுப்படைகள் நாட்டைவிட்டு அகற்றப்பட்டன. இதை வில்லியம் பெரிதும் வெறுத்தார். டச்சுப்படைகள் தம்மைவிட்டுப் போவதாயிருந்தால் தாமும் அவைகளோடேயே போய்விடுவதாக அவர் பயமுறுத்தினார். ஆனால், தமது மந்திரிகளின் வேண்டுகோளுக்கிணங்கி அவர் இங்கிலாந்தின் மன்னராகவே இருக்க இசைந்தார். பொதுமக்கள் சபையில் பெரும்பான்மையாளர்களின் ஆதரவைப் பெறாத விக் மந்திரிகளை வைத்துக்கொண்டு அரசாங்க அலுவல்களைச் செவ்வனே இயற்ற முடியாதெனக் கண்டுகொண்ட வில்லியம் 1700ஆம் ஆண்டில் தமது விக்கு மந்திரிகளை நீக்கிவிட்டு டோரி மந்திரிகளை நியமனம் செய்தார். 1702ஆம் ஆண்டுவரை டோரி மந்திரிசபையின் உதவிகொண்டு அவர் நாட்டையாண்டார். அவர் இறப்பதற்குச் சற்று முன்பு பொதுமக்கள் சபையில் டோரிகளும் விக்குகளும் ஏறக்குறைய சரிசமமான இடங்களைக் கைப்பற்றினர். அதற்கேற்றாற்போல் அவர் சில டோரி மந்திரிகளை நீக்கிவிட்டு அதற்குப் பதிலாக விக்குகளை நியமித்தார். இங்ஙனம் வில்லியம் தம்மை அறியாமலேயே கட்சியாட்சியை இங்கிலாந்தில் வளர்த்தார். பொதுமக்கள் சபையில் பெரும்பான்மை பெற்றுள்ள கட்சியிலிருந்து அரசர் மந்திரிகளைப் பொறுக்கிக் கொள்ளவேண்டுமேயன்றித் தம் பிரியம்போல் அவர்களை நியமிக்கக் கூடாதென்ற கட்சியாட்சி மரபு (Convention) வில்லியத்தின் காலத்திலேயே முதன்முதலாக ஏற்பட்டது.

### சீர்திருத்தச் சட்டங்கள்

மேலும் வில்லியத்தின் காலத்தில்தான் பாராளுமன்றமானது மூன்றாண்டுகளுக்கொரு முறையேனும் கூட்டப்பட வேண்டுமென்று கூறும் மூவாண்டுச் சட்டம் (1694ஆம் ஆண்டு) ஏற்பட்டது. 1695ஆம் ஆண்டு கருத்து வெளியீட்டு உரிமையும் இங்கிலாந்தில் நிலை நாட்டப்பட்டது; 1666ஆம் ஆண்டு இராஜத்துரோகச் சட்டம் (The Treason Act) கொண்டுவரப்பட்டது. அதன்படி இராஜத்துரோகக் குற்றம் சாட்டப்பட்டவர்கள் தங்களுக்காக வாதாட வழக்கறிஞர்களை வைத்துக்கொள்ள அனுமதிக்கப் பட்டனர். இராஜத்துரோகக் குற்றச்சாட்டுக்காக ஒருவர் விசாரிக் கப்படுவதற்கு ஐந்து நாள்களுக்கு முன்னரே, குற்றப் பத்திரிகை யின் நகல் ஒன்றும், இரண்டு நாள்களுக்குமுன் ஜூரிகளாக நியமிக்கப்பட்டுள்ளவர்களின் பட்டியல் ஒன்றும் குற்றவாளியின் கைகளில் கொடுக்கப்பட வேண்டுமென இச் சட்டம் கூறியது. ஒருவரை அத்தகைய குற்றத்திற்காகத் தண்டிக்க வேண்டுமானால் குறைந்தது இரண்டு சாக்ஷிகளாவது இருக்கவேண்டுமெனவும், அச் சட்டம் வற்புறுத்தியது. இங்ஙனம் அரசர்கள் தங்கள் மனம் போன்று தங்கள் எதிரிகளின் தலைகளைக் கொய்துகொண்டிருந்த பழக்கத்துக்கு ஓர் முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது.

### அரசுரிமை நிர்ணயச் சட்டம் (Act of Settlement, 1701)

ஆன் அரசிக்குப் பல குழந்தைகள் இருந்தும் அவை யாவும் 1700ஆம் ஆண்டுக்குள் ஒன்றன்பின் ஒன்றாய் மாண்டு விட்டன. எனவே, ஆன் அரசிக்குப் பின் யார் பட்டத்துக்கு வரவேண்டுமென்பதை வில்லியத்தின் டோரிப் பாராளுமன்ற மானது தீர்மானிக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. அவர்கள் தெய்விக உரிமைக் கொள்கையில் நம்பிக்கை உடையவர்களே யெனினும், ஸ்டூவர்ட்டு மன்னர்களை மீண்டும் பதவிக்குக் கொண்டு வருவதை அவர்கள் விரும்பவில்லை. 1701ஆம் ஆண்டு நிறைவேறிய அரசுரிமை நிர்ணயச் சட்டமானது ஆன் அரசிக்குப் பிறகு ஆங்கில மகுடம் ஹனோவர் இளவரசியான ஸோஃபியா (Sophia) என்பவருக்கும் (முதலாம் ஜேம்ஸின் மகளான எலிஸ பெத்துக்கும் பாலடைன் அரசருக்கும் பிறந்தவர்) அவரது சந்ததி யார்களுக்கும் செல்லவேண்டுமெனத் தீர்மானித்தது, எனவே, பிராடெஸ்டன்டுகளே இங்கிலாந்தின் அரசர்களாக வரவேண்டு மென்பது இச் சட்டத்தால் உறுதியாக்கப்பட்டது. கத்தோலிக் கரும் கத்தோலிக்கரை மணந்தவர்களும் பட்டத்துக்கு வருவதை இச் சட்டம் தடை செய்தது. இங்கிலாந்தின் மகுடத்தை ஏற்கு முன் ஒவ்வோர் அரசனும் தாம் பிராடெஸ்டன்டு மதத்தினன் என வாக்குறுதி எடுத்துக்கொள்ள வேண்டுமெனவும் இச் சட்டம்

கூறியது. வெளிப் பார்வைக்கு இச் சட்டம் கத்தோலிக்கர்கள் இங்கிலாந்துக்கு மன்னர்களாய் என்றுமே வரவொட்டாமல் தடுப்பதுபோல் தோன்றினும், உண்மையில் அது அவ்வளவு திட்ட வட்டமாய் வரையறுக்கப்படவில்லை. அரசர் ஒருவர், தாம் பிராடெஸ்டன்டு என வாக்குறுதி எடுத்துக்கொண்டபின் கத்தோலிக்கராக மதம் மாற்றிக்கொண்டால் என்ன செய்வது என்பதைப்பற்றி இச் சட்டம் ஒன்றும் கூறவில்லை. அரசர் கத்தோலிக்க நங்கையை மணக்கலாகாது எனக் கூறிய இச் சட்டம் அரசரது மனைவி எம் மதத்தினள் என்பதைக் கண்டு பிடிக்க ஒன்றும் வகை செய்யவில்லை. ஏனெனில், அரசரைப் போன்று அரசி தான் பிராடெஸ்டண்டு என்று சபதம் எடுத்துக் கொள்ள வேண்டுமென இச் சட்டம் கூறவில்லை.

வாரிசை நிர்ணயித்ததோடு இச் சட்டம் அமையவில்லை. மேற்கொண்டு பல சீரிய கொள்கைகளையும் அது வகுத்தது. நீதிபதிகளின் சுதந்திரத்தை அது நிலைநாட்டியது. இச் சட்டம் இயற்றப்படுவதற்கு முன்பெல்லாம் அரசரே, எக்ஸெக்கர் நீதிமன்றம், பொது வழக்கு நீதிமன்றம் (Court of Common Pleas), அரசர் நீதிபதிகள் மன்றம் (Court of the King's Bench) என்ற உயர்நீதி மன்றங்களின் நீதிபதிகளை நியமிப்பது வழக்கம். அவர்களை அரசர் பார்த்து எந்த நேரத்திலும் பதவியினின்றும் நீக்கிவிடலாம். எனவே, அரசர் சம்பந்தப்பட்ட வழக்குகளில் நீதிபதிகள் பாரபட்சமின்றித் தீர்ப்புக் கூறமுடியாமல் தவித்தனர். நீதிபதிகளின் இந்தத் தர்மசங்கடமான நிலை அரசுரிமை நிர்ணயச் சட்டத்தால் நீங்கியது. பாராளுமன்றத்தின் இரு சபைகளும் சேர்ந்து மனுச் செய்துகொண்டாலன்றி ஒரு நீதிபதியைப் பதவியினின்று நீக்க அரசருக்கு உரிமையில்லை என இச் சட்டம் கூறியது. இரு சபைகளும் ஒப்புக்கொள்வதென்பது அவ்வளவு எளிதானதன்று. ஆதலால், இச் சட்டம் நீதிபதிகளுக்குப் பூரண சுதந்தரத்தை வழங்கியதாகவே கருதலாம்.

இச் சட்டத்தின் வேறு சில ஷரத்துகள் அரசரது நடத்தையைக் கண்டிப்பதேபோல் அமைந்திருந்தன. இச் சட்டப்படி பாராளுமன்றத்தின் அனுமதியின்றி அரசர் இங்கிலாந்தைவிட்டு வெளியேறலாகாது. அயல் நாடுகளில் அரசருக்குச் சொந்தமான இடங்களைக் காக்கப் படையெடுப்பில் ஈடுபடும்படி இங்கிலாந்து கட்டாயப்படுத்தப்படக் கூடாது. நாட்டைப்பற்றிய பெரும் பிரச்சினைகள் முழுமையான பிரிவி கவுன்ஸிலில்தான் விவாதிக்கப் படவேண்டும். அரசாங்கத்தின் கீழ் வேலை பார்ப்பவர்களும், அரசாங்கத்திடம் உதவித் தொகை (Pension) பெறுபவர்களும்,

பொதுமக்கள் சபையின் உறுப்பினராவதற்குத் தகுதியற்றவர்கள். அயல் நாட்டினருக்கு அரசர் நிலம் வழங்குவதோ, அன்றிப் பிரிவி கவுன்ஸிலர், பொது மக்கள் சபை உறுப்பினர் போன்ற பொறுப்பு வாய்ந்த பதவிகளை அளிப்பதோ கூடாது. அரசியல் துரோகக் குற்ற விசாரிப்பை அரசர் தமது இறுதி மன்னிப்பு வழங்கு மதிகாரத் தால் தடை செய்யக் கூடாது. வில்லியம் மேற்கண்ட குற்றங் களில் பலவற்றைச் செய்துவந்தார். அவர் மேலும் அங்ஙனம் செய்யக் கூடாதென்பதை இச் சட்டம் கூறுமுகமாற் கூறியது. அதே சமயம் இங்கிலாந்திற்கு அரசர்களாக வரப்போகும் ஹனோவர் அரசர்களும், வில்லியத்தைப் போல் நடந்துகொள்ளாமலிருக்கவும் இச் சட்டம் வழி செய்தது.

## மதிப்பீடு (Estimate)

1702ஆம் ஆண்டின் தொடக்கத்தில் வில்லியம் இறந்து பட்டார். சிறு வயதிலிருந்தே அவர் நோய்வாய்ப்பட்டு மெலிந்து காணப்பட்டார். ஆனால், அம் மெலிந்த உடலுக்குள் வயிரம் பாய்ந்த நெஞ்சமிருந்தது. அதைக்கொண்டுதான் அவர் பதினான் காம் லூயியையே சற்றுத் திகைக்க வைக்க முடிந்தது. உண்மையி லேயே அவர் ஓர் சிறந்த அரசர். அரசியல் நுண்மாண் நுழை புலம் மிக்கவர்; சான்றாண்மை பொருந்தியவர். ஆனால், அவரை இங்கிலாந்து மக்கள் தவறாகப் புரிந்துகொண்டார்கள். ஹாலந்து நாட்டைப் பற்றியே கவலைப்பட்டு, இங்கிலாந்தின் நலத்தை அவர் புறக்கணிப்பதாக அவர்கள் நினைத்தனர். உண்மையில் அவர் இரு நாடுகளின் நன்மைக்காகவே லூயியை எதிர்த்தார். இங்கி லாந்தின் பெருமையை உலகெங்கும் பரப்பினார். இங்கிலாந்து அவருக்குப் பலவகையிலும் கடமைப்பட்டுள்ளது.

இங்கிலாந்தை ஐரோப்பாவிலேயே தலைசிறந்த நாடாகச் செய்தவர் அவரே. ஃபிரான்ஸின் பெரும் பிடியினின்றும் இங்கி லாந்தை அவரே விடுவித்தார். பிராடெஸ்டண்டு மதம் இங்கி லாந்தில் நிலைபெற வழி வகுத்தவரும், சமயப் பொறையை இங்கி லாந்திலும் ஸ்காட்லாந்திலும் ஏற்படுத்தியவரும் அவரே. அவர் காலத்திலிருந்து அரசனின் தனியாட்சிக்கு ஓர் முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது. அவரது ஆட்சிக்காலத்தில் நாட்டின் பொரு ளாதார நிலை செம்மையுற்றது. பிரசுர உரிமையானது காக்கப் பட்டது. காபினட் ஆட்சி முறை இங்கிலாந்தில் முதன் முதலாகப் புகுத்தப்பட்டது அவரது காலத்திற்றாகும்.

மார்ல்பரோவைப் போன்று அவர் ஓர் சிறந்த படைத் தலைவ ரல்லர். பெரும் போர்களைத் திட்டமிட்டு நடத்தக்கூடிய திறமை

அவர்பால் இல்லை. லக்ஸம்பர்க் எனும் தளகர்த்தரைவிட அவர் திறமையில் குறைந்தவர். எனினும், அவர் விடாமுயற்சி கொண்டவர். தோல்வியினால் விளையக்கூடிய தீய பயன்களை விலக்குவதில் அவருக்குத் தனித் திறமை இருந்தது. அவரது பிடிவாதமான முயற்சி அவரது வீரர்களுக்கு ஒருவித ஊக்கத்தையும் உற்சாகத்தையும் ஊட்டியது. அவரது வெளிநாட்டுக் கொள்கையானது, பிற்காலத்தில் மார்ல்பரோ, நெல்சன் போன்ற பெரு வீரர்களின் வெற்றிகளுக்கு வழி செய்தது.

ஐரோப்பிய விவகாரங்களைச் சமாளிப்பதில் வில்லியம் ஒரு பெரிய அரசியல் வித்தகராக விளங்கினார். பதினான்காம் லூயியின் பேராசையை முறியடித்து, ஐரோப்பிய நாடுகளின் சுயேச்சையைக் காப்பாற்றிய தொன்றே அவரது புகழை என்றும் நின்று நிலவச் செய்யப் போதுமானதாயிருந்தது. நாடுகளின் கூட்டுறவுகளை அமைப்பதில் அவர் தனித் திறமையை வெளிப்படுத்தினார். அவ்விதம் அமைக்கப்பெற்ற கூட்டுறவுகளால் அவர் ஐரோப்பிய சக்திச் சமநிலையைக் காத்தார். அதனாற்றான், 'அக்காலத்திலேயே ஒப்புயர்வற்ற மனிதர்' என ஹேலம் (Hallam) எனும் வரலாற்றாசிரியர் அழைக்கின்றார்.

# 18. ஆன் இராணியாரும் கட்சியாட்சியும்
## (Queen Anne & Party Government)

ஆன் இராணியாரின் காலச் சிறப்பு

ஆன் இராணியாரின் குணதிசயங்கள்

மார்ல்பரோ மந்திரி சபை — டோரிக் கட்சியினுட்சி (1702 - 1710): சில வேளை இணக்க மசோதா (Occasional Conformity Act, 1702) — மிதவாத டோரி மந்திரி சபை (1704 - 1706) கலப்பு மந்திரி சபை (1706 - 1708)—விக்குக் கட்சியினுட்சி - காபினெட் ஆட்சிமுறை வளர்ச்சி (1708 – 1710).

டோரி மந்திரி சபை (1710 – 1714)

### ஆன் இராணியாரின் காலச் சிறப்பு
(The Greatness of the Age of Queen Anne)

எலிஸபெத் இராணியார் காலத்து இங்கிலாந்தில் பூத்த மறுமலர்ச்சிப் பூவானது ஸ்டூவர்ட்டுகள் காலத்துக் காயாகி, ஆன் இராணியாரின் காலத்துக் கனிந்து, இனியதோர் பழமாகக் காட்சியளிக்கிறது. மறுமலர்ச்சியின் திரண்ட பலன்களெல்லாம் ஆன் இராணியார் காலத்து வெளிப்படுவதை நாம் காண்கின்றோம். லாக் (Locke), நியூடன் (Newton) போன்ற மேதைகள் தோன்றிய காலம் இதுவே. 'உள்நாட்டுக் கருத்துகளும் பிறநாட்டு எண்ணங்களும் ஒன்றோடொன்று கலந்து, அதன் பயனாய் ஒரு கலப்பு நாகரிகம் இங்கிலாந்தில் தோன்றுகிறது. மாறுபட்ட கருத்துகளின் மோதல்கள் ஒய்ந்து சிந்தனையுலகத்தில் ஓர் சமநிலை தென்படுகிறது. டிரைடன் (Dryden) என்ற மறுமலர்ச்சி எழுத்தாளர்களின் தலைவர் ஆன் இராணியார் காலத்துக்குச் சற்றுமுன் இறந்துவிட்டாரெனினும் அவர் தொடங்கிய பணியை காங்கிரீவ் (Congreave), போப் (Pope), அடிஸன் (Addison), ஸ்டீல் (Steel)

போன்ற பேரறிஞர்கள் தொடர்ந்து செய்தனர். மறுமலர்ச்சி இலக்கியங்கள் பல எழுந்தன. பழமை முழுதும் மாண்டுவிட வில்லை. 'பெருங்கிளர்ச்சியின் வரலாறு' (History of Great Rebellion) போன்ற நூல்களில் அவை ஆங்காங்கே தலைநீட்டுகின்றன. எனினும், புதுமைச் சூரியன் உதித்து நாடெங்கும் தன் அறிவுக் கதிர்களைப் பரப்புகிறுன். ஜான் வெஸ்லி (John Wesley), சாமுவேல் ஜான்சன் (Samuel Johnson), பெஞ்சமின் ஃபிராங்க்லின் (Benjamin Franklin), ஹியூம் (Hume) போன்றவர்களின் சாகா இலக்கியங்களும், தூய பால் கோயில் போன்ற அரும்பெருங் கட்டடங்களும் இக்காலத்தே தோன்றுகின்றன. ஐரோப்பிய நாடுகளுக்குத் தொல்லை விளைவித்துவந்த பதினான்காம் லூயியின் வல்லரசு குலைக்கப்பட்டது. ஸ்காட்லாந்தும் இங்கிலாந்தும் சேர்ந்து கிரேட் பிரிட்டன் உதயமாயிற்று. பிரிட்டனின் பேரரசானது தன் பரப்பின் உச்ச நிலையை எய்தியது.

## ஆன் இராணியாரின் குணதிசயங்கள்
(Character of Queen Anne)

மூன்றும் வில்லியத்துக்குப் பின் அரசுரிமை நிர்ணயச் சட்டப்படி, இரண்டாம் ஜேம்ஸின் இளைய புதல்வியாகிய ஆன் இளவரசி பட்டமெய்தினர். எலிஸபெத் இராணிக்குப் பின் ஆங்கில அரியாசனத்தை அலங்கரித்த அடுத்த அரசி ஆன் இராணியாரேயாவர். ஆனல், எலிஸபெத்திடம் காணப்பட்ட திறமையில் நூற்றில் ஒரு பங்குகூட ஆனிடம் தென்படவில்லை. வெளிப்பகட்டிலும் ஆடம்பரத்திலும் அவர் பெரிதும் ஈடுபாடுடையவர். மனவுறுதியும் எடுத்த காரியத்தை இன்னல் எதுவரினும் முடிக்கும் ஆற்றலும் அவர்பால் சிறிது குறைவாகவே காணப்பட்டன. அவர் ஒரு நோயாளி. எனவே, அரசியல் விவகாரங்களைப் பிரிவி கவுன்ஸிலின் உட்குழு (inner circle) ஒன்றே கவனித்துவந்தது. பாராளுமன்ற ஆட்சி (Parliamentary Government) நாட்டில் வளர்ந்தது. எனினும், அரசி அவ்வப்போது தமது செல்வாக்கையும் அதிகாரத்தையும் பயன்படுத்தத் தவறவில்லை. மார்ல்பரோ தம்பதிகளோடு அவர் கொண்டிருந்த நெருங்கிய நட்பால் பல அரசியல் விளைவுகள் ஏற்பட்டன. அதனுல் ஐரோப்பியப் போரில் நெடுங்காலம் இங்கிலாந்து கலந்துகொள்ள நேர்ந்தது. அவரது கணவர் டென்மார்க் அரசரான ஜார்ஜ் என்பவராவர். அவர் ஒன்றுக்குமுதவா ஒரு பேதை. எனினும், அவருக்கு ஆண்டு ஒன்றுக்கு ஒரு கோடிப் பவுன் மானியம் அளிக்கப்பட்டது. ஆன் இராணிக்குப் பல குழந்தைகளிருந்தன. ஆனல், அவைகளில் ஒன்றுகூடக் கடைசிவரை மிஞ்சாமல் இருந்தன. அவருக்கு ஆங்கிலேயத் திருச்சபையில் பெரிதும் ஈடுபாடு

உண்டு. அதை அவர் முழுமனத்தோடு ஆதரித்தார். டோரிக் கட்சியினரையே அவர் பெரிதும் விரும்பினர். வில்லியத்தின் அந்திக் காலத்து ஆங்கில ஆட்சியை நடத்திவந்த விக்கு மந்திரிகளை அவர் நீக்கிவிட்டு அதற்குப் பதிலாக டோரி மந்திரிகளை நியமித்தார். இந்த டோரி மந்திரி சபையானது 1702ஆம் ஆண்டிலிருந்து 1710ஆம் ஆண்டுவரை பணிபுரிந்தது. ஆரம்பத்தில் டோரியாகவிருந்த இம் மந்திரிசபை நாளடைவில் விக்காக முழுவதும் மாறிவிட்டது.

## மார்ல்பரோ மந்திரிசபை – டோரிக் கட்சியினாட்சி (1702 - 1710)

ஆன் இராணியாரின் டோரி மந்திரிசபையில் மிகவும் செல்வாக்குப் பெற்றிருந்தவர்கள் இருவராவர். ஒருவர் இராணியின் நண்பரான மார்ல்பரோ பிரபுவாவார். மற்றவர் கொடால்பின் (Godolphin) பிரபு என்பவர். மார்ல்பரோவுக்கு எர்ல் (Earl) பட்டமும், கோமகன் (Duke) பட்டமும், கடைசியில் தலைமைத் தளபதி (Captain General) பதவியும் அரசியால் வழங்கப்பட்டன. கொடால்பின் கருவூலத் தலைமைப் பிரபுவாக (Lord High Treasurer) நியமிக்கப்பட்டார். இவ்விருவரும் ஆரம்பத்தில் டோரிக் கட்சியினராயிருந்தனர். ஐரோப்பாவில் போரைத் தொடர்ந்து நடத்தி வெற்றிபெற வேண்டுமென்பது அவர்களது குறிக்கோளாகும். இக் குறிக்கோளை டோரிகள் பலர் ஆதரிக்கவில்லை. அதற்குப்பதிலாக விக்குகளே போரில் பெரிதும் ஊக்கம் காட்டினர். எனினும், மார்ல்பரோவுக்கு எதிர் மாற்றம் கூற எந்த டோரிக்கும் துணிவில்லை. ஏனெனில், மார்ல்பரோவின் மனைவி சாரா ஜென்னிங்ஸும் இராணியும் நெருங்கிய தோழிகளாயிருந்தனர். கோடைக் காலத்தில் மார்ல்பரோ ஐரோப்பியப் போர்களிலீடுபட்டிருப்பார். அச்சமயம் அவரது மனைவி தம் கணவரின் செல்வாக்கு அரண்மனையில் குறையாவண்ணம் பாதுகாப்பார். மாரிக்காலத்து மார்ல்பரோ இங்கிலாந்தில் வந்து தங்குவார். இங்ஙனம் அவரது அரசியல் செல்வாக்குக் குறையாமல் வளர்ந்துவந்தது.

**சில வேளை இணக்க மசோதா** (Occasional Conformity Bill, 1703)

1689ஆம் ஆண்டு ஏற்பட்ட சமயப்பொறைச் சட்டமானது (Toleration Act) பல மதப்பிரிவினரும் தத்தம் பிரியம்போல் தொழுகைக் கூட்டங்களை நடத்த அனுமதித்ததென்றாலும், நகராட்சி மன்றங்களில் அவர்கள் பதவி வகிக்க அனுமதிக்கவில்லை. பதவிப் பித்தர்களான இணங்காதார்கள் (Dissenters) பதவியைப் பெறுகின்ற தருவாயில் மட்டும் புனிதச் சடங்கினை (Sacrament)

ஆங்கிலிக்க மதக்கோட்பாட்டிற்கேற்ப மேற்கொண்டுவிட்டு, அதற்குப் பின் தங்கள் பிரியம்போல் வாழ்ந்தனர். கோயிலுக்கு ஒழுங்காக அவர்கள் போவதில்லை. புனிதச் சடங்கினையும் தொடர்ந்து மேற்கொள்வதில்லை. இம்முறைக்குச் 'சிலவேளை இணக்கம்' (Occasional Conformity) எனப்பெயர். இங்ஙனம் பல இணங்காதார், திருச்சபை முறைகளை மீறுவதைத் தடுக்க டோரிக் கட்சியினர் விரும்பினர். ஏனெனில், மேற்சொன்ன முறையில் பதவிகளைப் பெற்றவர்கள் பெரும்பாலும் விக்குக் கனவான்களேயாவர். டோரிகளின் விருப்பத்தை இராணியும் ஆதரித்தாள். எனவே, திருச்சபை விதிகளை மீறுவோரைத் தண்டிக்க 'சிலவேளை இணக்க மசோதா' ஒன்று 1703 ஆம் ஆண்டுப் பாராளுமன்றத்தின் முன் கொண்டுவரப்பட்டது. டோரிக் கட்சியினர் பெரும்பான்மையினராயிருந்த பொதுமக்கள் சபையில் அம் மசோதா நிறைவேறியது. ஆனால், விக்குக் கட்சியினர் நிறைந்த பிரபுக்கள் சபையில் அது தோற்றது. அடுத்த பாராளுமன்றக் கூட்டத்தில் மறுபடியும் அம் மசோதா கொண்டுவரப்பட்டது. பிரபுக்கள் சபையில் மீண்டும் அது தோல்வியடைந்தது. கொடால்பினும், மார்ல்பரோவும் உள்ளூர இம் மசோதாவை வெறுத்தனரேனும், அரசியே அதை ஆதரிப்பதைக் கண்டு தாங்களும் அதற்காதரவாக வாக்களித்தனர். அது தோல்வியுற்றதைக் கண்டு அவர்கள் உள்ளூர மகிழ்ச்சியுற்றனர்.

### மிதவாத டோரி-மந்திரி சபை (Moderate Tory Ministry, 1704-1706)

மார்ல்பரோவின் போர்த்திட்டங்களைச் சில டோரித் தலைவர்கள் பலமாக எதிர்த்தனர். ராச்செஸ்டர் எர்ல் (Earl of Rochester) கோமானும் நாட்டிங்ஹாம் பிரபுவும் போரானது கடலில் மட்டுமே நடைபெறவேண்டுமென்றும், நிலச்சண்டையைப் பொறுத்தவரையில் அது தற்காப்புப் போராகவே இருக்கவேண்டுமென்றும் விரும்பினர். எனவே, மார்ல்பரோ தருணம் பார்த்துக்கொண்டிருந்து, 1703 ஆம் ஆண்டு ராச்செஸ்டரைப் பதவியிலிருந்து நீக்கினார். 1704 ஆம் ஆண்டில் லூயியை எதிர்த்துச் சில பிராடெஸ்டன்டுகள் கலகம் விளைவித்தனர். அவர்களுக்கு உதவிசெய்ய மார்ல்பரோ விரும்பினார். ஆனால், நாட்டிங்ஹாம் அதற்கு முட்டுக்கட்டை போட்டார். எனவே மார்ல்பரோ, நாட்டிங்ஹாமையும் மந்திரி சபையினின்றும் நீக்கிவிட்டார். இவ்விருவருக்கும் பதிலாக மிதவாத டோரிகளென அழைக்கப்பட்ட ஹார்லி (Harley) என்பாரும், செண்ட் ஜான் (St. John) என்பாரும் நியமிக்கப்பட்டனர். ஹார்லி என்பார் பாராளுமன்றத்தில் மிகுந்த செல்வாக்குடையவர்; சூழ்ச்சிகளில் வல்லவர். நடுவழிகளைக் கையாள்வதில் நிபுணர். செண்ட் ஜான் ஓர் ஊதாரி. எனினும், மிகத் திறமை வாய்ந்த

அரசியல்வாதி. பாராளுமன்றத்தில் ஒப்பற்ற பேச்சாளராய் அவர் விளங்கினர். சில விக்குகளுக்கும், பதவிகள் வழங்கப்பட்டன. ஐரோப்பியப் போரை நன்கு நடத்தவேண்டி மார்ல்பரோ தமக்குள் சச்சரவிடாத மந்திரிகளாகப் பார்த்துத் தேர்ந்தெடுத்துக்கொண்டார்.

**கலப்பு மந்திரிசபை (Mixed Ministry, 1706 – 1708)**

ஸ்காட்லாந்தோடு இங்கிலாந்து ஐக்கியமடைந்ததால் பல விக்குகள் பொதுமக்கள் சபையில் இடம்பெற்றனர், விக்குக் கட்சியானது மென்மேலும் வலுவுற்றது. இதைக் கண்ட மார்ல்பரோவும், கொடால்பினும் விக் கட்சித் தலைவர்களை ஆதரிக்க ஆரம்பித்தனர். அவர்களோடு ஏற்பட்ட ஒப்பந்தத்தின் விளைவால் வாரிசுரிமை நிர்ணயச்சட்டமானது திருத்தப்பட்டது, அச்சட்டமானது, ஹனோவர் குலத்தினரின் ஆட்சிக் காலத்திலிருந்து, மந்திரிகளும் வேறு அரசியல் பதவிகளிலிருப்போரும் பொதுமக்கள் சபையில் உறுப்பினராதற்குத் தகுதியற்றவர்கள் எனக் கூறியது. 1705ஆம் ஆண்டுக்குப் பின்னர் அரசியல் உத்தியோகம் பெற்றவர்களன்றி, அதற்குமுன் பதவி பெற்றவர்களெல்லாம் பொதுமக்கள் சபையில் தொடர்ந்து தம் பதவிகளில் நீடிக்கலாம் என மேற்படி சட்டமானது திருத்தப்பட்டது. 1705ஆம் ஆண்டுக்குப் பின் பதவி பெற்றவர்களும் பதவி பெறும் தருவாயில் தேர்தலுக்கு மீண்டும் நின்று வெற்றி பெற்றால் தொடர்ந்து பொதுமக்கள் சபை உறுப்பினராகப் பணியாற்றலாமெனவும் அத் திருத்தம் கூறியது.

கொஞ்சங்கொஞ்சமாக அதிகாரம் விக்குகளின் கட்சிக்கு மாறியது. 1705ஆம் ஆண்டு கௌபர் (Cowper) எனும் விக் கட்சியினர் சான்ஸலர் பிரபுவாக (Lord Chancellor) நியமிக்கப்பட்டார். மார்ல்பரோவின் மருமகனுன ஸண்டர்லாண்டு பிரபு உள்நாட்டு அமைச்சராக (Secretary of State) நியமிக்கப்பட்டார். ஸண்டர்லாந்து பதவி ஏற்றம் பெற்றது இராணியாருக்குச் சற்றும் பிடிக்கவில்லை. ஆங்கிலத் திருச்சபையினரான இராணிக்கு அச்சபையை வன்மையாகக் கண்டித்துவந்த ஒருவர் உயர் பதவி பெறுவது வெறுப்பாய்த்தானிருந்தது. எனினும், பெரும்பான்மையினரின் விருப்பத்துக்கு மாறாக நடக்க இராணிக்குத் துணிவில்லை. மேலும், மார்ல்பரோ பிரபுவின் மனைவியின் கர்வமிக்க நடத்தை இராணிக்கு எரிச்சலை மூட்டியது. அமைதியான பண்புகள் நிரம்பிய அபிஜெய்ல் ஹில் (Abigail Hill) அல்லது மிஸஸ் மாஷாம் (Mrs. Masham) என்ற சீமாட்டியின் புது நட்பு இராணிக்கு இன்பமூட்டியது. அச்சீமாட்டி ஹார்லி பிரபுவின் ஒன்றுவிட்ட சகோதரியாவாள். எனவே, ஹார்லி பிரபு இராணியின் நன்மதிப்பைப் பெற்

ருர். இச்சமயம் ஒரு முக்கியமான அரசியலமைப்புப் பிரச்சினை கிளம்பியது. ஐரோப்பியப் போரை நடத்த ஒரேவித கருத்தமைந்த விக்கு மந்திரிகளே அரசாங்கத்தை நடத்தவேண்டுமென விக்குக் கட்சியினர் கூறினர். மந்திரிகளைப் பொறுக்கும் அதிகாரம் தமக்கே உரியதென்றும், இரண்டு கட்சிகளிலுமிருந்த மிதவாதிகளைக் கூட்டி ஓர் கலப்பு மந்திரி சபையை அமைப்பதே நல்லதென்றும் இராணியார் கூறினர். இந்த யோசனைக்கு ஹார்லி பிரபு தமது முழு ஆதரவைத் தந்தார். இது விக் கட்சியினருக்கு எப்படியோ தெரிந்துவிட்டது. உடனே அவர்கள் ஒன்றுசேர்ந்து ஹார்லியை விரட்டிவிட்டனர். செண்ட் ஜானும் அவருடன்கூட 1708ஆம் ஆண்டு மந்திரிசபையினின்றும் வெளியேற்றப்பட்டார். மார்ல்பரோவும் கொடால்பினும் உடனே தங்களை விக்குகளென அறிவித்துக்கொண்டனர். ஸோமர்ஸ் (Somers) என்பவர் கவுன்ஸில் தலைவராகவும், வார்ட்டன் (Wharton) அயர்லாந்தின் லார்டு லெப்டினன்ட் பிரபுவாகவும் நியமிக்கப்பட்டனர். இங்ஙனம் அரசியானவர் தம் விருப்பத்துக்கு மாருகப் பணியவேண்டி வந்தது.

**விக்குக் கட்சியின் ஆட்சி – காபினட் ஆட்சி முறை வளர்ச்சி (Progress of Cabinet Government, 1708—1810)**

1708ஆம் ஆண்டில் விக்குகளே பாராளுமன்றத்தில் பெரும்பான்மையினராயிருந்தனர். மந்திரி சபையும் விக்கு மயமாகிவிட்டது. இம் மந்திரி சபை வில்லியம் காலத்து 'விக் ஜண்டோ' போன்று ஒரே கட்சிக் கருத்துடையதாய் விளங்கியது. போரைத் திறம்பட நடத்தவேண்டியே இம் முறை கையாளப்பட்டது. ஆனால், வில்லியம் காலத்து மந்திரி சபையானது மன்னனைப் பார்த்து ஏற்படுத்தியது. ஆனால், 1708ஆம் ஆண்டுச் சபையானது அரசிக்கு விரோதமாகப் பாராளுமன்றத்தால் ஏற்படுத்தப்பட்டது. வில்லியத்தின் ஆட்சிக் கால இறுதியில் டோரி மந்திரிகளை நியமிக்கும்படி அவரை வற்புறுத்தினர். இங்ஙனம் பொது மக்கள் சபையில் பெரும்பான்மையினராக இருக்கும் கட்சியிலிருந்தே அரசர் மந்திரிகளைப் பொறுக்கிக்கொள்ளவேண்டும் என்ற காபினட் ஆட்சிக் கொள்கை அப்போதுதான் உதயமாயிற்று. அஃது ஆன் இராணியார் காலத்து (1708ஆம் ஆண்டில்) நன்கு உறுதியாக்கப்பட்டது.

விக்குக் கட்சியினர் விரைவிலேயே தம் செல்வாக்கை இழந்தனர். ஐரோப்பியப் போர் நீண்டுகொண்டே சென்றதைக் கண்ட மக்கள் சலிப்புற்றனர். போருக்குக் காரணமான மார்ல்பரோமீது அனைவருக்கும் வெறுப்பு ஏற்பட்டது. சமாதான

முயற்சிக்கு முட்டுக்கட்டை போட்ட விக்குக் கட்சியினரையும் மக்கள் வெறுத்தனர். மேலும், மார்ல்பரோ தமது நிலைப்படையின் உதவியைக் கொண்டு, கிராம்வெல்லைப்போல் ஓர் சர்வாதிகாரி யாக (Dictator) மாறிவிடக்கூடுமென்ற திகில் பலருக்கும் ஏற் பட்டது.

இங்கிலாந்தின் திருச்சபைக்கு ஆபத்து வந்துவிட்டதாகவும் பலர் நினைத்தனர். இவ்வெண்ணத்தை உறுதிப்படுத்துவதே போல் ஒரு நிகழ்ச்சி லண்டன் நகரில் நடைபெற்றது. டாக்டர் ஹென்றி சாக்கிவெரல் (Dr. Henry Sacheverral) எனும் ஓர் பேராசிரி ரியர் லண்டன் நகர மேயருக்கு முன் நிகழ்த்திய சமயச் சொற் பொழிவொன்றில் ஆங்கிலிக்கக் கொள்கைகளான தெய்விக உரிமைக் கொள்கை, நாட்டின் சமய, அரசியலேற்பாடுகளை எதிராக் கொள்கை (Principle of Non-Resistance) முதலிய வற்றைப் பெரிதும் வற்புறுத்தினர். இணங்காதார்களைக் கண்டித் துச் சமயப் பொறைக் கொள்கையைப் பழித்தார். கொடால்பினைப் பெயர் சொல்லி அவர் ஏசினர். விக் மந்திரி சபை சாக்கிவெரல் மீது அரசியல் துரோகக் குற்றம் சாட்ட அவரை விசாரணைக்குக் கொண்டுவந்தது. இவ்வரசியல் துரோகக் குற்ற விசாரணை (Impeachment) மூலம் விக்குக் கட்சி தனது சமய அரசியல் கொள்கைகளை நிலைநாட்ட எண்ணியது. ஆனல், எதிர்பாராவித மாக டாக்டர் சாக்கிவெரலுக்கு அமோகமான ஆதரவு லண்டனில் ஏற்பட்டது. இராணியார் தெருவில் போய்க்கொண்டிருந்தபோது ஆங்கிலத் திருச் சபையையும், டாக்டர் சாக்கிவெரலையும் காக்கும் படி மக்கள் கூக்குரலிட்டனர். இணங்காதாரின் கோயில்கள் கொள்ளையடிக்கப்பட்டன. பிரபுக்கள் சபை கடைசியாக டாக்டர் சாக்கிவெரல்மீது குற்றம் சாட்டியது. மூன்ருண்டுகளுக்கு அவர் எந்தச் சமயச் சொற்பொழிவினையும் ஆற்றக்கூடாதென்று அச் சபை ஓர் தடையுத்தரவு பிறப்பித்தது. மற்றபடி அவர்மீது கடுந் தண்டனைகளை விதிக்கப் பிரபுக்கள் சபைக்குத் துணிவில்லை. சாக்கிவெரலுக்கு மரண தண்டனை விதிக்கப்படாதது விக்குகளுக்கு ஓர் பெருத்த தோல்வியாகும். டாக்டருக்குச் சென்றவிடமெல்லாம் சிறப்பேற்பட்டது. விக்குக் கட்சியினரின் செல்வாக்கு அவரால் பெரிதும் குறைந்தது. மக்களின் இவ் வெதிர்ப்புணர்ச்சியைப் பயன்படுத்திக்கொண்டு இராணியார் டோரிகளை மந்திரிகளாக நியமிக்க நினைத்தார். மிதவாதிகளாகப் பார்த்து, டோரி, விக்குக் கட்சிகளிரண்டிலிருந்தும் மந்திரிகளைப் பொறுக்கிக்கொள்ளும்படி ஹார்லி பிரபு இராணிக்கு யோசனை கூறினர். ஆனல், 1710 ஆம் ஆண்டில் நடைபெற்ற தேர்தலில் டோரிக் கட்சியினர் பொது மக்கள் சபையில் பெரும்பான்மையான இடங்களைப் பெற்றனர். அவர்கள் இராணியையும் ஹார்லியையும் டோரி மந்திரிகளையே

நியமிக்கும்படி வற்புறுத்தினர். அதன்படியே முற்றிலும் டோரி களே அடங்கிய மந்திரி சபை 1710ஆம் ஆண்டு அமைக்கப் பட்டது.

## டோரி மந்திரி சபை (1710—1714)

புதிய மந்திரி சபையின் தலைவர்களாக ராபர்ட் ஹார்லியும், ஹென்றி சென்ட் ஜானும் விளங்கினர். ஹார்லிக்கு ஆக்ஸ்ஃபோர்டு எர்ல் என்ற பட்டம் கிடைத்தது. அவர் கருவூலத் தலைமைப் பிரபு வாக (Lord High Treasurer) நியமிக்கப்பட்டார். ஹென்றி, வைகவுண்ட் பாலிங் புருக் (Viscount Boling Brooke) என்ற பட்டத்தைப் பெற்றார். உள்நாட்டு அமைச்சராக அவர் நியமிக்கப்பட்டார். இம் மந்திரி சபை ஐரோப்பியப் போரை எவ்வாற்றேனும் நிறுத்திவிட விரும்பியது. அதன்படி 1713ஆம் ஆண்டில் பாராளுமன்றத்தின் இரு சபைகளின் சம்மதத்தின் பேரில் யுட்ரெக்ட் சமாதானம் ஏற்பட்டது. போரும் நின்றது. அடுத்தாற்போல் அஃது மூத்த போலியை (Old pretender) இங்கிலாந்தின் பட்டத்துக்கு உரியவராக்க முயன்றது. ஆன் அரசிக்குப்பின் மூத்த போலி பட்டத்துக்கு வருவதைப் பலர் விரும்பவில்லை. ஏனெனில். அவர் தமது கத்தோலிக்க மதத்தைக் கைவிடத் தயாரில்லை. எனினும், போலியின் வாரிசுரிமையை ஏற்படுத்த டோரிகள் பல மறைமுகமான வழிகளைக் கையாளலாயினர். விக்குக் கட்சியினர் நிரம்பியிருந்த பல சேனைப் பகுதிகள் (Regiments) கலைக்கப் பட்டன. கத்தோலிக்கரான ஆர்மாண்டு கோமகன் (Duke of Ormond) என்பார் சின்க்யு துறைமுகங்களின் தலைமைக் காப்பாளப் பிரபுவாக (Lord Warden of the Unique Ports) நியமிக்கப்பட்டார். போலியான செவாலியர் (Chevaliar) இங்கிலாந்தில் வந்திறங்கு வதைத் தடை செய்யாமலிருக்கவே மேற்படி நியமனம் செய்யப் பட்டது. இதே சமயம் ஹனேவரியர்களின் வாரிசுரிமையைத் திட்டம் செய்ய விக்குகள் முயன்றனர். வாரிசுரிமை நிர்ணயச் சட்டம் அவர்களுக்குச் சாதகமாயிருந்தது. எனவே, அவர்கள் வெளிப்படையாகவே ஹனேவரிய தேர்வாள இளவரசரான ஜார்ஜுக்கு (Electoral Prince George) ஓர் அழைப்பு விடுத்தனர். அவருடைய தந்தையான தேர்வாளர் ஜார்ஜின் (Elector George) பிரதிநிதியாக இங்கிலாந்துக்கு வரும்படி அவர்கள் இளவரசர் ஜார்ஜை அழைத்தனர். இவ்வழைப்புக்குச் சட்டப்படி இராணி யார் ஒன்றும் மறுப்புக்கூற முடியவில்லை. எனவே, ஒரு காரசார மான கடிதத்தை ஸோபியா அரசிக்கு எழுதி, இராணியார் தம் கோபத்தை ஆற்றிக்கொண்டார். இக் கடிதத்தைப் படித்த ஸோபியா மிகவும் துயருற்றாள். துயரத்தாலேயே அவள் விரை

வில் மாண்டாள். ஆன் அரசிக்குப் பின் யார் பட்டத்துக்கு வருவது என்பதுபற்றி டோரித் தலைவரிடையேயும் கருத்து வேறுபாடு காணப்பட்டது. தமது மதத்தை மாற்றிக்கொண்டாலொழிய மூத்த போலி இங்கிலாந்தின் பட்டத்துக்கு வரக்கூடாதென ஹார்லி பிரபு வாதித்தார். பாலிங் புருக் பிரபுவோ, போலியின் மதத்தைப் பற்றிக் கவலைப்படக் கூடாதெனக் கூறினர். இருவரும் ஒரு சமயம் இராணியாரின் முன்னிலையிலேயே இதுபற்றிச் சண்டையிட்டுக் கொண்டனர். இராணியின் முன் மரியாதையின்றி நடந்து கொண்டதற்காக ஹார்லி பதவியினின்றும் நீக்கப்பட்டார். பாலிங் புருக் உடனே போலியின் வாரிசுரிமையைத் திட்டப் படுத்தும் வேலையில் சுறுசுறுப்பாக இறங்கினர். இச்சமயத்தில் இராணியார் நோய்வாய்ப்பட்டார். படுத்தபடுக்கையாய் ஐந்து நாள் கிடந்தபின் அவர் இறந்துவிட்டார். ஆனால், இறக்குமுன் ஷ்ருஸ்பரி கோமகனை (Duke of Shrewsbury) அவர் கருவூலத் தலைமைப் பிரபுவாக (Lord Treasurer) நியமித்தார். ஷ்ருஸ்பரியின் நியமனம் பாலிங் புருக்கின் எண்ணத்தில் மண்ணைப் போடுவதாக அமைந்தது. ஏனெனில், இராணியார் இறந்தவுடனேயே அவர் ஹனேவர் நாட்டின் தேர்வாளரான ஜார்ஜை இங்கிலாந்தின் மன்னரென அறிவித்தார். பாலிங் புருக் மனமுடைந்து ஃபிரான்ஸுக்கே ஓடிவிட்டார். தேர்வாளர் ஜார்ஜ், முதலாம் ஜார்ஜ் மன்னர் என்னும் பட்டத்துடன் இங்கிலாந்தின் அரசரானர்.

# 19. ஸ்டூவர்ட்டுகள் காலத்து ஸ்காட்லாந்தும் அயர்லாந்தும்

ஸ்டூவர்ட்டுகளும் ஸ்காட்லாந்தும் : முதலாம் ஜேம்ஸ்—முதலாம் சார்லஸ்—கிராம்வெல்—இரண்டாம் சார்லஸூம் இரண்டாம் ஜேம்ஸூம்—புகழ் பெற்ற புரட்சி, 1688—டேரியன் திட்டம்—ஐக்கியத்திற்கு இட்டுச் சென்ற சூழ்நிலைகள்—ஸ்காட்லாந்து ஐக்கியச் சட்டம், 1707—ஐக்கியத்தின் விளைவுகள்.

ஸ்டூவர்ட்டுகளும் அயர்லாந்தும் : முதலாம் ஜேம்ஸ்—அல்ஸ்டர் குடியேற்றம், 1610—முதலாம் சார்லஸ்—கிராம்வெல்—இரண்டாம் சார்லஸ்—இரண்டாம் ஜேம்ஸ்—மூன்றும் வில்லியம்.

## ஸ்டூவர்ட்டுகளும் ஸ்காட்லாந்தும்

### முதலாம் ஜேம்ஸ்

ஸ்டூவர்ட்டுகள் கொண்டிருந்த பல உயர்ந்த குறிக்கோள்களுள், ஸ்காட்லாந்து இங்கிலாந்து ஐக்கியமும் ஒன்றாகும். இக்குறிக்கோள் ஆன் இராணியார் காலத்து ஏற்பட்ட ஐக்கியச் சட்டத்தால் (Act of Union) ஓரளவு நிறைவேறியது எனலாம். இச் சிறந்த குறிக்கோளை அடைவதற்கான முதல் முயற்சியைச் செய்த பெருமை முதலாம் ஜேம்ஸுக்குரியதாகும். ஏற்கெனவேயே ஸ்காட்லாந்தின் அரசராக இருந்த ஆறும் ஜேம்ஸ் மன்னர், எலிஸபெத் இராணியார் 1603ஆம் ஆண்டில் இறந்தபோது, முதலாம் ஜேம்ஸ் என இங்கிலாந்தின் மன்னராக அறிவிக்கப்பட்டபோதே இரு நாடுகளும் ஒருகுடைக்கீழ் வந்தன. இரு நாடுகளுக்கும் ஒரே மன்னன் என்ற முறையில் மட்டுமே அவற்றிடை ஐக்கியம் ஏற்பட்டது. மற்றபடி உள்ளத்தால் இரு நாடுகளும் ஒன்றுபடவில்லை. உள்ளத்தால் காதலிக்காது பலவந்தமாகப் பிணைக்கப்பட்ட ஒரு கணவனும் மனைவியும் போன்றே இங்கிலாந்தும் ஸ்காட்லாந்தும் விளங்கின. இரு நாடுகளுக்குமிடையே பழக்கவழக்கங்களில் மலைக்கும் மடுவுக்குமுள்ள வேறு

பாடு காணப்பட்டது. ஸ்காட்லாந்தியரைக் கண்டாலே ஆங்கிலேயருக்குப் பிடிக்காது. காரணமில்லாத காழ்ப்புணர்ச்சி இவ்விரு இனத்தாரிடையே காணப்பட்டது. பெரிய நாடான இங்கிலாந்து சிறிய நாடான ஸ்காட்லாந்தைத் தன்வயப்படுத்தி, மேற்கொண்டு தனிப்பட்ட முறையில் முன்னேற முடியாமல் செய்துவிடும் என ஸ்காட்லாந்தியர் பயந்தனர். அறிவு மிகுந்த ஸ்காட்லாந்தியர்கள் இங்கிலாந்தில் அரண்மனை உத்தியோகங்களை எல்லாம் எங்கு அபகரித்துக் கொள்வார்களோ என்ற பயமும் எரிச்சலும் ஆங்கிலேயரை வாட்டின. இங்ஙனம் பரஸ்பர நம்பிக்கைக்குப் பதிலாக சந்தேகமே இரு நாடுகளிடை நிலவியது.

முதலாம் ஜேம்ஸ் மன்னர் ஸ்காட்லாந்து இங்கிலாந்து ஐக்கியத்தை நன்கு வலுப்படுத்த விரும்பினர். இரு நாடுகளும் 'ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு' என்பது அவருக்குத் தெற்றெனத் தெரிந்தது. ஏனெனில், இரு நாடுகளும் ஒரே தீவைச் சேர்ந்தவை. புவியியல் முறைப்படி இரண்டும் ஒரே நாடுதான். இரு நாடுகளின் பொருளாதாரத் தேவைகளும், ஏனைய தேவைகளும் ஏறக்குறைய ஒன்றுதான். இரு நாடுகளும் ஒரு சிறிதே வேறுபட்ட பிராடெஸ்டண்டு மதத்தையே பின்பற்றின. எனவே, இரு நாடுகளும் சில்லறைத் தகராறுகளிலீடுபட்டுத் தம் வலிமையை விரயமாக்குவதை விட, குற்றம் பொறுத்துக் குணமே நாடி, ஒற்றுமையுடன் வாழ்ந்தால் ஐரோப்பாவிலேயே தலைசிறந்த நாடாக விளங்கலாம் என்று ஜேம்ஸ் நினைத்ததில் தவறென்றுமில்லை. அந் நினைவால் அவர் 'பெரும் பிரிட்டனின் மன்னர்' (King of Great Britain) என்ற பட்டத்தைச் சூட்டிக்கொண்டார். செல்வத்திலும் செல்வாக்கிலும் சிறந்திருந்த இங்கிலாந்தைப் போலவே ஸ்காட்லாந்தையும் ஆக்கிவிட வேண்டுமென அவர் விரும்பினர். முதலில் இரு நாடுகளிலும் ஒரேவித திருச்சபை ஏற்பாட்டை அமைக்க எண்ணினர். பிரஸ்பிடீரிய மதம் நிலவியிருந்த ஸ்காட்லாந்தில் பிஷப்புகளின் ஆட்சியைச் சிறிது சிறிதாக ஏற்படுத்தினர். 1610ஆம் ஆண்டில் பல பிஷப்புகள் ஸ்காட்லாந்தியத் திருச்சபையில் நியமிக்கப்பட்டார்கள். ஆனால், ஸ்காட்லாந்தியர் பிஷப்புகளைப் பெரிதும் வெறுத்தனர்.

### முதலாம் சார்லஸ்

மதத்துறையில் இரு நாடுகளுக்கும் ஒற்றுமையை ஏற்படுத்திவிட வேண்டுமென்பதில் முதலாம் சார்லஸ் ஜேம்ஸைவிட அதிக அக்கறை காட்டினர். 1633ஆம் ஆண்டு அவர் நேரே ஸ்காட்லாந்துக்குச் சென்று, ஆர்ச் பிஷப் லாட் என்பாரின் துணைகொண்டு பல பிஷப்புகளைத் திருச்சபையில் நியமித்தார். குருமார்கள் ஸர்ப்லிஸ் என்ற தனிப்பட்ட உடையை வழிபாட்டின்போது

தரித்துக்கொள்ள வேண்டுமென வற்புறுத்தப்பட்டனர். பொது ஜெபப் புத்தகமொன்று ஸ்காட்லாந்தியர் மீது திணிக்கப்பட்டது. அதன்படியே யாவரும் வழிபாடு நிகழ்த்தவேண்டுமென வற்புறுத்தப்பட்டது. நாம் ஏற்கெனவே படித்துள்ளபடி இம்முறைகள் ஸ்காட்லாந்தில் ஓர் பெரும் புயலைத் தோற்றுவித்தன. 1638-ல் கிளாஸ்கோ (Glascow) நகரில் கூடிய ஸ்காட்லாந்துப் பொதுச் சபையானது (General Assembly) பிஷப்புகளையும், ஜெபப் புத்தகத்தையும் ஒருங்கே ஒழித்தது. பிரஸ்பிடீரிய மதத்தைக் காக்க அவர்கள் தமக்குள் ஓர் 'ஒப்பந்தத்தை' (Covenant) ஏற்படுத்திக் கொண்டார்கள். ஸ்காட்லாந்திய அரசியல் விவகாரங்களைக் கவனிக்கப் பல கமிட்டிகள் ஏற்படுத்தப்பட்டன. இதைக் கண்ட சார்லஸ் 1639 ஆம் ஆண்டு ஸ்காட்லாந்து மீது போர் தொடுத்தார். 'முதல் பிஷப்புகளின் போர்' என அழைக்கப்படும் இச் சண்டை உண்மையில் நடைபெறு முன்பே இருதரப்பினருக்கும் சமாதானம் ஏற்பட்டது. ஸ்காட்லாந்தியர் விருப்பப்படி, அந் நாட்டின் மத ஏற்பாட்டை ஒரு பொதுச்சபை மூலம் தீர்மானிக்கச் சார்லஸ் முயன்றார். 1640-ல் பொதுச்சபை ஒன்று எடின்பர்க் நகரில் கூட்டப்பட்டது. அஃது கிளாஸ்கோ சபை நிறைவேற்றிய தீர்மானங்களையே மீண்டும் உறுதிப்படுத்தியது. அதனால் வெகுண்ட சார்லஸ் மீண்டும் ஸ்காட்லாந்தோடு 1640-ல் போர் தொடுத்தார். 'இரண்டாம் பிஷப்புகளின் போர்' எனப்படும் இப்போரில் மன்னர் தோற்றார். ஸ்காட்லாந்தியப் படையொன்று நார்த்தம்பர்லாந்திலும், டர்ஹாமிலும் வந்து சில மாதங்கள்வரை தங்கியிருந்தது. 1641 ஆம் ஆண்டு சார்லஸ் ஸ்காட்லாந்துக்கு நேரில் சென்று ஸ்காட்லாந்தியரின் விருப்பங்களுக்கு இணங்கினார். பிரஸ்பிடீரிய திருச்சபையே ஸ்காட்லாந்தின் திருச்சபையென் பதை அவர் ஒப்புக்கொண்டார். நாட்டின் அரசாங்கத்தை ஆர்கைல் கோமகன் (Duke of Argyll) கையில் ஒப்படைத்துச் சார்லஸ் திரும்பினார். இதன்பின் ஸ்காட்லாந்துத் துருப்புகள் தம் நாட்டிற்குத் திரும்பின.

1643 ஆம் ஆண்டில் ஸ்காட்லாந்தியர் ஆங்கிலேயப் பாராளு மன்றத்தோடு 'புனிதக் கூட்டுறவும் ஒப்பந்தமும்' என்ற உடன்பாட்டைச் செய்துகொண்டு மன்னருக்கு விரோதமாகப் பாராளுமன்றத்துக்குப் போர் உதவி செய்வதாக வாக்களித்தனர். அதற்குப் பதிலாகப் பிரஸ்பிடீரிய மதத்தை இங்கிலாந்தில் புகுத்துவதாகப் பாராளுமன்றம் வாக்களித்தது. 1644-ல் ஸ்காட்லாந்தியப் படை மீண்டும் இரண்டாம் முறையாக இங்கிலாந்தின்மீது படையெடுத்தது. 1646-ல் அரசர் சரணடைவதற்கு ஸ்காட்லாந்தியரே முக்கிய காரணமாயிருந்தனர். அரசரைப் பாராளுமன்றத்திடமே

ஒப்படைத்துவிட்டு ஸ்காட்லாந்தியர் தம் நாடு திரும்பினர். 1647ஆம் ஆண்டில் அவர்கள் சார்லஸோடு ஓர் உடன்பாட்டைச் செய்துகொண்டனர். சார்லஸை மீண்டும் அரியணையில் அமர்த்து வதாக ஸ்காட்லாந்தியர் வாக்களித்தனர். அதற்குப் பதிலாகப் பிரஸ்பிடீரிய மதத்தை இங்கிலாந்தில் மூன்று ஆண்டுகளுக்குள் புகுத்துவதாகச் சார்லஸ் வாக்களித்தார். 1647ஆம் ஆண்டில் ஸ்காட்லாந்துப் படைகள் மன்னரின் சார்பாக இங்கிலாந்தின்மீது படை எடுத்தன. இம்மூன்றும் படையெடுப்பு கடைசியில் தோல்வி யில் முடிந்தது. கிராம்வெல் ஸ்காட்லாந்தியரை லங்காஷயரில் தோற்கடித்து, அவர்களை ஓட ஓட விரட்டிவிட்டார்.

கிராம்வெல்

சார்லஸ் 1649-ல் சிரச்சேதம் செய்யப்பட்டவுடன் ஸ்காட் லாந்தியர் அவரது மகனை அரசனாக அங்கீகரித்தனர். இரண்டாம் சார்லஸை ஆதரித்து மாண்ட்ரோஸ் பிரபு (Montrose) ஓர் கிளர்ச்சியி லீடுபட்டார். ஆர்கைல் பிரபு, மாண்ட்ரோஸைத் தோற்கடித்துச் சிறைப்படுத்தினர். பின் அவர் சிரச்சேதம் செய் யப்பட்டார். இதைக் கண்ட இரண்டாம் சார்லஸ் ஸ்காட்டிஷ் 'ஒப்பந்தத்தை' அங்கீகரித்தார். 'ஸ்கோன்' என்னுமிடத்தில் அவர் ஸ்காட்லாந்தின் மன்னரென முடி சூட்டப்பட்டார். எனினும் சார்லஸின் எண்ணமெல்லாம் இங்கிலாந்தையே வட்டமிட்டுக் கொண்டிருந்தது. ஸ்காட்லாந்துப் பிரஸ்பிடீரிய மதத்தையும், பிரபுக்களையும் அவர் உள்ளூர வெறுத்தார். இங்கிலாந்தின் மகுடத்தைக் கைப்பற்றும் முயற்சிகளில் அவர் இறங்கினர். இதை ஊகித்தறிந்த கிராம்வெல் ஸ்காட்லாந்தின்மீது படை எடுத்து லெஸ்லி (Leslie) என்ற தளகர்த்தரை டன்பார் (Dunbar) என்னு மிடத்தில் 1650-ல் தோற்கடித்தார். சார்லஸ் பின் ஒரு ஸ்காட் லாந்துப் படையுடன் இங்கிலாந்துக்கு வந்திறங்கியபோது, கிராம் வெல் ஸ்காட்லாந்தினின்றும் வேகமாகத் திரும்பிவந்து அரசரது படைகளை வொர்ஸெஸ்டர் (Worcester) என்னுமிடத்தில் தோற்கடித் தார். ஸ்காட்லாந்தியரின் நான்காவது படை எடுப்பும் தோல்வியில் முடிந்தது. ஆர்கைல் பிரபுவின் பிரஸ்பிடீரிய அரசாங்கம் கலைக் கப்பட்டது. ஜெனரல் மான்க் ஸ்காட்லாந்தின் கவர்னரானர். இங்கிலாந்தும் ஸ்காட்லாந்தும் ஐக்கியப்படுத்தப்பட்டன. இவ் வைக்கியத்தால் ஸ்காட்லாந்தியரின் கர்வத்துக்குப் பெரியதோர் பங்கமேற்பட்டது. எனினும், மற்றத் துறைகளில் ஸ்காட்லாந்தியர் நன்மையடைந்தனர். இராணுவ ஆட்சியால் நாட்டில் அமைதி யும் ஒழுங்கும் காப்பாற்றப்பட்டன. தாவாய்ச் சட்டத்தினல் விளைந்த வியாபார நன்மைகளை ஸ்காட்லாந்தியரும் பெற்றனர். குடியேற்ற நாடுகளோடு வியாபாரம் செய்து அவர்கள் பெரும்

பொருள் திரட்டினர். ஸ்காட்லாந்தில் வளம்பெற்ற ஒரு வணிக வகுப்பு வளரத் தொடங்கிற்று. அவ் வகுப்பார் இரு நாடுகளின் ஐக்கியத்தை நிரந்தரமாக்க விரும்பினர். ஸ்காட்லாந்திய 'ஒப்பந் தக்காரர்கள்' மத வெறுப்பினின்றும் தப்பித்தத் தங்கள் கொள்கைகளைத் தம் பிரியம்போல் கடைப்பிடித்தனர். பிஷப்புகள் மட்டும் இங்கிலாந்தைப் போலவே இங்கும் சிறிது துன்புறுத்தப் பட்டனர்.

## இரண்டாம் சார்லஸும் இரண்டாம் ஜேம்ஸும்

முன்னிலை மீட்சியை ஸ்காட்லாந்தியர் வரவேற்றனர். ஏனெனில், அப்போது பொதுநலத் துரைத்தன காலத்தில் ஏற்பட்ட சட்டங்கள் யாவும் ரத்து செய்யப்பட்டதால் ஸ்காட்லாந்து தன் சுதந்திரத்தைப் பெற்றது. சுதந்திரத்தைப் பெற்றாலும், அவர்கள் பல நன்மைகளை இழந்தனர். நாவாய்ச் சட்டப்படி ஸ்காட்லாந்து அந்நிய நாடாகக் கருதப்பட்டது. இங்கிலாந்துக்கும் ஸ்காட்லாந் துக்கும் இருந்துவந்த தடையிலா வாணிபத் தொடர்பு அறுந்தது. அதனால் ஸ்காட்லாந்தின் வாணிபம் பெரிதும் பாதிக்கப்பட்டது. ஸ்காட்லாந்தின் பாராளுமன்றம் மீண்டும் உயிர்ப்பிக்கப்பட்டாலும் கூட அரசரது நண்பர்களான பிரபுக்களடங்கிய ஸ்காட்லாந்தின் பிரிவி கவுன்ஸிலே நாட்டை உண்மையில் ஆண்டது. அப் பிரிவி கவுன்ஸில் மூலம் இங்கிலாந்தின் மன்னர் தம் அதிகாரத்தை அங் தச் செலுத்த முடிந்தது. மேலும், இரண்டாம் சார்லஸ் எபிஸ்கோபல் மதத்தை ஸ்காட்லாந்தில் திணிக்க முயன்றார். ஆங்கில ஜெபப் புத்தகத்தை ஸ்காட்லாந்தியர் மீது சுமத்தாவிட்டாலும், பிஷப்பு களின் ஆட்சியை அவர் அங்கு ஏற்படுத்தினார். கோயிலுக்குப் போகாமல் 'இரகசியத் தொழுகைக் கூட்டங்களை' நடத்தியவர்கள் பெரிதும் துன்புறுத்தப்பட்டார்கள். இவ் அடக்குமுறை ஆட்சியை எதிர்த்து ஸ்காட்லாந்தியர் திரண்டெழுந்தனர். ஆங்காங்கே கலகங்கள் கிளம்பின. 1667-ல் ஸ்காட்லாந்தின் ராயல் கமிஷனராக (Royal Commissioner) நியமிக்கப்பட்ட லாடர்டேல் (Lauderdale) என்பார் இக் கலகங்களை அடக்கினார். ஒப்பந்தக்காரர்களின் வீடுகள் சூறையாடப்பட்டன. 1679-ல் ஏற்பட்ட ஒரு பெருங் கலகத்தில் ஆர்ச் பிஷப் ஷார்ப் (Archbishop Sharp) என்பார் கொல் லப் பட்டார். கிளாவர் ஹவுஸ் கிரஹாம் (Graham of Claver House) அல்லது வைகவுண்ட் டண்டீ (Viscount Dundee) எனும் அரசரின் தளகர்த்தர் டிரம்க்ளாக் (Drumclog) எனுமிடத்தில் தோற்கடிக்கப்பட்டார். ஆனால், கலகக்காரர்கள் மான்மவுத் பிரபு வால் (இரண்டாம் சார்லஸின் சட்டத்துக்கு மாறான புதல்வன்—Illegitimate), பாத்வெல் பிரிட்ஜ் (Bothwell Bridge) என்னுமிடத் தில் தோற்கடிக்கப்பட்டனர். யார்க் கோமகனான ஜேம்ஸ் ஸ்காட்

லாந்தின் ராயல் கமிஷனராக 1681-ல் நியமிக்கப்பட்டார். அவர் பிரஸ்பிடீரியர்களைப் பெரிதும் துன்புறுத்தினர். 1685-ல் ஜேம்ஸ் இங்கிலாந்தின் அரசரானர். அப்போது ஆர்கைல் பிரபு மான் மவுத்தை ஆதரித்தும் ஜேம்ஸை எதிர்த்தும் ஓர் கலகம் செய்து படுதோல்வியடைந்தார். அதனுல் பிரஸ்பிடீரியர்களின் நிலை இன்னும் கேவலமடைந்தது. 1687-ல் ஜேம்ஸ் 'பொறுத்தலறிக்கை'யை (Declaration of Indulgence) வெளியிட்டதன் மூலம் பிரஸ்பிடீரியர்கள் வழிபாட்டுச் சுதந்திரம் பெற்றனர். ஆனல், அதே சமயத்தில் கத்தோலிக்கர்களுக்குச் சமயப்பொறை வழங்குவதை அவர்கள் வெறுத்தனர்.

## புகழ்பெற்ற புரட்சி (Glorious Revolution, 1688)

1688-ல் இங்கிலாந்தில் ஏற்பட்ட 'இரத்தம் சிந்தாப் புரட்சி'யின்போது (Bloodless Revolution) ஸ்காட்லாந்தில் கூடிய ஓர் பிரத்தியேகப் பாராளுமன்றமானது ஏழாம் ஜேம்ஸ் (இரண்டாம் ஜேம்ஸ்) இங்கிலாந்தின் முடியிழந்துவிட்டாரென்று அறிவித்து மூன்ரும் வில்லியத்தை ஸ்காட்லாந்தின் மகுடத்தை (Crown) ஏற்றுக்கொள்ளும்படி வேண்டிற்று. மகுடத்தை ஏற்றுக்கொள்ளு முன் ஓர் உரிமைக் கோரிக்கையை (Claim of right) ஒப்புக் கொள்ளும்படி வில்லியத்தை அப் பாராளுமன்றம் கேட்டுக் கொண்டது. அவரும் அதை ஏற்றுக்கொண்டார். வில்லியமும் மேரியும் ஸ்காட்லாந்தின் அரசரும் அரசியுமாக இணையாக ஏற்றுக் கொள்ளப்பட்டனர். இங்கிலாந்தின் பிரபுக்களை ஸ்காட்லாந்து பிரிவி கவுன்ஸிலில் நியமித்து, அதன் பாராளுமன்றத்தைக் கட்டுப் படுத்தும் வழக்கம் வில்லியத்தின் காலத்தோடு கைவிடப்பட்டது. அதனுல் ஸ்காட்லாந்துப் பாராளுமன்றம் மன்னரின் பிடியினின்றும் விடுதலை பெற்றது. எனினும், பழைய நிலமானிய முறைப்படியே பிரதிநிதிகள் பாராளுமன்றத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டதால் அஃது அவ்வளவு பிரதிநிதித்துவம் வாய்ந்ததாக இல்லை. ஸ்காட் லாந்தில் எபிஸ்கோபல் மதம் ஒழிக்கப்பட்டது. பிரஸ்பிடீரிய மதம் ஸ்காட்லாந்தில் மீண்டும் தேசிய மதமாக நிறுவப்பட்டது. புரட்சியின் போக்கு இங்கிலாந்தைப் போன்று ஸ்காட்லாந்தில் அமைதியாக அமையவில்லை. அரசரை ஆதரித்தவர்களின் கட்சி அங்கு வலிமை பெற்று இருந்ததால் போர்கள் பல நிகழ்ந்தன. இரத்தம் சிந்தப்பட்டது. மேலே ஸ்காட்லாந்தியர் வைகவுண்ட் டண்டி (Viscount Dundee) என்பவரது தலைமையில் பெருங்கலகம் செய்தனர். ஆனுல், அவர்கள் எளிதில் ஒடுக்கப்பட்டனர். 1692 ஆம் ஆண்டு முதல் தேதியன்று அவர்கள் அரசனுக்கு விசுவாசப் பிரமாணம் (Oath of Allegiance) எடுத்துக்கொள்ள வேண்டு மென்று உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. அதற்குப் பணிவதாகக்

கலகக்காரர்கள் வாக்குறுதியளித்தனர். மாக்டனல்டு குடும்பத்தினர் மட்டும் ஏதோ தற்செயலாகக் குறித்த காலத்தில் விசுவாசப் பிரமாணம் எடுத்துக்கொள்ளத் தவறிவிட்டார்கள். அதனால் அவர்களைச் சந்தேகித்த வில்லியம் அவர்களைப் பூண்டோடு ஒழித்துக் கட்டுவதற்காக அவர்களின் எதிரிகளான கேம்பல் (Campell) குடும்பத்தினரை ஏவி விட்டார். அவர்களும் மாக்டனல்டு குடும்பத்தினர் வீடுகளுக்கு விருந்தினர் போன்று சென்று தங்கி, விருந்தையும் உண்ட பின், திடீரெனக் கிளர்ந்தெழுந்து தமது பழைய எதிரிகளை ஒவ்வொருவராகக் கொன்று வஞ்சம் தீர்த்துக்கொண்டனர். கிலென்கோ (Glencoe) என்னும் இடத்தில் இக்கொலை நிகழ்ந்தது. எனவே, இதற்கு 'க்லென்கோ படுகொலை' (Glencoe Murder) எனப் பெயர். இதனால் வில்லியத்துக்கு ஸ்காட்லாந்தில் மிகவும் கெட்ட பெயர் ஏற்பட்டது.

**டேரியன் திட்டம் (Darien scheme)**

புரட்சிக்குப் பின்னர் ஸ்காட்லாந்தியர் தங்களது பொருளாதார முன்னேற்றத்தைக் கருத்தில் கொண்டு உழைத்தனர். ஸ்காட்லாந்தியர் மிகவும் ஏழ்மையான நிலையிலிருந்தனர். பழைய நிலமானிய முறையிலேயே சாகுபடி செய்யப்பட்டது. வியாபாரமும் கைத்தொழிலும் மிகவும் பின் தங்கிய நிலையிலேயே இருந்தன.

பேட்டர்ஸன் (Paterson) என்ற பொருளாதார நிபுணர் ஸ்காட்லாந்தின் வருமானத்தை வளர்க்க ஓர் திட்டம் வகுத்தார். அதுவே டேரியன் திட்டம் எனப்படும். அதன்படி பனமா பூசந்திக் கருகில் டேரியன் என்ற இடத்தில் ஸ்காட்லாந்தியர் குடியேற முயற்சித்தனர். அக் குடியேற்றத்தின் மூலம் அட்லான்டிக், பசிபிக் என்ற இரு பெருங்கடல்கள் மூலமாகவும் உலக வியாபாரத்தில் ஈடுபடலாமென ஸ்காட்லாந்தியர் நினைத்தனர். ஸ்பானியர்கள் இத்திட்டத்தை எதிர்த்தனர். தங்கள் வியாபாரத்திற்கு அத் திட்டத்தால் தீங்கு நேருமென அவர்கள் அஞ்சினர். மூன்றும் வில்லியமும் இத் திட்டத்தை ஆதரிக்கவில்லை. ஏனெனில், அவர் அப்போதுதான் ஸ்பெயினோடு சமாதானப் பேச்சு வார்த்தைகளை நடத்திக்கொண்டிருந்தார். மேலும், குடியேற்றத்திற்காகக் குறிக்கப்பெற்ற இடமும் சுகாதார வசதி சிறிதும் இல்லாததாய் இருந்தது. தட்பவெப்ப நிலையும் குடியேறிகளுக்குச் சாதகமாயில்லை. இயற்கையும் மனிதனும் இங்ஙனம் தடை செய்த காரணத்தால் டேரியன் திட்டம் தோல்வியில் முடிந்தது. டேரியன் கம்பெனி மூடப்பட்டது. அதில் பங்குதாரர்களாகச் சேர்ந்தவர்கள் பெரு நஷ்டத்துக்கு உள்ளானார்கள். இந் நஷ்டத்திற்குக் காரணம் மூன்றும் வில்லியமே என ஸ்காட்லாந்தியர் நினைத்தனர். வில்லியத்தின் மீது அவர்களுக்குக் கோபம் அதிகரித்தது.

**ஐக்கியத்திற்கு இட்டுச் சென்ற நிகழ்ச்சிகள்**

மேற்சொன்ன காரணங்களால் ஸ்காட்லாந்து இங்கிலாந்தி னின்றும் பிரிந்துவிட விரும்பியது. 1671 ஆம் ஆண்டு ஆங்கில வாரிசு உரிமைச் சட்டமானது வில்லியத்துக்குப் பின் இங்கிலாந் துக்கு யார் அரசராக வருவது என்பதைத் தீர்மானித்தபோது ஸ்காட்லாந்தியர் வாளாவிருந்தனர். இங்கிலாந்தைப் பின்பற்றி வாரிசு உரிமைச் சட்டத்தை அவர்கள் தங்கள் பாராளுமன்றத்தில் நிறைவேற்றவில்லை. அதன்பின் ஆன் இராணியார் இங்கிலாந் துக்கு அரசியானர். அதை ஸ்காட்லாந்தியர் மறுக்கவில்லை. ஆனல், ஆன் இராணிக்குப் பின் ஹெனேவரியர்கள் இங்கிலாந் தின் மன்னர்களாக வருவதை அவர்கள் ஒட்புக்கொள்வார்களா என்பது சந்தேகமாயிருந்தது. ஏனெனில் 1703 ஆம் ஆண்டு, ஸ்காட்லாந்தியப் பாராளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்ட பாதுகாப் புச் சட்டமானது (Act of Security) ஸ்காட்லாந்தியர் தங்களுடைய அரசனைத் தங்கள் பிரியப்போல் தேர்ந்தெடுத்துக்கொள்ள உரிமை உண்டென்று கூறியது. மேலும், ஆன் இராணியின் மரணத்திற்குப் பின் இங்கிலாந்துக்கும் ஸ்காட்லாந்துக்கும் கட்டுப்பாடற்ற வியா பாரத்தை ஏற்படுத்துபவரே ஸ்காட்லாந்தின் மன்னராக அங்கீகரிக் கப்படுவர் என்று அச் சட்டம் கூறியது. இதைக் கண்ட ஆங்கி லேயர் அச்சமுற்றனர். ஸ்காட்லாந்தியர் ஸ்டூவர்டு மன்னர்களை மீண்டும் இங்கிலாந்தின் அரசராக்க முயற்சி செய்யக்கூடுமென எண்ணிய ஆன் இராணியார் அச்சட்டத்தை ரத்துசெய்தார். ஆனல், 1704 ஆம் ஆண்டில் மீண்டும் அச்சட்டமானது ஸ்காட் லாந்தியப் பாராளுமன்றத்தால் நிறைவேற்றப்பட்டது. மீண்டும் அதை ரத்து செய்தால் இரு நாடுகள் இடையே போர் ஏற்பட்டு விடுமோ என ஆன் இராணியார் பயந்தார். அப்போது இங்கிலாந் தின் படைகள் ஃபிரான்ஸில் போரிட்டுக்கொண்டிருந்தன. இங்கி லாந்து அங்கு வெற்றிபெறுமா என்பதே அப்போது சந்தேகமா யிருந்தது. எனவே, இராணியார் பாதுகாப்புச் சட்டத்துக்குத் தமது ஒப்பத்தைத் தெரிவித்தார். 1705 ஆம் ஆண்டில் ஆங்கிலப் படைகள் பிளென்ஹீம் (Blenheim) போர்க்களத்தில் பெருத்ததோர் வெற்றிபெற்றனர். அதன்பின் ஸ்காட்லாந்தியரை அடக்க ஆன் இராணிக்கு அவகாசம் கிடைத்தது. ஸ்காட்லாந்தின் மீது போர் தொடுக்க 1705 ஆம் ஆண்டு ஆயத்தங்கள் செய்யப்பட் டன. ஸ்காட்லாந்தின் எல்லைப்புறக் கோட்டைகள் பலப்படுத்தப்பட் டன. அவற்றில் போர்வீரர்கள் நிறைக்கப்பட்டனர். வியாபாரப் பொருள்கள் பல ஸ்காட்லாந்துக்குச் செல்வது தடுக்கப்பட்டது. எந்த நேரத்திலும் போர் மூளக்கூடிய அபாயம் ஏற்பட்டது. போர் ஏற்பட்டால் அதனல் இரு நாடுகளுக்கும் நன்மைக்குப் பதில் தீமையே அதிகம் விளையுமெனப் பல அரசியலறிஞர்கள் கருதினர்.

அவர்கள் உடனே இரு நாடுகளுக்கும் ஐக்கியத்தை ஏற்படுத்தப் பேச்சுவார்த்தைகளைத் தொடங்கினர். இறுதியில் அவர்கள் வெற்றியும் பெற்றனர்.

### ஸ்காட்லாந்து ஐக்கியச் சட்டம்

1707ஆம் ஆண்டு ஐக்கியச் சட்டமானது இரு நாடுகளின் பாராளுமன்றங்களிலும் தடையின்றி நிறைவேறியது. இச்சட்டத்தின் முக்கியமான ஷரத்துகள் வருமாறு :

இங்கிலாந்தும் ஸ்காட்லாந்தும் ஒரே இராஜ்யமாகக் கருதப்படும். அஃது கிரேட் பிரிட்டன் என அழைக்கப்படும். இரு நாடுகளுக்கும் சேர்ந்து ஒரே பாராளுமன்றம், ஒரே சேனை, ஒரே கொடிதான் இருக்கவேண்டும். இங்கிலாந்தின் அரசியான ஆன் இராணியாரே ஸ்காட்லாந்தின் இராணியாவார். இராணியாருக்குப் பின் அரசுரிமை நிர்ணயச் சட்டத்தின்படி யார் பட்டத்துக்கு வருவது என்பது தீர்மானிக்கப்பட வேண்டும். இரு நாட்டுக்கும் தனித் தனிச் சட்டங்களும் நீதிமன்றங்களும், திருச்சபைகளும் இருக்க வேண்டும். கிரேட் பிரிட்டனின் பாராளுமன்றம் வெஸ்ட்மினிஸ்டர் நகரில் கூடும் அதில் உள்ள இரு சபைகளிலும் ஸ்காட்லாந்தியர் இடம்பெறுவர். 16 பிரபுக்களைப் பிரபுக்கள் சபைக்கும், 45 உறுப்பினர்களைப் பொதுமக்கள் சபைக்கும் தேர்ந்தெடுத்தனுப்பும் உரிமை ஸ்காட்லாந்துக்கு உண்டு. இரு நாடுகளுக்கிடையே தடையிலா வாணிபம் நடைபெற வேண்டும். ஆங்கிலப் பாராளுமன்றமானது ஸ்காட்லாந்தின் பொருளாதார முட்டுப்பாட்டைத் தீர்க்க நான்கு லட்சம் பவுன்களை மானியமாக அளிக்க வேண்டும்.

### ஐக்கியத்தின் விளைவுகள்

இவ் ஐக்கியத்தினால் இரு நாடுகளுக்கும் பல நன்மைகள் விளைந்தன. ஸ்காட்லாந்தியர் தங்களது திருச்சபைகளையோ அவர்களது தனிப்பட்ட பண்புகளையோ மாற்றிக்கொள்ளாமல் பொருளாதாரத் துறையிலும் அரசியற்றுறையிலும் முன்னேற இந்த ஐக்கியம் வழிவகுத்தது. இரு நாடுகளும் ஒற்றுமையாக உழைத்ததன் காரணமாக உலகத்திலேயே ஓர் தலைசிறந்த பேரரசாகப் பிரிட்டன் திகழ முடிந்தது. இங்கிலாந்து தனது வடக் கெல்லையைப்பற்றிக் கவலைப்பட்டுக்கொண்டு இராமல் தனது மற்றைய அலுவல்களைத் திறம்படச் செய்யமுடிந்தது. ஸ்காட்லாந்தில் நிலவிய உயர்ந்த கல்வி முறையின் காரணமாகப் பல அறிஞர்கள் அங்குத் தோன்றினர். அவ்வறிஞர்களின் அருஞ்சேவைகளை இங்கிலாந்து பெற்றது. அதேபோன்று இங்கிலாந்து நாட்டின் ஒழுங்கும் கட்டுப்பாடும் நிறைந்த அரசியல் நிர்வாக அமைப்பு

ஸ்காட்லாந்துக்குக் கிடைத்தது. ஸ்காட்லாந்தில் பல கைத்தொழில்கள் வளர்ந்தன. கிளைட் நதிப் பள்ளத்தாக்கு (Clyde Valley) ஓர் கைத்தொழில் செறிந்த பிரதேசமாக மாறியது. ஜேகோபைட்டுகள் மீண்டும் தலை தூக்குவதற்கு வழி இல்லாமல் மன்னரின் நிலைமை பெரிதும் உறுதியுற்றது.

இங்ஙனம் ஐக்கியச் சட்டத்தால் இரு நாடுகளுக்கும் நன்மைகள் பல விளைந்ததேனும் ஒரு சில தீமைகளும் அதனால் விளைந்தன.

ஸ்காட்லாந்தின் வட பகுதியில் வாழ்ந்த ஹைலாந்தியர்கள் நாகரிகமற்றவர்களாய்க் காட்டுமிராண்டிகளைப் போல் வாழ்ந்தனர். கொள்ளையடிப்பதும், கொலை செய்வதும் அவர்களுக்கு இயல்பாய். இருந்தது. அவர்களைப் பண்படுத்த ஒரு முயற்சியும் எடுத்துக்கொள்ளப்படவில்லை. அவர்களுக்கும் லோலாந்தியர்கள் எனும் ஸ்காட்லாந்தியப் பிரிவினர்க்கும் ஓயாமல் சண்டைகள் நிகழ்ந்து வந்தன. 18 ஆம் நூற்றாண்டிலேயே ஹைலாந்தியர்களின் கொட்டம் அடக்கப்பட்டு ஸ்காட்லாந்தியர் இடையே ஓர் தேசிய உணர்ச்சி தோன்றியது. அதன்பின்னர் ஸ்காட்லாந்தின் பொருளாதார வளம் செறிந்த தற்கால ஸ்காட்லாந்து தோன்றிற்று.

## ஸ்டூவர்ட்டுகளும் அயர்லாந்தும்

ஸ்டூவர்ட்டுகள் காலத்து, இங்கிலாந்துக்கும் அயர்லாந்துக்கும் ஏற்பட்ட உறவு பெரும்பாலும் ஒரு தாய்நாட்டுக்கும் குடியேற்ற நாட்டுக்கும் ஆரம்பத்தில் இருக்கக் கூடிய தொடர்பைப்போன்றே இருந்தது. இங்கிலாந்தின் நன்மைக்காக அயர்லாந்து சுரண்டப்படுவதையே நாம் டியூடர்களின் காலத்தும், ஸ்டூவர்ட்டுகளின் காலத்தும் காண்கிறோம். அயர்லாந்தியர்களிற் பெரும்பான்மையோர் கத்தோலிக்கர்கள். டியூடர்கள் கடைப்பிடித்த மதச் சீர்திருத்தக் கொள்கையை அவர்கள் வெறுத்தனர். எனவே, அவர்கள் பெரிதும் துன்புறுத்தப்பட்டனர். அவர்களின் நிலங்களைப் பிடுங்கி டியூடர்கள் தாராளமாகத் தம் நண்பர்களுக்கு வழங்கினார்கள். இதனாலெல்லாம் கொதிப்படைந்த அயர்லாந்தியர் பல கலகங்களிலீடுபட்டனர். இராணி எலிஸபெத்தின் காலத்தில் ஹியூக் (Hugh), ஓநீல் (O'Neil) என்ற பிரபுக்களின் தலைமையில் ஓர் பெருங் கலகம் தோன்றியது. ஆனால், அஃது மௌண்ட் ஜாய் (Lord Mount Joy) பிரபுவால் நன்கு ஒடுக்கப்பட்டது.

### முதலாம் ஜேம்ஸ்—அல்ஸ்டர் குடியேற்றம் (1610)

டியூடர்கள் காலத்து அடிக்கப்பட்ட அயர்லாந்துப் பாம்பு, அப்போதைக்கு அடங்கிவிட்டாலும் சாகவில்லை. ஜேம்ஸ் ஸ்டூவர்ட்டு

காலத்து மறுபடியும் அது சீற ஆரம்பித்தது. சர் ஆர்தர் சிச்செஸ்டர் (Sri Arthur Chichester) என்ற பிரபு அயர்லாந்தின் டெபுடி பிரபுவாயிருந்தபோது, ஓநீல் தலைமையில் அயர்லாந்தியர் கலகம் விளைவித்தனர். இச்சமயமும் கலகம் அடக்கப்பட்டது. ஓநீல் நாட்டைவிட்டே துரத்தப்பட்டார். அவருடைய நிலங்கள் யாவும் பறிமுதல் செய்யப்பட்டன. அவருடைய சகாக்களின் நிலங்களும் அங்ஙனமே பறிமுதல் செய்யப்பட்டன. 1610 ஆம் ஆண்டில் அல்ஸ்டர் (Ulster) பிரதேசத்திலே பல ஆங்கிலேயர் குடியேற்றப் பட்டனர். அங்கிருந்த ஓநீலின் நிலபுலன்கள் ஆங்கில ஸ்காட்லாந்திய பியூரிட்டன்களுக்குத் தாராளமாக வழங்கப்பட்டன. இங்ஙனம் ஏற்பட்ட பலவந்தக் குடியேற்றத்தால் அயர்லாந்தில் நிரந்தரமான பிளவு ஏற்பட்டது. பெரும்பான்மையினரான அயர் லாந்துக் கத்தோலிக்கருக்கு விரோதமாக நடந்துகொண்டு, ஆங்கிலேயர்களுக்குச் சாதகமாக நடக்கும் ஒரு கூட்டம் அங்கு நிலையாக வேரூன்ற ஜேம்ஸ் வழிவகுத்தார். இந்தியாவில் பாகிஸ்தானைப் போல் அயர்லாந்தில் அல்ஸ்டர் விளங்குகிறது. அல்ஸ்டரில் தம் நிலங்களை இழந்த அயர்லாந்துக் கத்தோலிக்கர் கன்னுட் என்ற பிரதேசத்துக்குச் சென்றுவிட்டனர். ஆங்கிலேயர் தாம் குடியேறிய பகுதியை நன்கு வளம்பெறச் செய்தார்கள். காடுமேடாய்க் கிடந்த பிரதேசம் செல்வம் கொழிக்கும் செழிப்பான பிரதேசமாக மாற்றப்பட்டது.

### முதலாம் சார்லஸ்

சார்லஸின் காலத்தில் அயர்லாந்தின் டெபுடி பிரபுவாக (Lord Deputy) ஸர் தாமஸ் வென்ட்வொர்த் நியமிக்கப்பட்டார். அப்போது அங்கு எங்குப் பார்த்தாலும் அமைதியின்மையே காணப்பட்டது. அவற்றையெல்லாம் வென்ட்வொர்த் அடக்கி அமைதியையும் ஒழுங்கையும் நிலைநாட்டினுர். திருடர்களும், கடற்கொள்ளைக் காரர்களும் ஒழிக்கப்பட்டனர். அயர்லாந்தின் பொருளாதார நிலை பெரிதும் முன்னேற்றமடைந்தது. சணல் நார்க் கைத்தொழிலையும், லினன் துணி நெய்தலையும், அவர் வளர்த்தார். இங்கிலாந்தில் இருந்தது போன்று பிராடெஸ்டண்டு மதத்தை அங்குப் புகுத்த முயன்றுர். அயர்லாந்தின் பாராளுமன்றத்தைக் கூட்டி, அது பல நல்ல சட்டங்களை இயற்றும்படி செய்தார். இங்ஙனம் அயர்லாந்துக்கு நல்ல பல தொண்டுகளைச் செய்த வென்ட்வொர்த் ஓர் யதேச்சாதிகாரிபோல் நடந்துகொண்டார். தமது எதிரிகளை அவர் மிகவும் கொடுமைப்படுத்தினுர். கடைசியில் அவர் கன்னுட் பிரதேசத்திலிருந்த கத்தோலிக்கர்களை வெளியேற்றிவிட்டு ஆங்கு பிராடெஸ்டண்டுகளைக் குடியேற்ற முயன்றுர். அவரது முயற்சி வெற்றிபெறு முன் அவர் இங்கிலாந்துக்கு அழைக்கப்பட்டுச் சிரச்சேதம் செய்யப்

பட்டார். 17ஆம் நூற்றுண்டுக் காலத்து அயர்லாந்து வென்ட் வொர்த் போன்றவர்களின் கடுமையான ஆட்சியையே வேண்டி நின்றது. ஏனெனில், அப்போது அங்குக் கட்டுப்பாடும் ஒழுங்கும் மருந்துக்குக்கூட இல்லை. அயர்லாந்தியர் நாகரிகமற்றவர்களாய், ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக்கொண்டிருந்தனர். தேசிய உணர்ச்சி யென்பது ஒரு சிறிதும் அவர்களிடம் காணப்படவில்லை. இத்தகைய அயர்லாந்தைப் பல வென்ட்வொர்த்துகள் வரிசையாக ஆண்டிருப்பின் அது அந்நாட்டின் எதிர்கால நலத்துக்கு எவ்வளவோ உதவியா யிருந்திருக்கும்.

வென்ட்வொர்த் இங்கிலாந்து திரும்பிய ஐந்தே மாதங் களுள் அயர்லாந்து மீண்டும் அல்லோலகல்லோலப் பட்டது. அடக்கப்பட்ட கத்தோலிக்கர்கள் சீறியெழுந்து பிராடெஸ் டண்டுகள் நிறைந்த அல்ஸ்டர் பிரதேசத்தைத் தாக்கினர். அங்கு வசித்துவந்த சுமார் 3,000 பியூரிட்டன்கள் கொல்லப்பட்டனர். எஞ்சியிருந்தவர்களின் சொத்துகள் பறிமுதல் செய்யப்பட்டன. 1643-ல் இக்கலகம் உச்சநிலையை யடைந்தது. நீடித்த பாராளு மன்றம், கத்தோலிக்கருக்கு அயர்லாந்தில் சமயப்பொறை வழங்கக் கூடாதென்றும், அவர்களது நிலங்கள் பறிக்கப்பட்டு இங்கிலாந் தின் ஆதரவாளர்களுக்குத் தரப்பட வேண்டுமெனவும் இரு சட்டங்களை இயற்றியது. இதனால் கத்தோலிக்கரின் கோபம் மேலும் அதிகமாயிற்றே யொழியக் குறையவில்லை. சார்லஸ் தமது உள்நாட்டுச் சிக்கல்கள் காரணமாக அயர்லாந்தோடு ஓர் போர் நிறுத்த உடன்படிக்கையைச் (Cessation) செய்துகொண்டார். அதன்படி கத்தோலிக்கத் திருச்சபை அயர்லாந்தில் மீண்டும் நிறுவப்பட்டது. போப்பாண்டவரின் தூதர் ஒருவர் அயர்லாந்துக்கு வரவழைக்கப்பட்டார். ஒரு சில கத்தோலிக்கர்கள் பாராளு மன்றத்துக்கு விரோதமாகச் சார்லஸுக்கு உதவி செய்தார்கள். கத்தோலிக்க மதம் இங்ஙனம் அயர்லாந்தில் வெற்றிபெற்ற வேளை யில் அதன் தலைவர்கள் ஒருவருக்கொருவர் போரிட்டுக் கொண்டனர். கடைசியில் ஆர்மான்ட் பிரபு எனும் அரசரது ஆதரவாளர் அயர்லாந்தின் தலைமையைப் பெற்று அரசாண்டார். சார்லஸ் சிரச்சேதம் செய்யப்பட்டவுடன் அயர்லாந்தியர் இரண் டாம் சார்லஸைத் தங்களது அரசரென அறிவித்துக்கொண்டனர்.

## கிராம்வெல்

1649-ல் கிராம்வெல் தமது புதுமாதிரிப் படையுடன் அயர் லாந்துக்குள் நுழைந்து வெக்ஸ்ஃபோர்டு (Wexford), டிரொஹிடா (Drogheda) என்னும் இடங்களில் ஆர்மான்ட் பிரபுவால் திரட்டி வைக்கப்பட்டிருந்த துருப்புகளைக் கொன்று குவித்து அவ்விடங்

களைக் கைப்பற்றினர். ஆர்மாண்ட் பிரபு அயர்லாந்தை விட்டு ஓடிப்போய்விட்டார். கத்தோலிக்க மதம் மீண்டும் நசுக்கப் பட்டது. கத்தோலிக்கர்களது நிலங்கள் பிடுங்கப்பட்டுக் கிராம் வெல்லின் ஆதரவாளர்களுக்குத் தரப்பட்டன. அல்லது போர் வீரர்களுக்கு அவர்களது சம்பளத்துக்குப் பதிலாக அவை விற்கப் பட்டன. ஐர்டன் (Ireton), அவருக்குப் பின்வந்த லட்லோ (Ludlou) போன்ற கவர்னர்களின் கண்டிப்பான ஆட்சியால் அயர் லாந்தில் ஒழுங்கும் கட்டுப்பாடும் ஏற்படுத்தப்பட்டன. ஆனால், கிராம்வெல்லின் செயல்களை அயர்லாந்தியர் பெரிதும் வெறுத்து வந்தனர். கிராம்வெல் கொணர்ந்த துரைத்தன அமைப்புப் பத்திரத் தின்படி (Instrument of Government) அயர்லாந்து இங்கிலாந் தோடு இணைக்கப்பட்டது; இங்கிலாந்தின் பாராளுமன்றத்துக்கு அயர்லாந்து நாற்பது உறுப்பினர்களை அனுப்பியது. இரு நாடு களிடையே கட்டற்ற வாணிபத் (free trade) தொடர்பு ஏற்பட்டது. இங்ஙனம் இவ்விரு நாடுகளுக்கும் பலவந்தமாக ஏற்பட்ட ஐக்கிய மானது இரண்டாம் சார்லஸ் பட்டத்துக்கு வந்தவுடன் சிதைந்தது. அயர்லாந்து இங்கிலாந்தினின்றும் பிரிந்து தனி நாடாகியது.

### இரண்டாம் சார்லஸ்

தமக்கு மிகவும் ஆதரவாயிருந்த ஆர்மாண்ட் பிரபுவை இரண் டாம் சார்லஸ் அயர்லாந்தின் கவர்னராக்கினர். லெப்டெனண்ட் பிரபு (Lord Lieutenant) என்ற பட்டம் அவருக்களிக்கப்பட்டது. அயர்லாந்தின் பாராளுமன்றமும் அரசாட்சியும் மீண்டும் அதிகாரம் பெற்றன. எனினும், இங்கிலாந்தின் பிரிவி கவுன்ஸிலே அயர்லாந் தின் பாராளுமன்றத்தைக் கட்டுப்படுத்திவந்தது. அதன் அனுமதி யின்றி அயர்லாந்தின் பாராளுமன்றம் ஒரு சட்டத்தையும் இயற்ற முடியாத நிலைமையிலிருந்தது. இரண்டாம் சார்லஸ் ஒரு கத்தோ லிக்கர். அவர் பட்டத்துக்கு வந்ததால் தங்களிடமிருந்து கிராம் வெல்லால் பறிக்கப்பட்ட நிலங்களை எல்லாம் அவர் மீட்டுத் தந்து விடுவார் என அயர்லாந்துக் கத்தோலிக்கர் நினைத்தனர். ஆனால், சார்லஸ் நிலச்சிக்கலைப் பொறுத்தவரையில் இருதலைக் கொள்ளி எறும்புபோல் தத்தளித்தார். பியூரிட்டன் போர் வீரர்களிடமிருந்து நிலங்களைப் பிடுங்கி, அதன்மூலம் அவர்களைப் பகைத்துக்கொள்ள வும் அவர் பயந்தார். அதே சமயம் கத்தோலிக்கருக்கு நியாயம் வழங்கவும் விரும்பினர். பியூரிட்டன்களிடமிருந்து நிலங்களைப் பிடுங்காமல், அரசனை எதிர்த்தவர்களிடமிருந்து மட்டும் நிலங் களைப் பறிமுதல் செய்து கத்தோலிக்கர்களுக்கு அவர் அளித்தார். இருசாராரையும் திருப்தி செய்யுமளவு அயர்லாந்தில் நிலமில்லை. எனவே, பியூரிட்டன்களிடமிருந்து மூன்றில் ஒருபங்கு நிலங்களைப் பறிமுதல் செய்து, அவற்றைக் கத்தோலிக்கர்களுக்கு ஆர்மாண்ட்

பிரபு வழங்கினர். அயர்லாந்தின் கத்தோலிக்கத் திருச்சபை மீண்டும் அயர்லாந்தில் ஏற்பட்டது. சட்டத்தால் அனுமதிக்கப் படாவிடினும் கத்தோலிக்க வழிபாடு தடையின்றி நிகழ்ந்து வந்தது.

## இரண்டாம் ஜேம்ஸ்

இரண்டாம் ஜேம்ஸ் காலத்தில் டிர்க்கோனெல் எர்ல் கோமானுகிய ரிச்சர்ட் டால்போட் (Richard Talbot, Erl of Tyrconell) அயர்லாந்தின் லெப்டெனண்ட் பிரபுவாக நியமிக்கப்பட்டார். அவர் ஓர் ரோமன் கத்தோலிக்கர். எனவே, அம் மதம் அயர்லாந்தில் புத்துயிர் பெறுவதை அவர் ஆதரித்தார். அவர் ஒரு நிலைப் படையை அயர்லாந்தில் ஏற்படுத்தினர். இங்கிலாந்திலின்றும் அயர்லாந்தைப் பிரித்துவிட வேண்டுமென்று அவர் விரும்பினர். கத்தோலிக்கர் இழந்த நிலங்களை அவர்களுக்கே மீட்டுத் தர வேண்டுமெனத் திட்டமிட்டார். ஜேம்ஸ் நாட்டைவிட்டு ஓடிய போது தமது எண்ணங்களைச் செயல்படுத்த அதுவே தக்கதருணம் என அவர் எண்ணினர். ஆனல், அவரது உதவியை நாடி ஜேம்ஸ் ஃபிரான்ஸிலிருந்து ஒரு படையுடன் அயர்லாந்துக்கு 1689-ல் வந்திறங்கினர். பொது எதிரியாகிய வில்லியத்துக்கு விரோதமாக டால்போட்டும் ஜேம்ஸும் ஒன்று சேர்ந்தனர். எனினும், ஜேம்ஸ் தோற்கடிக்கப்பட்டு நாட்டைவிட்டோடிவிட்டார்.

## மூன்ரும் வில்லியம்

1691 ஆம் ஆண்டுக்குள் மூன்ரும் வில்லியம் அயர்லாந்தியரின் எதிர்ப்பை ஒழித்தார். இரு நாடுகளும் லிமெரிக் (Limerick) எனுமிடத்தில் ஓர் உடன்படிக்கையைச் செய்துகொண்டன. அதன்படி அயர்லாந்தைவிட்டு வெளியேற விரும்பும் கத்தோலிக்கர் அங்ஙனம் செய்ய அனுமதிக்கப்பட்டனர். அயர்லாந்திலேயே இருக்க விரும்பிய கத்தோலிக்கர்களுக்கு இரண்டாம் சார்லஸ் காலத்து வழங்கப்பட்ட உரிமைகள் தரப்பட்டன. பிராடெஸ்டண்டுகள் தமது உரிமைகளை முற்றும் பெற்றனர். வில்லியம் சமயப் பொறைக் கொள்கையையே அயர்லாந்தில் கடைபிடிக்க விரும்பினர். ஆனல், பிராடெஸ்டண்டுகளான அயர்லாந்துப் பாராளுமன்ற உறுப்பினர்கள் கத்தோலிக்கரைத் துன்புறுத்தவேண்டிப் பல சட்டங்களை இயற்றினர். அவைகளுக்குத் தண்டனைச் சட்டத் தொகுதி (Penal Code) எனப் பெயர். இச் சட்டத் தொகுதியின்படி கத்தோலிக்கர்கள் பாராளுமன்றத்திலும், நகராட்சி மன்றங்களிலும், சேனையிலும் பதவி மறுக்கப்பட்டனர். ஜூரிகளாகவும், ஆசிரியர்களாகவும் பணியாற்றுவதற்குக்கூட அவர்கள் அனுமதிக்கப்பட

வில்லை. தங்களது பிரியம்போல் தங்களது மதக் கொள்கைகளைக் கடைப்பிடிக்கவும் அவர்களுக்குச் சுதந்திரம் மறுக்கப்பட்டது. பிரியம்போல் நிலம் வாங்கவும், சமூக வாழ்க்கை நடத்தவும் அவர்கள் தடை செய்யப்பட்டனர். புகழ்பெற்ற புரட்சியால் அயர்லாந்தியர்களுக்குத் துன்பமேயன்றி இன்பம் எதுவும் கிட்டவில்லை. தண்டனைச் சட்டத் தொகுதியால் பிராடெஸ்டண்டுகளும் நாளடைவில் கெட்டுப் போயினர். அவர்கள் தங்கள் நிலங்களை விட்டு விட்டு நகர்ப்புறங்களில் உல்லாச வாழ்க்கை வாழ்ந்தனர். குடியானவர்களை அவர்கள் அடிமைகள் போல் நடத்தித் துன்புறுத்தினர். நிலக் குத்தகையை வசூலிக்கப் பல நடுவர்கள் (Middlemen) நியமிக்கப்பட்டதால் குடியானவர்களின் வரிச்சுமை அதிகமாயிற்று. அயர்லாந்துப் பாராளுமன்றத்தில் லஞ்ச ஊழல் தலைவிரித்தாடியது. பெரும்பான்மையினரான கத்தோலிக்கர் அரசியல் அதிகாரமெதுவுமின்றி வாடினர். சட்டத்தால் தங்களுக்குப் பாதுகாப்பில்லை என அறிந்த அவர்கள் இரகசியச் சங்கங்கள் பலவற்றைத் தோற்றுவித்தனர். அயர்லாந்தில் ஆங்கிலிக்கர்கள் மதத்தவரல்லாத மற்றைய பிராடெஸ்டண்டுகளும் பல இன்னல்களுக்காளாயினர். இங்கிலாந்துக்கும் அயர்லாந்துக்குமிருந்த கட்டுப்பாடற்ற வாணிபமும் நின்றது. நாவாய்ச் சட்டமானது அயர்லாந்தின் துணிகளும் ஆட்டு உரோமமும் இங்கிலாந்தைத் தவிர மற்றைய நாடுகளுக்கு அனுப்பப்படுவதைத் தடை செய்தது. இதனால் அயர்லாந்தில் இலாபம் குறைந்தது. இங்ஙனம் அயர்லாந்தியர் நாற்புறமும் துன்புறுத்தப்பட்டு, வசதியற்ற வாழ்க்கையையே 18ஆம் நூற்றாண்டில் பெற்று வாழ்ந்தனர்.

# 20. ஸ்டூவர்ட்டுகள் காலத்துக் குடியேற்ற நாட்டுப் பெருக்கம்

குடியேற்ற நாடுகளின் வளர்ச்சிக்குக் காரணங்கள்

ஸ்பெயினும் போர்ச்சுகலும்

இங்கிலாந்து-ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனி

பிரான்ஸ், ஹாலந்து, ஸ்விடன்

வட அமெரிக்காவில் ஆங்கிலேயர் குடியேற்றம்

ஸ்டூவர்ட்டு மன்னர்களும் குடியேற்ற நாடுகளும்

தாய்நாடு-குடியேற்ற நாட்டுத் தொடர்பு

குடியேற்ற நாட்டு அரசாங்கம்

குடியேற்ற நாடுகளின் தன்மை

பிரிட்டிஷ் பேரரசின் வரலாற்றில் ஸ்டூவர்ட்டுகளின் காலம் மிகச் சிறந்த இடத்தைப் பெறுகின்றது. அப்பேரரசின் வரலாறே ஸ்டூவர்ட்டுகளின் காலத்திலிருந்துதான் தொடங்குகிறது எனலாம். டியூடர்களின் காலத்தில், சிறப்பாகக் கன்னி இராணி எலிஸபெத்தின் காலத்தில், வாணிபத்தை வளர்க்கவும், குடியேற்ற நாடுகளை நிறுவவும் ஒரு சில முயற்சிகள் நடைபெற்றன. ஆனால், அவை நிலையான பயன் எதையும் உண்டாக்கவில்லை. எலிஸபெத் இராணியார் இறந்தபோது இங்கிலாந்துக்கு வெளிநாட்டில் ஒரு குடியேற்ற நாடேனும் இல்லை. எனினும், ஸ்டூவர்ட்டுகள் காலத்தில் இந்தியாவிலும் அமெரிக்காவிலும் பற்பல குடியேற்ற நாடுகள் நிறுவப்பெற்றன. எலிஸபெத்தின் காலத்தில் ஆரம்பிக்கப் பெற்ற கடல் வாணிபமும் நன்கு வளர்ச்சி பெற்றது ஸ்டூவர்ட்டுகள் காலத்தில்தான். டியூடர்கள் பிரிட்டிஷ் வாணிப வளர்ச்சிக்கும் குடியேற்ற நாட்டுப் பெருக்கத்துக்கும் வித்திட்டார்கள். ஆனால், அதைப் பற்பல கிளைகளையுடைய பெருமரமாக வளர்த்த பெருமை ஸ்டூவர்ட்டுகளுக்கே உரியதாகும்.

## குடியேற்ற நாடுகளின் வளர்ச்சிக்குக் காரணங்கள்

இங்ஙனம் ஸ்டூவர்ட்டுகள் காலத்தும் பல குடியேற்ற நாடுகள் ஏற்பட்டதற்கு முக்கிய காரணங்கள் டியூடர்கள் காலத்தில் நாட்டின் செல்வ நிலை உயர்ந்ததும் ஸ்பெயின் தேசத்தோடு நடைபெற்ற போருமாகும். ஸ்பெயினோடு போட்டி போட்டு அதன் அதிகாரத்தையும் செல்வாக்கையும் ஒழிக்க விரும்பிய இங்கிலாந்து அதற்கேற்பத் தன் குடியேற்ற நாடுகளைப் பெருக்கிக் கொள்ள முயன்றது. மேலும், ஸ்டூவர்ட்டுகள் காலத்தில் இங்கிலாந்தின் பொருளாதாரத் துறையில் நிலவிய அதிருப்தியும், சமயத் துறையில் மன்னர்கள் சகிப்புத்தன்மை இன்றி நடந்துகொண்டதால் மக்களுக்கு ஏற்பட்ட மனக்கசப்பும், மறைமுகமாகக் குடியேற்ற நாட்டு வளர்ச்சிக்கு உதவி புரிந்தன. நாட்டில் வளர்ந்து கொண்டே வரும் மக்கள் தொகைப் பிரச்சினையைத் தீர்க்கவும் குடியேற்ற நாடுகள் அவசியமாயின. மேலும் கிறிஸ்தவ மதத்தை உலகெங்கும் பரப்பி அநாகரிகமானவர்களை எல்லாம் நாகரிகமாக்கிவிடவேண்டுவது 'வெள்ளையரின் பொறுப்பு' (White-man's burden) என எண்ணிய பல சமயப் பித்தர்களின் ஊக்கமும் குடியேற்ற நாட்டு வளர்ச்சிக்கு உறுதுணையாயிற்று.

## ஸ்பெயினும் போர்ச்சுகலும்

பதினாறும் நூற்றாண்டில் ஸ்பெயினும் போர்ச்சுகலும்தான், வியாபாரத்திலும், குடியேற்ற நாடுகளை நிறுவுவதிலும் தனியுரிமை பெற்று விளங்கின. அக்காலத்து ஸ்பெயின் தனது ஆதிக்கத்தை ஏறக்குறைய தென் அமெரிக்கா முழுவதிலும் (பிரேஸிலைத் தவிர்த்து), மெக்ஸிகோ, மேற்கிந்தியத் தீவுகள் ஆகிய இடங்களிலும் பரப்பிவிட்டது. போர்ச்சுகல் தேசமானது பிரேஸில் (Brazil), கிழக்கிந்தியத் தீவுகள், ஆப்பிரிக்கா, இந்தியா போன்ற நாடுகளில் பல குடியேற்ற நாடுகளை நிறுவியது. பிரெஞ்சுக்காரர்கள் வட அமெரிக்காவைக் கைப்பற்ற முயன்றார்கள். ஆனால், அவர்களது முயற்சி தோல்வியுற்றது. 1580ஆம் ஆண்டில் போர்ச்சுகல் நாடு ஸ்பெயின் வசமாயிற்று. எனவே, ஸ்பெயின் உலகிலேயே வியாபாரத்திலும் குடியேற்ற நாட்டு வளர்ச்சியிலும் தலைசிறந்த நாடாய் விளங்கியது. மற்ற நாடுகளோடு தனது குடியேற்ற நாடுகள் வியாபாரம் செய்வதை ஸ்பெயின் தடை செய்தது. இங்கிலாந்தும் ஹாலந்தும் ஸ்பெயினோடு அப்போது போரிட்டுவந்தன. ஸ்பெயினின் வியாபாரத் தனியுரிமையை ஒழிக்க அவ்விரு நாடுகளும் கங்கணம் கட்டிக்கொண்டன.

## இங்கிலாந்து – ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனி

1600ஆம் ஆண்டு டிசம்பர் 31ஆம் தேதியான பதினாறும் நூற்றாண்டின் கடைசி நாளில்தான் ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியானது எலிஸபெத் இராணியிடமிருந்து தனது முதல் உரிமைச் சாசனத்தைப் (Charter) பெற்றது. இக் கம்பெனியானது பதினேழாம் நூற்றாண்டில் பல முக்கிய வியாபாரத் தலங்களை இந்தியாவில் நிறுவியது. 1612ஆம் ஆண்டில் சூரத்தும், 1639-ல் மதராஸும், 1668-ல் பம்பாயும் (இரண்டாம் சார்லஸ் மன்னரால் அளிக்கப்பட்டது), 1596ஆம் ஆண்டு வில்லியம் கோட்டையும் (மூன்றாம் வில்லியத்தின் பெயரால்) கம்பெனியின் முக்கிய வியாபார நிலையங்களாக ஏற்படுத்தப்பட்டன. இவைகளிலிருந்தே பின்னால் ஆங்கிலப் பேரரசு இந்தியாவெங்கணும் பரவியது. ஆரம்பத்தில் ஹாலந்துக்கும் இங்கிலாந்திற்கும் ஆசிய நாடுகளில் ஓயாத போட்டியாயிருந்தது. இப் போட்டியும் பொறாமையும் நாளடைவில் முற்றி 1628ஆம் ஆண்டு உச்சநிலையடைந்து 'அம்பாய்னா படுகொலையில்' (Massacre of Amboyna) முடிந்தது. பத்து ஆங்கிலேயர்கள் டச்சுக்காரர்களால் அம்பாய்னா எனுமிடத்தில் ஈவிரக்கமின்றிக் கொல்லப்பட்டனர். இதன்பின் ஆங்கிலேயர் கிழக்கிந்தியத் தீவுகளில் கவனம் செலுத்துவதை நிறுத்திக்கொண்டு இந்தியாவில் தமது செல்வாக்கைப் பரப்ப முயற்சி எடுத்துக்கொண்டார்கள். இறுதியில் அது ஆங்கிலேயர்களுக்கு நன்மையாகவே முடிந்தது. ஸ்டூவர்ட்டுகள் காலத்தின் முற்பகுதியில், அரசரும் பாராளுமன்றமும் உள்நாட்டுச் சச்சரவுகளில் அதிகம் ஈடுபட்டிருந்ததால் வெளிநாட்டு வியாபாரம், குடியேற்றம் முதலியவற்றை அவர்கள் கவனிக்கவில்லை. டச்சுக்காரர் வியாபாரத் துறையில் பெரு முன்னேற்றம் அடைந்தனர். ஆனால், கிராம்வெல் காலத்து, இங்கிலாந்தில் நிறைவேற்றப்பட்ட நாவாய்ச் சட்டமானது (Navigation Act) டச்சு வியாபாரத்தைப் பெரிதும் பாதித்தது. இரு நாடுகளுக்கும் இச் சட்டம் காரணமாக மூன்று போர்கள் நடைபெற்றன. ஆனால், 1688ஆம் ஆண்டளவில் இரு நாடுகளும் தங்களது பொது எதிரியான ஃபிரான்ஸைத் தோற்கடிக்கவேண்டி ஒன்று சேர்ந்தன. ஹாலந்து தனது குடியேற்ற நாட்டு முயற்சியைக் கைவிட்டது. எனவே, பதினேழாம் நூற்றாண்டில் ஃபிரான்ஸும் இங்கிலாந்தும்தான் வியாபார, குடியேற்ற நாட்டுப் போட்டிகளில் ஈடுபட்டிருக்கின்றன.

## ஃபிரான்ஸ், ஹாலந்து, ஸ்வீடன்

பதினாறு பதினேழாம் நூற்றாண்டுகளிலே அமெரிக்காவில் குடியேற்ற நாடுகளை நிறுவுவதில் ஐரோப்பிய நாடுகள் ஒன்றுக்-

கொன்று முந்திக்கொண்டன. ஃபிரெஞ்சுக்காரர்கள் செண்ட் லாரன்ஸ் நதிப் பள்ளத்தாக்கைத் தம்வசப்படுத்திக்கொண்டனர். 1540 ஆம் ஆண்டில் கார்ட்டியர் (Cartier) என்ற ஃபிரெஞ்சுக் காரர் அங்கு ஒரு குடியேற்ற நாட்டை நிறுவினர். 1608 ஆம் ஆண்டில் சேம்ப்லெய்ன் (Chamblain) என்ற ஃபிரெஞ்சுக்காரர் கியூபெக் (Qubec) எனும் நகரைத் தோற்றுவித்தார். இங்ஙனம் அவர் ஃபிரெஞ்சுக் கனடாவின் வளர்ச்சிக்கு வித்திட்டார். அக் கேடியா, மேற்கிந்தியத் தீவுகளிலும் ஃபிரெஞ்சுக்காரர் குடி யேறினர். பதினான்காம் லூயியின் ஆட்சிக் காலத்தில் லா சாலி (La Salle) என்பார் மிசிசிபி நதியின் வழியே சென்று, லூசியானா (Lousiana) என்ற பிரதேசத்தில் ஒரு குடியேற்ற நாட்டை ஏற்படுத் தினர். டச்சுக்காரர் ஃபிரெஞ்சுக்காரரோடு போட்டி போட்டு ஹட்ஸன் நதிப் பிரதேசத்தில் நியூ ஆம்ஸ்டர்டாம் (New Amster-dam) என்ற குடியேற்ற நாட்டைத் தோற்றுவித்தனர். 1521 இல் அவர்கள் ஃபிளாரிடா (Florida) பிரதேசத்தில் குடியேறினர். 1642 இல் டாஸ்மன் என்பார் ஆஸ்திரேலியாவை வலம்வந்தார். கஸ்டாவஸ் அடால்பஸ் (Gustraus Adolphus) என்னும் ஸ்வீடன் அரசர், ஸ்வீடன் குடிமக்களை அனுப்பி, டிலாவேர் (Delaware) எனும் பிரதேசத்தில் குடியேறச் செய்தார். ஆப்பிரிக்காவிலுள்ள கோல்டுகோஸ்ட் (Goldcoast) நாட்டில் பல ஐரோப்பிய நாடுகளும் போட்டியிட்டன. இங்ஙனம் 1714 ஆம் ஆண்டுக்குள் ஸ்பெயின், போர்ச்சுகல் தேசத்துக்குச் சொந்தமான குடியேற்ற நாடுகள் எல்லாம் மற்றைய ஐரோப்பிய நாடுகளின் கைக்கு மாறின.

## வட அமெரிக்காவில் ஆங்கிலேயர் குடியேற்றம்

எலிஸபெத் இராணியார் காலத்து வர்ஜினியாவிலும் நியூ பவுண்ட்லாந்திலும் குடியேற்ற நாடுகளை நிறுவச் செய்த முயற்சி கள் தோல்வியுற்றன. ஆனால், முதலாம் ஜேம்ஸின் காலத்தில் மீண்டும் அம்முயற்சி தொடங்கப்பட்டது. 1607 ஆம் ஆண்டு மே மாதம் 'லண்டன் கம்பெனி' எனும் குடியேற்றக் கம்பெனி யொன்று தோற்றுவிக்கப்பட்டது. அது வர்ஜினியாவில் மீண்டும் குடியேற்றம் செய்ய முயன்றது. ஒரு நூறு ஆங்கிலேயர்கள் செஸாபீக் குடாவில் (Chesapeak Bay) வந்திறங்கி, ஜேம்ஸ் டவுன் (முதலாம் ஜேம்ஸின் நினைவாக) என்ற குடியேறிடத்தைத் தோற்று வித்தனர். ஆரம்பத்தில் அங்குக் குடியேறியவர்கள் பல இன்னல் களுக்கு ஆளாயினர். ஆனால், அவர்களின் தலைவரான கேப்டன் ஜான் ஸ்மித் என்பார் அவர்களுக்கு ஊக்கமும் உற்சாகமும் ஊட்டி வந்தார். 1610 ஆம் ஆண்டில் ஆங்கில கவர்னரான டிலாவார்

பிரபு (Lord Delaware) வர்ஜினியாவின் வளத்தை வளர்த்தார். கோட்டைகளைக் கட்டிச் சிவப்பிந்தியர்களிடமிருந்து குடியேறிகளைக் காத்தார். புகையிலைச் சாகுபடி அங்கு முதன் முதலாகச் செய்யப்பட்டது. அதனால் குடியேறிகள் அதிக இலாபம் பெற்றனர். ஆப்பிரிக்காவிலிருந்து அடிமைகள் பலர் கொண்டுவரப்பட்டனர். அவர்களின் உழைப்பால் வர்ஜினியாவில் செல்வம் கொழித்தது. பெருமாளிகைகளைக் கட்டிக்கொண்டு அவர்கள் ஆடம்பரமாக வாழ்ந்தனர். 1619-ஆம் ஆண்டு இயர்ட்லி (Yeardley) என்பார் வர்ஜினியாவின் கவர்னரானார். அவர் ஆங்கில முறைப்படி ஒரு சட்டசபையைக் கூட்டினார். குடியேற்ற நாட்டிலிருந்த பதினொரு நகரங்களும் முறையே இரண்டுஇரண்டு பிரதிநிதிகளைச் சபைக்கு அனுப்பின. அச்சபையின் உதவி கொண்டு அவர் வர்ஜினியாவை ஆண்டார். லண்டன் கம்பெனியின் ஆட்சி 1624-ஆம் ஆண்டு வரை நடைபெற்றது; அதன் பின் ஆங்கில அரசாங்கம் அதன் நிர்வாகத்தை மேற்கொண்டது.

வர்ஜினியாவுக்கு அடுத்தபடியாக 'நியூ பிளிமவுத்' எனும் பிரதேசத்தில் ஆங்கிலேயர் குடியேறினர். இங்குக் குடியேறியவர்கள் பியூரிட்டன் சமயத்தவராவர். எலிஸபெத் இராணியார் காலத்தில், இங்கிலாந்தினின்றும் பல பியூரிட்டன்கள் நாட்டை விட்டு வெளியேறி, ஹாலந்து தேசத்து லெய்டன் (Leydon) பிரதேசத்தில் சென்று தங்கினர். அவர்களில் நூறு பேர் முதலாம் ஜேம்ஸின் காலத்தில் அமெரிக்காவில் குடியேறுவதற்கான அநுமதியைப் பெற்றனர். அவர்களோடு இங்கிலாந்து பியூரிட்டன்கள் பலர் சேர்ந்துகொண்டனர். 'யாத்திரிகத் தந்தையர்' (Pilgrim Fathers) எனப் பெயர் பெற்ற அவர்கள் யாவருமாகச் சேர்ந்து 'வசந்த மலர்' (May Flower) எனும் கப்பலில் பிளிமவுத் துறைமுகத்தினின்றும் 1620ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் புறப்பட்டுச் சென்று, காட்முனைத் துறைமுகத்துக்கு வடக்கே இறங்கினர். அங்கு அவர்கள் நியூ பிளிமவுத் (New Plymouth) என்ற குடியேற்ற நாட்டைத் தோற்றுவித்தனர். முதலாம் சார்லஸின் கொடுங்கோன்மை காரணமாக, 20,000-க்கும் மேற்பட்ட ஆங்கிலேயப் பியூரிட்டன்கள், அமெரிக்காவுக்குள் நுழைந்து நியூ பிளிமவுத்தைச் சுற்றியும் குடியேறினர். 1620 ஆம் ஆண்டில் ஏற்பட்ட மசாச்சுசெட்ஸ் (Massachusetts) கம்பெனி, மசாச்சுசெட்ஸ் குடியேற்ற நாட்டைத் தோற்றுவித்தது. நியூ பிளிமவுத்தையும் அது உட்கொண்டு விளங்கியது. ரோட் தீவு (Rhode Island), கனெக்டிகட் (Connecticut), நியூ ஹாம்ப்ஷயர் (New Hampshire) என்ற குடியேற்றப் பிரதேசங்கள் மசாச்சுசெட்ஸ் பிரதேசத்தைச் சுற்றியும் ஏற்பட்டன. இங்ஙனம் ஏற்பட்ட பியூரிட்டன் குடியேற்ற


அமெரிக்காவில் ஆங்கிலேயர் முதலில் நிறுவிய குடியேற்ற நாடுகள்
செண்ட் லாரன்ஸ் நதி
மசாச்சுசெட்ஸ்
ஒண்டாரியோ ஏரி
நியூ ஹாம்ஷயர்
ஈரி ஏரி
நியூயார்க்
மசாச்சுசெட்ஸ்
பாஸ்டன்
கனெக்டிகட்
ரோட் தீவு
நியூஹேவன்
பென்சில்வேனியா
ஒஹியோ நதி
நியூஜெர்ஸி
நியூயார்க்
பிலடெல்பியா
அலிகனி மலைகள்
மேரிலாந்து
டிலாவேர்
வர்ஜீனியா
ஜேம்ஸ் நதி
ஜேம்ஸ்டவுன்
வட கரோலினா
தென் கரோலினா
ஜார்ஜியா
சார்லஸ்டன்

நாடுகள் அனைத்தும் சேர்ந்து 'நியூ இங்கிலாந்து' என்னும் பெயரைப் பெற்றன. இவைகள் செல்வத்தில் சிறந்தோங்கி வளர்ந்ததால் மேலும் பல பியூரிட்டன்கள் இங்கிலாந்திலிருந்து இங்கு வந்து குடியேறினர். மத வெறுப்பின் காரணமாக வெளிவந்த இப் பியூரிட்டன்கள், தாங்கள் குடியேறிய இடத்தில் பிரியம்போல் சுதந்திரமாக வழிபாடு நடத்தினரென்றாலும், பியூரிட்டன்கள் அல்லாதாருக்குச் சமயப் பொறை வழங்க அவர்கள் தயாராயில்லை. பியூரிட்டன்களல்லாதார் மிகவும் கொடூரமாகத் துன்புறுத்தப்பட்டனர். குவேக்கர்கள், ஞானஸ்நானவாதிகள் (Baptists) போன்றவர்கள் அங்கிருந்தும் துரத்தப்பட்டார்கள். சேலம் என்ற நகரில் மாயாஜாலக்காரிகள் (Witches) என்று கருதப்பட்ட ஏராளமான கிழவிகள் கொல்லப்பட்டனர். அங்குக் குடியேறியவர்கள் தங்களது கவர்னர்களைத் தாங்களே தேர்ந்தெடுத்துக்கொண்டனர். ஜான் விந்த்ராப் (John Winthrop) என்பவர் அவர்களது முதல் கவர்னராவர். பியூரிட்டன் குடியேறிகளில் பலர் நன்கு படித்துப் பட்டம் பெற்றவர்கள். எனவே, அவர்கள் தங்கள் குழந்தைகள் யாவரும் படிப்பறிவு பெறுதற்கான முயற்சிகளைத் தங்கள் முதல் வேலையாகக் கொண்டனர்.

வர்ஜினியாவின் வடக்கே, பியூரிட்டன்களைப் போன்று, கத்தோலிக்கர்கள் ஒரு குடியேற்ற நாட்டைத் தோற்றுவித்தனர். 1632ஆம் ஆண்டில் பால்டிமூர் பிரபுவின் (Lord Baltimore) ஆதரவில் அக் குடியேற்றம் நிகழ்ந்தது. அப்போது இங்கிலாந்தின் இராணியாயிருந்த ஹென்றியட்டா மேரியா (முதலாம் சார்லஸின் மனைவி) என்பவரின் நினைவாக அக்குடியேற்ற நாட்டுக்கு 'மேரிலாந்து' (Maryland) எனப் பெயர் சூட்டப்பட்டது. இங்குக் கத்தோலிக்கர்கள் மட்டுமன்றி பிராடெஸ்டன்டுகளும் குடியேற அனுமதிக்கப்பட்டனர். நாட்டை வளப்படுத்துவதற்கான போதிய கத்தோலிக்கர்கள் கிடைக்கப்பெறாததே அதற்குக் காரணமாகும். புகையிலைச் சாகுபடியில் மேரிலாந்து வர்ஜினியாவோடு போட்டி போட்டது.

பொதுநலத் துரைத்தனக் காலத்தில் ஜமாய்க்கா (Jamaica) தீவு ஸ்பானியர்களிடமிருந்து கைப்பற்றப்பட்டது. வேறு பல மேற்கிந்தியத் தீவுகளிலும் ஆங்கிலேயர் பலர் குடியேறினர். 1623ஆம் ஆண்டில் செண்ட் கிட்ஸ் (St. Kitts) தீவும், 1625ஆம் ஆண்டில் பார்படாஸ் (Barbados) தீவும் குடியேற்றப்பட்டன. புகையிலையே முதலில் அங்கு அதிகமாகச் சாகுபடி செய்யப்பட்டது. நாளடைவில் அடிமைகளின் உழைப்பைக்கொண்டு கரும்புத் தோட்டங்கள் பயிரிடப்பட்டன. உலகத்தில் சர்க்கரை

உற்பத்தி செய்யுமிடங்களில் மேற்கிந்தியத் தீவுகள் தலைசிறந்து விளங்க ஆரம்பித்தன.

முன்னிலை மீட்சிக்குப் பின் குடியேற்ற நாட்டு வளர்ச்சியில் மீண்டும் ஒரு வேகம் தென்படுகிறது. வர்ஜினியாவுக்குத் தெற்கே கரோலினா (Carolina) என்ற பிரதேசத்தில் ஆங்கிலேயர் பலர் குடியேறினர். ஒரு நூற்றாண்டுக்குமுன் ஃபிரெஞ்சு மன்னர் ஒன்பதாம் சார்லஸ் அங்கு ஒரு குடியேற்றம் காண முயன்று தோற்றார். அதை நினைவுபடுத்தும் வகையில் அக் குடியேற்ற நாடு 'கரோலினா' என்ற பெயர் பெற்றது. அக்குடியேற்ற நாட்டை நிறுவும் உரிமையைக் கிளாரண்டன், ஜெனரல் மான்க், ஆஷ்லி பிரபு போன்ற எட்டு ஆங்கிலப் பிரமுகர்களுக்குச் சார்லஸ் அளித்தார். அவர்கள் வட கரோலினா, தென் கரோலினா என்ற இரு குடியேற்ற நாடுகளை ஏற்படுத்தினர். புகையிலைச் சாகுபடி மூலம் அவர்கள் பெருஞ்செல்வந் திரட்டினர். தென்கரோலினாவின் தலைநகர் அரசரின் நினைவாகச் 'சார்லஸ் டவுன்' என அழைக்கப் பட்டது.

நியூ இங்கிலாந்துக்கும் வர்ஜினியாவுக்கும் இடையில் பல டச்சுக் குடியேற்ற நாடுகள் தோன்றின. 1665ஆம் ஆண்டு நடைபெற்ற டச்சுப் போரில், அக்குடியேற்ற நாடுகளை யார்க் கோமகனான ஜேம்ஸ் கைப்பற்றி இங்கிலாந்துக்குத் தந்துவிட்டார். இங்ஙனம் நியூ ஆம்ஸ்டர்டாம் என்ற டச்சுக் குடியேற்ற நாடு இங்கிலாந்துக்குக் கிடைத்தது. அதைக் கைப்பற்றியவர் யார்க் கோமகனாதலால் அவரது நினைவாக அதன் பெயர் 'நியூயார்க்' என மாற்றப்பட்டது. நியூஜெர்ஸியும் ஆங்கிலேயருக்கு டச்சுப் போரின் மூலம் கிடைத்ததேயாம். டிலாவேர் (Delaware) பிரபுவால் டிலாவேர் (Delaware) என்ற பிரதேசம் குடியேற்றப் பட்டது. இரண்டாம் சார்லஸ் காலத்து ஏற்பட்ட குடியேற்ற நாடுகளில் கடைசியானது வில்லியம் பென் (William Penn) என்பவரால் தோற்றுவிக்கப்பட்ட பென்ஸில்வேனியாப் (Pensylvania) பிரதேசமாகும். வில்லியம் பென் ஒரு குவேக்கர் (Quaker). எனவே, அவர் தமது மதப்பிரிவினர்களையும் நண்பர்களையும் கொண்டே அக்குடியேற்றத்தை நிறுவினார். ஆனால், அவர் மற்றைய மதத்தவர்களையும் அங்கு அனுமதித்ததோடு அவர்களுக்குச் சமயப் பொறையையும் வழங்கினார். எனினும், குடி, சூதாட்டம் முதலிய தீய பழக்கங்களைத் தடுக்கும் பல சட்டங்களை அவர் இயற்றினார்.

இங்ஙனம் வட அமெரிக்காவின் கிழக்குக் கரையோரத்தில் பன்னிரண்டு குடியேற்ற நாடுகள் வரிசையாக ஸ்டூவர்ட்டுகள்

காலத்தில் ஏற்பட்டன. ஜார்ஜியா (Georgia) என்ற ஒரே ஒரு குடியேற்ற நாடு மட்டுமே பிற்காலத்தில் இரண்டாம் ஜார்ஜ் காலத்து (1773இல்) ஏற்பட்டது. அதில் பல மாஜி கைதிகள் குடியேற்றப்பட்டனர். இக்குடியேற்ற நாடுகளெல்லாம் கடற்கரையோரத்திலேயே பெரும்பாலும் ஏற்பட்டன. ஏனெனில், ரெயில், மோட்டார் வண்டி போன்ற போக்குவரவு வசதிகள் அப்போது இல்லை. உள்நாட்டில் மக்கள் குடியேற வெகு காலம் பிடித்தது.

## ஸ்டூவர்ட்டு மன்னர்களும் குடியேற்ற நாடுகளும்

குடியேற்ற நாடுகளின் பெருக்கத்துக்கு ஸ்டூவர்ட்டு மன்னர்கள் உண்மையிலேயே பொறுப்பாளிகளா என்பதுபற்றி வரலாற்றாசிரியர்களிடையே கருத்து வேறுபாடு காணப்படுகிறது. தனிப்பட்ட மனிதர்களும் கம்பெனிகளும் எடுத்துக்கொண்ட முயற்சிகளாலேயே குடியேற்ற நாடுகள் வளர்ந்தன என்றும், ஸ்டூவர்ட்டுகள் அதற்காக ஒரு முயற்சியும் எடுத்துக்கொள்ளவில்லை என்றும் சிலர் கூறுவர். ஆனால், ட்ரெவெல்யான், ராம்ஸேமியூர் போன்ற தற்கால வரலாற்று அறிஞர்கள், ஸ்டூவர்ட்டுகள் உண்மையிலேயே குடியேற்ற நாட்டுப் பெருக்கத்தில் நாட்டமுடையவர்களே என்பதை எடுத்துக்காட்டியுள்ளனர்.[1] கிராம்வெல் ஜமாய்க்காவைப் பிடித்தது தற்செயலாக நிகழ்ந்ததொன்றன்று என்றும், அது திட்டமிட்டுப் பலவந்தமாய்க் கைப்பற்றப்பட்டது என்றும் ட்ரெவெல்யான் என்ற ஆசிரியர் கருதுகிறார்.[2] முதலாம் சார்லஸ், பியூரிட்டன்கள் வடஅமெரிக்காவில் குடியேறுவதை ஆதரித்து உற்சாகப்படுத்தினார். இரண்டாம் சார்லஸ் காலத்துக் குடியேற்ற முயற்சிகளை ஊக்குவிக்கவென்றே 'வர்த்தகக் குடியேற்ற கவுன்ஸில்' (Council of Trade and Plantation) என்ற தனி இலாகா இருந்தது.

## தாய்நாடு–குடியேற்றநாட்டுத் தொடர்பு

இக் குடியேற்ற நாடுகள் தாய்நாட்டின் சேவைக்கே முதலில் பயன்படுத்தப்பட்டன. அங்கிருந்து மூலப்பொருள்களைக் கொண்டு வந்து செய்பொருளாக்கி, இங்கிலாந்து அவைகளை மீண்டும் குடியேற்ற நாடுகளிடையேயும் மற்றும் பல நாடுகளிலும் விற்றுவந்தது. நாவாய்ச் சட்டப்படி குடியேற்ற நாடுகள் ஒருசில பொருள்களை பிரிட்டனுக்கு மட்டுமே அனுப்பவேண்டுமெனக் கட்டாயப்படுத்தப்பட்டன. இங்ஙனம் தாய்நாடானது குடியேற்ற நாடுகளைச் சுரண்டுவது அக் காலத்தே நியாயமானதாகக் கருதப்பட்டது. குடியேறிகளும் எண்ணிக்கையில் அதிகமில்லாத கார

[1] & [2] See Trevelyan's 'History of England', pp. 442-45

ணத்தால், தாய்நாட்டையே நம்பி அதற்குக் கட்டுப்பட்டு வாழ்ந்தனர். தனிப்பட்ட தேசிய உணர்ச்சி அவர்களிடையே தோன்ற வெகு காலம் பிடித்தது.

## குடியேற்ற நாட்டு அரசாங்கம்

ஒவ்வொரு குடியேற்ற நாட்டுக்கும் ஒரு கவர்னரை நியமித்து, அவர்கள் மூலம் இங்கிலாந்தானது பல குடியேற்ற நாடுகளை ஆண்டது. ஒருசில குடியேற்ற நாடுகள் தாங்களே தங்கள் கவர்னர்களைத் தேர்ந்தெடுத்துக்கொண்டன. ஒவ்வொரு கவர்னருக்கும் ஆலோசனை கூற ஒரு கவுன்ஸிலையும் பிரிட்டிஷ் அரசாங்கம் நியமித்தது. மேலும், சட்டங்களைச் செய்ய ஒரு சட்டசபையும் இருந்தது. அதற்குப் பிரதிநிதிகள் ஒவ்வொரு நகரிலிருந்தும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். ஆரம்பத்தில் இச் சபைகள் கவுன்ஸிலுக்கும் கவர்னருக்கும் கட்டுப்பட்டிருந்தன. ஆனால், நாளடைவில் அவைகள் கவர்னரைக் கட்டுப்படுத்த ஆரம்பித்தன. கவர்னர் அதன் விருப்பத்தின்படி நடக்க மறுத்தபோது, அவருக்குப் பணமானியமளிப்பதை நிறுத்திக்கொள்வதன்மூலம் அச் சபைகள் தங்கள் அதிகாரத்தைப் பெருக்கிக்கொண்டன. மற்றைய நாட்டினரின் குடியேற்ற நாடுகளுக்கும் ஆங்கிலக் குடியேற்ற நாடுகளுக்கும் பல வேறுபாடுகள் இருந்தன. ஆங்கிலேய அரசாட்சி முறையின் சிறப்பியல்புகளான ஜூரி முறை, சட்ட ஆட்சி (Rule of Law) இவைகள் அங்கே காணப்பட்டன. பாதுகாப்பு, வெளிநாட்டுக் கொள்கை, பொருளாதாரக் கொள்கை இவைகளில் மட்டுமே குடியேற்ற நாடுகள் தாய்நாட்டுக்குக் கட்டுப்பட்டிருந்தனவேயன்றி, மற்றத் துறைகளில் அவை சுயாட்சியுடனேயே (Self-Government) விளங்கின. சமயப் பொறையும் பெருமளவுக்கு இக் குடியேற்ற நாடுகளில் காணப்பட்டன. ஆங்கிலக் குடியேற்ற நாடுகள் யாவும் தனிப்பட்ட மனிதர்களின் முயற்சிகளால் தோன்றியவை. ஆனால் ஃபிரெஞ்சுக் குடியேற்ற நாடுகளெல்லாம் அரசாங்கத்தின் ஆதரவால் ஏற்பட்டவை. எனவேதான், ஆங்கிலக் குடியேற்ற நாடுகளில் தாய்நாட்டின் கெடுபிடிகள் மிகவும் குறைவாக இருந்தன.

## குடியேற்ற நாடுகளின் தன்மை

இங்கிலாந்தின் குடியேற்ற நாடுகளை வடக்கு, மத்திய, தெற்குப் பிரதேசங்களென முப்பிரிவுகளாகப் பிரிக்கலாம். வடக்கே, நியூ இங்கிலாந்துக் குடியேற்ற நாடுகள் பெரும்பாலும் பியூரிட்டன்களால் ஏற்படுத்தப்பட்டவை. அங்கு வசித்தவர்கள் விடுதலை

உணர்ச்சி நிரம்பியவர்களாதலால் அரசியலிலும் மதத்துறையிலும் ஜனநாயகத்தை வளர்த்தனர். கடற்கரை யோரத்தில் அவர்கள் வாழ்ந்ததால் அவர்கள் கடற் பழக்கமும் துணிவும் வலிமையும் பெற்ருர்கள். இடையில் இருந்த குடியேற்ற நாடுகளில் டச்சுக்காரர், சுவீடன் நாட்டினர் போன்ற பல இனத்தவர் இருந்தனர். பல மதப்பிரிவுகள் அங்குக் காணப்பட்டன. எனவே, தாராளக் கொள்கை எல்லாத் துறைகளிலுங் காணப்பட்டது. இன உணர்ச்சியும் சமய உணர்ச்சியும் தேசிய உணர்ச்சிக்குக் கட்டுப்பட்டு வளர்ந்தன. தெற்கேயும் மேற்கிந்தியத் தீவுகளிலும் வாழ்ந்தோர் பெருஞ் சீமான்கள். நீக்ரோ அடிமைகளை உறிஞ்சிப் பெருஞ் செல்வர்களாக அவர்கள் வாழ்ந்தார்கள்.

# 21. ஸ்டூவர்ட்டுகள் காலச் சமூகப் பொருளாதார நிலைமை

(Social and Economic Conditions under the Stuarts)

பொருளாதார நிலைமை : கிராம வாழ்க்கை—வேலையில்லாத் திண்டாட்டம் — போக்குவரவு சாதனங்கள் — தனியாள் உரிமை (Individualism) — வியாபாரம் — கைவினைத் தொழில்கள் (Crafts).

சமூக வாழ்க்கை : பெண்டிர் நிலை — ஒழுக்கம்—உணவும் உடையும்—வீடுகள்—பொழுதுபோக்கு.

கலைகள் : இலக்கியம்—கட்டடக் கலை—ஓவியம்—சிற்பம்.

சமய நிலை

## பொருளாதார நிலைமை

(Economic Condition)

**கிராம வாழ்க்கை** (Rural Life)

ஸ்டூவர்ட்டுகள் காலத்தில் பெரும்பான்மையான மக்கள் நாட்டுப் புறங்களில் சிறு சிறு கிராமங்களிலேயே வாழ்ந்தனர். அவர்கள் அப்பழுக்கற்ற இயற்கை வாழ்வு நடாத்தினர். இயற்கையின் எழிலில் தோய்ந்து அவர்கள் இன்பம் பெற்றனர். சிறு கைத்தொழில்களே கிராமங்களில் வளர்க்கப்பட்டன. கைவண்ணம் மிக்க பல பொருள்களைக் கிராமக் கைத்தொழிலாளிகள் கலையுணர்ச்சியுடன் ஆக்கித்தந்தனர். கலையுணர்வையும் அழகுணர்வையும் ஒருங்கே மாய்த்து, எதிலும் ஒரே மாதிரித் தன்மையை வளர்க்கும் இயந்திரங்கள் அப்போது இல்லை. எனவே, பெருங் கைத்தொழில்கள் செறிந்த பெரும் பட்டணங்களும் அக் காலத்து இல்லை. அக்காலப் பட்டணங்கள்கூடக் கிராமியச் சூழ்நிலைகளையே கொண்டிருந்தன. அரை மிலியன் மக்கள் வாழ்ந்த லண்டன் மாநகரின் சுற்றுப்புறங்கள் யாவும் பச்சைப் பசேலெனக் காட்சியளிக்கும் புல்வெளிகளும், அழகிய குன்றுகளும், நைட்டிங்கேல்

போன்ற இன்னிசை பாடும் பறவைகள் நிறைந்த சோலைகளும் கூடியதாய், இயந்திர சாதனங்களின் உதவியின்றியே ஒவ்வொருவரும் நடந்தே சென்று இயற்கையின் எழிலை மாந்தக்கூடிய நிலையுடையதாய் விளங்கின. உள்நாட்டு, வெளிநாட்டுச் சந்தைகளுக்கு வியாபாரப் பொருள்களை ஆக்கித் தந்த தொழிலாளிகள் பெரும் பட்டணங்களிலன்றிக் கிராமப் புறங்களிலேயே வாழ்ந்தனர். மத்திய காலத்தே தனித்து ஒதுங்கி வாழ்ந்த கிராமக் குடியானவர்கள் ஸ்டுவர்ட்டுகள் காலத்து வியாபாரம், குடியேற்றம், அரசியல் வாழ்வு இவையனைத்திலும் சுறுசுறுப்பாக ஈடுபடுகின்ற காட்சியை நாம் காண்கின்றோம். வியாபாரத்தால் கிராமங்களும் நகர்ப்புறங்களும் பரஸ்பரத் தொடர்பு கொண்டு ஒருவித ஒற்றுமையுடன் விளங்கின. ஷயர்களில் நடைபெற்ற பாராளுமன்றத் தேர்தல்களில் ஆண்டுக்கு நாற்பது பவுன் வருமானம் பெற்ற சுதந்திரக் குடியானவர்களெல்லாம் கலந்துகொண்டனர் இச் சிறு நிலக்கிழார்களே கிராம்வெல்லின் புது மாதிரிப் படையை உருவாக்கியவர்கள். மேற்கேயும் சிறு நிலக்கிழார்கள்தாம் சார்லஸ் அரசனுக்கு உதவினர். இங்ஙனம் நிலக்கிழார்கள் அரசியலில் பெரும் பங்கு கொள்வதை நாம் ஸ்டுவர்ட்டுகள் காலத்தே காண்கின்றோம். ஜெர்மனியிலும் ஃபிரான்ஸிலும் குடியானவர்கள் நிலமானிய முறைப்படி அடக்கப்பட்டு ஒடுக்கப்பட்டுவந்த காலத்தில் ஆங்கிலேயக் குடியானவர்கள் பல துறைகளிலும் சுயேச்சையுடன் பாடுபட்டுவந்தனர். அமெரிக்காவில் நியூ இங்கிலாந்துப் பிரதேசத்தில் குடியேறிய 'யாத்திரிகத் தந்தையர்களில்' பெரும்பாலோர் குடியானவர்களேயாவர். அவர்கள் தங்களைத் தாங்களே ஆண்டு கொள்ளக்கூடிய திறமையும், அறிவு விழிப்பும், கைத்தொழில் வன்மையும் கொண்டிருந்தார்கள். அதே சமயத்தில் கனடாவில் குடியேறிய ஃபிரெஞ்சுக்காரக் குடியானவர்கள் நிலப்பிரபுக்களின் தலைமையில் நில அடிமைகளைப்போன்றே வாழ்ந்தனர். இங்ஙனம் ஆங்கிலேய விவசாயிகள் மற்றைய நாட்டுக் குடியானவர்களை விடப் பலவகையிலும் மேம்பட்டு விளங்கினர். விவசாயத்தில் சில புதிய முறைகளைக் கையாண்டதாலும், நில அடைப்பு முறையாலும் அவர்கள் செல்வமும் செல்வாக்கும் பெற்றனர்.

பெருநிலக்கிழார்களும் (Squires), உரிமை மானியதாரர்களான சிறுநிலக்கிழார்களும் (Freehold yeomen), குத்தகைக்குச் சாகுபடி செய்யும் உழவர்களும் (Leasehold farmers), சிறு கைத்தொழிலாளிகளுமே கிராமப்புறங்களில் வாழ்ந்த பெரும்பகுதியினராவர். இவர்களோடு நிலமில்லாத பல வேளாண்மைத் தொழிலாளிகளும் (Agricultural proletariat) அங்கு வந்தனர். அவர்கள் நிலக்கிழார்களின் நிலங்களில் கூலிக்கு வேலை செய்தும், பொது நிலங்களைப்

பயிரிட்டும் எளிய வாழ்வு வாழ்ந்தனர். இவர்களைத் தவிரப் பெரு வழிகளிலும் சிறு வழிகளிலும் பாதசாரிகளாய் இடம்விட்டு இடம் நடந்து திரியும் நாடோடிக் கூட்டமும் அங்கு ஏராளமாய் இருந்தது. பள்ளத்தாக்குகளில் கூடாரங்கள் அடித்துக்கொண்டு வாழ்வோரும், செப்பனிடுவோரும், ஊர்சுற்றும் கைத்தொழிலாளிகளும், குறவர்களும், வழிப்பறி செய்வோரும் (Highwaymen), பாணர்களும் (Ballad mongers), செப்படி வித்தைக்காரர்களும் (Showmen), போலி மருத்துவர்களும் (Quacks) நிறைந்ததாய் அந் நாடோடிச் சமுதாயம் விளங்கிற்று. இங்ஙனம் வகைவகையாய்த் தோற்றமளித்த வண்ணச்சமுதாயம், ஷேக்ஸ்பியர், ஜார்ஜ் பாரோ (George Barrow) போன்ற மகாகவிஞர்களின் கவனத்தைக் கவர்ந்து, அவர்களது இலக்கியங்களிலே என்றும் நீங்கா நிலை பெற்றுள்ளது. கிராமிய சமூகத்தினர் விவசாயத்தை மட்டும் நம்பி வாழவில்லை; உணவுக்கும் பொழுதுபோக்குக்குமாக அவர்கள் பறவைகளையும், முயல்கள், மான்கள்போன்ற சிறு பிராணிகளையும் வேட்டையாடிவந்தனர். உள்நாட்டுப் போரின்போது, காலாட் படையினர், கனவான்களால் காக்கப்பட்டுவந்த மான் பூங்காக்களிற் (Deer-parks) புகுந்து பல மான்களைக் கொன்றனர் என்று அறிகிறோம். முன்னிலை மீட்சிக்குப் பின் மான் வேட்டைக்குப் பதிலாக நரி வேட்டை அதிகரித்தது. வலை வீசியும், கண்ணி வைத்தும், இராஜாளிப் பறவையைப் பயன்படுத்தியும் (hawking) வேட்டையாடும் முறைகளுக்குப் பதிலாகத் துப்பாக்கியைக் கொண்டு வேட்டையாடும் முறை பழக்கத்துக்கு வந்தது. முதலில் பறவைகளும் பிராணிகளும் அவை வாளா படுத்திருக்கும்போதும் உட்கார்ந்திருக்கும்போதும் மட்டுமே சுடப்பட்டன. நாளடைவில் பறவைகள் பறந்துகொண்டிருக்கும் போதே சுடுகின்ற கலையை ஆங்கிலேயர் கற்றுக்கொண்டனர். இரண்டாம் சார்லஸ் காலத்தில் இம்முறை பலருக்குக் கைவந்தது என்பது 'கனவான்களின் பொழுதுபோக்கு' (Gentleman's Recreation) என்ற நூலிலிருந்து தெரிகிறது.[1]

### வேலையில்லாத் திண்டாட்டம் (Unemployment)

ஸ்டூவர்ட்டுகள் காலத்துப் பிச்சைக்காரர் தொல்லை டியூடர் காலத்து இருப்பதைப்போல் அவ்வளவு அதிகமாக இல்லாவிடினும் ஓரளவு இருந்ததாகத் தெரிகிறது. வேலையற்ற பிச்சைக்காரர்கள், பிச்சை அதிகமாகக் கிடைக்கிற ஒருசில இடங்களில் சென்று குவிந்துவிடுவதைத் தடுக்க, நிலையான குடியிருப்பு நிர்ணயச் சட்டம் (Act of Settlement) ஒன்று 1662இல் முன்னிலை மீட்சிப் பாராளுமன்றத்தில்கொண்டுவரப்பட்டது அதன்படி, ஒவ்வொரு பாரி

[1] See Trevelyan's 'History of England,'—Page. 436

ஷும் வறுமை நீக்கம் (Relief) வேண்டி அதனுள் நுழையும் வேற்றுரனை அவனது ஊருக்கே அனுப்பிவிடும் அதிகாரத்தைப் பெற்றது. இதன் காரணமாய் வேலையற்ற உழைப்பாளிகள் வேறிடங்களுக்குச் சென்று வேலைசெய்ய முடியாமல் ஆங்காங்கே நிலைத்துவிட ஏது வாயிற்று. தொழிலாளர்கள் இடப்பெயர்ச்சி (Mobility of labour) தடைப்பட்டது.

ஸ்டூவர்ட்டுகள் காலத்தில் கிராம வாழ்க்கைக்கும் பட்டண வாழ்க்கைக்கும் அதிக வேறுபாடு காணப்படவில்லை. நிலமானிய முறையின் அழிவால் கிராமங்களும் நகரங்களும் பாராளுமன்ற நிலவரச் சட்டங்களாலேயே (Parliamentary Statutes) ஆளப்பட்டன. நாடனைத்திலும் ஒரே அரசியல், பொருளாதார முறையே கடைப்பிடிக்கப்பட்டதால், நகரங்களும் கிராமங்களும் தம்முள் வேற்றுமையின்றி ஒரே குறிக்கோளுடன் விளங்கின.

### போக்குவரவு சாதனங்கள் (Communications)

அரசியலிலும் பொருளாதாரத்துறையிலும் காணப்பட்ட இவ்வொற்றுமையை மேலும் வளர்க்கக்கூடிய போக்குவரவு சாதனங்கள் அப்போது மிகவும் குறைவாகவே இருந்தன. பாதைகள் கோணிக் குறுகி வளைந்துவளைந்து சென்றன. அவைகள் நன்கு பாவப்படாமல் சில இடங்களில் சேறும் சகதியும் நிறைந்து காணப்பட்டன. வழியில் விளக்குகள் அப்போது கிடையா. வழிப்பறி செய்வோர், பிரயாணிகளைக் கொள்ளையடிப்பது அப்போது ஒரு சாதாரண நிகழ்ச்சியாகக் கருதப்பட்டது. எனினும், உல்லாசமாகப் பிரயாணம் செய்யக்கூடிய கோச்சு வண்டிகள் நாடெங்கும் பயன் படுத்தப்பட்டன. தபால் கோச்சு வண்டிகள் (Stage coaches) தபால்களை இடத்துக்கிடம் எடுத்துச்செல்லும் வழக்கம் 1640 ஆம் ஆண்டிலிருந்து தொடங்கப்பட்டது. பொதுநலத் துரைத்தனக் காலத்தில் அரசாங்கத் தபால் முறை கொண்டுவரப்பட்டது. பாதைகளில் ஆங்காங்கே பிரயாணிகள் தங்குதற்கேற்ற சத்திரங்களும் பல இருந்தன. வாடகைக் கோச்சு வண்டிகளை (Hackney coaches) அமர்த்திக்கொண்டு பிரயாணம் செய்யும் முறை பொது நலத் துரைத்தனக் காலத்தில் ஏற்பட்டது.

### தனியாள் உரிமை (Individualism)

ஸ்டூவர்ட்டுகள் காலத்து நிலக்கிழார்களும், கைத்தொழிலாளிகளும், இன்னும் பலரும் தனித்தனியே தங்கள் வாழ்க்கை முறையை வகுத்துக்கொண்டனர். ஒரு குறிப்பிட்ட முறையை யாவரும் ஒரே மாதிரி கையாளவேண்டுமென்ற கட்டாயம் சமூகத்தில் மாண்டுவிட்டது. கில்டு எனும் வாணிபக் குழுக்

களுக்குக் கட்டுப்பட்டு வியாபாரம் முதலியவைகளில் ஈடுபடுகின்ற வழக்கமும் ஒய்ந்தது. கட்டுப்பாடின்றித் தன்னிச்சையாக ஒவ்வொருவரும் தொழில் புரிந்து வாழ்க்கை நடத்தியதால் அவர்களிடையே சுதந்திர மனப்பான்மையும் தன்னம்பிக்கையும் வளர்ந்தன.

### வியாபாரம்

ஸ்டுவர்ட்டுகள் காலத்தே வியாபாரமும் குடியேற்றமும் பெரிதும் முன்னேற்றமடைந்தன. வியாபாரமெல்லாம் பொதுவாகப் பெரிய கம்பெனிகளின் கைகளிலேயே இருந்தன. அவைகள் உலகின் குறிப்பிட்ட பிரதேசங்களோடு வியாபாரம் செய்யும் தனிச் சிறப்புரிமைகளைப் (Special privileges) பெற்றிருந்தன. அதனால் போட்டிகள் தவிர்ந்தன. வணிகப் பெருமக்கள் செல்வத்தில் திளைத்தனர். அவர்களுக்கு அரசியலில் பெருஞ் செல்வாக்கு ஏற்பட்டது. அவர்கள் விருப்பத்துக்கேற்பவே இங்கிலாந்தின் வெளிநாட்டுக் கொள்கை வகுக்கப்பட்டது. வாணிப வளர்ச்சியால் அரசாங்கத்துக்கும் நல்ல வருமானம் கிடைத்தது. இவ்வருமானத்தின் உதவிகொண்டு வலிமையுள்ள கப்பற்படை ஒன்று இங்கிலாந்தில் நிறுவப்பட்டது. பதினன்காம் லூயியோடு போராடுவதற்கு வேண்டிய பொருளையும் வியாபாரிகளே அரசாங்கத்துக்குத் தந்தனர். பொற்கொல்லர்கள் பலர் அரசாங்கத்துக்குக் கடன் கொடுத்துவந்தனர். இக்கடன்களை அரசர்கள் திருப்பிக்கொடாமற் போவதும் உண்டு. இரண்டாம் சார்லஸ் ஒரு சமயம் தாம் அங்ஙனம் வாங்கிய கடன்களை நிராகரித்துவிட்டார். அதனால் பொற்கொல்லர்கள் அரசருக்குக் கடன் கொடுப்பது பெரிதும் குறைந்துவிட்டது. மூன்றும் வில்லியத்தின் காலத்தே அங்ஙனம் கடன் கொடுப்பது மிகுதியும் குறைந்துவிட்டது. மூன்றும் வில்லியத்தின் காலத்தே ஐரோப்பியக் கண்டப் போர்களை நடத்த மிகுதியான பணம் தேவைப்பட்டபோது, பேட்டர்சன் (Paterson) என்ற ஸ்காட்லாந்திய அறிஞர், நாட்டுக் கடன் முறையையும் இங்கிலாந்து பாங்கியையும் எங்ஙனம் தோற்றுவித்தாரென்பதை நாம் ஏற்கெனவே படித்திருக்கிறோம்.[1] இம்முறைகளால் அரசாங்கம் மக்களின் வரிப்பளுவை அதிகப்படுத்தாமல் பொருள் வருவாய் பெற முடிந்தது. அரசாங்கத்துக்குக் கடன் கொடுத்த பணக்காரர்கள் ஒன்றுசேர்ந்து, தம் பொருளைக் காக்கவேண்டி அரசர்களை ஆதரிக்கவும் இம்முறைகள் வழி செய்தன. மேலும், பாங்கியிலிருந்து சிறு வணிகர்களும் பெருவணிகர்களும் பெருமளவுக்குப் பொருள் பெற்று, அம் மூலதனத்தைக் (Capital) கொண்டு மென்மேலும் இங்கிலாந்

[1] 16ஆம் அத்தியாயத்தைப் பார்க்கவும்.

தின் வியாபரத்தையும் வருமானத்தையும் பெருக்கினர். லண்டன் மாநகரில் இவ் வியாபாரிகளின் கூட்டம் அதிகரித்தது. உலகத்தின் உன்னதமான வியாபார கேந்திரமாகவும் துறைமுகமாகவும் அது மாறியதுமன்றி, நாட்டின் அரசியல் கொள்கைகளையும் செயல்களையும் உருவாக்கும் ஓரிடமாகவும் அது விளங்கியது.

**கைவினைத் தொழில்கள் (Crafts)**

பொருள்கள் பெருந்தொழிற்சாலைகளில் பெருமளவுக்கு உற்பத்தி செய்யப்படும் முறை ஸ்டூவர்ட்டுகள் காலத்தே நன்கு வளரவில்லை; சிறு சிறு குடும்பங்களிலேயே அவை வளர்ந்தன. ஓரிரு இடங்களில் அவர்கள் சிறு தொழிற்சாலைகளை அமைத்துக் கூட்டாகத் தொழில் புரிந்தனர். தனிப்பட்ட கைத்தொழிலாளிகளுக்குக் கச்சாப் பொருள்களை (Raw materials) வழங்கவும் செய்பொருள்களை விற்றுத்தரவும் பல வியாபார நடுவர்கள் (Merchant middlemen) இருந்தனர். ஸ்டூவர்ட்டுகள் காலத்தே நெசவுத் தொழில் பெரிதும் முன்னேற்றம் அடைந்தது. பிரான்ஸிலிருந்து ஓடிவந்த ஹியூக்னேக்கள் (Huguenots) பட்டு நெசவுத் தொழிலை இங்கிலாந்தில் வளர்த்தார்கள். அயர்லாந்தில் லினன் துணி நெசவுத் தொழிலை ஸ்டிராஃபோர்டு பிரபு வளர்த்தார். அது உள்நாட்டுப் போரின்போது சிதைந்தது. எனினும், அல்ஸ்டரிலும் ஸ்காட்லாந்திலும் அது நன்கு வேரூன்றியது. இந்தியாவிலிருந்து எடுத்துச்சென்ற பருத்தியைக் கொண்டு பஞ்சுத் தொழில்கள் பல வளர்ந்தன. உப்பளங்கள் மூலம் கிடைக்கும் உப்புப் பற்றாத காரணத்தால் உப்புப் பாறைகளிலிருந்து உப்பெடுக்கும் தொழிலானது செஸ்ஸயர் (Cheshire) போன்ற இடங்களில் வளர்ந்தன. நிலக்கரிப் பற்றாக்குறை காரணத்தால் இரும்புத் தொழில் அதிகம் வளரவில்லை. அடுப்புக்கரி கொண்டு இரும்பை உருக்குதல் பெருஞ் சாதனையாய் இருந்தது. அடுப்புக்கரிக்காக ஏராளமான மரங்கள் வெட்டப்பட்டதால் அதைத் தடுக்கப் பாராளுமன்றமானது சட்டம் செய்யவேண்டிய அவசியம் ஏற்பட்டது. இவையன்றிப் புத்தகம் கட்டல் (Book binding), தொப்பி, காகிதம், கைக்கடிகாரம், கண்ணாடி முதலியன செய்தல் போன்ற கைத்தொழில்களும் இங்கிலாந்தில் வளர ஃபிரெஞ்சு ஹியூக்னேக்கள் உதவினர்.

## சமூக வாழ்க்கை

**பெண்டிர் நிலை**

ஸ்டூவர்ட்டுகள் காலச் சமுதாயத்தில் பெண்டிர் மிகவும் தாழ்மையான நிலையிலேயே இருந்தனர். தங்கள் கணவன்மாரைத் தாங்களே வரித்துக்கொள்ளும் உரிமை உயர்குலத்து மங்கையர்க்கும்

இருந்ததாகத் தெரியவில்லை. கணவனே சட்டப்படியும் வழக்கப்படியும் வீட்டின் தலைவனாகத் திகழ்ந்தான். எனினும், மகளிருக்குரிய மதிப்பையும் கௌரவத்தையும் ஆண்கள் கொடுக்கத் தவறவில்லை. மகளிரும் தம் கற்பொழுக்கத்தைப் பெரிதும் பேணிப் புகழ்பெற்றனர் என்பதற்கு ஷேக்ஸ்பியர், ஹட்சின்சன் (Hutchinson) போன்ற எழுத்தாளர்களின் கற்பனைப் பாத்திரங்களே போதிய சான்றாகும்.

## ஒழுக்கம்

பொது நலத் துரைத்தனக் காலத்துக்குப்பின் பெருநிலக்கிழார்களின் ஒழுக்கத்தில் ஒரு சீரழிவு காணப்படுகிறது. பியூரிட்டன்கள் போதித்த ஏழ்மை, எளிமை இவைகளுக்கு எதிராகப் பகட்டாயும், ஆடம்பரமாயும், ஊதாரித்தனமாயும் வாழ்கின்ற வழக்கம் பணம் படைத்த பெருமக்களிடம் ஏற்பட்டது. பெருநிலப் பிரபுக்களும் குருமார்களும் தங்களது ஊரையன்றி வேறிடத்துக்குச் செல்வது மிகவும் குறைவாகவே இருந்தது; போக்குவரவு வசதியின்மையே அதற்குக் காரணம். இதனால் இடத்திற்கு இடம் பழக்கவழக்கங்களும் ஒழுக்கசீலங்களும் மாறுபட்டன. கோழிச் சண்டை, கரடிச் சண்டை போன்ற பயங்கரமான பொழுதுபோக்குகளைப் பணக்காரர் விரும்பினர். நேருக்கு நேர் சண்டையிட்டுக் கொள்வதன் மூலம் பூசல்களைத் தீர்த்துக்கொள்ளும் வழக்கம் (Duals) உயர் வகுப்பாரிடை காணப்பட்டது. எளிய சாதாரண மக்களோவெனின், வீதிகளில் நின்று வரிந்துகட்டிக்கொண்டு ஒருவரையொருவர் அடித்தலும் கொச்சையாக வைதலும் அன்றாட நிகழ்ச்சிகளாயிருந்தன. குடிப்பழக்கம் எங்கும் பரவியிருந்தது. சுகாதார அறிவு மக்களுக்கு மிகவும் குறைவாகவே இருந்தது.

## உணவும் உடையும்

மக்களின் உடையும் உணவும் மிகவும் எளிமையாகவே இருந்தன. நாளைக்கு இருவேளை மட்டுமே உணவருந்தும் பழக்கம் மக்களிடை ஏற்பட்டது. காலர் (Collar) அணியும் வழக்கமும், கோட்டுப் (Coat) போடும் பழக்கமும், நீண்ட செயற்கைச் சுருள் முடிகளைத் (Wigs) தரித்துக்கொள்ளும் வழக்கமும் ஸ்டூவர்ட்டுகள் காலத்துத் தோன்றியவையே ஆகும். முழுநீளப் பாவாடைகளை (Skirts) மகளிரும் முழுநீளக் கால்சட்டைகளை (Breeches) ஆடவரும் அணிந்தனர். மீசை, தாடி வைத்துக்கொள்ளும் பழக்கம் மாறியது. நன்கு மழிக்கப்பட்ட முகமே அழகுடையது என மக்கள் கருதலாயினர்.

**வீடுகள்**

வீடுகள் பெரும்பாலும் மரத்தாலேயே கட்டப்பட்டன. லண்டனில் ஏற்பட்ட பெருந் தீவிபத்துக்கு (Great Fire of London) பின் செங்கல்லாலும் கருங்கல்லாலும் கட்டடங்களைக் கட்டும் வழக்கம் ஏற்பட்டது. உண்பதற்கும் உறங்குவதற்கும் தனித்தனி அறைகள் செல்வந்தர்களின் வீடுகளில் காணப்பட்டன. விருந்தினர்களை உபசரிக்க உதவும் தனியறைகள் (Drawing rooms) பலவும் அவைகளில் ஏற்பட்டன. மாளிகைகளின் தளங்களை விலையுயர்ந்த கம்பளங்கள் (Carpets) அலங்கரித்தன. சாமானிய மக்கள் பாய்களைத் தரைமீது விரித்துக்கொண்டனர். வீடுகளுக்குப் பெரிய ஜன்னல்கள் இருந்தன. பல அழகிய நாற்காலிகளும் மேஜைகளும் பெருவீடுகளில் காணப்பட்டன. செல்வந்தர்கள், நூல்நிலையங்களைக்கூடத் தங்களது வீடுகளிலேயே வைத்திருந்தனர். குடும்பப் பாதிரிகளை (Chaplins) நியமித்துக்கொள்ளும் வழக்கமும் பணக்காரர்கள்பால் காணப்பட்டது. வீடுகளைச் சுற்றியும் அழகிய தோட்டங்களை அமைக்கும் பழக்கமும் ஸ்டூவர்ட்டுகள் காலத்தே மிகுதியும் காணப்பட்டது.

**பொழுதுபோக்கு (Recreation)**

ஸ்டூவர்ட்டுகள் கால மக்கள் தங்கள் ஓய்வு நேரங்களில் இனிய பொழுதுபோக்குகளில் ஈடுபட்டனர். இன்னிசை, நாடகம், நாட்டியம் இவைகளே பொதுவான பொழுதுபோக்குகளாயிருந்தன. பியூரிட்டன்கள் ஆட்சிக் காலத்தில் மூடப்பட்ட பல நாடகக் கொட்டகைகள் இரண்டாம் சார்லஸ் காலத்தில் மீண்டும் திறக்கப்பட்டன. மகளிர் பாகத்தில் ஆடவரே நடிக்கும் பழக்கம் மாறி மகளிரே நடிக்கும் நிலை 2 ஆம் சார்லஸ் காலத்தே ஏற்பட்டது. நாட்டியம் வளர்ந்தது. பலர் சேர்ந்து நடனமாடும் குழுநடம் (Ballot of dancing) நாட்டில் வளரலாயிற்று. சூதாட்டமும் பலருடைய பொழுதுபோக்காயிருந்தது. காப்பியும் டீயும் குடிக்கின்ற வழக்கம் இரண்டாம் சார்லஸ் காலத்திலிருந்துதான் ஆரம்பிக்கிறது. காப்பி அருந்தும் நிலையங்கள்தாம் (Coffee Houses) அக்காலத்துப் பொதுமக்கள் கருத்தை (Public opinion) உருவாக்கிவந்ததாக அறிகிறோம். அறிஞர் பலரும் அங்குதான் கூடிப் பொதுக் காரியங்களைப்பற்றி விவாதிப்பது வழக்கம். பொடி போடும் வழக்கமும் மக்களிடை இக்காலத்தே பரவியது. டென்னிஸ் பந்து விளையாட்டு (Tennis), பால்மால் பந்தாட்டம் (Pall-mall), குதிரை ஏற்றம், குதிரைப் பந்தயம், எருதாட்டம், சேவல் சண்டை, கரடிச் சண்டை, குத்துச் சண்டை ஆகிய பொழுது போக்குகளில் மக்கள் ஈடுபட்டனர்.

## கலைகள்

### இலக்கியம்

கல்வியும் கலையும் ஸ்டுவர்ட்டுகள் காலத்தே போட்டி போட்டுக்கொண்டு வளர்ந்தன. இலக்கியங்களின் தரம் டியூடர் காலத்திலிருந்ததைவிட இக்காலத்தே உயர்ந்து காணப்படுகிறது. உணர்ச்சிக்கு உணவூட்டும் எளிய இலக்கியங்கள் டியூடர்கள் காலத்து எழுந்தன. ஆனால், ஸ்டுவர்ட்டுகள் கால இலக்கியங்கள் அறிவுக்கு விருந்தளிப்பவை; ஆழமான கருத்துடையவை. 'மில்ட்டன்' (Milton) என்ற பெரும்புலவர் 'இழந்த சொர்க்கம்' (Paradise Lost), 'மீண்ட சொர்க்கம்' (Paradise Regained), 'சேம்ஸன் அகோனிஸ்டஸ்' (Samson Agonistes) போன்ற இறவாத புகழுடைய பெருங்காவியங்களை எழுதிய காலம் இதுவே. மில்ட்டன் ஆரம்பத்தில் ஓர் அரசியல்வாதியாயிருந்தார். பியூரிட்டன் கொள்கைகளில் அவர் ஆழ்ந்த நம்பிக்கையுள்ளவர். பல அரசியல் கட்டுரைகளையும் எழுதியுள்ளார். 'ஏரோபேஜிடிகா' (Aeropagitica) என்ற நூலில் அவர் எழுத்துரிமை, கருத்து வெளியீட்டு உரிமை இவைகளைப்பற்றிப் பெரிதும் வற்புறுத்தியுள்ளார். மில்ட்டனின் அரசியல் சகபாடியான ஆண்ட்ரு மார்வெல் (Andrew Marwell) என்பார் பல அரசியல் கட்டுரைகளையும் செய்யுள்களையும் இயற்றியுள்ளார். கிராம்வெல், பிளேக் போன்றவர்களின் வீரத்தைப் புகழ்ந்து அவர் பாடல்கள் இயற்றியுள்ளார். பன்யன் (Bunyan) என்ற பியூரிட்டன் புலவர் 'புனித யாத்ரீகரின் முன்னேற்றம்' (Pilgrims' Progress) என்ற அருமையான தொடர் உருவகக் கதையை (Allegory) எழுதியுள்ளார். முன்னிலை மீட்சியின் பின் சிருங்கார ரசம் செறிந்த கவிதைகளும் நாடகங்களும் மீண்டும் புத்துயிர் பெறுகின்றன. டிரைடன் (Drydon) எனும் பேரறிஞர் (1631-1700) பல நல்ல நாடகங்களையும் வசைப் பாடல்களையும் (Satirical Poems) இயற்றியுள்ளார். கிளாரண்டன் பிரபுவால் எழுதப்பட்ட 'ஹிஸ்டரி ஆப் தி கிரேட் ரெபல்லியன்' (History of the Great Rebellion—பெருங் கலகத்தின் வரலாறு) ஓர் அருமையான வரலாற்று நூலாகும். அதில் ஓரளவு அரசரின் சார்பாகப் பாரபட்சம் காணப்படினும் பொதுவாக அது மிகவும் பயனுள்ளதோர் வரலாற்று நூலாகும். டெஃபோ (Defoe) என்பவர் 'ராபின்ஸன் குருஸோ' (Robinson Crusoe) என்ற முதல் ஆங்கில நாவலை எழுதினார். ஸ்விட்ப்ட் (Swift) எனும் அறிஞர் 'கல்லிவரின் பிரயாணங்கள்' (Gulliver's Travels) எனும் உரைநடை நூலை எழுதினர். ஸ்டீல், அடிஸன் (Steel, Addison) போன்றோர் ஆங்கில உரைநடை இலக்கியத்துக்கு உயிரளித்தவர்கள்.

முதலாம் ஜேம்ஸ் காலத்து மொழிபெயர்க்கப்பட்ட பைபிள் ஆங்கில உரைநடை இலக்கியத்தின் அடிப்படையாய்த் திகழ்ந்தது. 'ஸ்பெக்டேடர்' (Spectator), 'டேட்லர்' (Tatlers) என்ற அரசியல் துண்டுப் பிரசுரங்களுக்கு (Pamphlets) இவ்வாசிரியர்கள் கட்டுரைகள் வழங்கிவந்தனர். ஆன் இராணியார் காலத்து டோரிகளும் விக்குகளும் தங்கள் தங்கள் கட்சிகளை விளம்பரப் படுத்த இலக்கிய நிபுணர்களை நன்கு பயன்படுத்தினர். போப் (Pope) என்ற மகா கவிஞர் பல அரிய பாடல்களை இயற்றிய காலமும் இதுவே.

## நாடகக் கலை

ஷேக்ஸ்பியர் எனும் ஒப்பற்ற நாடகாசிரியர் எலிஸபெத் இராணியார் காலத்தில் மட்டுமன்றி முதலாம் ஜேம்ஸ், முதலாம் சார்லஸ் காலத்திலும் வாழ்ந்தவர். அவரது உயர்ந்த துன்பியல் நாடகங்கள் பல சார்லஸ் காலத்தில்தான் எழுதி வெளியிடப் பட்டன. 1623ஆம் ஆண்டில்தான் அவரது நாடகங்களின் தொகுதி வெளியிடப்பெற்றது. அவரைப் பின்பற்றி பென் ஜான்சன் (Ben Johnson) எனும் புலவர் பல அரிய நாடகங்களை எழுதினர். ஜான் ஃபிளட்சர் (John Fletcher) என்பார் முதலாம் ஜேம்ஸ் காலத்து வாழ்ந்த ஓர் பெரும் நாடகாசிரியர். ஜான் வெப்ஸ்டர்(John Webster) என்பார் துன்பியல் நாடகங்கள் வரைவதில் வல்லவரா யிருந்தார். முதலாம் சார்லஸ் காலத்தில் பிலிப் மாசிஞ்சர் (Philip Massinger), ஜான் ஃபோர்டு (John Ford) எனும் நாடக மேதைகள் எலிஸபெத் கால நாடக பாணியைப் பின்பற்றி நாடகங்கள் எழுதினர். 1660ஆம் ஆண்டளவில் நாடகக் கொட்டகைகள் மூடப்பட்டன. இரண்டாம் சார்லஸ் காலத்தில்தான் நாடகங்கள் மீண்டும் புத்துயிர் பெற்றன. டிரைடன் எனும் புலவர் வீரம் செறிந்த சோகநாடகங்களை (Heroic tragedy) எழுதினர். கேளிக் கையும், சிருங்கார ரசமும், விகடமும் நிறைந்த பல நாடகங்கள் தோன்றின. நாடக மேடையில் ஆடம்பரங்கள் மலிந்தன. அத்தகைய ஆடம்பரங்களை மறுத்து ஜெரமி காலியர் (Joremy Collier) என்பார் மூன்றும் வில்லியம் காலத்தே எழுதினர். ஆன் இராணியார் காலத்தில் ஜோஸப் அடிசன் (Joseph Addison) எனும் அறிஞர் ஃபிரெஞ்சு முறைகளைப் பின்பற்றி நாடகங்கள் எழுதினர். அவைகளில் உருக்கமும் ராஜரீகமும் மிகுந்து காணப்பட்டன. எனினும், நாடகங்களே பாமர மக்களின் பொழுதுபோக்காக விளங்கியது. பின்னைய ஸ்டூவர்ட்டுகள் காலத்து நாடகங்கள் அவ்வளவாக வளர்ச்சியடையவில்லை.

### அறிவியல் (Science)

இலக்கியம்மட்டுமன்றி அறிவியலும் ஸ்டுவர்ட்டுகள் காலத்தே நன்கு வளர்ச்சி பெற்றது. 'எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு' என்ற அறிவியல் மனப் பான்மையை ஃபிரான்சிஸ் பேக்கன் எனும் அறிஞர் வற்புறுத்தி 'நோவம் ஆர்கானம்'(Novum Arganum)என்று அறிவியல் நூலையும் எழுதினர். 'ராயல் சொஸைடி' என்ற அறிவியல் ஆராய்ச்சிக் கழகம் 1662ஆம் ஆண்டு தோற்றுவிக்கப்பட்டது. இரண்டாம் சார்லஸ் அறிவியலில் பெரிதும் ஈடுபாடுடையவர். முதலாம் சார்லஸின் அரண்மனை மருத்துவரான ஹார்வி (Harvey, 1578-1657) என்பவரே முதன்முதல் மானிட உடலின் இரத்த ஓட்டத்தைப் பரிசோதனை மூலமாக உலகத்துக்கு விளக்கியவராவார். நியூட்டன் என்ற அறிவியல் நிபுணர் வாழ்ந்த காலம் இதுவே. அவர் ஒரு கணித மேதை. வான சாஸ்திரத்திலும் வல்லுநர். 'கேல்குலஸ்' (Calculus) என்ற நுண்கணித முறையைக் கண்டவர் அவரே. கோள்களின் இயக்கம் பற்றிய விதிகளையும் அவரே கண்டுபிடித்தார். பாயில் (Boyle) என்பவர் ஒரு பௌதிகப் பேரறிஞர். அவர் கண்டுபிடித்த விதிகள் (Boyle's laws) இன்றும் மாணவர்களால் படிக்கப்படுகின்றன. மெர்ச்சிஸ்டன் (Merchiston) எனும் கணித அறிஞர் 'லாகிருதம்' (Logrithams) என்ற கணித முறையைக் கண்டுபிடித்த காலம் இதுவே.

### கட்டடக் கலை

கட்டடக் கலையும் (Architecture) இக்காலத்தே நன்கு வளர்ச்சியுற்றது. முதல் இரண்டு ஸ்டுவர்ட்டுகளால் ஆதரிக்கப் பெற்ற இனிகோ ஜோன்ஸ் (Inigo Jones, 1573-1652) எனும் கட்டடக் கலைஞர் (Architect) 'வெண்மாளிகை' (White Hall) எனும் அரசர் அரண்மனையையும் 'விருந்து மண்டபம்' (Banqueting Hall) எனும் பெருமண்டபத்தையும் கட்டியவராவர் ஸர் கிறிஸ்டொபர் ரென் (Sir Christoper Wren, 1632-1723) என்பார் 'செண்ட் பால் கதீட்ரல்' (St. Paul's Cathedral) என்ற பெருங்கோயிலின் கோபுரத்தைக் கட்டினர். வேறு பல கட்டடங்களையும் அவர் கட்டியுள்ளார். ஆன் இராணியார் காலத்து வாழ்ந்த வான்பிரக் (Vanbrugh) என்ற கட்டடக் கலைஞர், மார்ல்பரோ பிரபுவின் உறைவிடமான 'ப்ளென் ஹீம்' அரண்மனையைக் (Belnhim Palace) கட்டி முடித்தார்.

### ஓவியம், இசை

ஓவியம், சிற்பம் போன்ற கலைகளும் ஸ்டுவர்ட்டுகளால் நன்கு பேணி வளர்க்கப்பட்டன. முதலாம் சார்லஸ் பல திறப்பட்ட

ஓவியங்களைச் சேகரித்து வைத்தார். ஆங்கிலேயர்கள் ஓவியக் கலையில் அவ்வளவு திறமை யுடையவர்களாயில்லை. ஆனால், முதலாம் சார்லஸால் ஆதரிக்கப்பெற்ற ரூபென்ஸ் (Rubens) என்ற ஃப்ளெமிஷ் கலைஞரும் வான்டைக் (Vandyke) என்ற டச்சுக் கலைஞரும் ஆங்கிலக் கலைகளை வளர்த்தனர். பீட்டர் லெலி (Peter Laly) எனும் ஓவிய அறிஞர், கிராம்வெல் காலத்தும் இரண்டாம் சார்லஸ் காலத்தும் வாழ்ந்து, பலதிறப்பட்ட மக்களின் வாழ்க்கையைப் படம்பிடித்துக் காட்டும் பல அரிய ஓவியங்களைத் தீட்டியுள்ளார். ரென் என்பாரால் கட்டப்பட்ட மாதாக்கோயில் களில் காணப்படும் நுட்பமான ஓவியங்களை வரைந்தவர் கிப்பன்ஸ் என்பவராவர். இரண்டாம் சார்லஸ் காலத்தில் இதாலிய இசைநாடகம் (Opera) இங்கிலாந்தில் புகுத்தப்பட்டதால் இசைக் கலையும் நன்கு வளர்ச்சி பெற்றது. ஹென்றி பர்ஸல் (Henry Purcell) என்பார் பாடல்களையும் புதிய மெட்டுகளையும் புனைவதில் வல்லவராய்த் திகழ்ந்தார்.

## சமயநிலை

மூன்றும் வில்லியத்தின் காலத்திலிருந்து இங்கிலாந்தில் சமயத்துறையில் சகிப்புத் தன்மை பெருமளவுக்குக் கடைப்பிடிக் கப்பட்டது. கத்தோலிக்கர்கள் அரசருக்கு விரோதமாகச் சதி களைச் செய்ததால் அவர்கள் சற்றுக் கடுமையாகத் தண்டிக்கப் பட்டனர். ஆனால், நாளடைவில் கத்தோலிக்கரைத் தண்டிப்பதும் கூட நின்றது. பியூரிட்டன்கள் தங்கள் பிரியம்போல் தொழுகை நடத்த சமயப் பொறைச் சட்டம் அநுமதித்தது. ஆனால், அவர் களுக்கு அரசாங்கப் பதவிகள் மறுக்கப்பட்டன. 'இணங்காதார்' (Dissenters) கூட்டத்தினரை இங்கிலாந்தின் சமய ஏற்பாட்டிற் கிணங்கச் செய்யவும், உத்தியோகமேற்கும்போதுமட்டும் திரு விருந்தை (Sacrament) ஆங்கிலத் திருச்சபையின் கோட்பாடு களுக்கேற்ப ஏற்றுக்கொண்டு, பின்னர் தம் பிரியம்போல் நடப்ப தைத் தடுக்கவும் 'சிலவேளை இணக்கச் சட்டம்' (Occasional Conformity Act) 1711ஆம் ஆண்டிலும் 'பிளவுச் சட்டம்' (Schism Act) 1714ஆம் ஆண்டிலும், ஏற்படுத்தப்பட்டன. இவைகள் ஹனேவரியர்களின் ஆட்சிக் காலத்து ரத்து செய்யப் பட்டன. ஆங்கிலிக்கத் திருச்சபையிலும் மதநிலைய மேலோர் (High Churchmen), மதநிலையக் கீழோர் (Low Churchmen) என்ற இரண்டு பாகுபாடுகள் இருந்துவந்தன.

## வம்சாவளிப் பட்டியல்-1
## (முதலாம் ஜேம்ஸ் மன்னரின் அரசுரிமையை விளக்குவது)




## வம்சாவளிப் பட்டியல்-2
## (ஸ்டுவர்ட்டுகளுக்கும் ஹனோவரியர்களுக்குமுள்ள தொடர்பை விளக்குவது)



## வமிசாவளிப் பட்டியல்-3

### (பிரெஞ்சு அரச குடும்பத்துக்கும் ஸ்டுவர்ட்டு வமிசத்துக்குமுள்ள தொடர்பை விளக்குவது)




## வமிசாவளிப் பட்டியல்-4

### (ஸ்பானிய வாரிசுரிமைப் போட்டியை விளக்குவது)



## பாடநூல்கள்

## (Text - Books)


1. Adams, G. B. — 'English Constitutional History' (also Tamil Translation).
2. Carter & Mears — 'A History of Britain'.
3. Keir, D. L. — 'Constitutional History of Modern Britain, 1485 - 1937'.
4. Keith Feiling — 'History of England' (also Tamil Translations).
5. Ramsay Muir — 'A History of Britain'.
6. Rayner, R. M. — 'A Concise History of Britain'.
7. Southgate, G. W.— 'A Text-Book of Modern English History' (2 Vols).
8. Taswell Langmead— 'English Constitutional History' (also Tamil Translations).
9. Trevelyan — 'History of England' (also Tamil Translations).
10. Venkataraman, T.K. 'Constitutional History of Britain', Vol. II.
11. ,, — 'A Manual of British History', Part II.
12. Warner, Marten and Muir — 'A New Groundwork of British History'.

# மேற்கோள் நூல்கள்
# (Reference Books)


Airy — 'Restoration'.

Ashley Maurice — 'Great Britain upto 1688'.

,, — 'Glorious Revolution'.

Bryant — 'Charles II'.

Clarendon — 'History of the Great Rebellion'.

Clerk — Later Stuarts (Oxford History).

Davies — 'Early Stuarts' (Oxford History).

Dodd — 'Growth of Responsible Governmen from James I to Victoria'.

Ernest Barker — 'Oliver Cromwell and the English People'.

Firth — 'A Commentary on Macaulay's History of England'.

Gardiner — 'History of the Civil War'.

,, — 'Puritan Revolution'.

,, — 'History of the Commonwealth and Protectorate', 3 Vols.

Guizot — 'History of the English Revolution'.

Jenks — 'Constitutional Experiments of the Commonwealth'.

John Buchman — 'Cromwell'.

Lindsay Jack — 'Civil War in England'.

Macaulay — 'History of England'.

Mackintosh — 'History of the Revolution'.

Marriot — 'The Crisis of English Liberty'.

Montague — 'History of England from the Accession of James I to the Restoration'.

Pollard — 'Factors in Modern History'.

Prothors — 'Introduction to Constitutional Documents of the reign of Elizabeth and James I'.

Ramsay Muir — 'A Short History of British Commonwealth'.

Rayner, R. M. — 'England in Tudor and Stuart times'.

Trevelyan — 'English Revolution'

" 'England under Queen Anne', 3 Vols.

# கலைச்சொல்லகராதி

## (ஆங்கிலம்—தமிழ்)

### A

| | | |
|---|---|---|
| Accession | — | அரசு எய்தல் |
| Act of Attainder | — | மரணதண்டனைச் சட்டம் |
| Act of Settlement (1662) | — | நிலவுரிமை நிர்ணயச் சட்டம், குடியிருப்பு நிர்ணயச் சட்டம் |
| Act of Settlement (1701) | — | அரசுரிமை நிர்ணயச் சட்டம் |
| Act of Explanation | — | நிலவுரிமை விளக்கச் சட்டம் |
| Act of Succession (1689) | — | வாரிசு உரிமை நிர்ணயச் சட்டம் |
| Act of Supremacy | — | (சமய) முதன்மைச் சட்டம் |
| Act of Union | — | ஐக்கியச் சட்டம் |
| Act of Uniformity | — | மத ஒருமைச் சட்டம்; ஒரே வழிபாட்டு முறைச் சட்டம் |
| Act of General Amnesty and oblivion | — | பொது மன்னிப்பு, மறப்புச் சட்டம் |
| Act of Security (1703) | — | பாதுகாப்புச் சட்டம் |
| Act against Tumultuous Petitioning | — | ஆரவார விண்ணப்பத் தடைச் சட்டம் |
| Addled Parliament | — | பயனற்ற பாராளுமன்றம் |
| Admiralty | — | கடற்படை இலாகா |
| Agitators | — | கிளர்ச்சியாளர்கள் |
| Aldermen | — | நகர முதுவர் |
| Allegory | — | தொடர் உருவகக் காவியம் |

Amicable loan — நயமுறைக் கடன்
Anabaptists — ஞானஸ்நானவாதிகள்
Apology, form of — காப்புரை தாள்
Aristocracy — உயர்குடிப் பிரபுக்களாட்சி
Assizes — வழக்கு மன்றங்கள் ; குற்ற உசாவுரை
Autocracy — தனிவல்லாட்சி ; தன்னரசு

B

Balance of Power — சக்தி சமநிலைக் கொள்கை
Benevolent Despotism — மக்கள் நலன் கருதிய வல்லரசு
Benevolences — கட்டாய நன்கொடைகள்
Bill of Rights — உரிமைகள் மசோதா
Book of Common Prayer — பொது ஜெபப் புத்தகம்
Buffer State — இடைத்தடை நாடு

C

Cabinet — கேபினட் ; அமைச்சரவை
Chancellor of the Exchequer — கருவூலத் தலைவர்
Chaplin — குடும்பப் பாதிரி
Charter — உரிமைச் சாசனம்
Church — திருச்சபை
Citizenship — குடியுரிமை
Civil List — அரசரின் செலவுப் பணம்
Clarenden Code — கிளாரண்டன் சட்டத் தொகுதி
Common Law — பொதுமைச் சட்டம்
Commonwealth — பொதுநல அரசு
Communion Service — திருவிருந்து வழிபாடு
Commission of Array — அணிவகுப்புக் கமிஷன்
Common Socage — பொது ஊழிய மானியம்
Congregation — சமயத் திருக்கூட்டம்
Conventicle Act — இரகசியத் தொழுகைக்கூட்டத் தடைச் சட்டம்
Convention Parliament — பிரத்தியேகப் பாராளுமன்றம்

| | | |
|---|---|---|
| Corporation Act | — | மாநகராட்சிச் சட்டம் |
| Court of Common Pleas | — | பொது வழக்கு நீதிமன்றம் |
| Court of the King's Bench | — | அரச நீதிபதிகள் உயர் நீதி மன்றம் |

D

| | | |
|---|---|---|
| Declaration of Rights | — | உரிமைகள் விண்ணப்பம் |
| Declaration of Indulgence | — | பொறுத்தலறிக்கை |
| Despotisim | — | வல்லரசு |
| Dispensing Power | — | சட்ட விலக்கதிகாரம் |
| Dissenters | — | (சமயத் துறையில்) இணங்காதார் |
| Divine Right Theory | — | தெய்வீக உரிமைக் கொள்கை |
| Duties | — | சுங்க வரிகள் |

E

| | | |
|---|---|---|
| Ecclisiastical Commission Court | — | சமய உயர் ஆணை நீதிமன்றம் |
| Electors | — | தேர்வாளர்கள் |
| Emergency | — | அவசர காலம் |
| Episcopacy | — | பிஷப்புகளாட்சி ; குருமாராட்சி |
| Exclusion Bill | — | (அரசுரிமை) விலக்கு மசோதா |
| Excise duty | — | கலால் வரி |

F

| | | |
|---|---|---|
| Feudalism | — | நிலமானிய முறை |
| Feudal dues | — | நிலமானியக் கட்டணங்கள் |
| Five Mile Act | — | ஐந்து மைல் சட்டம் |
| Forced Loan | — | கட்டாயக் கடன் |
| Free Holder | — | உரிமை மானியதார் |
| Friar | — | கடுந்துறவி |

G

| | | |
|---|---|---|
| Gentleman Usher | — | வாயில் காக்கும் சீமான் |
| Glorious Revolution | — | புகழ்பெற்ற புரட்சி |

| | | |
|---|---|---|
| Grand Remonstrance | — | பெருங் கண்டனப் பத்திரம் |
| Gun Powder Plot | — | வெடிமருந்துச் சதி |

H

| | | |
|---|---|---|
| Habeaus Corpus Act | — | உடலுரிமைக் காப்புச் சட்டம் |
| Heads of Proposals | — | முன்மொழித் தலைப்புகள் |
| High Churchmen | — | மத நிலைய மேலோர் |
| High Commission Court | — | சமயஉயர்ஆணை நீதிமன்றம் |
| Humble Petition and Advise | — | தாழ்மையான விண்ணப்பமும் ஆலோசனையும் |

I

| | | |
|---|---|---|
| Imposition | — | இடுவரி |
| Impeachment | — | அரசியல் துரோகக் குற்றச் சாட்டு முறை |
| Incident | — | இடைநிகழ்ச்சி |
| Instrument of Government | — | அரசாங்க அமைப்புப் பத்திரம் |

J

| | | |
|---|---|---|
| Jacobites | — | ஜாகோபைட்டுகள் ; யாகோபியர்கள் |
| Jesuits | — | இயேசு திருச்சபையினர் |
| Justices of the Peace | — | அமைதிகாண் நீதிபதிகள் |

K

| | | |
|---|---|---|
| King's craft | — | ஆட்சிக் கலை |

L

| | | |
|---|---|---|
| Lay Pears | — | இலௌகீகப் பிரபுக்கள் |
| Laissez Faire | — | தலையிடாக் கொள்கை |
| Letters–de-catchat | — | அரசாங்க ஆணைப் பத்திரங்கள் |
| Lease Holders | — | குத்தகைச் சாகுபடியாளர்கள் |
| Levellers | — | சமத்துவவாதிகள் |
| Libel | — | அவதூறு |
| Livery and Maintenance | — | வில்லைச் சேவக முறை |

| | | |
|---|---|---|
| Long Parliament | — | நீடித்த பாராளுமன்றம் |
| Lord High Treasurer | — | கருவூலத் தலைமைப் பிரபு |
| Lord Marchers | — | எல்லைப்புறப் பிரபுக்கள் |

## M

| | | |
|---|---|---|
| Martial Law | — | இராணுவ ஆட்சி |
| Martial Court | — | இராணுவ நீதிமன்றம் |
| Mercenary Army | — | கூலிப் படை |
| Ministerial Responsibility | — | அமைச்சவைப் பொறுப்பு |
| Militia Act | — | நாட்டுப் படைச் சட்டம் |
| Millenary Petition | — | ஆயிரவர் விண்ணப்பம் |
| Monopoly | — | தனியுரிமை |
| Mutiny Act | — | படைக்கலகச் சட்டம் |
| National Debt | — | நாட்டுக் கடன் |
| Navigation Act | — | நாவாய்ச் சட்டம் |
| Nonconformists | — | (திருச்சபைக்கு) இணங்காதார்கள் |
| Nonjurors | — | இராஜ விசுவாசப் பிரமாணமெடுக்க மறுப்போர் |
| Nineteen Propositions | — | பத்தொன்பது முன்மொழிக் கூற்றுகள் |

## O

| | | |
|---|---|---|
| Occasional Conformity Act | — | சிலவேளை இணக்க மசோதா |
| Old Pretender | — | மூத்த போலி |
| Oath of Abjuration | — | கைவிடும் உறுதிமொழி |

## P

| | | |
|---|---|---|
| Parliamentary Government | — | பாராளுமன்ற ஆட்சிமுறை |
| Personal Rule | — | தனியாட்சி |
| Petition of Rights | — | உரிமைகள் விண்ணப்பம் |
| Pilgrim Fathers | — | யாத்திரிகத் தந்தையர் |
| Place Act | — | பதவிச் சட்டம் |
| Plantation | — | குடியேற்ற நாடு |
| Policy of Thorough | — | முழுநிறைக் கொள்கை |

| | | |
|---|---|---|
| Poor Law | — | இரவலர் சட்டம் |
| Poundage | — | பவுண்டுக் கட்டணம் |
| Precedent | — | முன் நிகழ்வு ஆதாரம் |
| Prerogatives | — | சிறப்பதிகாரங்கள் |
| Privileges | — | சிறப்புரிமைகள் |
| Predestination | — | முன்விதிப்புக் கொள்கை |
| Prelatists | — | குருமாராட்சிவாதிகள் |
| Proclamation | — | தனியாணைப் பேரறிவிப்புகள் |
| Protectorate | — | காப்பாளராட்சி |

R

| | | |
|---|---|---|
| Recissory Act | — | தள்ளுபடிச் சட்டம் |
| Restoration | — | முன்னிலை மீட்சி |
| Reformation | — | மதச்சீர்திருத்த இயக்கம் |
| Roof and Branch Bill | — | வேரோடொழிக்கும் மசோதா |
| Rotton boroughs | — | நசித்துப்போன பரோக்கள் |
| Rule of Law | — | சட்டத்தின் ஆட்சி; சட்டத்தின் இறைமை |
| Rump Parliament | — | எஞ்சிய பாராளுமன்றம் |

S

| | | |
|---|---|---|
| Self denying Ordinance | — | தன்னல மறுப்பு ஆணை |
| Ship Money | — | கப்பற் பணம் |
| Solemn League and Covenant | — | புனிதக் கூட்டுறவும் ஒப்பந்தமும் |
| Sinking Fund | — | கடன் கழிவு நிதி |
| Squire | — | பெருநிலக்கிழார் |
| Statesman | — | அரசியல் வித்தகர் |
| Star Chamber Court | — | விண்மீன் மண்டப நீதிமன்றம் |
| Standing Army | — | நிலைப்படை |
| Suspending Power | — | சட்ட நிறுத்ததிகாரம் |

T

| | | |
|---|---|---|
| Test Act | — | சோதனைச் சட்டம் |
| Treason Laws | — | அரசதுரோகச் சட்டங்கள் |

| | | |
|---|---|---|
| Treasurer | — | நிதிக்காப்பாளர் |
| Triennial Act | — | மூவாண்டுச் சட்டம் |
| Triers | — | சோதகர்கள் |
| Tonnage | — | டன் எடை வரி |

U

| | | |
|---|---|---|
| Utilitarians | — | பயனீட்டுவாதிகள் |

V

| | | |
|---|---|---|
| Veto | — | ரத்து அதிகாரம்; தள்ளுரிமை |
| Via Media Policy | — | இடைநிலைக் கொள்கை |
| Villeirs | — | உட்குடிகள் |
| Visitation | — | நேர்முகச் சோதனை |

W

| | | |
|---|---|---|
| War of Devolution | — | வழி உரிமை வற்புறுத்தும் போர் |
| Whitemans burden | — | வெள்ளையரின் பொறுப்பு |
| Writ | — | கட்டளை |

Y

| | | |
|---|---|---|
| Yeomen | — | சிறு நிலக்கிழார் |

# பொருள்குறிப்பகராதி

ஜா



ஜே



ஜோ



ஷே



ஸ்

